# எனது குழந்தைப் பருவம்



மாக்ஸிம் கார்க்கி



...திப்பகம் பிரைவேட் லிமிடெட்

காரைக்குடி

# *MY*

# CHILDHOOD



BY

*MAXIM GORKY*



PUBLISHER:

**PUDUMAI PADIPPAHAM (PRIVATE) LTD.**

KARAIKUDI

# எனது
# குழந்தைப் பருவம்






எழுதியவர் :

**மாக்ஸிம் கார்க்கி**



மொழிபெயர்த்தவர் :

**" நம்பி "**

✻

புதுமைப் பதிப்பகம் (பிரைவேட்) லிமிடெட்,

காரைக்குடி

முதற்பதிப்பு: 15 மே, 1957



விலை ரூபாய் நான்கு





---

சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, சென்னை–14

# முன்னுரை

மக்கள் திருந்தி நல்வாழ்வு வாழ்வதற்கு இரு வகையான உரைநடை இலக்கியங்கள் பெரிதும் துணைபுரிகின்றன ; ஒன்று பெரியோரின் சுயசரிதங்கள் ; மற்றொன்று பெரியவர்களைப்பற்றி மற்ற அறிஞர்கள் எழுதிய வரலாற்றுக் குறிப்புகள்.

தத்தமக்கு வாழ்க்கையில் ஏற்பட்ட சொந்த அனுபவங்களைத் தாமே பிறருக்கு எடுத்து உரைப்பது சுயசரிதம்.

பிறர் வாழ்க்கையில் ஏற்பட்ட அனுபவங்களை மற்றவர்கள் எழுதுவது சரிதம்.

இத்தகைய இரு வகை நூல்களும் தமிழில் மிகவும் குறைவாகத்தான் இதுவரை வெளிவந்து உள்ளன.

மகாத்மா காந்திஜி, பண்டித ஜவாஹர் லால் நேரு, டாக்டர்-உ. வே. சாமிநாதஐயர் அவர்கள் ஆகியோர் எழுதி இருக்கும் சுய சரிதங்களைப்போலவே, மாக்ஸிம் கார்க்கி அவர்களும், வாழ்க்கையில் தனக்கு ஏற்பட்ட, வாழ்க்கையில் தான் நேரில் கண்ட, அனுபவங்களைக் கொண்டு தன் சுயசரிதத்தை மூன்று பகுதிகளாக எழுதி இருக்கிறார் :

(1) எனது குழந்தைப் பருவம்

(2) யான் பெற்ற பயிற்சிகள்

(3) யான் பயின்ற பல்கலைக் கழகங்கள்

இந்த மூன்று நூல்களையும் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட ஏற்பாடு செய்து இருக்கிறோம். முதலாவதாக எனது குழந்தைப் பருவம் என்ற இந்த நூல் இப்போது வெளி வருகிறது. மற்ற இரண்டு நூல்களும் தொடர்ந்து வெளிவரும்.

இந்த நூலை எழுதி இருக்கும் மாக்ஸிம் கார்க்கி அவர்கள் உலகப் புகழ்படைத்த ருஷ்ய எழுத்தாளர்களில் முதன்மை ஸ்தானம் பெற்றவர்களில் ஒருவர். இவருடைய நூல்கள் இலக்கியச் செறிவு படைத்த உலக மொழிகள் அனைத்திலும் மொழிபெயர்க்கப் பெற்றிருக் கின்றன.

சாதாரண ஒரு ருஷ்யக் குடும்பத்தில் பிறந்தவர் இவர்; அரும்பாடுபட்டு, முன் னணிக்கு வந்த எழுத்தாளர்; ருஷ்யப் புரட்சி காலத்தில் வாழ்ந்தவர்; ஒதுங்கி பிராமல் அதில் பங்குபற்றி நின்று போராடியவர்; ருஷ்யப் புரட்சியை நடத்தி வெற்றி கண்ட தோழர் லெனின் அவர்களுக்குப் பக்கபல மாய் இருந்தவர். தன் காலத்தில் வாழ்ந்த பல திறப்பட்ட ருஷ்யர்களின் வாழ்க்கை நிலைகளை-சமூகம், அரசியல், பொருளாதாரம், இலக்கியம், தாம்பத்தியம் முதலிய வாழ்க்கை நிலைகளை - இவர் திறம்பட வரைந்துள்ளார். இவருடைய இந்த மூன்று நூல்களும் அவற்றைத் தெரிந்து கொள்ளப் பெரிதும் துணைபுரிகின்றன.

விஞ்ஞான சாதனங்களின் வசதிப் பெருக்கத்தால் இன்று உலகம் குறுகி வரு கிறது. தொலைவிலுள்ள நாடுகளின் தொடர்பு,

அண்மையிலுள்ள நாடுகளின் தொடர்பைப் போலப் பெருகிவிட்டது. ஆகையால் மற்ற நாட்டு அறிஞர்களின் வாழ்க்கையைத் தமிழர்களாகிய நாம் தெரிந்துகொள்ள வேண்டுவது அவசியமாகிறது. அதனால்தான் இந்த நூலை மொழிபெயர்த்துத் தமிழில் வெளியிட்டு இருக்கிறோம். தமிழ் மக்களின் பரிபூரண ஆதரவு கிடைக்கும் என நம்புகிறோம்.

காரைக்குடி
15 மே, 1957

அ. லெ. நடராஜன்,
பதிப்பாளர்.

# எனது குழந்தைப் பருவம்

வெளிச்சம் மங்கலாகத் தெரிந்த சிறிய அறை ஒன்றில் ஜன்னலுக்குக் கீழே தரைமீது கிடந்தார் என் தந்தை. முழுதும் வெள்ளை ஆடை தரித்து, வியக்கத்தக்க வகையில் தன் உடம்பை விரைத்து நீட்டியவாறு அவர் படுத்துக் கிடந்தார் ; வெறுமையாக இருந்த அவருடைய கால் பெரு விரல்கள் விநோதமாக விரைத்து இருந்தன. அவருடைய மென்மையான கரங்கள் இப்போது அவருடைய மார்பின் மீது அமைதியாகக் கிடந்தன. அவையும் கால் விரல்களைப் போலவே விரைத்துத் தாறுமாறாகக் கிடந்தன ; சிரிப்புத் தவழும் அவருடைய இனிய கண்களை, துருப்பிடித்த கரிய செப்புக் காசுகள் மூடி மறைத்திருந்தன. அவருடைய அன்பு ஒழுகும் வதனம், இப்பொழுது மங்கிக் கிடந்தது ; அவருடைய பற்களின் பளபளப்பைக் கண்டு நான் பயந்தே போனேன்.

ஒரே ஒரு சிவப்பு உடையை மட்டும் அணிந்து, மண்டியிட்டவாறு அவருக்குப் பக்கத்தில் அமர்ந்து, என் தந்தையின் மெல்லிய கூந்தலை என் அன்னை கோதிவிட்டுக்கொண்டிருந்தாள் ; நீர்முலாம் பழத்தை ரம்பத்தால் பத்தை பத்தையாக அறுப்பதைப் போன்று, நான் வைத்திருந்த கறுப்புச்

சீப்பைக்கொண்டு, என் அன்னை என் தந்தையின் கூந்தலைக் கோதிவிட்டுக்கொண் டிருந்தாள். கரகரப்பான குரலில் எதையோ அவள் பெருமூச்சுவிட்டவாறு முணகிக்கொண் டிருந்தாள். அவளுடைய சாம்பல் நிறக் கண்கள், வீங்கிப் போய், உருகி உருகிக் கண்ணீரை உகுத்துக்கொண்டிருந்தன.

பெரிய தலை, விசாலமான கண்கள், விநோதமான சதைப் பிடிப்புள்ள மூக்கு இவற்றுடன் உருண்டை வடிவத்தில் காட்சி தந்த ஒரு பெண்மணி, அதாவது என் பாட்டி, என் கையைப் பற்றிக்கொண்டு நின்றாள். இவள் மென்மையாக வும் கறுப்பாகவும் கவர்ச்சிகரமாகவும் இருந்தாள். ஒத்துப் பாடுவதைப்போல, என் தாயாருடன் சேர்ந்து இவளும் அழுதுகொண் டிருந்தாள். உடம்பு முழுதும் வெலவெலக்க நடுங்கியவாறு நின்ற அவள், என்னை, என் தந்தை அருகே தள்ளினாள்; ஆனால், நானோ திரும்ப வந்து அவளுடைய ஆடைக்குள் ஒளிந்துகொண்டேன். எனக்கு அச்சமாகவும் சஞ்சலமாகவும் இருந்தது.

வயதானவர்கள் அழுது இதற்கு முன் நான் பார்த்தவன் இல்லை. "குழந்தாய்! உன் தந்தையிடம் நீ இறுதி விடை பெற்றுக்கொள்; மீண்டும் அவரை நீ காண முடியாது; தனது காலத்துக்கு முன்னரே, உன் தந்தை காலமாகிவிட்டார்" என்று என் பாட்டி கூறின சொற்களின் பொருள் எனக்குச் சரியாக விளங்கவில்லை.

கடுமையான நோய் ஒன்றினால் பீடிக்கப்பட்டு இருந்த நான் அப்பொழுதுதான் குணம் அடைந்து இருந்தேன். அந்தச் சமயம் என் தந்தை என்னுடன் உற்சாகமாக விளை யாடிக்கொண் டிருந்தது எனக்கு நன்றாக நினைவு இருக்கிறது. இருந்தும் அவர் திடீரென மறைந்து போய்விட்டார்; அவ ருடைய ஸ்தானத்தை விநோதமான பெண்மணி ஒருத்தி, அதாவது என் பாட்டி, கைப்பற்றிக்கொண் டிருக்கிறாள்.

" நீண்ட தூரம் நடந்துதான் இங்கே நீ வந்தாயோ ?" என்று என் பாட்டியை நான் கேட்டேன்.

" நான் நடந்து வரவில்லை ; சவாரி செய்து வந்தேன் ; ஏ அத்திப்பழமே ! யாராலாவது நீரில் நடக்க முடியுமா ? நான் கீழ் நிலையிலிருந்து மேலே வந்தவள் " என்று சொன்ஞள் என் பாட்டி.

இது எனக்கு மிக்க வேடிக்கையாகவும் குழப்பமாகவும் இருந்தது ; எங்கள் வீட்டுக்கு மேலே, தாடியில் சாயம்பூசிக் கொண்டுள்ள பாரசீகர்கள் சிலர் வசித்தனர் ; கீழேயுள்ள அறையில், ஆட்டுத்தோல் வியாபாரம் செய்கிற, மஞ்சள் நிறமுடைய கால்மிக் ஜாதிக் கிழவர் ஒருவர் வசித்தார். சறுக்குப் படி வழியாகவோ அல்லது குட்டிக்காணம் போட்டோதான் ஒருவன் மேலே இருந்து கீழே விழவோ அல்லது இறங்கவோ முடியும் என்பதை நான் நன்ருக அறிவேன். அப்படி இருக்கும்போது நீர் என்பது ஏன் இடையே வந்து புகுந்துகொண்டுள்ளது? இவளுக்கு ஒன்றும் விளங்கவில்லை; யாவற்றையும் ஒன்றுசேர்த்து இவள் குழப்பு கிருள் என்பதாக நான் எண்ணிக்கொண்டேன்.

" நீ ஏன் என்னை அத்திப்பழமே என அழைத்தாய்?" என்று அவளை நான் கேட்டேன்.

" நீ மிகவும் பெரிதாய் இருக்கிருய். அதனுல்தான் " என்று சிரித்துக்கொண்டே அவள் பதில் சொன்னுள்.

அன்பாகவும் உற்சாகமாகவும் ஒன்றிலிருந்து மற்று ஒன்றுக்குத் தாவியும் அவள் பேசினுள்; அவள் வந்த தினத்தி லிருந்து அவளும் நானும் சிறந்த நண்பர்களாகிவிட்டோம். இப்போது இருவரும் - அதாவது நானும் அவளும் - அந்த அறையிலிருந்து வெளிப்பட்டுவிடுவதை நான் விரும்பினேன்.

என் தாயின் நிலை என்னை மிகவும் குழப்பியது ; அவ ளுடைய அழுகையும் கண்ணீரும் புலம்பலும் எனக்கு

அலாதியான பீதியை உண்டுபண்ணின. அவள் இந்த நிலையில் இருந்ததை இதற்கு முன் நான் பார்த்தவன் இல்லை. சாதாரணமாக அவள் உறுதியாக இருப்பவள்; வீண் வார்த்தைகளை அவள் பேசுவது கிடையாது. பெண் குதிரையைப் போன்று சுத்தமாகவும் பளபளப்பாகவும் மென்மையாகவும் அவள் இருப்பது உண்டு. உறுதிவாய்ந்த உடலும் திடமான கைகளையும் படைத்தவள் அவள். ஆனால், இப்பொழுதோ சீர்குலைந்து வீங்கி, மனத்துக்குப் பிடிக்காத நிலையில் அவள் இருக்கிறாள். அவளுடைய உடைகள் கிழிந்துபோய் இருக்கின்றன. அழகாகக் கொண்டை போட்டு, அதன்மீது அழகான தொப்பி அணிந்து விளங்கும் அவளுடைய கூந்தல், அவளது வெறிய தோள்களிலும் கண்களிலும் இப்போது அவிழ்ந்து கிடந்தது ; தூங்கிக்கொண்டிருக்கும் என் தந்தை முகத்தின்மீது அதன் கொண்டை ஊசலாடியது. சிறிது நேரம் அந்த அறையிலே நான் நின்றேன். அழுதுகொண்டும் என் தந்தையின் கூந்தலைக் கோதிக்கொண்டும் இருப்பதில் மூழ்கிப்போய் இருந்தபடியால், ஒரு முறைகூட என் தாய் என்னை உற்று நோக்கவில்லை.

அன்று காவல் புரிந்து நின்ற போர்வீரன் ஒருவன் கறுத்த முகமுடைய சில குடியானவர்களுடன் வந்து அறைக்குள் எட்டிப்பார்த்தான்.

"விரைந்து இவரை எடுத்து அடக்கம் செய்யுங்கள்" என்று வெறுக்கத்தக்க வகையில் அந்தப் போர்வீரன் உறுமினான்.

ஜன்னலில் தொங்கவிடப்பட்டிருந்த கறுப்புச் சால்வை, கப்பலின் பாய்போல வெளியே தொறுத்திக்கொண்டிருந்தது. ஒருமுறை என் தந்தை என்னை ஒரு படகில் அழைத்துக்கொண்டு பிரயாணம் செய்தார். எதிர்பாராத விதமாக அப்போது இடி முழங்கியது. உடனே தன் முழங்கால்களுக்கு இடையில் என்னை அணைத்துக்கொண்டு, "குழந்தாய்!

இதெல்லாம் ஒன்றும் இல்லை; பயப்படாதே'' என்று சிரித்துக்கொண்டே என் தந்தை சொன்னார்.

திடீரெனப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு எழுந்த என் அன்னை, நிற்க முடியாமல் கீழே சாய்ந்துவிட்டாள்; அவளுடைய கூந்தல் அவிழ்ந்து தரைமீது பாவிக் கிடந்தது; முகம் சோர்ந்து சோபையிழந்து இருந்தது; என் தந்தையின் பற்களைப்போல அவளுடைய பற்களும் கிட்டித்துப் போயின.

"கதவைச் சாத்திவிடு; அலெக்ஸியை வெளியே அழைத்துப் போ'' என்று திணறிக்கொண்டே பயங்கரமான தொனியில் என் தாய் சொன்னாள்.

என்னை ஒதுக்கி ஒரு புறத்தில் தள்ளிவிட்டு, கதவுப் பக்கமாக ஓடினாள் என் பாட்டி.

"நல்லவர்களே! பயப்படாதீர்கள்! அவளைத் தொடாதீர்கள்! கிறிஸ்துமீது அன்புள்ள நீங்கள் அப்பால் போய் விடுங்கள். இது கொள்ளை நோய் அன்று! அவளுக்கு இப்போது பிரசவ வேதனை ஆரம்பித்து இருக்கிறது; தயவு செய்து இரங்குங்கள்'' என்று இறைஞ்சினாள் என் பாட்டி.

அந்த இருட்டு அறையில் ஒரு மூலையில் கிடந்த ஒரு உடுப்புப் பெட்டிக்குப் பின்னே ஒளிந்துகொண்டு என் தாயை நான் கவனித்தேன்; பற்களைக் கடித்துக்கொண்டும் முணகிக்கொண்டும் தரைமீது கிடந்து புரண்டாள் என் தாய். என் பாட்டியோ அன்பாகவும் சந்தோஷமாகவும் முணு முணுத்துக்கொண்டு அங்கே ஊர்ந்து திரிந்தாள்.

"தந்தையின் பெயராலும் புதல்வரின் பெயராலும்! வாரியுஷா! நீ சிறிது பொறுத்துக்கொள்! கருணையுள்ள எஜமானி! ஆண்டவனுடைய புனித மாதாவே...'' என்று சொன்னாள்.

எனக்கோ ஒரே பயமாய் இருந்தது. அவர்கள் என் தந்தைக்குப் பக்கத்தில் வந்து போய்க்கொண் டிருந்தார்கள்.

முணகிக்கொண்டும், அழுதுகொண்டும், அவரை உராய்ந்து கொண்டும் இருந்தார்கள். ஆனல் அவரோ இவர்களைப் பார்த்துச் சிரிப்பவர்போல அசைவற்றுக் கிடந்தார். நீண்ட நேரம் அவர்கள் இந்த நிலையில் இருந்தார்கள். பல முறை என் தாயார் எழுந்து நிற்க முயன்ருள் ; முடியாதுபோகவே மீண்டும் மீண்டும் ஓய்ந்து உட்கார்ந்தாள். பெரிய கறுப்புப் பந்தைப் போல என் பாட்டி அறைக்குள் போவதும் வெளியே வருவதுமாக இருந்தாள். திடீரென இருட்டில் குழந்தை ஒன்று அழும் குரல் கேட்டது.

"ஆண்டவனுக்கு வணக்கம் ; பையன் பிறந்திருக்கிருன் !" என்று சொன்னுள் என் பாட்டி.

பிறகுதான் அவள் விளக்கைப் பொருத்தினுள்.

இதன் பின்னர் நடந்தது எதுவும் எனக்கு நினைவு இல்லை; ஏனெனில் மூலையில் நான் தூங்கிப்போய் இருக்க வேண்டும்.

இதை அடுத்து நடந்த இன்னொரு நிகழ்ச்சி எனக்கு நன்ருக நினைவு இருக்கிறது ; மழை காலத்தில் ஒரு நாள் கல்லறையில் ஒதுப்புறமான ஓர் இடம். வழுக்கலுள்ள ஒரு மண் குவியல்மீது நின்றுகொண்டு, என் தந்தையின் சவப் பெட்டியை ஒரு குழிக்குள் இறக்குவதை நான் கவனித்தேன். சவக்குழியின் அடி மட்டத்தில் தண்ணீரும் தவளைகளும் இருந்தன ; தவளைகளில் இரண்டு, சவப்பெட்டியின் மஞ்சள் மூடிமீது தாவிக் குதித்து அமர்ந்தன.

மழையால் சொட்ட நனைந்த கல்லறைக் காவல்காரன் ஒருவன், மண்வெட்டி வைத்திருந்த தடித்த குடியானவர் இருவர், என் பாட்டி, நான் ஆகியவர்கள்தான் புதைகுழி அருகே நின்ருேம். எங்கள் எல்லோரையும் அழகான மழைத் தூற்றல் நன்ருக நனைத்துவிட்டது.

"அதை மூடிவிடுங்கள்" என்று சொல்லிவிட்டு, காவல்காரன் அப்பால் போய்விட்டான்.

தன் முகத்தை சால்வையால் மூடிக்கொண்டு என் பாட்டி விம்மி விம்மி அழுதாள். குடியானவர்கள் குனிந்து, மண்வெட்டியால் மண்ணைக் குழிக்குள்ளே தள்ளினார்கள். உள்ளே யிருந்த தண்ணீர் நாலா பக்கமும் சிதறியது; புதை குழிக்குள் இருந்த தவளைகள் மேலே வருவதற்குத் தாவித் தாவி முயன்று பார்த்தன; ஆனால், மண்ணாங்கட்டிகள் அவற்றின்மீது விழுந்து தவளைகளையும் சேர்த்து மூடி விட்டன.

என் தோள்மீது தன் கைகளை வைத்து "அலியோஷா! வா போகலாம்" என்று என் பாட்டி சொன்னாள். அங்கிருந்து கிளம்பப் பிரியமில்லாத நான் அவள் பிடிப்பிலிருந்து என்னை விடுவித்துக்கொண்டு அப்பால் போனேன்.

"ஆண்டவனே!" என்று என் பாட்டி பெருமூச்சு விட்டாள்; என்மீது குற்றப்பட்டுக்கொள்கிறாளா அல்லது ஆண்டவன்மீதுதான் அவள் குற்றப்பட்டுக்கொள்கிறாளா என்பது அவள் தொனித்த முறையிலிருந்து எனக்கு விளங்கவில்லை. தலையைக் குனிந்துகொண்டு நீண்ட நேரம் அவள் மௌனமாக நின்றாள். புதைகுழி முற்றுமே மூடி முடிக்கப்பட்ட பின்னரும் அதே மௌனத்துடன் அவள் அங்கேயே நின்றுகொண்டிருந்தாள்.

மண்வெட்டியின் பின் புறத்தால், குழிக்குள் போட்ட மண்ணைக் குடியானவர்கள் இடித்துச் செம்மினார்கள். காற்று வீசி மேகத்தைக் கலைத்துவிட்டது. கரிய சிலுவைக் காட்டின் நடுவே சிறிது தூரத்தில் இருந்த ஒரு மாதா கோயிலுக்கு என் கையைப் பிடித்துக்கொண்டு என் பாட்டி என்னை அழைத்துப் போனாள்.

கல்லறையைவிட்டு வெளியே வந்ததும் "நீ ஏன் அழாமல் இருந்தாய்? நீ அவசியம் அழுது இருக்கவேண்டும் அல்லவா?" என்று என் பாட்டி என்னைக் கேட்டாள்.

"எனக்கு அழ வேண்டும் என்று தோன்றவில்லை" என நான் பதில் சொன்னேன்.

"சரிதான். அழுகை வராவிட்டால் நீ அழுதிருக்க வேண்டிய அவசியம் இல்லை" என்று சாந்தமாகக் கூறினாள் என் பாட்டி.

'நீ அழுதிருக்க வேண்டும்' என அவள் கூறியது எனக்கு அதிக ஆச்சரியத்தை விளைவித்தது; நான் அபூர்வமாகத்தான் அழுவது உண்டு; எனது உணர்ச்சிகள் புண்பட்டுவிட்டால், நான் அழுவது உண்டே தவிர, உடல் வாதனையால் நான் ஒருபோதும் அழுதது கிடையாது.

நான் கண்ணீர் உகுப்பதைக் கண்டால் என் தந்தை எப்பொழுதுமே சிரிப்பார்; என் தாயாரோ "அழுதாயோ தெரியுமா!" என்று என்னை அதட்டுவாள்.

சேறுபடிந்த விசாலமான ஒரு தெரு வழியாக நாங்கள் ஒரு குதிரை வண்டியில் வந்துகொண் டிருந்தோம்; கறுஞ் சிவப்பு நிறமுள்ள வீடுகள் இரு வரிசைகளிலும் இருந்தன.

நான் என் பாட்டியைப் பார்த்து "தவளைகளால் இனி வெளியில் வர முடியுமா?" என்று கேட்டேன்.

"வர முடியாது; ஆண்டவன் அவற்றை ஆசிர்வதிக்கட்டும்" என்று பதில் சொன்னாள் என் பாட்டி.

என் தந்தையும் சரி தாயும் சரி ஆண்டவனைப்பற்றி இப்படி அன்புடன் அடிக்கடி பேசியது கிடையாது.

சில தினங்களுக்குப் பின்னர், நானும் என் தாயும் பாட்டியும் கப்பலில் இருந்த சிறிய அறை ஒன்றில் பிரயாணம் செய்தோம். பச்சிளம் குழந்தையான என் தம்பி மாக்ஸிம் கப்பலில் இறந்துபோனான்; வெள்ளைத் துணியால் சுற்றி, சிவப்பு நாடா முடிந்து, மூலையிலிருந்த ஒரு மேஜைமீது அவனைக் கிடத்தி வைத்திருந்தார்கள்.

குதிரைக் கண்களைப்போன்று வெளியே தொறுத்திக் கொண்டு இருந்த ஜன்னல் வழியாக மூட்டை முடிச்சுகள் மீதும் உடுப்புப் பொட்டிகள்மீதும் அமர்ந்துகொண்டு நான் வெளியே எட்டிப்பார்த்தேன். நுரையுடன் கூடிய மங்கலான தண்ணீர் ஜன்னல்மீது மோதியபடி இருந்தது. சில சமயங் களில் ஜன்னலின் கண்ணாடி முழுவதையுமே அது நனைத்து விடும்; அப்படிப்பட்ட சமயங்களில் என்னை அறியாமலே நான் தரைமீது குதித்துவிடுவது உண்டு.

"பயப்படாதே!" என்று தைரியம் சொல்லி, தன் மெல்லிய கரங்களால் தூக்கி என்னை மூட்டைகள்மீது மீண்டும் உட்காரச் செய்வாள் என் பாட்டி.

சாம்பல் நிறமான மூடுபனி தண்ணீர்மீது படர்ந் திருந்தது. சிறிது நேரத்துக்கு ஒரு முறை தொலைவில் மூடு பனிக்கு ஊடே தரை தெரிவதும் பிறகு மறைவதுமாக இருந்தது. எங்களைச் சுற்றியிருந்த அனைத்தும் ஆடி ஆடி அசைந்துகொண்டு இருப்பதுபோல எனக்குத் தோன்றியது. ஆனால், என் தாயாரோ தன் கண்களை இறுக்க மூடிக்கொண்டு, கைகளைத் தன் தலைக்குப் பின்னே வைத்தவாறும் சுவரில் உறுதி யுடன் சாய்ந்தவாறும் அசையாமல் நின்றாள். அவள் முகம் கறுத்து, கடுகடுப்பாயும் சோபையை இழந்தும் இருந்தது. ஒரு வார்த்தைகூட அவள் பேசவில்லை. ஏதோ புதியவளாயும் வேறுபட்டவளாயும் அவள் எனக்குத் தென்பட்டாள். அவள் அணிந்திருந்த ஆடைகூட எனக்குப் பழக்கப்படாத ஒரு ஆடையாக இருந்தது.

"எங்களைப்போல, வாரியுஷா! நீயும் ஏதாவது சாப்பிட்டால்தானே நல்லது" என்று அடிக்கொரு தடவை என் பாட்டி அவளிடம் மெதுவாகச் சொன்னாள்.

ஆனால் என் அன்னையோ இவற்றை எல்லாம் காதில் போட்டுக்கொள்ளாமல் மௌனமாக அசைவற்று நின்றாள்.

பாட்டி என்னிடம் மெதுவாகப் பேசினுள் ; என் தாயிடமோ சிறிது இறைந்து பேசினுள் ; ஆனல் உணர்ச்சி யற்றும் கவனமாகவும் அபூர்வமாகவும்தான் பேசினுள். என் தாய்க்கு அவள் பயப்படுகிருள் என எனக்குத் தோன்றியது. இதன் காரணம் எனக்குத் தெரிந்ததுதான்; ஆகையால் இவை எல்லாம் என் பாட்டியிடம் என்னை நெருங்கச் செய்தன.

எதிர்பாராத வகையில் இறைந்து ஒருவித கோரமான தொனியில் "சாராட்டாவ் வந்துவிட்டது; மாலுமி எங்கே?" என்று கேட்டாள் என் தாய்.

'சாராட்டாவ்' 'மாலுமி' என்று அவள் கூறின சொற்கள்கூட எனக்குப் புதியனவாய் இதுவரை நான் கேள்விப்படாதனவாய் இருந்தன.

அகன்ற மார்பும் சாம்பல் நிறக் கேசமுமுடைய ஒரு மனிதன் நீலநிற உடை அணிந்து, கையில் ஒரு சிறிய பெட்டியை எடுத்துக்கொண்டு, காபினுக்குள் நுழைந்தான். அவன் கொண்டுவந்த பெட்டியை வாங்கி, அதற்குள் என் தம்பியின் சடலத்தை என் பாட்டி தூக்கி வைத்தாள். பிறகு தன் கரங்களை நீட்டிப் பிடித்தவாறு வைத்துக்கொண்டு வெளியே செல்ல அவள் முயன்ருள் ; பருத்த உடலுடைய அவளால் கதவில் நேராக நுழைந்து வெளியே செல்ல முடிய வில்லை ; ஆகவே பக்க வாட்டில் திரும்பியவாறு கதவின் ஊடே என் பாட்டி நுழைந்தாள். நிலை கலங்காமல் அவள் நின்ற கோலம் வெகு வேடிக்கையாக இருந்தது.

என் பாட்டி கையில் இருந்த சவப்பெட்டியைப் பறித்துக்கொண்டு பொறுமையிழந்தவளாய் என் தாய் "அம்மா!" என்று கதறினுள். பிறகு இருவரும் காபினை விட்டு வெளியே சென்று மறைந்துவிட்டார்கள் ; நானும் நீல உடை அணிந்த அந்த மனிதனும்தான் காபினுக்குள் இருந்தோம்.

" உன் தம்பி நம்மைவிட்டுப் பிரிந்து போய்விட்டான் " என்று என் பக்கமாகத் திரும்பி, குனிந்துகொண்டு அந்த மனிதன் என்னிடம் சொன்னான்.

" நீயார் ?" என்று அவனை நான் கேட்டேன்.

" மாலுமி " என்று அவன் பதில் சொன்னான்.

" சாராட்டாவ் என்பது யார் ?" என்று வினவினேன்.

" அது ஒரு ஊர் ; ஜன்னல் வழியாக எட்டிப்பார் ; அது உனக்குத் தெரியும் " என்று அந்த மாலுமி பதில் சொன்னான்.

ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தபோது, நிலம் வெகு வேகமாகப் போய்க்கொண் டிருப்பதுபோலத் தெரிந்தது. ஏதோ கறுப்பாகவும் கட்டியாகவும் பனிக்கு மத்தியில் அகப் பட்டுக்கொண்டது போன்றும் அந்த நிலம் இருந்தது ; ரொட்டியிலிருந்து இப்பொழுதுதான் வெட்டி எடுக்கப்பட்ட பெரிய ஒரு துண்டம்போல அது எனக்குத் தோன்றியது.

" பாட்டி எங்கே போய் இருக்கிறாள் ?" என்று அந்த மாலுமியை நான் கேட்டேன்.

" தன் பேரனை அடக்கம் செய்ய " நின்று அவன் பதில் சொன்னான்.

" தரையில் வைத்துத்தான் புதைப்பார்களோ ?" என்று அவனை நான் கேட்டேன்

" ஆம். அப்படித்தான் புதைப்பார்கள்."

என் தந்தையைப் புதைத்தபோது, உயிருள்ள தவளைகளை யும்சேர்த்துப் புதைத்த விவரத்தை அந்த மாலுமியிடம் நான் தெரிவித்தேன். தன் கைகளால் தூக்கி, தழுவிக்கொண்டு என்னை அவன் முத்தமிட்டான்.

" குழந்தாய் ! எதுவும் உனக்கு இன்னும் விளங்க வில்லை ; தவளைகளுக்காக நீ வருத்தப்பட வேண்டாம். அவை நாசமாகித் தொலையட்டும் ; உன் தாயின் நிலைக்காகத்தான்

நீ வருந்தவேண்டியவன் ; அவள் எவ்வளவு பெரிய கவலையில் ஆழ்ந்திருக்கிறாள் என்பதை நீயே பார்'' என்று அந்த மாலுமி சொன்னான்.

இந்தச் சமயத்தில் திடீரெனக் கூச்சலிட்டு அலறுவது போல மேலே ஒரு சப்தம் கேட்டது. நீராவிக் கப்பல் என்பது எனக்குத் தெரியுமாதலால் அதைக் கேட்டு நான் பயப்படவில்லை. இந்த அலறலைக் கேட்டதும் வேகமாக என்னைக் கீழே விட்டுவிட்டு "நான் போகவேண்டும்'' என்று சொல்லிக்கொண்டே அந்த மாலுமி வெளியே பாய்ந்தான்.

வெளியே செல்ல விரும்பிய நானும் காபினை விட்டு வெளியே போனேன். இருட்டில் ஒருவரும் தென்படவில்லை; வழி குறுகலாக இருந்தது. மாடிப் படிகளில் இருந்த பித்தளை பளபளப்பது, கதவுக்குச் சிறிது தூரத்திலே தெரிந்தது. நான் கூர்ந்து கவனித்தேன் ; மூட்டை முடிச்சுகளைத் தத்தம் கைகளில் வைத்துக்கொண்டு ஜனங்கள் நிற்பதைக் கண்டேன். எல்லோரும் கப்பலைவிட்டு இறங்கப் போகிறார்கள் என்பது தெளிவாகத் தெரிந்தது ; நானும் இறங்க வேண்டியதுதான் போலும் என எண்ணிக்கொண்டேன்.

இறங்குவதற்கு, மேல் தட்டில் குடியானவர்கள் தயாராக நின்றார்கள் ; நான் அவர்கள் மத்தியிலே போய் நின்றதும் அவர்கள் எல்லோரும் என்னைப் பார்த்து "நீ யார்? நீ யாரைச் சேர்ந்தவன்?'' என்று இறைந்து கேட்டார்கள்.

"எனக்குத் தெரியாது'' என்று நான் பதில் சொன்னேன்.

நீண்ட நேரம்வரை அவர்கள் என்னை அங்கும் இங்கும் தள்ளித் தள்ளி நெருக்கிக்கொண்டே இருந்தார்கள். கடைசியாக சாம்பல் நிறக் கேசமுள்ள மாலுமி வந்து சேர்ந்தார். "இவன் ஆஸ்ட்ராகனிலிருந்து வந்தவன் ; காபினைவிட்டு வெளியே வந்துவிட்டான்'' என்று சொன்னார்.

பிறகு என்னைத் தன் கைகளில் தூக்கிக்கொண்டு காபினுக்கு ஓடினர்; அங்கே கிடந்த முடிச்சுகள்மீது என்னை உட்காரவைத்து "வெளியே வந்தாயோ உதை கிடைக்கும் தெரியுமா?" என்று தன் கையை ஆட்டி என்னைப் பயமுறுத்தி விட்டு வந்த வழியே அவர் போய்விட்டார்.

மெல்ல மெல்ல மேலே இருந்த சந்தடி குறைந்தது. ஒரு குலுக்கலுடன் கப்பல் நின்றது; தண்ணீர் தெரித்துச் சிதறுவதும் நின்று போயிற்று. ஈரப்பசை படிந்த சுவர் ஒன்று காபினின் ஜன்னலை மறைத்துவிட்டது. வர வர இருட்டாகி வந்தது; ராமான்களும் பரவி அதிகரித்துக்கொண்டு வந்தன. மூட்டை முடிச்சுகளின் அளவு பெருகிப் பெருகி என்னை வெளியே போகும்படி செய்துவிடும்போலத் தோன்றியது. வெறுங் கப்பலில் அவர்கள் என்னைவிட்டுச் செல்வதனல் ஏதாவது நன்மை ஏற்படவா செய்யும்?

நான் எழுந்து கதவுப் பக்கம் போனேன். அது இறுக்கமாக மூடி இருந்தது. பித்தளைத் திருகை என்னுல் திருப்ப முடியவில்லை. ஆகவே, பால் இருந்த போத்தல் ஒன்றை எடுத்து அந்தப் பித்தளைத் திருகில் அழுந்த நான் தொங்கி விட்டேன். போத்தல் உடைந்து அதிலிருந்த பால் தரையில் கொட்டிப் பெருகி ஓடத் தொடங்கியது; எனது கால்களையும் செருப்புகளையும்கூட அது நனைத்துவிட்டது.

செய்த முயற்சி பலிக்கவில்லை என்பதை அறிந்ததும் எனக்கு அழுகை அழுகையாய் வந்தது; மூட்டைகள்மீது படுத்துக்கொண்டு அப்படியே நான் தூங்கிப் போனேன்.

கண் விழித்த சமயம் மீண்டும் கப்பல் அதிர்ந்து தண்ணீர் நாலா பக்கமும் சிதறியது; காபினிலுள்ள ஜன்னல் சூரியன் போலப் பளபளத்தது. என் பாட்டி எனக்குப் பக்கத்தில் அமர்ந்து, தன் தலையை வாரியவாறு தனக்குத் தானே ஏதோ சலித்து முணுமுணுத்துக்கொண்டாள். கரிய நீண்ட நீலநிறக்

கூந்தல் அவளுக்கு ஆச்சரியப்படத்தக்க அளவு அடர்த்தியாக வளர்ந்திருந்தது ; அது அவளுடைய தோள்பட்டை, மார்பு, முழங்கால்வரை தொங்கித் தரைமீது விழுந்து புரண்டுகொண்டிருந்தது. தரையில் விழுந்த கூந்தலைத் தன் ஒரு கையால் தூக்கிப் பிடித்துக்கொண்டு, தனது மற்றொரு கையால் அந்தக் கூந்தலை ஒரு மரச் சீப்பினால் என் பாட்டி வாரிக்கொண்டிருந்தாள். தனது வாயை அவள் இறுக மூடிக்கொண்டிருந்தாள் ; அவளுடைய கரிய கண்கள் கோபத்தால் பிரகாசித்தன. மயிர்க் கற்றைகளுக்கு மத்தியில் தென்பட்ட அவளுடைய முகம் சிறியதாயும் வேடிக்கையாயும் இருந்தது.

இன்று அவள் மனநிலை சரியில்லாமல் இருந்தது ; ஆனால் அவளுக்கு ஏன் இவ்வளவு நீண்ட கூந்தல் இருக்கிறது என அவளை நான் கேட்டதும் முன்னைப்போலவே நட்புரிமையோடும் மென்மையாகவும் அவள் பேசத் தொடங்கினாள்.

" ஆண்டவனுடைய விருப்பத்தால் ஏற்பட்ட தண்டனை ஆகும் இது. இந்தக் கூந்தலை வாரித் தொலைப்பதிலேயே பொழுது முழுதும் கழிந்துபோய்விடுகிறது. கூந்தல் அடர்த்தியாக இருப்பதைக் கண்டு நான் இளமைப் பருவத்தில் பெருமைப்பட்டுக்கொண்டது உண்டு. இப்போது அது பெரிய ஒரு சாபக்கேடுபோல் எனக்கு இருக்கிறது. குழந்தாய்! தூங்கு. பொழுது இன்னும் புலரவில்லை. சூரியன் தோன்ற இன்னும் நேரம் இருக்கிறது" என்று வாஞ்சையோடு சொன்னாள்.

" எனக்குத் தூக்கம் வரவில்லை."

"தூக்கம் வராவிட்டால் நீ தூங்க வேண்டாம் " என்று சொல்லிக்கொண்டே தனது கூந்தலை அவள் கொண்டை போட்டுக்கொண்டாள்; நீண்ட அம்புபோல மல்லாந்தவாக்கில் படுக்கைமீது கிடந்த என் அன்னையை அவள் கவனித்துவிட்டு, " போத்தலை எப்படி நேற்று நீ உடைத்தாய்? மெதுவாகச் சொல் " என்று என்னைக் கேட்டாள்.

அவள் பேசும் வார்த்தைகள் நூதனமான இசையைப் போல, இனிமையாக இருக்கும். மலரைப்போன்று கனிவாக வும் கவர்ச்சிகரமாகவும் இருந்தபடியால், அந்த வார்த்தைகளை நினைவில் இருத்திக்கொள்வது எளிதாக இருந்தது. அவள் சிரித்தாளேயானால், அவளுடைய கரிய விழிகளுக்கு நடுவே இருக்கிற பாவைகள் விரிந்து விவரிக்க முடியாத ஒளியுடன் பிரகாசிக்கும் ; தாமிர நிறமுள்ள அவளுடைய கன்னங்களில் பல சுருக்கங்கள் விழுந்திருந்தபோதிலும், அவள் சிரிக்கும் போது இளமையும் ஒளியும் துலங்கும். அவளுடைய முகத்தில் உறுதியான வெண்பற்கள் பளிச்செனப் பிரகாசிக்கும். நுனி யில் சதைப்பற்றுள்ள அவளுடைய சிவந்த மூக்கும் அகன்று விரிந்த அதன் துவாரங்களும் அவளுடைய சிரிப்பின் அழகைக் குலைத்தன. வெள்ளியால் சித்திரிக்கப்பட்ட கரிய பொடி டப்பியிலிருந்து அவள் பொடி எடுத்துக்கொள்வாள். அவளைச் சுற்றி இருந்த அனைத்தும் கறுப்பாய் இருந்தன ; ஆனால் உள்ளேயிருந்து மட்டும், ஒளி, அவள் கண்கள் வழி யாகப் பிரகாசித்தது ; அணைக்க முடியாததன்மையும் அன்பும் மகிழ்ச்சியும் அந்த ஒளியில் பிரகாசித்தன. பருத்த உடலுடைய அவள் குனிந்தால் கூனல் விழுந்ததுபோல் இருக்கும். நடக்கும் போது லாவகமாகவும் எளிதாகவும் பெரிய பூனைபோன்றும் அவள் நடப்பாள். பாசமுள்ள விலங்குபோல அவள் பரிவோடு பழகுவாள்.

அவள் திரும்பும் வரையிலும் நான் இருட்டிலேயே புதைந்து கிடந்து தூங்கி இருக்கிறேன். அவள் வந்ததும் என்னைத் தட்டி எழுப்பி வெளிச்சத்துக்கு அழைத்துப் போனாள். நானு வகையான இன்பங்கள் ஏற்படும் வகையில் சூழ்நிலைகளை அவள் எனக்கு உண்டாக்கித் தந்தாள். உடனே நானும் அவளும் சிறந்த நண்பர்கள் ஆகிப்போய்விட்டோம். அன்னியோன்னியமாகவும் அன்பாகவும் வாழ்க்கை முழுதும்

பழகினேம். அவளை நான் நன்ருகத் தெரிந்துகொண்டேன். அவளுடைய தன்னலமற்ற அன்புகனிந்த வாழ்க்கை என் வாழ்க்கையை வளப்படுத்தியது ; பிற்காலத்தில் எனக்கு ஏற்பட்ட கஷ்டங்களைச் சமாளிக்கும் ஆற்றலை எனக்கு நல்கியது.

நாற்பது ஆண்டுகளுக்கு முன்னர் நீராவிக் கப்பல்கள் மெதுவாகத்தான் செல்லும் ; நிழனி நோவோகிராடை அடைய நாங்கள் நீண்ட காலம் பிரயாணம் செய்ய வேண்டி இருந்தது. ஆரம்ப நாட்கள் அழகு நிரம்பியதாக இருந்தது எனக்கு இன்னும் நினைவு இருக்கிறது.

காலநிலை சுகமாக இருந்தது; காலையிலிருந்து மாலைவரை என் பாட்டியுடன் கப்பலின் மேல்தளத்தில் நான் இருந்தேன். பிரகாசமான வானத்துக்குக் கீழே வால்கா நதியின் இரு கரைகளுக்கும் நடுவே கப்பல் சென்றுகொண் டிருந்தது. இலையுதிர் காலத்தின் தங்கநிறப் பழுப்பு இலைகள் கரைகளின் இரு மருங்கிலும் தெரிந்தன. சாம்பல் - நீலநிறத் தண்ணீரைத் தனது முனையினல் எதிர்த்துக் கிழித்துக்கொண்டே தரு நிறத்தில் இருந்த கப்பல் மெதுவாக ஊர்ந்து சென்றுகொண் டிருந்தது; நீர்ப்பூச்சிபோல இருந்த சால்பல் நிறமான பெரிய படகு ஒன்றையும் அந்தக் கப்பல் இழுத்துக்கொண்டு வந்தது; வால்கா நதியில் சூரியன் மெல்ல மெல்ல மறைந்துகொண் டிருந்தது. மணிக்கு மணி புத்தம் புதிய காட்சிகள் தோன்றிய வண்ணம் இருந்தன ; எங்களைச் சுற்றியிருந்த அனைத்தும் மாறிக்கொண்டே இருந்தன. பசிய மலைகள், மடிப்பு மடிப்பாக ஆடை அணிவித்து, பூமியை அழகுபடுத்துவது போல, அழகாகக் காட்சி தந்தன. கிராமங்களும் நகரங்களும் தூரத்துப் பார்வைக்கு ஏதோ ஒரு ரொட்டித் துண்டம் போலத் தோன்றின. இலையுதிர் காலத்தின் தங்கநிற இலைகள் நீரின்மீது மிதந்துகொண்டிருந்தன.

“ எவ்வளவு அழகாய் இருக்கிறது பார்த்தாயா!” என்று என் பாட்டி உற்சாக வயப்பட்டுச் சொன்னாள். கப்பலின் மேல் தளத்தில் ஒரு கோடியிலிருந்து மறு கோடிக்குப் போய்க்கொண்டிருந்த அவளுடைய முகத்திலும் கண்களிலும் மகிழ்ச்சியின் அறிகுறிகள் தென்பட்டன.

நான் இருப்பதையும் மறந்து கரையையே அவள் கூர்ந்து கவனித்துக்கொண் டிருந்தாள் ; கைகளைக் கட்டிக் கொண்டு நின்றாள் ; அவளுடைய உதடுகளில் புன்னகை தவழ்ந்தது ; கண்களில் நீர் மல்கியது. பூப்போட்ட அவளுடைய கரிய ஆடையைப் பற்றிக்கொண்டு நான் நின்றேன்.

“ ஏன்டா ! நான் தூங்கிக் கனவு கண்டுகொண் டிருக்கிறேன் என்பதாக நினைத்துவிட்டாயா என்ன ?” என்று கேட்டுத்தனது மனநிலையை அவள் சரிப்படுத்திக்கொண்டாள்.

“ எதற்காக இப்படி நீ அழுகிறாய் ?” என்று அவளை நான் கேட்டேன்.

“ கண்ணே ! சந்தோஷ மிகுதியால்தான் அழுகிறேன் ; மனோபலம் குறைந்திருப்பதால்தான் அழுகிறேன் ” என்று சிரித்துக்கொண்டே அவள் பதில் சொன்னாள். “ நான் கிழவியாகிவிட்டேன். எனக்கு இப்போது வயது அறுபதுக்கு மேலாகிறது...”

பொடி டப்பியிலிருந்து ஒரு சிமிட்டாப் பொடியை எடுத்து அவள் போட்டுக்கொண்டாள் ; பிறகு அடியார்களைப் பற்றியும் காட்டு விலங்குகளைப்பற்றியும் திருடர்களைப்பற்றியும் பூதங்களைப்பற்றியும் கற்பனைவளம் நிறைந்த கதைகளைச் சொல்லத் தொடங்கினாள்.

தன் முகத்தை என் முகத்து அருகே வைத்துக்கொண்டு அந்தரங்கமாகவும் அமைதியாகவும் அவள் கதைகள் சொல்லி வந்தாள். தனது பலத்தை எல்லாம் என் கண் வழியாகச் செலுத்தி, எனது இதயத்தைப் பலப்படுத்த விரும்புபவள்

போல என்னைக் கூர்ந்து நோக்கிக்கொண்டே அவள்எனக்குக் கதைகள் சொல்லிவந்தாள் ; பேசினுள் என்று சொல்லாமல் பாடினுள் என்று சொல்வதே பொருந்தும். தொடர்ந்து அவள் சொல்லச் சொல்ல அவளுடைய பேச்சில் இசை இனிமையே மிகுந்து நின்றது. அவள் கதை சொல்வதைக் கேட்பது பரமானந்தமாய் இருக்கும். சொல்வதை நிறுத்தி விட்டாலோ மேலும் தொடர்ந்து சொல்லு என்று எனக்கு அவளை நச்சரிக்கத் தோன்றும்.

" அதன் பிறகு நடந்தது இது; கதகதப்பு அடுப்புக்குக் கீழே வந்து அடுக்களைப் பூதம் அமர்ந்திருந்தது; தன் காலில் சேமியாத் துண்டம் ஒன்றை அது வைத்திருந்தது. 'ஏ சுண்டெலியே ! சுண்டெலியே ! நான் சாகப் போகிறேன் சுண்டெலியே !' என்று முணகிக்கொண்டே அது அசைந் தாடியது."

தனக்கே கஷ்டம் நேர்ந்துவிட்டதைப் போல, முகத் தைச் சுளித்துக்கொண்டும் முன்னும் பின்னும் அசைந்து கொண்டும் தன் கால்களை ஆவலோடு தடவிக்கொண்டும் அவள் உட்கார்ந்து இருந்தாள்.

தாடியும் நல்லியல்பும் படைத்த மாலுமிகள் அவளைச் சூழ்ந்து நின்று, அவள் சொல்வதைக் கேட்டுச் சிரித்தார்கள். அவள் கூறுவதைப் பாராட்டி மேலும் கதைகள் சொல்லும் படி தூண்டினுர்கள். " பாட்டி ! தொடர்ந்து இன்னும் ஒரு கதையை எங்களுக்குச் சொல்லு " என்று சொன்னுர்கள். " இரவு வந்து எங்களோடு சாப்பிடு " என்று அவளை விருந்துக்கு அழைத்தார்கள்.

வோட்கா மது கொடுத்து அவளுக்கு இரவு - விருந்து வைத்தார்கள்; எனக்கு நீர்முலாம் பழமும் கஸ்தூரி முலாமும் தந்தார்கள். பழங்களில் சிறு சிறு துண்டுகள்தான் தந்தார் கள். ஏனெனில் பழங்கள் தின்பதை வெறுத்த மனிதன்

ஒருவன் அந்தக் கப்பலில் இருந்தான் ; கையில் யாரும் பழம் வைத்திருப்பதைக் கண்டால் அவர்களிடமிருந்து அதைப் பிடுங்கி ஆற்றில் அவன் எறிந்துவிடுவான். காவல்காரனைப் போல உடை அணிந்து இருந்த அவனுடைய உடுப்பில் பித்தளைப் பொத்தான்கள் வரிசையாக இருந்தன ; எப்பொழுதுமே குடிபோதையில் இருந்த அவனைக் கண்டதும் ஜனங்கள் ஒளிந்துகொள்வார்கள்.

கப்பலின் மேல்தளத்துக்கு என் தாய் அபூர்வமாகத் தான் வந்தாள் ; பொதுவாக, எங்களுடன் ஒன்றுசேர்ந்து இருக்க அவள் பிரியப்படவில்லை. எப்பொழுதும் போல மௌனமாகவே அவள் இருந்தாள். அவளுடைய உயரமான அழகிய உருவம் இன்றும் என் கண் முன் நிற்கிறது. கடுகடுத்த கரிய முகம் ; அதன்மீது மகுடம் வைத்தால் போல் அழகிய கொண்டைகள்; பிரகாசமான மேகத்தைப்போலவோ அல்லது முற்றும் மூட்டம் போட்டுள்ள மூடுபனிபோலவோ, அவளிடம் உறுதியும் ஒருவித அதிகார தோரணையும் இருந்தன. என் பாட்டியின் கண்களைப் போலவே அவளுடைய கண்களும் பெரிதாய் இருந்தன ; வருடம் ஓட ஓட, அவளுடைய சாம்பல் நிறக் கண்களில் நட்புரிமை அருகி வருவது போலத் தெரிந்தது.

ஒரு நாள் அவள் என் பாட்டியைப் பார்த்துக் கடுமையான தொனியில் " அம்மா ! எல்லோரும் உன்னை எள்ளி நகையாட நீ இடம் கொடுத்துக்கொண்டு இருக்கிறாயே ஏன் ?" என்று கேட்டாள்.

" பிரியப்படுபவர்கள் எள்ளி நகையாடட்டும் ; இந்த உலகத்தில் அவர்கள் சிரித்து மகிழ்வது நல்லதுதானே " என்று என் பாட்டி நல்ல சுபாவத்தோடு பதில் சொன்னாள்.

நிழினி நோவாகிராட் கண்ணுக்குத் தெரிந்ததும் குழந்தை போலத் தாவிக் குதித்து என் பாட்டி சந்தோஷப்

பட்டாள். " பார் ! பார் ! அந்த நகரம் எவ்வளவு அழகாய் இருக்கிறது !" என்று கூவிக்கொண்டே தன் கைகளால் பிடித்துக் கம்பி ஓரமாக என்னைத் தள்ளினாள். " உனது நிழினி நோவாகிராட் வந்துவிட்டதடா ! என்ன அழகாய் இருக்கிறது பார் ! மாதாகோவில்களின் வட்ட மண்டபங்களைக் கவனி ! அவை பறந்து செல்வதுபோலத் தோன்றுகின்றன அல்லவா !" என்றாள். பிறகு தன் கண்களில் நீர் மல்க " வாரியுஷா ! ஒரு முறை நகரத்தைப் பார் ; பெரும்பாலும் நீ மறந்துபோய் இருப்பாய். அதைப் பார்த்துச் சந்தோஷப்படு " என்றாள்.

கவலையோடு தாய் சிரித்தாள்.

அழகான நகருக்கு எதிர்க்கரையில் ஆற்றின் நடுவே கப்பல் சென்று நின்றது ; நூற்றுக்கணக்கான கப்பல்களும் பாய்மரங்களும் நெருக்கமாகத் தெரிந்த ஆற்றின் நடுவே கப்பல் போய் நின்றது. ஜனங்களை நிறைய ஏற்றிக்கொண்டு பெரிய படகு ஒன்று வந்து எங்கள் கப்பலில் அணைந்தது ; உடனே ஏணிப்படி ஒன்று இறக்கப்பட்டு, படகில் வந்தவர்கள் நாங்கள் வந்த கப்பலின் மேல்தளத்துக்கு அதன் வழியாக ஏறிவந்தார்கள். நீண்ட கறுப்புக் கோட்டு அணிந்த மெலிந்த சிறு கிழவர் ஒருவர் முன்னே வெகு வேகமாக வந்தார். அவருடைய கண்கள் பசுமையாய் இருந்தன ; மூக்கு வளைந்திருந்தது ; தாடி செம்பொன் போலச் சிவப்பாக இருந்தது.

" அப்பா !" என்று கதறிக்கொண்டே என் அன்னை அவருடைய கரங்களில் போய் விழுந்தாள் ; அவர் தமது சிறிய சிவந்த கரங்களால், அவளுடைய தலையைப் பிடித்துக் கொண்டு, கன்னங்களைத் தடவிக்கொடுத்தவாறே " ஓகோ ! வா வா போக்கிரி ! இங்கே வந்துவிட்டாயா ? ச்சு ச்சு ச்சு " என்று உணர்ச்சி மேலிட்டுக் கூறினார்.

வந்திருந்தவர்கள் ஒவ்வொருவரையும் கட்டித் தழுவி என் பாட்டி முத்தமிட்டாள். சக்கரம்போல, வேகமாகச் சுழன்று சுழன்று முத்தமிட்டாள்.

" இதோ பாருங்கள் " என்று சொல்லி, வந்திருந்த ஜனங்களிடம் என்னை என் பாட்டி தள்ளிவிட்டாள். " இவன் அம்மான் மைக்கேல் ; இவன் யாக்கோவ் ; இவள் மாமி நட்டாலியா; இந்தச் சிறுவர் இருவம் உன் தாயாதிகள். இருவர் பெயரும் ஷாஷா. இவள் கட்டிரீனா. இவர்கள் எல்லோரும் நம் உறவினர்கள் ; எவ்வளவு பேர் இருக்கிறார் கள் என்பதை நீயே பார் !" என்று கூவினாள்.

" தாயே ! நீ எப்படி இருக்கிறாய் ? சௌக்கியமா ?" என்று பாட்டியை என் தாத்தா கேட்டார்.

ஒருவரை ஒருவர் மூன்று முறை அவர்கள் முத்தமிட்டுக் கொண்டார்கள்.

இதற்கு இடையில் கூட்டத்தின் நடுவே நின்ற என்னை வெளியே பிடித்து நிறுத்தி, தன் கையை என் தலைமீது வைத்தவாறே " நீ யார் ? யாரைச் சேர்ந்தவன் ?" என்று என் தாத்தா என்னைக் கேட்டார்.

" நான் ஆஸ்ட்ராகானிலிருந்து வந்திருக்கிறேன் ; காபினிலிருந்து வந்தேன் " என்று நான் பதில் சொன்னேன்

" இவன் சொல்வதின் பொருள் என்ன ?" என்று என் தாயை என் தாத்தா வினவினார். பிறகு பதிலுக்குக் காத்திராமலே என்னை அப்பால் தள்ளிவிட்டு " அப்பாவைப் போலவே இவனுக்குக் கன்னங்கள் இருக்கின்றன" என்றார் " சரி, எல்லோரும் வந்து படகில் இறங்குங்கள் " என்று ஏவினார்.

நாங்கள் கரை சேர்ந்து, வீதியில் நடந்தோம் ; அதன் இரு மருங்கிலும், கால் அடிபட்டு நசுஞ்சி நைந்து மஞ்சள் நிறமாக மாறிப்போன புற்கள் இருந்தன.

என் தாய்க்கு முன்னதாக என் தாத்தா போய்க்கொண்டிருந்தார் ; அவர், என் தாயின் தோள் மட்டத்துக்குத்தான் இருந்தார்; தமது சிறிய கால்களால் வேகமாக நடந்த அவரை என் தாயார் கவனித்தாள் ; அவர் நடந்து செல்வது அவளுக்கு அவர் காற்றில் மிதந்து செல்வது போலத் தோன்றியது. அன் அம்மான்மார்கள் எதுவும் பேசாமல் பின்னே நடந்து வந்தார்கள். என் தாத்தாவைப் போன்றே மைக்கேலுக்குக் கரிய நீண்ட கூந்தல் இருந்தது; என் தாத்தாவைப் போலவே அவரும் மெலிவாக இருந்தார். யாக்கோவின் கேசம் நெளிந்து அடர்த்தியாக இருந்தது. பிரகாசமான ஆடைகள் அணிந்த தடித்த சில பெண்களும் வந்திருந்தார்கள். அவர்களுடன் ஆறு குழந்தைகள் வந்திருந்தன. அவர்கள் என்னைக் காட்டிலும் வயதில் பெரியவர்களாகவும் அமைதியாகவும் இருந்தார்கள். மாமி நட்டாலியாவுடனும் பாட்டியுடனும் சேர்ந்து நான் நடந்து போனேன். என் மாமி வெளிறிப் போய் இருந்தாள் ; கண்கள் நீல நிறமாய் இருந்தன. அவளுடைய வயிறு மிகப் பெரிதாய் இருந்தது. அடிக்கொரு தடவை பெருமூச்சுவிட்டபடி நின்றுகொண்டு "என்னால் இனி அடிகூட எடுத்துவைக்க முடியாது" என்று அவள் முணுமுணுத்தாள்.

"முட்டாள் ஜனங்கள்! உன்னையும் ஏன் அவர்கள் கூட அழைத்து வந்தார்கள்?" என்று பாட்டி கோபமாகக் கடிந்துகொண்டாள்.

அங்கு வந்திருந்தவர்களில் குழந்தைகளையும் எனக்குப் பிடிக்கவில்லை ; வயதானவர்களையும் பிடிக்கவில்லை. அன்னியர்களுக்கு மத்தியில் இருப்பதுபோல எனக்குத் தோன்றியது. என் பாட்டிகூட வெகு தொலைவுக்கு விலகிப்போய் விட்டவள்போல எனக்குத் தோன்றினாள்.

என் தாத்தாவை எனக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்க வில்லை ; அவரை என்னுடைய எதிரியாகவே நான் உடனே கருதிவிட்டேன். அவருடன் எச்சரிக்கையாகப் பழக வேண்டும் என்ற ஒரு எண்ணம் என் மனத்தில் உதித்தபடியால், அவரை நான் சந்தேகக் கண்ணோடேயே கவனித்து வந்தேன்.

சேர வேண்டிய இடத்துக்கு நாங்கள் போய்ச் சேர்ந்தோம். வலது பக்கக் கரை ஓரத்தில் ஒரு கோடியில் தாழ்ந்த ஒற்றை மாடி வீடு ஒன்று இருந்தது. அந்த வீட்டிலிருந்து தான் தெருவே ஆரம்பமாகியது. அந்த வீட்டுக்கு அழுக்குப் படிந்த ஊதா நிறம் பூசப்பட்டு இருந்தது. ஜன்னல்கள் வெளியே தொறுத்திக்கொண் டிருந்தன ; வீட்டின் கூரை தாழ்ந்து ஜன்னல்கள்மீது படிந்திருந்தது. வெளிப் பார்வைக்கு பெரிய வீடுபோல் தோன்றியது எனினும், உள்ளே அறைகள் மிகச் சிறியவையாய் இருந்தன. இருட்டாயும் ஜன நெருக்கம் உள்ளவையாயும் இருந்தன. துறைமுகத்தை விட்டுக் கப்பல் புறப்படும்போது இருக்கிற சந்தடியுடன் கடுகடுப்புள்ள ஜனங்கள் முட்டி மோதி வந்து போய்க்கொண் டிருந்தார்கள் ; திருட்டுக் காக்கைகள் போலக் குழந்தைகள் கூட்டம் கூட்டமாகத் திரிந்தார்கள். எனக்குப் பழக்கப் படாத மூக்கைத் துளைக்கும் ஒருவித வாடை அந்த வீடு முழுதும் நிலவியது.

முற்றத்திலேயே நான் இருந்துகொண்டேன். அந்த இடமும் எனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. எங்கு பார்த்தாலும் தாழிகளில் சாயம் கலந்த நீர் நிறைத்து வைக்கப் பட்டிருந்தது. உலர்வதற்காகப் பெரிய பெரிய துணிகள் எங்கும் தொங்கவிடப்பட்டிருந்தன. தாழ்வாயும் இடிந்தும் போயிருந்த ஒரு கூடத்தின் மூலையிலுள்ள அடுப்பிலிருந்து நெருப்புப் பிரகாசித்துக்கொண் டிருந்தது. அதில் ஏதோ ஒன்று தளதளத்துப் பொங்கிக்கொண் டிருந்தது. கண்

ணுக்குப் புலனாகாத யாரோ ஒருவர் விநோதமான வார்த்தைகளை - சாந்தாலின், மாஜெண்டா, சல்பூரிக் ஆசிட் - என்ற வார்த்தைகளை உரத்த குரலில் கூவிக்கொண்டிருந்தார்.

## 2

சம்பவங்கள் நிறைந்த, விளக்கிக்கூற இயலாத, வினாவும் விநோதமும் உடைய வாழ்க்கை ஆரம்பமாயிற்று. வருத்தம் தரும் வாழ்க்கையின் உண்மைகளை உணர்ந்த சிறந்த மேதாவி ஒருவர் கூறும் துக்கக் கதைபோல அது என் நினைவில் பதிந்தது. பழைய விஷயங்களை இப்போது மீண்டும் நினைத்துப் பார்க்கும்போது சில சமயங்களில் அப்படி அவை இருந்தது உண்மைதானா என்று நம்புவது சிரமமாய் இருக்கிறது. " முட்டாள் கூட்டத்தின் " வாழ்க்கையில் கொடியவையாயும் மறைவாகவும் இருந்த உண்மைகள் பலவற்றை, எதிர்க்கவும் மறுத்து உரைக்கவும் என் உள்ளம் விரும்பியது.

ஆனால், உண்மை என்பது இரக்க உணர்வுகளுக்கு எல்லாம் அப்பாற்பட்டது. நான் இப்பொழுது என்னைப் பற்றி எழுதவில்லை; சாதாரண ருஷ்யர்கள் வாழ்ந்த, இன்றும் வாழ்கிற, வெறுக்கத்தகுந்த பயங்கரமான சூழ்நிலைகளைப் பற்றித்தான் இப்பொழுது எழுதுகிறேன்.

என் தாத்தாவினுடைய இல்லத்தில் பகைமை உணர்ச்சி பொங்கி வழிந்தது. ஒவ்வொருவரும் மற்றவர்களை வெறுத்தார்கள் ; பகைமை என்ற இந்த நஞ்சு பெரியவர்களிடம் நிறைய வியாபித்து இருந்தது. குழந்தைகளிடம்கூட, ஒரு தொத்து வியாதியேபோல இது பற்றிக்கொண்டு இருந்தது. சொத்தைப் பங்கிட்டுத் தருமாறு சகோதரர்கள் தங்கள் தந்தையைக் கேட்டுக்கொண்டிருந்த சமயத்தில் என் தாய்

போய்ச் சேர்ந்துவிட்டாள் என்று என் பாட்டி சொன்ன விவரங்களிலிருந்து பின்னர் நான் தெரிந்து கொண்டேன். எதிர்பாராத விதத்தில் என் தாயார் போய்ச்சேர்ந்தது, பாகம் பிரித்துக்கொள்ள வேண்டும் என்பதைத் துரிதப்படுத்தி விட்டதாம். தனது அனுமதியின்றி, "தன் நோக்கப்படி" கலியாணம் செய்துகொண்டதற்காகக் கொடுக்காமல் என் தாத்தா பிடித்துவைத்திருந்த சீதனப் பணத்தை என் தாய் கேட்டுவிடுவாளே என்று என் அம்மான்மார்கள் அஞ்சினர் களாம். இந்தச் சீதனப் பணத்தைத் தங்களுக்குப் பிரித்துத் தந்துவிட வேண்டும் என்று என் அம்மான்மார்கள் கேட்டார்களாம். நகரத்தில் பால் கடை வைத்து யார் வியாபாரம் செய்வது, ஓக்கா நதிக் கரையின் மறு புறத்தில் இருக்கும் குனவினோ குடியிருப்பில் யார் கடை திறந்து நடத்துவது என்பது குறித்துச் சில காலம் மனக்கசப்பு ஏற்படக்கூடிய அளவுக்கு அவர்களிடையே பெருத்த விவாதம் நடைபெற்று வந்ததாம்.

நாங்கள் போய்ச் சேர்ந்த சிறிது நேரத்துக்குப் பின்னர், சாப்பாடு நடந்த சமயம், அடுக்களையில் பெரிய ரகளை ஒன்று உண்டாயிற்று. என் அம்மான்மார்கள் திடீரெனத் தாவி வந்து, நாங்கள் சாப்பிட்ட மேஜைமீது சாய்ந்து, என் தாத்தாவை வெறிக்கப் பார்த்துத் திட்டினார்கள்; பற்களை நறநற வென்று கடித்து நாய்போல் உறுமினார்கள். கரண்டியை எடுத்து என் தாத்தா கோபமாக மேஜையை அடித்தார்; "பிச்சை வாங்கி உண்ணும்படியாக உங்களை நான் தெருவில் விரட்டப் போகிறேன்" என்று காகரப்பாக உறுமினார்.

இதைக் கேட்டதும் என் பாட்டி முகத்தைக் கோணலாக வைத்துக்கொண்டு "தந்தையே! இருப்பதை எல்லாம் இவர்களுக்குக் கொடுத்துவிடுங்கள்; தயங்காமல் விரைவிலேயே

கொடுத்துவிடுங்கள். பிறகு நாம் கொஞ்சம் அமைதியாக வாழலாம்'' என்று கூவினாள்.

"அட, சும்மா கிட சதிகாரி!'' என்று என் தாத்தா அவளை அதட்டினார்; அவருடைய கண்களில் கோபம் பீறிட்டுப் பொங்கியது; அவரைப் போன்ற சிறிய உருவம் படைத்தவர்களும் காது செவிடுபடும்படியாகக் கத்த முடியும் என்பது எனக்கு வெகு நூதனமாக இருந்தது.

இவற்றை எல்லாம் கவனிக்க விரும்பாதவள் போல மெதுவாக எழுந்து ஜன்னல் அருகே போய், என் தாய் தன் முதுவைத் திருப்பிக்கொண்டு நின்றாள்.

திடீரென அம்மான் மைக்கேல் தன் சகோதரன் கன்னத்தில் ஓர் அறை கொடுத்தார். அடிபட்டவர் ஊளையிட்டுக் கதறிக்கொண்டு, தன் சகோதரனைப் பிடித்துக்கொண்டார். இருவரும் ஒருவரை ஒருவர் கடிந்துகொண்டும் திட்டிக் கொண்டும் சபதமிட்டுக்கொண்டும் தரைமீது புரண்டனர்.

குழந்தைகள் அழத் தொடங்கினர். கருத்தரித்திருந்த என் மாமி நட்டாலியா விம்மி விம்மி அழுதாள். அவளை என் அன்னை தம் இருகைகளால் தாங்கி அழைத்துப்போனாள். வேடிக்கைக்காரியான அம்மை வடுபோட்ட செவிலித்தாய் யெவ்ஜீனியா குழந்தைகள் எல்லோரையும் அடுக்களையை விட்டுத் துரத்தினாள். நாற்காலிகள் நொறுங்கின. தொழில் பயின்றுகொண்டிருந்த சிக்காநாக் என்பவன் அம்மான் மைக்கேலின் முதுவில் அமர்ந்துகொண்டான். சொரிபிடித்த, தாடியுள்ள கறுப்புக் கண்ணாடி போட்டிருந்த மேஸ்திரி கிரிக்கோரி ஐவானோவிச் மெதுவாக வந்து அவருடைய கைகளை ஒரு துண்டால் கட்டினான்.

என் அம்மான் அவனுடைய மெல்லிய கரிய தாடியைப் பிய்த்துத் தரையில் போட்டார். பயங்கரமான தொனியில் கூச்சலிட்டுக் கதறினார்.

"சகோதரர்களாம்! ஆகா சகோதரர்களாம்! சீச்சீ என்ன ஜனங்கள்!" என்று மேஜையைச் சுற்றிக்கொண்டே என் தாத்தா கூச்சலிட்டார்.

வாய்ச் சண்டை ஆரம்பித்தவுடனேயே பயந்து அடுக்களை மூலையில் போய் நான் ஒளிந்துகொண்டு நடப்பதைக் கவனித்தேன். அடிபட்டதால் அம்மான் யாக்கோவின் முகத்திலிருந்து ரத்தம் ஒழுகியது; அதை என் பாட்டி துடைத்துக்கொண் டிருந்தாள். என் அம்மான் அழுதார்; காலால் தரையை ஓங்கி உதைத்தார். என் பாட்டியோ ஏக்கம் கலந்த தொனியில் "நாசமாய்ப் போகிறவர்களே! காட்டுமிராண்டிக் கூட்டமே! அறிவுடன் நடந்துகொள்ளுங்கள்" என்று கதறினாள்.

"இந்த விலங்குகளைத்தான் நீ பெற்றுவிட்டிருக்கிறாய் கிழப் பிணமே!" என்று என் தாத்தா அவளைக் கடிந்துகொண்டார்; இந்தச் சமயத்தில் கிழிந்துபோன தனது சட்டையை அவர் இழுத்துவிட்டுக்கொண்டார்.

அம்மான் யாக்கோவ் வெளியே சென்றதும் அவள் சென்று ஒரு மூலையில் பதுங்கிக்கொண்டாள்.

"ஆண்டவனுடைய புனித அன்னையே! என் குழந்தைகளுக்குக் கொஞ்சம் அறிவைக் கொடு" என்று என் பாட்டி கதறினாள்.

யாவும் சிந்திச் சிதறிப்போய்க் கிடந்த மேஜையில் தன் கண்களைப் பதிய வைத்தவாறு என் தாத்தா நின்றார். "தாயே! உன் புதல்வர்களை நீ கவனித்துக்கொள்வது நல்லது; இல்லையேல் அவர்கள் வார்வாராவுக்கு ஏதாவது தீங்கிழைப்பார்கள்..." என்றார்.

"நீர் கூறுவதன் பொருள் ஆண்டவனுக்குத்தான் புரியும்! சட்டையைக் கழற்றிக்கொடும்; கிழிசல்களை தைத்துத் தருகிறேன்" என்று சொல்லி, அவருடைய முகத்தைத்

தன் கைகளில் பிடித்துக்கொண்டு, அவருடைய நெற்றியில் என் பாட்டி முத்தமிட்டாள். குள்ளமாய் இருந்த என் தாத்தா தன் தலையை அவளுடைய தோளில் புதைத்துக் கொண்டார்.

"பாகத்தைப் பிரித்துக் கொடுத்துவிடுவது நலம் என்று தோன்றுகிறது, தாயே !" என்றார் என் தாத்தா.

"ஆம். தந்தையே !" என்றாள் பாட்டி.

அவர்கள் இருவரும் நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந் தார்கள் ; முதலில் இருவரும் சாந்தமாகப் பேசினார்கள் ; பிறகு சண்டைக்குத் தயாராகும் சேவலைப்போல என் தாத்தா தரையைப் பிராண்டினார் ; பாட்டியை அடிக்கப் போவது போலக் கையை ஓங்கினார்.

"நீ சொல்லுவதுதான் சரி என்று கருதுகிறேன். என்னைக் காட்டிலும் அவர்கள்மீதுதான் உனக்குப் பாசம் அதிகம் இருக்கிறது" என்று ரகசியமாக இரைந்து அவளைக் குற்றம் சாட்டினார் என் தாத்தா. "உன் மகன் மைக்கேல் அயோக்கியன் ; யாக்கோவ் நாஸ்திகன். என்னிடம் இருப் பதை எல்லாம் அவர்கள் நாசமக்கப் பார்க்கிறார்கள்; குடித்துப் பாழாக்கப் பார்க்கிறார்கள்" என்று கூவினார்.

தோளை விகாரமாக அசைத்துக்கொண்டு, இரும்புத் தகட்டின்மீது மோதி நான் கீழே விழுந்தேன் ; இரும்புத் தகடு அடுப்பின்மீது விழுந்தது ; நான் போய் ஒரு வாளி மீது விழுந்தேன். உடனே என் தாத்தா தாவிக் குதித்து என்னைத் தன் பக்கம் பலமாக இழுத்துக்கொண்டார். இப் பொழுதுதான் முதன் முதலாகப் பார்ப்பதுபோல என்னை அவர் முறைத்துப் பார்த்தார்.

"உன்னை இந்த அடுப்பின்மீது வைத்தது யார் ? உன் அம்மாவா ?" என்று கேட்டார்.

"நான்தான் ஏறிக்கொண்டேன்."

" பொய் சொல்லுகிருய்."

"நான் பொய் சொல்லவில்லை. எனக்குப் பயமாய் இருந்தது."

என்னைப் பிடித்துத் தள்ளி நெற்றியில் ஓர் உதை கொடுத்தார் அவர்.

" அப்பனுக்கு மகனே ! போய்த் தொலையடா " என்று உறுமினர்.

மிகுந்த சந்தோஷத்துடன் நான் அடுக்களையை விட்டு வெளியே போய்விட்டேன்.

கூர்மையான பசிய கண்களால் என் தாத்தா என்னைக் கவனிக்கிருர் என்பதை அறிந்தேன் ; அவரைக் கண்டாலே எனக்குப் பயமாய் இருந்தது. அவருடைய கூரிய பார்வையிலிருந்து மறைந்துகொள்ள நான் எப்பொழுதும் முயன்றது எனக்கு இன்னும் நினைவு இருக்கிறது. அற்ப மனிதராக அவர் எனக்குத் தோன்றினர். எல்லோரையும் அவர் கிண்டல் செய்வதும் கேலி செய்வதும் குத்தலாகப் பேசுவதுமாக இருந்தார். மற்றவர்கள் மனதை நோகச் செய்வதிலே அவர் மகிழ்ச்சி அடைந்தார்.

" சீச்சீ ! என்ன ஜனங்கள் !" என்று சொல்வதில் அவருக்குப் பிரியம் அதிகம். " ஊ ஊ " என்று அவர் பெருமூச்சுவிடுவதைக் காணும்போதெல்லாம் ஏக்கமும் பயமும் என்னை வந்து பற்றிக்கொள்ளும்.

என் தாத்தாவும் அம்மான்மார்களும் வேலைக்காரர்களும் மாலையில் தொழிற்சாலையிலிருந்து தேநீர் அருந்த வருவார்கள். சோர்ந்துபோய் அவர்கள் அடுக்களைக்குள் நுழைவார்கள். அவர்களுடைய கைகள் எல்லாம் சாயமயமாய் திரவம் படிந்திருக்கும் ; கூந்தலோ கயிற்ருல் கட்டப்பட்டு இருக்கும். அடுக்களை மூலையில் இருக்கும் கரிய விக்கிரகங்களை நிகர்த்ததாய் அவர்களின் தோற்றம் இருக்கும். இத்தகைய அபாயகரமான

சந்தர்ப்பங்களில் எனக்கு எதிரே அமர்ந்து என் தாத்தா என்னுடன் அடிக்கடி உரையாடுவார் ; இதைக் கண்டு மற்ற பேரக் குழந்தைகள் அவர்மீது பொறுமைப்படும். அவரைச் சுற்றி இருக்கும் அனைத்தும் வெகு கச்சிதமாக இருக்கும். மென்மையாகவும் கடைந்தெடுத்தால்போலும் இருக்கும். நைந்து பழசாய்ப்போன பூவேலை செய்யப்பட்ட சாட்டின் அரை - கோட்டை அவர் அணிந்திருந்தார். அவருடைய சட்டையில் சுறுக்கங்கள் அதிகம் இந்தன ; கால் சட்டையில் முழங்கால் ஓரத்தில் ஒட்டுப்போட்டு இருந்தார். அவருடைய புதல்வர்கள் சிறந்த கோட்டும், மாப்போட்ட சட்டைகளும் பட்டுக்குட்டைகளும் அணிந்திருந்தார்கள். இருந்தாலும் என் தாத்தா சுத்தமானவராக, சிறந்த உடை அணிந்திருப்பவராக, நல்ல தோற்றமுடையவராகத் தென்பட்டார்.

நான் போய்ச் சேர்ந்த சில தினங்களில் பிரார்த்தனை செய்யும் முறையை எனக்கு அவர் கற்றுத்தரத் தொடங்கினார். மற்றக் குழந்தைகள் எல்லோரும் என்னைவிட வயதில் பெரியவர்கள். உஸ்பென்ஸ்கை மாதாகோயிலிலிருந்த பாதிரியார் ஒருவர் வந்து அவர்களுக்கு எழுதப்படிக்கக் கற்றுக்கொடுத்து வந்தார் ; அந்த மாதாகோயிலின் தங்கமயமான தூபிகளை எங்கள் வீட்டு ஜன்னல் வழியாக எளிதில் காண முடியும்.

என் மாமிதான் எனக்குக் கற்றுத் தந்தாள் ; அவள் மிகவும் பயந்தவள் ; அமைதியானவள் ; குழந்தைபோன்ற முகம் ; பிரகாசமான கண்கள் ; அந்தக் கண்கள் வழியாகவே அவளுடைய முதுகையும்கூடப் பார்த்துவிடலாம்போல் தோன்றியது.

அருகே சென்று அமர்ந்து அவளை இமை கொட்டாமல் பார்ப்பதில் எனக்குப் பிரியம் அதிகம். நான் இப்படி பார்ப்பது அவளுக்குப் பிடிக்கவில்லை. ஆகவே, கண்களைச் சிறிதாக்கிக்கொண்டு தலையை அசைத்தவாறு, மிகவும் ரகசிய

மாக மெதுவான குரலில், "'தயவு செய்து எங்கள் தந்தை யாகிய நீங்கள். இரு......' என்று சொல்" என்பாள்.

"'நீங்கள் இரு...' என்றால் என்ன அர்த்தம்?"

"இப்படி எல்லாம்கேட்காதே; அதனால் உனக்குப் பாடம் வராது; நான் சொல்வதையே நீயும் திரும்பச் சொல்; எங்கள் தந்தையே......நல்லது" என்று கோபத்தோடு பார்ப்பாள்.

கேள்வி கேட்பது கெடுதலை உண்டாக்கும் என்பதன் பொருள் எனக்கு விளங்கவில்லை. 'நீங்கள் இரு' என்ற வார்த்தையில் ஏதோ ரகசியம் இருப்பதுபோல எனக்குத் தோன்றியது. ஆகையால் அந்த வார்த்தைகளை நான் வேண்டும் என்றே 'நீங்கள் இறு நீங்கள் இறு' என்று சொன்னேன்.

வெள்ளை முகமுள்ள என் மாமி "அப்படியல்ல, நீங்கள் இரு" என்று பொறுமையோடு உள்ளம் கனிந்து என்னைத் திருத்துவாள்.

அவள் சொல்வதும் எனக்கு எளிதில் புரிவது இல்லை. அவளையும் என்னால் எளிதில் புரிந்துகொள்ள முடியவில்லை. இது எனக்குச் சங்கடமாய் இருந்தபடியால், பிரார்த்தனையை நினைவில் இருத்திக்கொள்வது எனக்குக் கஷ்டமாய் இருந்தது.

ஒரு நாள் என் தாத்தா எனது நடைமுறைகளை பரிசீலிக்கத் தொடங்கினார். "அலெக்ஸி! இன்று நீ என்ன செய்துகொண் டிருந்தாய்? விளையாடிக்கொண் டிருந்தாயா? நெற்றியில் காயம் அல்லவா இருக்கிறது. நெற்றியில் காயம் சேகரித்துக்கொள்வதில் புத்தியைச் செலவிடாதே! எங்கள் தந்தையே! என்ற பாடத்தைப் படிப்பதில் புத்தியைச் செலுத்து" என்றார்.

"இவனுக்கு நினைவு ஆற்றல் மிகக் குறைவு" என்று முணுமுணுத்தாள் என் மாமி.

இதைக் கேட்டதும் என் தாத்தா நகைத்துவிட்டு "அப்படியானால் உதை கொடுக்க வேண்டியதுதான்" என்று

முகத்தைச் சுளித்துக்கொண்டு சொன்னர். பிறகு என் பக்கம் திரும்பி "உன் தந்தை உன்னை உதைத்து இருக்கிருரா ?" என்று கேட்டார்.

அவர் இப்படிக் கேட்டதின் பொருள் எனக்கு விளங்காதபடியால் நான் மௌனமாக இருந்தேன்.

"மாக்ஸிம் எப்பொழுதும் குழந்தையை அடித்தது கிடையாது. அப்படி அடிப்பது தவறு என்றும் அவர் சொல்வார்" என்று என் தாயார் இதற்குப் பதில் சொன்னுள்.

"ஏன் அப்படி ?"

"'அடிப்பதால் யாருக்கும் பாடம் வராது' என்று அவர் சொல்வது உண்டு."

"அந்த மாக்ஸிம் ஒரு முட்டாள்; அவனுடைய ஆத்மா சாந்தி அடைக!" என்று சலிப்போடு சொன்னர் என் தாத்தா.

அவர் கூறின வார்த்தைகள் என் மனத்தை உறுத்தின; இதைக் கவனித்த அவர் "ஏன்டா மூஞ்சியை ஒரு மாதிரியாக 'உம்' என்று வைத்துக்கொண்டு இருக்கிருய்? கவனமாக நடந்துகொள். அந்த விரல்மாட்டியின் காரணமாக ஷாஷாவுக்குச் சனிக்கிழமையன்று சரியான 'ரிப்' அதாவது உதை கிடைக்கப்போகிறது" என்று சொல்லிவிட்டு, தனது சிவந்த வெண்மைநிறக் கூந்தலைக் கோதிவிட்டுக்கொண்டார்.

"எப்படி அடிப்பீர்கள் ?" என்று கேட்டேன் நான்.

இதைக் கேட்டதும் எல்லோரும் சிரித்துவிட்டார்கள். என் தாத்தா என்னைப் பார்த்து "கொஞ்சம் பொறுத்து இரு. எப்படி என்று தெரியும்" என்று பதில் சொன்னர்.

நான் போய் ஒரு மூலையில் அமர்ந்துகொண்டு சிந்திக்கத் தொடங்கினேன்: 'ரிப்' என்ருல் சாயம் தோய்ப்பதற்குள்ள துணிகளைத் தனித் தனியாகப் பிரித்தெடு என்பது பொருள். 'லிக்' என்ற வார்த்தைக்கும் 'பீட்' என்ற வார்த்தைக்கும்

இதே அடி என்ற பொருள்தான் இருக்கிறது. குதிரை, நாய், பூனை இவற்றை மனிதர்கள் அடிப்பதை நான் பார்த்திருக்கிறேன்; சிப்பாய்கள், பாரசீகர்களை அடிப்பதை ஆஸ்ட்ராகானில் நேரில் பார்த்திருக்கிறேன். ஆனால், சின்னஞ் சிறு குழந்தைகளை அடிப்பதை இதுவரை நான் பார்த்தது இல்லை. சில சமயங்களில் என் அம்மான்மார்கள் தங்கள் குழந்தைகளை அடித்தார்கள் என்பது உண்மைதான்; நெற்றியிலோ அல்லது பிடரியிலோ அவர்கள் அடிப்பது உண்டு. அடிபட்ட சிறுவர்கள் அதைப் பொருட்படுத்தாமல், அடிவிழுந்த இடத்தைத் துடைத்துக்கொண்டு, அதை அவர்கள் மறந்துவிடுவார்கள். சில சமயங்களில் அவர்களைப் பார்த்து "உங்களுக்கு வலிக்கவில்லையா?" என்று நான் கேட்பது உண்டு.

"கொஞ்சம்கூட வலிக்கவில்லை" என்று அவர்கள் தைரியமாகப் பதில் சொல்வார்கள்.

விரல்மாட்டி சம்பந்தமான பிரசித்திபெற்ற நிகழ்ச்சி ஒன்று எனக்கு நன்றாக நினைவு இருக்கிறது. தேநீர் பருகும் வேளைக்கும் இரவுச் சாப்பாட்டு வேளைக்கும் இடையில் என் அம்மான்மார்களும் மேஸ்திரியுமாகச் சேர்ந்து, சாயம் தோய்க்கத் தோய்க்கத் துணிகளையெல்லாம் ஒன்றுசேர்த்து நீண்ட துணியாகத் தைப்பார்கள்; அதில் சிறு சிறு அட்டைத் துண்டுகளைத் தொங்கவிடுவார்கள். அரைப் பொட்டையனான கிரிக்கோரியைக் கேலி செய்ய எண்ணி, என் அம்மான் மைக்கேல், ஒன்பது வயதுள்ள தன் தமையன் புதல்வனைக் கூப்பிட்டு, அவனுடைய விரல்மாட்டியை மெழுகுவர்த்தியில் சூடாக்கும்படி சொன்னார். ஷாஷா எழுந்து இடுக்கியால் எடுத்து, விரல் மாட்டியைப் பழுக்கக் காய்ச்சி, கிரிக்கோரிக்குப் பக்கத்தில் வைத்துவிட்டு, அடுப்புக்குப் பின்னே சென்று ஒளிந்து கொண்டான். இந்தச் சமயத்தில் என் தாத்தா அங்கே வந்து சேர்ந்தார். வேலை செய்வதற்காக உட்காரப்போன அவர்,

பழுக்கக் காய்ச்சிச் சூடாக இருந்த விரல்மாட்டியைத் தன் கையில் எடுத்துக்கொண்டார்.

சத்தம் பலமாக இருப்பதைச் செவிமடுத்த நான் அது என்ன என்று அறியும் பொருட்டு, அடுக்களைக்கு ஓடினேன். சூடுண்ட தனது விரல்களைக் காதில் வைத்துக்கொண்டு, வேடிக்கையாக என் தாத்தா குதித்துக்கொண் டிருப்பதையும் " கழிசடைப்பயல்களா ? இதைச் செய்தவன் யாரடா ?" என்று அவர் உறுமிக்கொண்டு இருப்பதையும் கண்டேன்.

அம்மான் மைக்கேல் மேஜைமீது குனிந்து விரல்மாட்டியைத் தன் விரலால் அப்பால் தள்ளிவிட்டு, விரலை ஊதினர். தனது வழுக்கைத் தலையுச்சிமீது நிழல் பரவிக் கிடக்க, கிரிக்கோரி சாவதானமாகத் தைத்துக்கொண் டிருந்தான்; அம்மான் யாக்கோவ் வேகமாக ஓடிவந்தவர், சிரிப்பை அடக்கிக்கொள்ள முடியாமல், அடுப்பின் பின்புறம் சென்று ஒளிந்துகொண்டார்; பச்சை உருளைக்கிழங்கு ஒன்றை என் பாட்டி வருத்து மாவாகச் செய்துகொண் டிருந்தாள்.

" யாக்கோவினுடைய புதல்வன் ஷாஷாதான் இதைச் செய்தவன் " என்று அம்மான் மைக்கேல் திடீரென்று சொன்னர்.

" இது பொய் " என்று சொல்லிக்கொண்டே அம்மான் யாக்கோவ் அடுப்பைவிட்டு வெளியே வந்தார்.

"அப்பா! அவர் சொல்வதை நம்பாதேயுங்கள். அவர்தான் என்னைச் செய்யச் சொன்னவர் " என்று எங்கேயோ ஒரு இடத்திலிருந்தவாறு ஊளையிட்டான் யாக்கோவின் புதல்வன்.

என் அம்மான்மார்கள் தம்முள் சண்டையிட்டுக்கொள்ளத் தொடங்கினர்கள். உடனே என் தாத்தா சாந்தமடைந்தார். உருளைக்கிழங்கு மாவைக் கையில் தடவிக்கொண்டார்; ஒரு வார்த்தையும் பேசாமல் என்னையும் தன்னுடன் அழைத்துக் கொண்டு போய்விட்டார்.

எல்லோரும் அம்மான் மைக்கேல்மீது பழியைப் போட்டார்கள்; ஆகவே, நானும் தேநீர் சாப்பிடும் சமயத்தில் "அம்மானையும் அடித்து நொறுக்க வேண்டியதுதானே?" என்று இயல்பாகக் கேட்டேன்.

என்னைப் பரிவோடு ஒரு பார்வை பார்த்துவிட்டு "ஆம். அடித்து நொறுக்க வேண்டியதுதான்" என்று என் தாத்தா முணுமுணுத்தார்.

இதைக் கேட்டதும் அம்மான் மைக்கேலுக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்துவிட்டது. மேஜையை ஓங்கித் தட்டியவாறே என் தாயைப் பார்த்து, "வார்வாரா! உன் புதல்வன் நாய்க்குட்டிப் பயலைக் கட்டுப்பாடாக இருக்கச் செய்யாவிட்டால் அவனுடைய தலையை நான் கிள்ளி எறிந்து விடுவேன்" என்று உறுமினார்.

"அவனை நீ ஏதாவது இப்போது செய்யேன்; பார்க்கலாம்" என்று பதில் சொன்னாள் என் தாய்.

இதைக் கேட்டு எல்லோரும் வாயடைத்துப்போனார்கள்.

மனத்தில் தைக்கும்படியாக ஒருசில வார்த்தைகளைப் பிரயோகித்து மற்றவர்களை அடக்கிவிடக் கூடிய சாமர்த்தியம் என் அன்னைக்கு இருந்தது.

எல்லோரும் என் தாய்க்குப் பயப்படுகிறார்கள் என்பது எனக்குத் தெரியவந்தது. மற்றவர்களிடம் பேசுவதைக் காட்டிலும் அவளிடம் பேசும்போது, என் தாத்தாகூடக் கொஞ்சம் அடக்கமாகத்தான் பேசினார்; இது எனக்கு மகிழ்ச்சியை அளித்தது.

"எல்லோரையும்விட என் அம்மாதான் பலசாலியாக்கும்" என்று என் அம்மான்களின் பிள்ளைகளிடம் நான் பெருமை அடித்துக்கொள்வது உண்டு.

இதை அவர்கள் ஒருபோதும் மறுக்கவில்லை.

ஆனால், அடுத்த சனிக்கிழமை யன்று நடந்த ஒரு நிகழ்ச்சி எனது இந்த எண்ணத்தைச் சிதற அடித்துவிட்டது.

அந்தச் சனிக்கிழமை யன்று நானும் ஒரு சங்கடத்தில் மாட்டிக்கொண்டேன்.

துணிகளின் நிறத்தைப் பெரியவர்கள் மாற்றுவது என் கவனத்தை ஈர்த்தது. மஞ்சள் நிறமுள்ள ஒரு துணியை எடுத்து, கறுப்பு நிறமுள்ள தண்ணீருக்குள் முக்கி அதை அவர்கள் எடுப்பார்கள். அப்போது அந்தத் துணியின் நிறம் 'இன்டிகோ' என்கிற கரு நீலமாக மாறிவிடும். இல்லாது போனால், சாம்பல் சிவப்பு நிறமுள்ள நீரில் நனைப்பார்கள். அப்போது 'மல்பெரி' என்கிற கருஞ் சிவப்பாக அது மாறி விடும். பார்ப்பதற்கு இவை எல்லாம் மிக எளிதாகத் தோன்றியபோதிலும், புரிந்துகொள்ள முடியாதவையாக அவை இருந்தன.

சாயம் தோய்த்துப் பார்க்க வேண்டும் என்ற ஒரு ஆசை எனக்கு உள்ளூரவே இருந்து வந்தது. இந்த விருப்பத்தை யாக்கோவ் புதல்வன் ஷாஷாவிடம் நான் தெரிவித்தேன். அவன் அமைதியான பையன்; கருக்கடையான பையன்; எப்பொழுதும் பெரியவர்களுடன் கூடவே இருந்து அவர்களுக்கு உதவி ஒத்தாசை செய்யத் தயாராக இருப்பவன்; என் தாத்தாவைத் தவிர்த்து மற்றவர்கள் எல்லோரும் அவனை அடக்கமான பையன் என்றும் புத்திசாலி என்றும் பாராட்டினார்கள்.

அந்தச் சிறுவனை வெறுப்போடு முறைத்துவிட்டு "பூ! அந்தக் கழிசடைப் பயலா!" என்று முணுமுணுப்பார் கிழவர்.

யாக்கோவினுடைய புதல்வன் ஷாஷா கறுப்பாகவும் மெலிந்தும் இருந்தான்; நண்டுக்கு இருப்பதைப் போல, அவனுக்குக் கண்கள் வெளியே தொறுத்திக்கொண்டு இருந்தன. திருட்டு விழி விழித்துக்கொண்டே, பாதிச் சொற்

களை விழுங்கி விழுங்கி, குசுகுசு வென்று மெதுவாகவும் விரைந்தும் அவன் பேசுவான். அவன் பார்க்கிற பார்வை, ஓடி ஒளிந்துகொள்ள விரும்புவதுபோல இருக்கும். அவ னுடைய பழுப்பு நிறக் கண்கள் பெரும்பாலும் அசையாமல் இருக்கும் ; ஆனால் கோபதாபங்களுக்கு வசப்பட்டு இருக் கும் காலங்களில் அவனுடைய கண்கள் வெகு வேகமாகச் சுழலும்.

இவனை எனக்குப் பிடிக்கவில்லை. அம்மான் மைக் கேலின் புதல்வன் ஷாஷாவை எனக்குப் பிடித்திருந்தது ; புரிந்துகொள்ளாத முறையில் அவன் மடையனாக இருந்தான். அப்படி இருந்தும் அவனை எனக்குப் பிடித்திருந்தது. அவன் அமைதியாக இருப்பான் ; தன் தாயின் கண்களில் இருப் பதைப் போலவே அவனுடைய கண்களிலும் துக்கத்தின் சாயல் படர்ந்திருக்கும் ; அவனுடைய சிரிப்பு வசீகரமாய் இருக்கும். ஆனால், பற்களோ படுவிகாரமாக வாயைவிட்டு வெளியே தொறுத்திக்கொண்டு இருக்கும் ; மேல்வாயில் அவ னுக்குப் பற்கள் இரு வரிசையாக முளைத்து இருந்தன. இது அவனைச் சுறுசுறுப்பாக இருக்கச் செய்தது ; அடிக்கடி தன் விரல்களை வாய்க்குள் திணித்துப் பற்களை ஆட்டி ஆட்டி அவற் றைப் பின்னுக்குத் தள்ள முயன்றுகொண்டு இருப்பான். யார் வேண்டுமானாலும் அவனுடைய பற்களைத் தொட்டுப் பார்க்க அனுமதிப்பான் ; இதைத் தவிர்த்து வேறு விசேஷம் எது வும் அவனிடம் இல்லை. ஜன நெருக்கடியுள்ள இந்த வீட்டில் அவன் எப்பொழுதும் தனியாகவே இருப்பான். எங்காவது ஓர் இருட்டு மூலையில் உட்கார்ந்திருப்பான் ; மாலை நேரத்தை ஜன்னல் அருகே அமர்ந்து கழிப்பான். எதுவும் பேசாமல் அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து இருப்பது இன்பமாக இருக்கும். ஜன்னல் அருகே அவனுக்குப் பக்கத்தில் அமர்ந்து, ஒரு மணி நேரம் முழுதும் எதுவும் பேசாமல்

இருக்கலாம் ; காற்றாடி சுற்றுவதைக் கவனிக்கலாம் ; உஸ்பென்ஸ்கை மாதாகோயிலின்மீது விமானங்கள் பறப்பதைக் கவனிக்கலாம். சூரிய அஸ்தமனத்தின் செந்நிறப் பளபளப்புக்குப் பின்னே, தங்கமயமான அதனுடைய வட்ட மண்டபத்தைக் கவனிக்கலாம். பறவைகள் ஆகாயத்தில் விர்ரென்று பறக்கும் ; பிறகு, திடீரென இறக்கைகளை விரித்துக்கொண்டு கீழே இறங்கும். அப்போது மங்கி ஒளி மறையும் வானவெளியில் கறுப்பு வலை ஒன்றை விரித்ததுபோலச் செய்துவிட்டு, உடனே அவை மறைந்துபோய்விடும். அந்தச் சமயம் அகண்டமான வானவெளி சூனியமாய்த் தோன்றும். இத்தகைய காட்சிகளைக் காணும்போது யாருக்குமே பேச மனம் வராது; காரணம், அப்போது உங்கள் உள்ளம் இன்பத்தாலும் துன்பத்தாலும் நிறைந்திருக்கும்.

அம்மான் யாக்கோவினுடைய புதல்வன் ஷாஷாவோ பெரியவர்களைப் போன்று மனத்தில் பதியும்படியாக எதையும் பற்றி நீண்ட நேரம் பேசுவான் ; சாயம் தோய்த்துப் பழகுவதில் எனக்கு விருப்பம் இருக்கிறது என்பதை அறிந்த அவன், அலமாரியில் இருந்த, ஞாயிற்றுக் கிழமைகளில் மட்டும் மேஜைமீது விரிக்கிற மேஜை விரிப்பை எடுத்து, அதைக் கருநீல நிறத்தில் சாயம் தோய்க்கும்படி எனக்கு யோசனை சொன்னான்.

“ மற்றவற்றைக் காட்டிலும் வெள்ளைத் துணியில்தான் சாயம் நன்றாக ஏறும் ” என்று தனது யோசனையை அவன் அழுத்தமாகச் சொன்னான்.

கனமான மேஜை விரிப்பை எடுத்துக்கொண்டு நான் முற்றத்துக்கு ஓடினேன். ‘ இண்டிகோ ’ சாயம் இருந்த ஒரு தொட்டியில் துணியின் ஒரு பகுதியை நான் முக்கிவிட்டேன். இந்தச் சமயத்தில் சிக்காநோக் ஓடி வந்து என்னைப் பிடித்துக்கொண்டான் ; துணியை என் கைகளி

லிருந்து பிடுங்கித் தனது பெரிய கைகளால் அதைப் பிழிந் தான். கொட்டகையில் இருந்த என் அம்மான் மகனைப் பார்த்து, "உன் பாட்டியை அழைத்துக்கொண்டு ஓடிவா!" என்று அலறினன்.

பிறகு, என் பக்கமாகத் திரும்பி, அலங்கோலமாகக் கிடந்த தன் தலையை அசைத்துக்கொண்டே, "இதைச் செய்த தற்காக உனக்குச் சரியான உதை கிடைக்கப் போகிறது" என்று அமங்கலமாகச் சொன்னன்.

என் பாட்டி விரைந்து ஓடி வந்தாள். நடந்திருக்கும் விஷமம் தெரியவந்ததும், வருந்திப் பெருமூச்செறிந்தாள்; இரண்டு துளிக் கண்ணீரையும் சொட்டினாள்; என்னைப் பார்த்து, "முட்டைக்கோஸ் காதுள்ள பயலே! பெர்மாக் கைச் சேர்ந்தவனே! உன்னைப் பிடித்து வேறு எங்காவது ஓர் இடத்தில் எறிந்துவிட வேணுமடா!" என்று வேடிக்கை யாகக் கோபித்துக்கொண்டாள்.

பிறகு சிக்காநோக்கைப் பார்த்து, "வானியா! இந்த விஷயத்தை இவன் தாத்தாவிடம் தெரிவியாதே; நான் இதை மறைத்து வைத்துவிடுகிறேன். விஷயமும் இத்துடன் அடங்கிப் போகும்" என்று வேண்டினாள்.

"நான் சொல்வேன் என்ற அச்சம் தங்களுக்கு வேண் டாம். ஷாஷா இந்த மூட்டையை அவிழ்த்துவிடாதபடி தாங்கள் பார்த்துக்கொள்ளுங்கள்" என்று கவலையோடு பதில் சொல்லி விட்டு, ஈரமாக இருந்த தன் கையை, சாயக் கறைகள் படிந்து கிடந்த தன் ஆடையில் வானியா துடைத்துக்கொண்டான்.

"வாயைத் திறக்காதபடி பணம் கொடுத்து அவனை நான் பார்த்துக்கொள்கிறேன்" என்று சொல்லிவிட்டு, வீட்டுக்குள் என்னை அழைத்துப் போனாள் பாட்டி.

சனிக்கிழமை யன்று மாலைப் பிரார்த்தனைக்குச் சிறிது நேரம் முன்பு யாரோ வந்து என்னை அடுக்களைக்கு அழைத்துப்

போனார்கள். அங்கே இருட்டும் சந்தடி இன்மையும் நிலவின. நுழை வாயில் கதவுகளும் மற்ற அறைக் கதவுகளும் இறுக்கிச் சாத்தப் பெற்று இருந்தன ; இலையுதிர் காலத்து மங்கிய மாலை நேரம் ஜன்னலுக்கு அப்பால் மங்கி மறைந்து கொண்டு இருந்தது ; வெளியே மழைத் தூற்றல் இருப்பதாகத் தெரிந்தது. அடுப்பின் கரிய வாய் அருகே கிடந்த ஒரு பெஞ்ச்மீது சிக்காநோக் வாட்டத்துடன் அமர்ந்து இருந்தான். மூலையில் இருந்த ஒரு தொட்டிக்குப் பக்கத்தில் நின்று, அதில் கிடந்த தண்ணீரிலிருந்து நீண்ட பர்ச் மரக் குச்சிகளை வெளியே எடுத்து, அளந்து பார்த்து, அவற்றை ஒன்றுசேர்த்து என் தாத்தா அடுக்கிக் கட்டினார். பிறகு அவற்றைக் காற்றில் ஒரு சுண்டுச் சுண்டிப் பார்த்தார். இருட்டில் எங்கேயோ ஓர் இடத்தில் நின்று, பொடியை மூக்கில் உறிஞ்சிக்கொண்டு, "மிருகமே! அனுபவி! அனுபவி!" என்று முணுமுணுத்தாள் என் பாட்டி.

யாக்கோப்பினுடைய புதல்வன் ஷாஷா அடுக்களையின் மத்தியில் ஒரு குறிச்சியில் உட்கார்ந்து இருந்தான். கைகளால் தன் கண்களைப் பொத்திக்கொண்டு, கிழட்டுப் பிச்சைக்காரன் கதறுவதுபோல, "கிறிஸ்துமீது அன்புகொண்டு என்னை மன்னித்துவிடுங்கள்" என்று கதறினான்.

மைக்கேல் அம்மான் புதல்வனும் அவன் சகோதரியும் அடுத்து அடுத்து, தந்தி மரம்போல விரைப்பாக நின்றார்கள்.

"நீ செய்ததற்குத் தகுந்த அளவு கிடைத்த பிறகு உன்னை நான் மன்னித்துவிடுகிறேன்" என்று சொல்லி, ஈரமாய் இருந்த குச்சியால் என் தாத்தா அவன் கைமீது அடித்தார். பிறகு "உன் கால் சட்டைகளைக் கழற்று" என்று அவனிடம் சொன்னார்.

இதை அவர் அமைதியாகச் சொன்னார் ; அவருடைய குரலோ, குறிச்சியில் இருந்தவாறு அந்தச் சிறுவன் துடித்த

துடிப்போ, என் பாட்டியின் காலடி ஓசையோ அடுக்களையின் மறக்க முடியாத அந்த அமைதியைக் குலைத்ததாகத் தெரிய வில்லை. புகைபடிந்து இருட்டாக அந்த அடுக்களை இருந்தது.

எழுந்து நின்று தன் கால் சட்டையை முழங்கால் அளவு ஷாஷா கழற்றிவிட்டுக்கொண்டான். குறிச்சிப் பக்கமாகத் திரும்பித் தட்டுத் தடுமாறிக் குனிந்துகொண்டு நின்றான். பார்ப்பதற்கே இது அதிக பயங்கரமாய் இருந்தது. எனது தொடைகள் பயத்தால் வெலவெலத்து நடுங்கின.

பணிவோடு முகத்தை அவன் குறிச்சியில் புதைத்துக் கொண்டதும், நீண்ட ஒரு துணியை எடுத்து ஷாஷாவின் அக்குள்களுக்குள் கொடுத்து, கழுத்தைச் சுற்றி வானியா கட்டிப் போட்டதும், அத்துடன் நில்லாமல் அவனுடைய கைகளையுங்கூட வானியா குனிந்து பிடித்துக்கொண்டு நின்ற தும் இன்னும் அதிக பயங்கரத்தை விளைவித்தன.

"அலெக்ஸி! அருகே வந்து யார்!" என்று என் தாத்தா என்னைக் கூப்பிட்டார். "யாருக்குச் சொல்கிறேன் தெரிகிறதா? அடி என்பது இதுதான். நன்றாகக் கவனி. ஒன்று .." என்று சொல்லிக் கையை ஓங்கி, ஷாஷாவின் வெற்று உடம்பில் ஒரு அடி கொடுத்தார். பையனோ ஊளையிட்டுக் கதறினான்.

" பாசாங்கு செய்து நடிக்காதே ; இப்போது போட்ட உதை உனக்கு உரைத்து இருக்காது. இனிப் போடப் போவதுதான் சரியாக உரைக்கும் " என்று சொல்லி, பர்ச் விளாரை ஓங்கி உடனே ஒரு அடி கொடுத்தார்.

அடி விழுந்த இடம் தடித்து வீங்கிவிட்டது ; வெறுக் கத் தகுந்த சிவந்த வடுவையும் உண்டாக்கிவிட்டது ; என் அம்மான் மகன் நீண்ட நேரம் ஊளையிட்டுக் கதறினான்.

" இது உனக்குப் பிடிக்கிறதாடா ?" என்று கேட்டு விட்டு, தாளம் போடுவதுபோலத் தன் கையைத் தூக்கித் தூக்கி அடித்தார் என் தாத்தா.

" இது உனக்கு ருசியாய் இருக்கிறதா ? விரல்மாட்டிக்காக இதோ ஒரு அடி " என்று சொல்லித் தன் கையை ஓங்கினார் என் தாத்தா.

அவர் கையை ஓங்கும்போது, என் நெஞ்சில், ஏதோ ஒன்று உயரக் கிளம்புவதுபோலவும், பிறகு கீழே கையை இறக்கும்போது அதுவும் சேர்ந்து கீழே விழுவதுபோலவும் எனக்குத் தோன்றியது.

கிறீச்சிட்டுக்கொண்டு ஷாஷா கதறியது, கேட்பதற்கு அறுவறுப்பாய் இருந்தது.

"இனிமேல் அப்படி நான் செய்ய மாட்டேன். மேஜைத் துணியைப்பற்றி உங்களிடம் நான் சொன்னேன் அல்லவா ? அப்படிச் செய்யும்படியாகச் சொன்னவன்..." என்று அவன் கதறினான்.

" கதை அளப்பது எல்லாம் பயன்படாது ; பொய்க் கதை அளப்பவனுக்குத்தான் முதல் அடி ; மேஜைத் துணிக்காக இப்போது உன் முறை வந்திருக்கிறது."

என் பாட்டி ஓடி வந்து என்னைத் தூக்கிக்கொண்டாள். " அலெக்ஸியை நீங்கள் தொடக் கூடாது ? மிருகமே ! நீர் தொடுவதற்கு நான் இடம் கொடுக்க மாட்டேன் " என்றாள்.

" வார்வாரா ! வார்வாரா ! என்று கதறிக்கொண்டே கதவை அவள் தன் காலால் உதைத்தாள்.

என் தாத்தா ஓடிவந்து அவளை அப்பால் தள்ளிவிட்டு, என்னைக் குறிச்சிக்கு இழுத்துப் போனார். அவருடைய கைகளுக்குள் சிக்கியிருந்த நான் அவருடன் போராடினேன். அவருடைய சிவந்த தாடியைப் பிடித்து இழுத்தேன் ; விரலைக் கடித்தேன். என்னை அழுத்தமாகப் பிடித்துக்கொண்டு அவர் உறுமினார். கடைசியாக, குறிச்சிமீது என்னை அவர் தள்ளியதும் எனக்கு முகத்தில் அடிபட்டுவிட்டது. " அவனைக் கட்டிப் போடுங்கள். நான் கொன்றுவிடுகிறேன் " என்று

முரட்டுத்தனமாக அவர் உறுமியது எனக்கு இன்னும் நினைவு இருக்கிறது.

என் தாயின் முகம் வெளிறிவிட்டது ; கண்கள் வீங்கி விட்டன ; குறிச்சி முன்னர் அவள் நடந்து கொடுத்துக் கொண்டே " அப்பா ! அடித்தது போதும் ; நிறுத்துங்கள் ; அவனை விட்டுவிடுங்கள் " என்று சொல்லிப் பெருமூச் செறிந்தது எனக்கு இன்னும் நினைவு இருக்கிறது.

மூர்ச்சையுற்று விழும்வரை என் தாத்தா என்னை அடித்த படி இருந்தார். பிறகு பல தினங்கள் நான் நோய்வாய்ப் பட்டுக் கிடந்தேன் ; ஒரு ஜன்னல் மட்டும் உள்ள சிறிய அறையில், அகன்ற கதகதப்புள்ள ஒரு படுக்கைமீது, முகத்தைப் புதைத்துக்கொண்டு படுத்துக் கிடந்தேன். மூலை யில், விக்கிரகத்துக்கு முன்னே இருந்த சிறிய சிவப்பு விளக்கு ஒன்று அணையா விளக்காக எரிந்துகொண் டிருந்தது.

நான் நோய்வாய்ப்பட்டுக் கிடந்த அந்த நாட்கள் எனது வாழ்க்கையில் முக்கியமான நாட்கள் ஆகும். இந்தக் காலத்தில் திடீரென என் வயது அதிகரித்துவிட்டது போலவும் புதிய குணம் ஒன்று - அதாவது சகல ஜனங்கள்மீதும் ஒருவித ஆழ்ந்த அனுதாபம் - அபிவிருத்தி அடைந்து வருவது போலவும் எனக்குத் தோன்றியது. எனது இதயத்தின் தோலை யாரோ பிய்த்து எடுத்துவிட்டது போலவும் அதனால் பிறரையோ அல்லது என்னையோ தாக்கும் எதையும் என்னால் தாங்க முடியாதது போன்ற ஓர் உணர்வு அதில் ஏற்படுவது போலவும் எனக்குத் தோன்றியது.

முதன் முதலாக, என் தாயாரும் பாட்டியும் தம்முள் சண்டையிட்டுக்கொண்டதைக் கண்டு நான் அதிர்ச்சி அடைந் தேன். பெருத்த ஆகிருதியும் கறுத்த நிறமுமுள்ள என் பாட்டி, நான் இருந்த சிறிய அறைக்குள் பாய்ந்து, என் தாயை விக்கிரகம் இருந்த ஓரத்துக்கு இழுத்துப் போய்,

" நீ ஏன் அவனை அப்பால் இழுத்துக்கொள்ளாமல் இருந்து விட்டாய் ?" என்று சீறினாள்.

" எனக்குப் பயமாய் இருந்தது."

" உன்னைப்போல் பெரியவள் பயப்படலாமா! வார்வாரா! இது எனக்கு வெட்கமாய் இருக்கிறது! கிழவியாய் இருந்தும் நான் பயப்படவில்லை! நீ பயப்படுவது வெட்கக்கேடான செயல்."

" அம்மா ! என்னைச் சும்மாவிட்டுவிட்டுப் போய்விடு. என் மனம் வேதனைப்படுகிறது."

" உனக்கு அவன்மீது கொஞ்சம்கூட அன்பு இல்லை ; நாதியற்ற அந்த அப்பாவிக் குழந்தைமீது உனக்குக் கருணையே இல்லை."

" நானே நாதியற்றவள்தான் ; வாழ்க்கை முழுதும் நாதியற்று இருக்கும் நிலையில் நான் இருக்கிறேன் " என்று புண்பட்டுப் போய் என் தாய் கதறினாள்.

மூலையில் கிடந்த ஒரு உடுப்புப் பெட்டிமீது அமர்ந்து கொண்டு இருவரும் அழுதார்கள்.

" அலெக்ஸி மட்டும் இல்லாதிருந்தால், நான் எங்கேயோ வெகு தூரத்துக்குப் போய் இருப்பேன் ! இந்த நரகத்தில் இருந்துகொண்டு என்னால் வாழ முடியாது. என்னால் வாழவே முடியாது அம்மா ! எனக்கு அதற்குப் பலம் இல்லை " என்று சொன்னாள் என் அன்னை.

" என் இதயக் கொழுந்தே ! என் வயிற்றில் உதித்த குழந்தாய் !" என்று மெதுவாகச் சொன்னாள் என் பாட்டி.

என் தாயாருக்கும் போதிய பலம் இல்லை என்பதை இதனால் நான் தெரிந்துகொண்டேன். மற்றவர்களைப்போலவே அவளும் என் தாத்தாவுக்குப் பயந்தாள். தன்னால் சகித்துக் கொண்டு இருக்க முடியாத ஒரு வீட்டில் என் காரணமாகத் தான் அவள் இருக்கிறாள் என்பது தெரியவந்ததும், என்

மனம் வேதனைப்பட்டது. சிறிது காலத்தில் உண்மையாகவே அந்த இடத்தைவிட்டு அவள் போய்விட்டாள். எங்கேயோ போய் இருந்துகொண்டாள்.

முகட்டைப் பொத்துக்கொண்டு குதித்தவர்போலத் திடீரென்று ஒரு நாள் என் தாத்தா என்னை அணுகினர். படுக்கை ஓரத்தில் அமர்ந்துகொண்டு, ஐஸ்போல் ஜில்லென்று இருந்த தமது விரல்களால் எனது தலையைத் தொட்டுப்பார்த்தார். "வாலிபனே! சௌக்கியமா? ...தயங்காமல் பதில் சொல். என்மீது கோபம்கொள்ளாதே. நல்லது. என்ன? சொல்லு" என்று கேட்டார்.

அவரை உதைக்க என் உள்ளம் விரும்பியது; ஆனால் அதற்கு மனம் வரவில்லை. அவருடைய கூந்தல் எப்பொழுதையும்விடச் சிவப்பாய் இருந்தது. தலையை அவர் அசாதாரணமான முறையில் அசைத்துக்கொண்டார். ஆனால் பிரகாசமான அவருடைய கண்கள் சுவரை எல்லாம் துருவி ஆராய்ந்தது. தனது சட்டைப் பைக்குள்ளிருந்து ஒரு இஞ்சி ரொட்டி, இரண்டு மிட்டாய்கள், ஒரு ஆப்பிள், கொஞ்சம் கிஸ்மிஸ் பழம் ஆகியவற்றை வெளியே எடுத்து, என் முகத்துக்கு அருகே தலையணை ஓரத்தில் வைத்தார்.

"உனக்குச் சில வெகுமதிகள் கொணர்ந்திருக்கிறேன், பார்" என்று சொன்னர்.

இப்படிச் சொல்லிவிட்டுக் குனிந்து என் நெற்றியில் முத்தமிட்டார். பிறகு என்னோடு பேசத் தொடங்கினர். மஞ்சள் சாயம் தோய்ந்திருந்த தனது சொரசொரப்பான கைகளால் எனது நெற்றியைத் தடவிக்கொடுத்தார். அவருடைய கைவிரல்களின் நகங்கள் பறவையின் நகங்களைப்போல வளைவாக இருந்தன.

"குழந்தாய்! உன்னை நான் அதிகமாகவே அடித்துவிட்டேன். நீ என்னைக் கடித்தபடியாலும் பிராண்டிய

படியாலும்,கோபமடைந்து பைத்தியக்காரனாக ஆகிவிட்டேன் இப்போது அதிக உதை விழுந்ததற்காகப் பாதகமில்லை. அடுத்த தடவைக்கு இது உன் கணக்கில் வரவு வைத்துக் கொள்ளப்படும். உறவினர்கள் உன்னை உதைத்ததைக் குற்றமாக எடுத்துக்கொள்ளாதே. திருந்துவதற்காகத்தான் உன்னை அடிக்கிறார்கள் என்பதை நினைவில் வைத்துக்கொள். மற்றவர்கள் உன்னை அடிக்க இடம் கொடாதே ; அது உன் கணக்கில் சேராது. என் காலத்தில் நான் அடிபடவில்லை என்று நினையாதே அலியோஷா ! என்னை அவர்கள் அடித்த அடியைக் கனவிலும் உன்னால் கருதிப் பார்க்க முடியாது. அவர்கள் அடித்த அடியின் கொடுமையைப் பார்த்தால் ஆண்டவன்கூட அழுதுவிடுவார். அதனால் ஏற்பட்ட பலன் என்ன ? பிச்சைக்காரியின் புதல்வனாகவும் நாதியற்றவனாகவும் இருந்த நான், இப்போது இந்தத் தொழிற்சாலைக்கே அதிபனாக இருந்து, இதை நான் நிர்வகித்து வருகிறேன்; என்னைச் சூழ்ந் திருப்போரையும் அதிகாரம் செலுத்தி வாழ்கிறேன்.''

கட்டுமஸ்தான தன் மெல்லிய உடம்பில் என்னை அணைத்துக்கொண்டு, தனது குழந்தைப் பருவத்தைப்பற்றி என்னிடம் என் தாத்தா சொல்லத் தொடங்கினார். வார்த்தை களை அடுக்கடுக்காவும் சாதுரியமாகவும் கோத்துச் சொன்னார்.

அவருடைய பச்சைக் கண்களில் ஒளி பிரகாசித்தது ; கதை சொல்லும்போது, அவருடைய தங்க நிறக் கூந்தல் குத்திட்டுச் சிலிர்த்து நின்றது.

'' நீ இங்கே கப்பலில் வந்தாய் ; நீராவி உன்னை இங்கு கொண்டுவந்து சேர்த்துவிட்டது. ஆனால் நானோ சிறுவனாய் இருந்த காலத்தில், வால்கா நதியில் பிரயாசைப்பட்டு, படகைத் தள்ளிக்கொண் டிருந்தேன். படகு நீரில் நிற்கும். நான் கரையில் நிற்பேன் ; கால்களில் ஒன்றும் இராது ; கூரிய கற்களும் கூழாங் கற்களும் காலைக் குத்தும் ; உதயத்

திலிருந்து அந்திவரை வேலை பார்க்க வேண்டும் ; வெய்யில் பொசுக்கிக்கொண்டே இருக்கும் ; இரும்புப் பாத்திரத்தினுள் ஏதோ இருந்து நெருப்பில் கொதிப்பதுபோலத் தலை கொதிக்கும் ; கொண்டை ஊசிபோல, உடம்பு கூனி வளைந்து விடும். எலும்புகள் நொறுங்குவதுபோலத் தோன்றும். இப்படிச் செய்துகொண்டே இருக்க வேண்டியதுதான் ; எதற்காக என்பது புரியாது. வியர்வை கசிந்து கண்ணுக்குள் ஓடும். நெஞ்சு வலிக்கும் ; உதடுகள் முணுமுணுக்கும். ஆம், அலியோஷா ! நீ சங்கடப்பட்டுகொள்வதற்கு ஒன்றும் இல்லை. கைகால்கள் ஓய்ந்து போகும்வரை இப்படி நீ பாடு பட்டுக்கொண்டுதான் இருக்க வேண்டும். கடைசித் துளிவரை உனது பலம் முழுதும் குன்றி, உனது முகம் மண்ணில் புதைக்கப்படும்வரை, அதனுல் உனக்கு மகிழ்ச்சி ஏற்படும் வரை உன்னுல் ஓய்வுடன் சும்மா இருக்க முடியாது. நீ இருப்பதும் இறப்பதும் அவர்களுக்கு ஒன்று போலத்தான். இரண்டுக்கும் அவர்களிடையே உன்னைப் பற்றியவரை வேறு பாடே கிடையாது. ஆண்டவனின் கண்கள் பார்த்திருக்கவும் ஆசீர்வாதம் பெற்ற நம் எஜமானர் ஏசுநாதர் கண்கள் பார்த் திருக்கவும் நாங்கள் இப்படித்தான் வாழ்ந்தோம்... இந்த மாதிரியாக, தாய் வால்கா நதியின் கரையை - அதன் நீளத்தை நான் - மூன்று முறைகள் நடந்து அளந்து இருக் கிறேன். சிம்சிர்ஸிலிருந்து ரைபின்ஸ்க்கும் சாராட்டாவி லிருந்து இந்த இடத்துக்கும் ஆஸ்ட்ராகானிலிருந்து மாக்கார் யீவிலுள்ள சந்தைக்கும் ஆயிரக்கணக்கான மைல்கள் நடந்து இருக்கிறேன். நான் சாதாரண ஆசாமி அல்ல என்பதை அறிந்த மேஸ்திரி, நான்காவது ஆண்டில் ‘பெய்லர்’ என்ற உயர் பதவியில் என்னை அமர்த்தினுர்’’ என்று சொன்னுர்.

இப்படி அவர் பேசியபோது, மேகம் வளர்வதுபோல வளர்ந்துகொண் டிருப்பவராக என் கண்களுக்கு அவர்

தோன்றினர். சின்னஞ் சிறிய மெலிந்த கிழவனிலிருந்து, பிரம்மாண்டமான பலம்வாய்ந்த பெரும் வீரர் ஒருவர் தோன்றிவிட்டதுபோல, அவர் எனக்குக் காணப்பட்டார். பெரும் ஆற்றின் வேகத்தை எதிர்த்துத் தன்னந்தனியாக, சாம்பல் நிறப் படகு ஒன்றை அவர் தள்ளுவதுபோல எனக்குத் தோன்றியது.

சில சமயங்களில் படுக்கையிலிருந்தபடி குதித்து, படகு தள்ளுவோர் தங்கள் ஆடைகளுடன் தண்ணீருக்குள் நடந்து எப்படி எப்படிப் படகுகளை அவிழ்த்துவிடுவார்கள் என்பதை நடித்துக் காட்டுவார்; கரகரப்பான குரலில் புரியாத பாடல்களைப் பாடிக் காட்டுவார். பிறகு வாலிபன்போலத் துள்ளிக் குதித்துப் படுக்கைக்குப் போய்விடுவார். மனத்தை ஈர்க்கும் வகையில் அழுத்தமாகப் பேசும் இயல்பு படைத்த ஆச்சரியமான மனிதர் அவர்.

"இப்படி எல்லாம் இருந்தபோதிலும் அலெக்ஸி! கோடைக் கால மாலை நேரங்களில் ஜூலிக்குலி என்கிற இடத்தில் பசிய மலை அடிவாரத்தில் தீமூட்டிக்கொண்டு நாங்கள் தங்குவோம். அது எத்தகைய காலம் தெரியுமா? அலெக்ஸி! அடுப்பில் கூழ் கொதித்துக்கொண்டிருக்கும். படகு வலிப்போர் மனம் தோய்ந்து பாடத் தொடங்குவர். மற்றவர்களும் அவர்களுடன் ஒன்று சேர்ந்து பாடுவோம். நாடி நரம்புகள் அனைத்தும் நாங்கள் பாடுவதைக் கேட்பதற்குத் துடிக்கும். வானத்தின் முகட்டையே முட்டித் தள்ளப்போகும் ஒரு குதிரையைப் போன்று வால்கா நதி வேகமாக ஓடும்; காற்றால் அடித்துத் தள்ளப்படும் புழுதிபோல எங்கள் துன்பங்கள் எல்லாம் ஓடி மறைந்துபோகும். கூழ் கொதித்துக்கொண்டிருப்பதையும் மறந்து நாங்கள் பாடிக்கொண்டே இருப்போம்; பொங்கிப் பொங்கி நெருப்பில் அது வழியத் தொடங்கும். உடனே சமையல்காரன் 'பாடுங்கள்;

ஆனால், காரியத்தை மறந்து போகாதீர்கள் ' என்று சொல்லி விட்டு, தன் தலைமீது அடித்துக்கொண்டு எழுவான்.''

பல முறை ஜனங்கள் வந்து கதவு அருகே நின்று கொண்டு அவரைக் கூப்பிடுவார்கள்.

ஆனால், நானே ''நீங்களுமே இன்னும் போகவில்லையா !'' என்று கேட்பேன்.

பிறகு தன் கையை ஆட்டியவாறு சிரித்துக்கொண்டே, '' அவர்களைக் காத்து இருக்கச் சொல்லுங்கள் '' என்று அவர் சொல்லுவார்.

பொழுது சாயும்வரை இப்படியான கதைகளை அவர் சொல்லிக்கொண்டே இருப்பார். பிறகு, அன்பாக என்னிடம் விடைபெற்றுக்கொண்டு அவர் போய்விடுவார். என் தாத்தா கேவலமானவரோ அல்லது பயங்கரமானவரோ அல்ல என்பதை நான் அறிவேன். இருந்தும், என்னை அடித்து நொறுக்கியவர் அவர் என்பது என் நெஞ்சில் பதிந்திருப்பதால், அதை என்னால் மறக்க முடிவது இல்லை.

என் தாத்தா விஜயம் செய்யும்போதெல்லாம் யாராவது வந்து அவரைப் பார்த்துக்கொண்டே இருப்பார்கள். காலை முதல் இரவுவரை யாராவது ஒருவர் எனது படுக்கை அருகே அமர்ந்து, பல விதங்களில் எனக்கு மகிழ்ச்சியூட்டிக்கொண்டிருப்பார்கள் ; விளையாடுவார்கள் ; சில சமயங்களில் இந்த விளையாட்டுகள் வெற்றி பெறாமல் போகும். மற்றவர்களைக் காட்டிலும் என் பாட்டி அடிக்கடி வந்துகொண்டிருந்தாள் ; சில சமயங்களில் எனக்குப் பக்கத்திலேயே அவள் தூங்கிவிடுவாள். சிக்காநோக் என்பவரைப்பற்றிய நினைப்பு என் நெஞ்சில் ஆழமாகப் பதிந்து இருக்கிறது. ஒரு நாள் மாலையில் இவர் வந்து சேர்ந்தார். வாட்ட சாட்டமான உடம்பு ; அகன்று விரிந்த தோள்ப்பட்டை ; சுருட்டை விழுந்த அடர்த்தியான கரிய கூந்தலுள்ள பெரிய தலை. ஞாயிற்றுக்கிழமைகளில்

அணிந்துகொள்ளக் கூடிய நேர்த்தியான உடைகளை அவர் அணிந்து இருந்தார். தேன் நிறத்திலுள்ள பட்டுச் சட்டை ; அகலமான கால்சட்டை ; அக்கார்டியன் இசைக் கருவி போலக் கூச்சலிட்டுக் கால்களை நெருக்கி அழுத்துகிற பூட்ஸ்கள். அவருடைய கூந்தல் பளபளப்புடன் மின்னிற்று ; புருவத்துக்குக் கீழே, மகிழ்ச்சியுடன், கண்கள் கோணல் பார்வையாகப் பிரகாசித்தன ; அப்பொழுதுதான் அரும்பிக்கொண்டிருக்கிற கரிய மீசைகளின் பளபளப்புக்குக் கீழே, பற்கள் வரிசையாகப் பிரகாசித்தன. விக்கிரகங்களுக்கு முன்னே வைத்திருக்கும் சிவப்பு விளக்கிலிருந்து பாய்கிற மெல்லிய ஒளியால் அவருடைய பட்டுச் சட்டை பிரகாசித்தது.

சட்டையைச் சுருட்டிவிட்டு, "இவற்றைப் பார்" என்று சொல்லி, தனது கையில் வலைப் பின்னலைப்போல் வரிசையாக இருந்த செந்நிறத் தழும்புகளை அவர் எனக்குக் காட்டினார். "எப்படி வீங்கி இருக்கிறது பார்த்தாயா? இப்போது இருப்பதைவிட இவை இன்னும் மோசமாய் வீங்கி இருந்தன ; இப்போதோ கிட்டத்தட்ட ஆறிவிட்டன" என்று அவர் சொன்னார்.

" நீ இறந்து போகும் அளவுக்கு உன் தாத்தா உன்னை வெளுத்துக் கட்டிவிட்டார். கோபத்தால் அவர் பைத்தியக்காரர் ஆகிவிட்டார். கையால் தடுத்தால் சவுக்குத் தெறித்துப் போகும் ; புதிய சவுக்கு ஒன்று வாங்கிக்கொள்ளும்வரை உன் தாத்தாவால் ஒன்றும் செய்ய முடியாது ; அடிக்க இடம் கொடுக்காமல் உன் பாட்டியோ அல்லது உன் தாயோ உன்னை அப்பால் இழுத்துப்போய்விடுவார்கள் என்று நான் கருதினேன். நனைத்து ஊறவைத்திருந்த காரணத்தால் சவுக்கு ஒடியவில்லை. இருந்தும் உனக்கு அடி விழாமல் நான் தடுத்துக்கொண்டேன். எத்தனை அடிகள் விழாமல் போய்விட்டன என்பதை நீயே தெரிந்துகொள். நான் கொஞ்சம்

உறுதி குறைந்தவன்" என்று சொல்லி, பல்லைக் காட்டி மெதுவாகச் சிரித்தார்.

வீங்கிப்போன தனது கையை ஒரு முறை பார்த்து விட்டு, "நீ மூச்சுவிட முடியாமல் திணறியதற்காக வருந்து கிறேன். அதனால் கெடுதல் என்பதை நான் அறிவேன். இருந்தும் அவரால் சுழற்றிச் சுழற்றி அடிக்காமல் இருக்க முடியவில்லை..."

குதிரைபோலக் கனைத்து, தன் தலையை அவர் அப்படி யும் இப்படியும் அசைத்துக்கொண்டார். கள்ளங் கபடம் எதுவும் இன்றி, குழந்தையைப்போல என் தாத்தாவை அவர் குற்றம் கூறினபடியால், உடனே அவரிடம் எனக்குப் பரிவு ஏற்பட்டது.

அவரை அதிகமாக நேசிக்கிறேன் என்பதாக அவரிடம் நான் தெரிவித்தேன்.

இதற்கு அவர் அதே எளிமையோடு சொன்ன மறுமொழி மறக்க முடியாதது. "நானும்தான் உன்னை நேசிக்கிறேன். உன்மீது எனக்கு உள்ள பரிவின் காரணமாகத்தான், இந்த வேதனையை நானே ஏற்றுப் பொறுத்துக்கொண்டேன்; மற்ற வர்களுக்காக இருந்தால் இதை நான் செய்திருக்கவா போகி றேன்? இதைத்தான் நான் செய்து இருப்பேன் - அதாவது அவர்கள்மீது காரிக் காரி உமிழ்ந்து இருப்பேன்" என்று சொன்னார்.

அனேக முறை கதவுப் பக்கம் திருட்டுப் பார்வை பார்த்துவிட்டு, அவர் எனக்குப் போதனை செய்யத் தொடங் கினார். "அடுத்த முறை அவர்கள் உன்னை அடிக்கும்போது பொறுத்துக்கொண்டு நீ விரைப்பாக நில்லாதே, தெரிகிறதா? விரைப்பாக நிற்பதனால் மனம் இரு மடங்கு வேதனைப்பட நேருகிறது. 'ஜெல்லி'யைப்போல, உடம்பை மென்மையாக வளைந்து கொடுத்துக்கொள்; மூச்சை அடக்கிக்கொண்டு

சும்மா இராதே ; முடிந்த மட்டும் மூச்சுவிட்டு, இரைச்சல் போட்டுக் கதறு ; இதை நீ நினைவில் இருத்திக்கொண்டால் போதும் '' என்று சொன்னார்.

'' மீண்டும் அவர்கள் என்னை அடிப்பார்களா என்ன ?'' என்று அவரை நான் கேட்டேன்.

'' அப்படியா நினைக்கிறாய்? அவர்கள் கட்டாயம் உன்னை அடிப்பார்கள் ; அனேக முறை உனக்கு உதை நிறைய விழப்போகிறது '' என்று சிக்காநோக் அமைதியாகப் பதில் சொன்னார்.

'' எதற்காக ?'' என்று அவரை நான் கேட்டேன்.

'' எதற்காக என்பது உன் தாத்தா ஒருவருக்குத்தான் தெரியும் '' என்று அவர் பதில் சொன்னார்.

மிகுந்த அக்கறையோடு மேலும் அவர் உபதேசிக்கத் தொடங்கினார்.

'' அவர்கள் உன்னை அடிக்கத் தொடங்கியதும் நெளிந்து கொடுத்து, கீழே விழுந்து அசையாமல் கிட; சவுக்கை ஓங்கித் தோல் உரியும்படியாக அவர் உன்னை அடிக்க வந்தால், அவர் பக்கமாக, நீ உருண்டு போய்விடு ; தெரிகிறதா ? இதனால் அடிவிழுவது குறையும் '' என்று சொல்லிவிட்டு, தனது கரிய கோணல் கண்களை அவர் உருட்டி விழித்தார்.

பிறகு என்னைப் பார்த்து '' அடி என்றால் என்ன என்பதைப் போலிஸ்காரர்களைக் காட்டிலும் நான் நன்கு அறிவேன் ; உதைபட்டு என் உடம்பிலிருந்து பிய்ந்த தோலைக் கொண்டே ஒரு ஜதை கால் சட்டைகள் தைத்துவிடலாம் '' என்று அவர் சொன்னார்.

மகிழ்ச்சி பொங்கும் அவருடைய இனிய வதனத்தை நான் உற்று நோக்கினேன். ஐவான் என்ற இளவரசனைப் பற்றியும் ஐவானுஷ்கா என்ற மடையனைப்பற்றியும் என் பாட்டி கூறின கதைகள் என் நினைவுக்கு வந்தன.

## 3

சிக்கானோக்குக்கு எங்கள் குடும்பத்தில், தனிப்பட்ட ஒரு ஸ்தானம் இருக்கிறது என்பதை, நோய் குணமானதும் நான் தெரிந்துகொண்டேன்; தன் புதல்வர்களிடம் இரைந்து அடிக்கடி கூப்பாடு போட்டதைப் போன்று இவரிடம் என் தாத்தா அடிக்கடி கூப்பாடு போடவில்லை. இவர் இல்லாத சமயத்தில்தான் இவரைப் பற்றி என் தாத்தா பேசுவார்; கண்களை ஒடுக்கிக்கொண்டு தலையை ஆட்டியவாறே, "இந்த ஐவான் அதிர்ஷ்டசாலியாய் இருக்கிறான்; இவன் நாசமாய்ப் போக! நம்மிடையே இருக்கிற இவன் சாதாரணமானவன் அன்று; என் வார்த்தைகள் நினைவில் இருக்கட்டும்" என்று சொல்வார்.

என் அம்மான்மார்களும் சிக்கானோக்கிடம் நட்புரிமையோடு பழகினார்கள். மேஸ்திரி கிரிக்கோரியிடம் நடந்துகொள்வதைப்போன்று இவரிடம் தந்திரமாகவும் விளையாட்டாகவும் நடந்துகொள்ள மாட்டார்கள். ஒவ்வொரு மாலையிலும் கேவலமான சூழ்ச்சிகள் செய்து கிரிக்கோரியைத் தொந்தரவு செய்யத் திட்டம் போட்டுக்கொண்டே இருப்பார்கள். அவனுடைய கத்தரியின் கைபிடிகளைச் சூடாக்கி வைத்துவிடுவார்கள்; அவனுடைய நாற்காலியில் ஆணியைச் சொருகி வைப்பார்கள்; அவன் தைக்கிற துணிக் குவியலில் பல நிறச் சாயங்களைக் கொட்டிவிடுவார்கள்; கண் தெரியாத காரணத்தால் யாவற்றையும் ஒரே நீளமாகச் சேர்த்துக் கிரிக்கோரி தைத்துவிடுவான். அதற்காக என் தாத்தா அவனைக் கடிந்துகொள்வார்.

ஒரு நாள் மாலை, சாப்பாட்டுக்குப் பின்னர், அடுக்களைத் திண்ணையில் கிரிக்கோரி தூங்கிக்கொண்டு இருந்தான். என்

அம்மான்மார்கள் அவனுடைய முகத்திலே ஊதா-சிவப்பு வர்ணத்தைப் பூசிவிட்டுப் போய்விட்டார்கள். இது விவரம் தெரியாமல் அவன் அங்கும் இங்குமாகச் சுற்றித் திரிந்தது; வேடிக்கையாகவும் பயங்கரமாகவும் இருந்தது. அவனுடைய வெளிறிய தாடிக்கு முன்னர், மூக்குக் கண்ணாடியின் இரு கருப்பு வில்லைகள் மங்கலாகப் பிரகாசித்தன. அவனுடைய நீண்ட சிவந்த மூக்கு, கருப்புக் கண்ணாடி வில்லைகளுக்கு நடுவே நாக்கைப்போல் தொங்கியது.

ஏதாவது ஒரு சேட்டையை அடிக்கடி என் அம்மான்மார்கள் தவறாது செய்துகொண்டே இருப்பார்கள். ஒரு வார்த்தைகூடச் சொல்லாமல் கிரிக்கோரி அதைப் பொறுத்துக் கொண்டு சும்மா இருப்பான். இடுக்கி, இரும்பு, கத்தரி, விரல்மாட்டி, எதையும் எடுக்க வேண்டியது இருந்தால், முனங்கிக்கொண்டே விரல்களில் நிறைய எச்சியைச் துப்பிக் கொண்டு எச்சரிக்கையோடு எடுப்பான்; இப்படித் துப்பித் துப்பி எதையும் எடுத்து எடுத்துப் பழகிப்போன காரணத்தால், சாப்பிட வந்து உட்காரும்போதும் தனது விரல்களை எச்சிலால் நனைத்துக்கொண்டுதான், கத்தியையோ அல்லது போர்க்கையோ அவன் எடுப்பான். இதைப் பார்த்துச் சிரித்துக் குழந்தைகள் அவனைக் கேலி செய்வார்கள். இது அவன் மனத்தைப் புண்படுத்துமாயின், பெரிய முகத்தில் சுறுக்கங்கள் அலைபோல விழுந்து, நூதனமாக நெற்றிக்கு ஏறி, அவனுடைய வழுக்கைத் தலைக்குச் சென்று எங்கேயோ மறைந்துவிடும்.

தன் புதல்வர்களின் சேட்டைகளைப்பற்றி என் தாத்தா என்ன நினைத்தார் என்பது எனக்குத் தெரியாது. ஆனால், என் பாட்டியோ தன் முஷ்டியை உயர்த்திக் காட்டி "வெட்கம் கெட்ட பிசாசுகளே! பேய்களே!" என்று அவர்களைக் கடிந்து உரைப்பாள்.

சிக்காநோக்குக்குத் தெரியாமல் அவரைப்பற்றி ஏளன மாவும் வெறுப்போடும் என் அம்மான்மார்கள் பேசிக்கொள் வார்கள். அவர் செய்கிற வேலையைக் குறைசொல்லுவார்கள்; சோம்பேறி என்றும் திருடன் என்றும் அவரை ஏசுவார்கள்.

இதெல்லாம் எதற்காக என்று நான் என் பாட்டியைக் கேட்டேன்.

" தனக்கு எனச் சொந்தமாகக் கடை ஏற்பட்ட பிறகு, தத்தம் கடையில் வானியா வேலை செய்வதை ஒவ்வொரு வரும் விரும்புகிறார்கள். ஆகையால் மற்றவர்கள் முன்னே அவனைப் பற்றி ஒவ்வொருவரும் குறைவாகப் பேசுகிறார்கள். தங்களிடம் வேலைக்கு வராமல் உன் தாத்தாவிடமே வானியா இருந்துவிடுவானோ என்று அவர்கள் இருவரும் அஞ்சுகிறார் கள். உன் தாத்தாவோ தன் போக்கிலேயே நடந்துகொண்டு வருகிறார். மூன்றாவது கடை ஒன்றைத் திறந்து அதில் வானியாவையும் வைத்துக்கொண்டு உன் தாத்தா வேலை பார்க்க விரும்புகிறார். இது உன் அம்மான்மார்களுக்கு தீங்கை உண்டாக்குமல்லவா ?" என்று பதில் சொன்னாள் என் பாட்டி.

இப்படிச் சொல்லிவிட்டு என் பாட்டி மெதுவாகச் சிரித்தாள்.

" அவர்களின் இந்த நடத்தையைப் பார்த்துக் கடவுளே சிரிக்கிறார். அவர்களுடைய நயவஞ்சகத்தைத் தெரிந்து கொண்ட உன் தாத்தா வேண்டும் என்றே அவர்களுக்குக் கோபம் வரும்படியாக நடந்துகொள்கிறார். ஆள் சேர்ப்பதி லிருந்து விலக்குப் பத்திரம் ஒன்று வானியாவுக்காக நான் வாங்கப்போகிறேன். ஆகவே, அவனைப் பட்டாளத்தில் சேர்த்துக்கொள்ள மாட்டார்கள். அவன் இல்லாமல் உன் தாத்தாவால் இருக்க முடியாது. அது உன் அம்மான்மார்களுக் குப் பிடிக்காமல் ஆத்திரப்படுகிறார்கள். பணத்தைச் செலவு

செய்யவும் விரும்பவில்லை. விலக்குப் பத்திரம் வாங்குவதற்கு நிறையப் பணம் செலவாகும்" என்று சொன்னாள் என் பாட்டி.

கப்பலில் வசித்ததுபோல, மீண்டும் ஒரு முறை என் பாட்டியுடன் நான் சேர்ந்து வசிக்கத் தொடங்கினேன். ஒவ்வொரு மாலையிலும் நான் தூங்கப் போவதற்கு முன்பு எனக்கு அவள் அத்தைப் பாட்டிக் கதைகளையோ அல்லது அவற்றைப் போன்று தன் வாழ்க்கையில் நடந்த சுவைமிக்க கதைகளையோ கூறுவாள். குடும்ப விவகாரங்களைப் பற்றிப் பேச நேரும் சந்தர்ப்பம் வந்தால் - என் தாத்தாவின் சொத்துகளைப் பங்கிட்டுக்கொள்வது, அல்லது, தனக்கு என என் தாத்தா தனியாக ஒரு புதிய வீடு வாங்கிக்கொள்ள விரும்புவது, இவைபோன்ற விஷயங்களைப்பற்றிப் பேச நேர்ந்தால் - ஈடுபாடு இல்லாமலும் கிண்டலாகவும் அதைப்பற்றி அவள் பேசுவாள். குடும்பத்தில் தான் இரண்டாவது ஸ்தானம் வகிப்பவள் என்ற எண்ணம் இன்றி, அண்டை வீட்டுக்காரி போல இருந்து இவற்றைப்பற்றி எல்லாம் அவள் சொல்வாள்.

சிக்காநோக் கண்டு எடுக்கப்பட்ட பிள்ளை என்பதை அவளிடமிருந்து நான் தெரிந்துகொண்டேன். எங்கள் வீட்டு வாயில் அருகே வசந்த கால ஆரம்பத்தில், ஒரு நாள் இரவு மழை பெய்தபொழுது, நாற்காலிக்குப் பக்கத்தில் அவரை அவர்கள் கண்டு எடுத்தார்களாம்.

" துணியில் சுற்றப்பட்டு அவன் கிடந்தான். குளிரின் கொடுமை தாங்க முடியாத காரணத்தால், அவனால் அசைந்து பார்க்கக்கூட முடியவில்லை" என்று சிந்தனையோடும் மெதுவாகவும் என் பாட்டி சொன்னாள்.

" குழந்தைகளை ஜனங்கள் ஏன் இப்படிப் போட்டு விட்டுப் போய்விடுகிறார்கள்?" என்று அவளை நான் கேட்டேன்.

“குழந்தை மெலிவாகப் பிறந்து, அதற்குப் பால் கொடுத்து வளர்க்க வசதிக்குறைவாய் இருக்கும் தாய்மார்கள், சமீபத்தில் குழந்தை தொத்தலாகப் பிறந்து, இறந்துபோன வீட்டைக் கேட்டு அறிந்து, தங்கள் குழந்தையை இப்படி அந்த வீட்டு அருகே போட்டுவிட்டுப் போய்விடுகிருர்கள்” என்று சொன்னுள் என் பாட்டி.

பிறகு சிறிது நேரம் மௌனமாய் இருந்துவிட்டு, தனது கூந்தலைக் கோதிவிட்டுக்கொண்டாள்.

“அலியோஷா! இதற்கு எல்லாம் வறுமைதான் காரணம்” என்று சொல்லி மோட்டைப் பார்த்துப் பெரு மூச்சுவிட்டாள். “வர்ணித்துச் சொல்வதற்கு வார்த்தைகள் கூட இல்லாதபடி சிலர் சொல்லொண்ணுத வறுமையில் சிக்கி வருந்துகிருர்கள். கலியாணமாகாத இளம்பெண்கள் குழந்தை பெறுவது பெருத்த மானக்கேடான நடத்தை ஆகும்! வானியாவைப் போலிஸ்காரர்களிடம் ஒப்படைக்க உன் தாத்தா தயாராக இருந்தார். நான் அவரைத் தடுத்து இறந்துபோன நம் குழந்தைகளுக்குப் பதிலாக நமக்கு ஆண்டவன் இந்தக் குழந்தையை அனுப்பி இருக்கிருர். பதினெட்டுக் குழந்தைகளை இந்த உலகுக்கு நான் கொணர்ந்தேன். இந்த வீதி முற்றும் பதினெட்டு வீடுகளில் அவர்கள் வசித்திருப்பார்கள். பதினுன்கு வயதாக இருக்கும்போதே எனக்குக் கலியாணம் நடந்துவிட்டது. எனக்குப் பதினைந்து வயது ஆனபோது முதல் குழந்தை பிறந்தது. என் உதிரத்தில் உதித்த குழந்தைகளை விரும்பிய ஆண்டவன் ஒவ்வொரு குழந்தையாக அவற்றைத் தன்பால் அழைத்து, அவர்களைத் தன் தேவ தூதர்களாக ஆக்கிக்கொண்டுவிட்டார். மனவேதனையும் மகிழ்ச்சியையும் தருகிற ஒரு காரியமாக இது ஆகிவிட்டது!” என்று சொன்னுள் என் பாட்டி.

தனது இரவு உடுப்பை அணிந்துகொண்டு அவள் தன் படுக்கையின் ஓரத்தில் அமர்ந்து இருந்தாள். அவளுடைய கரிய கூந்தல் அவிழ்ந்து பரவிக் கிடந்தது. பருத்த உருவத்துடன் விளங்கிய அவள் ஒரு பெண் கரடிபோல விளங்கினாள். செர்காக் காட்டிலிருந்து, தாடியுள்ள குடியானவன் ஒருவன் அப்பொழுதுதான், எங்கள் வீட்டு முற்றத்துக்குப் பிடித்துவந்த கரடிபோல அவள் காட்சி அளித்தாள்.

"நல்ல குழந்தைகளை எல்லாம் தன்பால் அழைத்துக் கொண்டு, கெட்ட குழந்தைகளை ஆண்டவன் என்பால் விட்டு வைத்துவிட்டார்" என்று சொல்லிவிட்டு, பனிபோன்று தூய வெண்மையுடன் விளங்கிய தன் மார்பின்மீது சிலுவை அடையாளம் வரைந்துகொண்டாள். உடம்பு எல்லாம் நடுங்கியது. "வானியா கிடைத்தது மகிழ்ச்சிதான். உன்னைப் போன்ற மெலிந்த சிறு குழந்தைகளை நான் நேசிப்பது உண்டு. ஆகவே, எடுத்து வளர்த்து அவனுக்கு நாங்கள் பெயர் வைத்தோம். இங்கு வளர்ந்து, வாழ்ந்து, அவன் அழகிய வாலிபனாக மாறிவிட்டான். வண்டைப்போல் ஊர்ந்து ரீங்காரம் செய்த காரணத்தால் அவனை முதலில் நான் வண்டு என அழைத்தேன். அலெக்ஸி! எளிய உள்ளம் படைத்த நீ அவனை நேசிப்பாயாக!" என்று சொன்னாள் என் பாட்டி.

ஐவானை நான் பெரிதும் நேசித்தேன். அவன் செய்த அதிசயத்தைக் கண்டு வாயடைத்துப் போனேன்.

நடைமுறை வாரத்தில் இழைத்த பாப காரியங்களுக்காகக் குழந்தைகளை அடித்து நொறுக்கிவிட்டு, சனிக்கிழமைகள் தோறும் என் தாத்தா மாலைப் பிரார்த்தனைக்காகச் சென்று விடுவார். பிறகு, வருணிக்க முடியாத அளவு குதூகலத்துடன் அடுக்களையில் வாழ்க்கை தொடங்கும். அடுக்களைக்குப் பின்னே திரிகிற கரப்பான் பூச்சிகள் நான்கைப் பிடித்து ஒரு நூலில் சிக்கானோக் கோத்துக் கட்டுவான். ஒரு காகிதத்தை

எடுத்து சறுக்கு வண்டிபோலச் செய்து இந்த நான்கு குதிரை களையும் அதில் பூட்டி, பளபளவென மஞ்சள் நிறத்தில் மின்னும் மேஜைமீது அந்த வண்டியை ஓட்டுவான்.

"அர்ச் பிஷப்பை அழைத்து வர அவர்கள் போய் இருக்கிறார்கள்" என்று சொல்லிக்கொண்டே, சிறிய கம்பு ஒன்றைக் கையில் பிடித்துக்கொண்டு வண்டியை ஓட்டுவான்.

பிறகு மற்றும் ஒரு கரப்பானைப் பிடித்து அதன் முதுகில் ஒரு காகித்தை ஒட்டி வண்டியின் பின்னே அதை அனுப்பி வைப்பான். "பையை மறந்துவிட்டுப் போய்விட்டபடியால், இந்தச் சன்னியாசி அதை அவர்களிடம் எடுத்துப் போகிறார்" என்று உணர்ச்சிவயப்பட்டுக் கூறுவான்.

பிறகு இன்னும் ஒரு கரப்பானைப் பிடித்து அதன் கால்களைக் கட்டிப்போடுவான். அது தட்டுத் தடுமாறித் தன் தலையை நீட்டும்.

"மாலைப் பிரார்த்தனைக்காக உதவிக் குரு தனது அறையைவிட்டுக் கிளம்புகிறார்" என்று சொல்லித் தனது கைகளைக் கொட்டி வானியா ஆர்ப்பரிப்பான்.

சுண்டெலிகளை அவன் பழக்கி வைத்து இருந்தான். அவற்றைப் பின்னங் கால்களால் நிற்கச் செய்தும் நடக்கச் செய்தும் அவன் வேடிக்கை காட்டுவான். தன் வாலை பிடித்துக் கொண்டு அவை பின்னங் கால்களால் நடந்து செல்லும்; தனது உருண்டைக் கண்களை உருட்டி உருட்டி விழித்துக் கொண்டு அவை செல்லும். இந்தச் சுண்டெலிகளை அவன் அன்பாக வளர்த்தான்; தனது கோட்டுப் பைக்குள்ளேயே அவற்றைப் போட்டுக்கொண்டான்; தன் வாய் வழியாகச் சீனியைக் கொடுத்து அவற்றை வளர்த்தான்; முத்தமிட்டான். அவற்றின் மனத்தில் பதியும்படியாக "இந்தச் சுண்டெலி அறிவுமிக்க அடுத்த வீட்டுக்காரன்; மிக அன்பாக நடந்து கொள்ளும். சுண்டெலிகள் என்றால் வீட்டுப் பூதத்துக்குப்

பிரியம் அதிகம்; உணவு ஊட்டி அதை வளர்ப்பவர்களிடம் வீட்டுப்பூதம் பிரியமாக நடந்துகொள்ளும் '' என்று சொன்னான்.

பணங்களைக்கொண்டும் சீட்டுக்களைக்கொண்டும் தந்திரமான ஜாலவித்தைகளை எல்லாம் சிக்காநோக் செய்வான். எந்தக் குழந்தையையும்விட உரக்க அவனால் கூப்பாடு போட முடியும்; அதனால் குழந்தைகளிலிருந்து அவனை வேறுபடுத்திக் காண்பது கஷ்டமாய் இருந்தது. குழந்தைகளுடன் ஒரு நாள் அவன் சீட்டு விளையாடிக்கொண் டிருந்தான். "பன்றி" என்ற ஆட்டத்தில் அவன் பல முறை தோற்றுப் போய்விட்டான். அதனால் அதிகச் சங்கடப்பட்ட அவன் ஆத்திரத்துடன் முகத்தை நீட்டிக்கொண்டு இருந்தான். பிறகு விளையாடுவதை நிறுத்திவிட்ட அவன், என்னிடம் "வேண்டும் என்றே செய்து இருக்கிறார்கள் என்பதை நான் அறிவேன்! ஒருவருக்கு ஒருவர் கண் சாடை செய்து சீட்டுகளை மேஜைக்குக்கீழே கொடுத்து வாங்கி அவர்கள் விளையாடி இருக்கிறார்கள். இதை ஒரு விளையாட்டு என்று சொல்லவா முடியும்? என்னாலும் அவர்களை இப்படி ஏமாற்ற முடியும்'' என்று வருத்தப்பட்டுக்கொண்டான்.

அவனுக்கு அப்பொழுது வயது பத்தொன்பது நடந்து கொண் டிருந்தது. எங்கள் நால்வரை ஒன்றுசேர்த்துப் பார்த்தாலும் அதற்கும்பெரியதாக அவனுடைய ஆகிருதிஇருந்தது.

விடுமுறை நாட்களின் மாலை நேரங்களில் என் தாத்தாவும் அம்மான் மைக்கேலும் நண்பர்களைக் காணச் செல்வார்கள். இந்தச் சமயங்களில் இருக்கும் இவனது தோற்றம் குறிப்பாக என் கண் முன்னே அப்படியே நிற்கிறது. சுருட்டை மயிருள்ள என் அம்மான் யாக்கோவ் தன் மயிரை வாரிவிட்டுக்கொள்ளாமல், சித்தாரை எடுத்துக்கொண்டு அடுக்களைக்கு வருவார்; என் பாட்டி சிற்றுண்டிகளைத் தயார்செய்து வைப்பாள். எப்பொழுதும் உணவு நிறைய இருக்கும். அழகிய சிவப்புப்

பூக்கள் போட்ட ஜாடியிலிருந்து, "வோட்கா" மதுவைக் கிண்ணங்களில் ஊற்றி வைப்பார்கள். தனது ஞாயிற்றுக் கிழமை உடுப்புகளை அணிந்துகொண்டு, சிக்காநோக் பரபரப்புடன் சுற்றித் திரிவான். தனது கரிய மூக்குக் கண்ணாடிகள் பிரகாசிக்கக் கிரிக்கோரி அமைதியாகப் பக்கவாட்டில் வந்து நுழைவான். யெவ்ஜீனியா என்பவளும் அங்கே இருப்பாள். அம்மை வடுவிழுந்த சிவந்த முகமுள்ள அவள் குதிர்போன்று தடித்து இருந்தாள். அவளுடைய சிறிய கண்களில் சூழ்ச்சி பிரதிபலித்தது. குரலோ மிடுக்காகவும் கம்பீரமாகவும் இருந்தது; சில சமயங்களில் உஸ்பென்ஸ்கை மாதாகோவிலைச் சேர்ந்த அடர்ந்த ரோமமுள்ள உதவிக் குருவும் வந்து கலந்து கொள்வார். ஈட்டியைப்போலவும் கடப்பாரைப்போலவும் இருந்த மெலிந்த வேறு சிலரும் வந்து கலந்துகொள்வார்கள்.

எல்லோரும் நிறையச் சாப்பிடுவார்கள்; நிறையக் குடிப்பார்கள்; பெருமூச்சும் விடுவார்கள். குழந்தைகளுக்கும் தங்களுக்கு உரிய பங்கு கிடைக்கும். மதுக் கிண்ணம் நிறைய இனிய மதுவும் அவர்களுக்குக் கிடைக்கும். படிப்படியாக அகத்தில் ஒருவிதமான உற்சாகம் ஊற்றெடுத்துப் பொங்கத் தொடங்கும்.

அம்மான் யாக்கோவ் சித்தாரை எடுத்து ஆசையோடு மீட்டுவார். கருவியைச் சரிப்படுத்திக்கொண்டு ஒவ்வொருவரையும் பார்த்து வேற்றுமை பாராட்டாமல் "நான் ஆரம்பிக்கப்போகிறேன்" என்று சொல்வார்.

தனது சுருட்டை ரோமங்களை அசைத்தாட்டி, குனிந்து, இசைக் கருவியைத் தனது மார்போடு அணைத்துக்கொண்டு, வாத்தைப்போலத் தனது கழுத்தை நீட்டிக்கொள்வார். அவருடைய கவலையற்ற உருண்டை முகத்தில் கனவு காணும் தோற்றம் இருக்கும்; அழகிய கண்களில் எண்ணெய் போன்ற மெல்லிய ரேகைகள் படர்ந்திருக்கும். கம்பிகளை

நீட்டி மெதுவாக அந்தக் கருவியை அவர் வாசிக்கத் தொடங்கும்போது, நீங்கள் கட்டாயம் எழுந்து நின்றுவிடுவீர்கள்.

அவர் வாசிக்கும்போது சந்தடி என்பதே கூடாது; எங்கேயோ வெகு தூரத்திலிருந்து புறப்பட்டு வரும் சிற்றாறுபோல, அவருடைய இசையானது தொடங்கும்; பிறகு சுவர்களையும் தரைகளையும் கடந்து, உங்கள் இதயத்துக்குள் பாய்ந்து, அங்கே அமைதியற்ற துக்க உணர்ச்சியைக் கிளப்பிவிடும். உங்களுக்காகவும் பிறருக்காகவும் வருத்தப்படும்படி உங்களைச் செய்துவிடும்; வயதுவந்தவர்கள் குழந்தைகள்போல் ஆகிவிடுவர்கள்; சந்தடி செய்யாமல் அமைதியாகக் கவலைதோய்ந்து எல்லாரும் உட்கார்ந்து இருப்பார்கள்.

மைக்கேல் அம்மான் மகன் ஷாஷா மனம் தோய்ந்து கவனத்துடன் கேட்பான். தனது முழு உடம்பையும் தன் சிற்றப்பா பக்கமாக வளைத்துக்கொள்வான்; கண்கள் சித்தாரிலேயே பதிந்துகொண்டுவிடும்; வாயைப் பிளந்தவாறு அவன் உட்கார்ந்து இருப்பான்; வாயின் ஓரங்களில் உமிழ்நீர்பெருக்கு எடுக்கும். மனம்தோய்ந்த நிலையில் இப்படி மூழ்கி இருக்கும் அவன் சில சமயங்களில் குறிச்சியிலிருந்து நழுவிக் கீழே விழுந்துவிடுவான்; அப்படி விழுந்துவிட்டால் விழுந்த இடத்திலேயே கைகால்களை ஊன்றிக்கொண்டு,விழுந்த நிலையிலேயே கிடப்பான்; அவனுடைய பார்வை நிலைகலங்காமல் ஒரே நிலையில் இருக்கும்.

இசையின் மோகன சக்தியில் மயங்கி எல்லோரும் மூச்சுப்பேச்சு இன்றி அமைதியாக இருப்பார்கள். இடையூறாக இராமல், சாமொவார் என்ற அடுப்பு மட்டும் அமைதியாக ரீங்காரம் செய்துகொண்டு இருக்கும். இலையுதிர் காலத்தின் இரவைக் கிழித்துக்கொண்டு இரண்டு சிறிய ஜன்னல்கள் தெரியும். சில சமயங்களில் யாராவது வந்து மெதுவாக ஜன்னல் கதவைத் தட்டுவார்கள். மேஜைமீது இருக்

கும் இரண்டு மெழுகுவர்த்திகளின் பிழம்பு ஈட்டி போன்று கூர்மையாகவும் அசைந்தாடிக்கொண்டும் இருக்கும்.

அம்மான் யாக்கோவ் அதிகமாகப் பரவசப்பட்டுப் போவார் ; பல்லை இறுகக் கடித்துக்கொண்டு அவர் அயர்ந்து ஆழ்ந்து தூங்குவதுபோலத் தோன்றும். கைகள் மட்டும் தான் உயிர் ஊட்டம் இருப்பவைபோல அசைந்துகொண்டு இருக்கும். சிறகை அடித்துப் பறவைகள் நாதத்தை எழுப்பு வதைப் போன்று, அவரது வலக் கையின் விரல்கள் வளைந்து நாதலயம் இருக்கும் இடத்தில் இருந்து தம் வேலையைச் செய்யும் ; இடது கைவிரல்களோ, மேலும் கீழுமாக வந்து போய், நாதத்தை எழுப்பியவண்ணம் இருக்கும்.

இரண்டு மூன்று முறை பானத்தைப் பருகிவிட்டு, முடி வற்ற தனது பாடலை, இனிமை குன்றிய, ஆனால் இசையிலக் கணம் பிறழாத குரலில் அவர் புலம்பிக்கொண் டிருப்பார்.

யாக்கோவ் ஒரு சிறு நாய்க்குட்டியாகப் பிறந்திருப்பின், ஊளை யிட்டு ஊளையிட்டு அண்டை வீட்டாரை எல்லாம் எழுப்பிவிடுவான்.

ளொள் ளொள் அன்பான ஆண்டவரே !
ளொள் ளொள் எனக்குச் சங்கடமாய் இருக்கிறது !
பெண் துறவி ஒருத்தி வீதி நெடுக நடந்து வருகிறாள் !
அவள் காலடியில் காக்கை ஒன்று கரைந்துசெல்கிறது !
ளொள் ளொள் எனக்குச் சங்கடமாய் இருக்கிறது !
அடுப்புக்குப் பின்னே ஒரு தும்பி அலறுகிறது. மரச்சோலைக்கு மத்தியில் ஒரு தவளை கத்துகிறது.

ளொள் ளொள் எனக்குச் சங்கடமாய் இருக்கிறது !
கால் சிராயை ஒரு பிச்சைக்காரன் காயத் தொங்கப்போடு கிறான்.

இன்னொரு பிச்சைக்காரன் அதைத் திருடிக்கொண்டுவிட்டான்.
ஆண்டவனே ! அதிக சங்கடமாக இருக்கிறது.
ளொள் ளொள் எனக்குச் சங்கடமாய் இருக்கிறது !

இந்தப் பாடலைப் பொறுமையுடன் கேட்டுக்கொண்டு இருக்க என்னால் முடியவில்லை. பிச்சைக்காரர்களைப்பற்றி என் அம்மான் பாடியபோது, ஆற்றொண்ணுத் துயரத்தை அனுபவித்து நான் அழுது புலம்பினேன்.

மற்றவர்களைப்போலவே சிக்காநோக்கும் இந்த இசையைக் கவனத்துடன் செவிமடுத்தான்; தனது சுருண்ட கூந்தலை விரல்களால் கோதிவிட்டுக்கொண்டு, ஒரு மூலையைப் பார்த்துப் பெருமூச்சுவிடுவான்; சில சமயங்களில் வெளிப்படையாகவே "எனக்கும் இப்படி ஒரு குரல் இருந்தால், நான் மட்டும் பாட மாட்டேனு என்ன?" என்று சொல்லிக்கொள்வான்.

"யாக்கோவ்! உன் தொண்டையைக் கிழித்துக் கொண்டது போதும்" என்று சொல்லிவிட்டு, பெருமூச்சு விட்டவாறே "வானியா! நீ நடனம் ஆடு பார்க்கலாம்" என்பாள் என் பாட்டி.

எப்பொழுதுமே அவளுடைய வேண்டுகோளுக்கு அவன் இணங்கிப் போவது கிடையாது. ஆனால், சில சமயங்களில் ஒரு கணம் மட்டும் வாசிப்பதை இசைவாணன் நிறுத்திக் கொள்வான்; முஷ்டியை மடக்கிக்கொண்டு, அதிகமாகப் பாவனை செய்து, கண்ணுக்குப் புலனாகாமலும் சப்தம் செய்யாமலும் ஏதோ ஒன்றால் தரைமீது தாளம்போடுவதுபோலப் பாவனை செய்வான்; 'ஊடுலம்' போலக் கதறுவான்.

"இந்த மருள் போதும் போதும்! வானியா! நீ எழுந்து நடனம் செய்" என்று சொல்வாள்.

அவன் எழுந்து நின்று தனது உடையைச் சரிப்படுத்திக் கொள்வான்; தனது மஞ்சள் நிறச் சட்டையை நீட்டிவிட்டுக் கொள்வான். கண்ணாடிமீது நடப்பதைப் போன்று கூடத்தின் நடுவில் போய் நிற்பான்.

"யாக்கோவ் வாஸிலியேவிச்! துரிதகாலத்தில் வாசியுங்கள்" என்று நாணப்பட்டுக்கொண்டே பணிவுடன் சொல்வான்.

சித்தாரிலிருந்து துரித காலத்தில் நாதம் கிளம்பியது; தாளத்துக்குத் தக்கபடி கால்கள் நடனமாடின; அலமாரியிலும் மேஜையிலும் இருந்த பாத்திரங்களோ ஒன்றுடன் ஒன்று மோதிக்கொண்டன; சிக்காநோக்கோ அறையின் மத்தியில் சென்று பறவைபோலப் பாய்ந்தான்; இறக்கைகள் அசைப்பதைப்போலத் தன் கைகளை அசைத்தான். கால்களின் துரித நடையைக் கண்களால் அடியொற்றி நம்மால் செல்ல முடியாது. ஒரு கூப்பாடு போட்டு அவன் குந்திக்கொண்டான்; தங்க மேடைபோல விர் என்று சுழன்றான்; அவனுடைய பட்டுடையின் பளபளப்பு ஒவ்வொன்றிலும் பிரகாசித்தது; தகதகப்புடன் சுடர்விட்டு எரிவதுபோல நடுக்கத்துடன் சுடர் ஒளியைப் பரப்பியது.

அலுப்புச் சலிப்பு இன்றிச் சிக்காநோக் நடனம் ஆடினான்; தன்னை மறந்து ஆடினான்; கதவு திறந்து கிடந்தால் தெருவுக்குச் சென்றே நகர முழுதும் ஆடிவிடுவானோ என்று எண்ணும்படியாக அவனுடைய ஆட்டத்தின் போக்கு இருந்தது. இப்படி ஆடி ஆடிக்கொண்டு தெரியாத ஒரு தேசத்துக்குப் போய்விடுவானோ என்றுகூட எண்ணத் தோன்றியது....

அவனுடைய கால் வேகத்துக்குத் தக்கவாறு கருவியை மீட்டி "குறுக்கே ஆடு!" என்று அம்மான் யாக்கோவ் கூவினார்.

காதைத் துளைக்கும்படியாக ஒரு சீட்டி அடித்துவிட்டு, எரிச்சலை உண்டாக்கும் குரலில் கீழ்வரும் இரண்டு அடிப் பாடலை அவன் கதறினான்:

வழி நடந்து செல்லும்போது எனது செருப்புகள் கெட்டுவிடும் என்ற எண்ணம் எனக்கு இல்லாது இருந்திருப்பின்,

இன்றையத் தினமே என் மனைவியைவிட்டு நான் ஓடிப்போய் இருப்பேன்.

மேஜை அருகே வீற்றிருக்கும் ஜனங்களுக்கும் உற்சாகம் பிறந்துவிடும். சில சமயங்களில் அவர்கள் உற்சாகவயப்பட்டுக் கூச்சலிடுவார்கள் ; பழுக்கக் காய்ச்சிய இரும்பால் சூடுண்டவர்களைப் போன்று ஊளையிட்டுக் கதறுவார்கள். தாடியுள்ள மேஸ்திரி தன் வழுக்கைத் தலையில் தாளம் போட்டுக்கொள்வான்; மூச்சைப் பிடித்துக்கொண்டு ஏதேதோ முணகுவான். ஒரு முறை தனது மென்மையான தாடி எனது தோள்பட்டைகள்மீது உராய, என்னை அணுகி, பெரியவர்களுக்குச் சொல்வதைப்போன்று என் காதில் "உன் தந்தை அலெக்ஸி மாக்ஸிமோவிச் உயிருடன் இருந்திருந்தால் எப்படி இருந்திருக்கும் ! அவருடைய போக்கே அலாதியாகப் பிரகாசித்து இருக்கும் ! குதூகல உள்ளம் படைத்த ஆசாமி அவர் ! அவரை உனக்கு நினைவு இருக்கிறதா ?" என்று மெதுவாகக் கேட்டான்.

" இல்லை " என்று நான் பதில் சொன்னேன்.

" ஆஹா ! அவரும் உன் பாட்டியும் சேர்ந்து................ சரி சரி. ஒரு நிமிடம் பொறு " என்று சொல்லிவிட்டு, கிரிக்கோரி எழுந்தான்.

நீண்டு வளர்ந்து, பலம் குன்றி மெலிந்த சந்நியாசியைப் போல் இருந்த அவன், என் பாட்டி முன்னே சென்று, தலை தாழ்த்தி வணங்கி "அக்குலீனா ஐவானேவா! நாங்கள் கண்டு களிக்கத் தாங்கள் ஒரு முறை நடனம் ஆடக் கூடாதா ? நீங்கள் மாக்ஸிம் சாவட்டாயெவிச்சுடன் சேர்ந்து ஆடியதை நினைத்துப் பாருங்கள் ; இப்பொழுது எங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்யுங்கள் !" என்று அசாதாரணமான குரலில் அழுத்தமாகச் சொன்னான்.

" நல்லதாய் போச்சு ! கிரிக்கோரி ! நீ என்ன சொல்லுகிறாய்? அப்பாடி !" என்று சொல்லி என் பாட்டி சிரித்தாள். " என்னையா நடனம் ஆடச் சொல்லுகிறாய் ? ஜனங்கள்

பார்த்து என்னைச் சிரிக்க வேண்டும் என்று நீ கருதுகிருயா?''
என்று சொல்லிவிட்டு அப்பால் நகர்ந்துகொண்டாள்.

அங்கிருந்த ஒவ்வொருவரும் அவளை நடனம் ஆடும்படி தூண்டினர்கள். வாலிப நங்கையைப் போல அவள் திடீரென எழுந்து நின்ருள். உடையைச் சரிப்படுத்திக்கொண்டு விரைப் பாக நிமிர்ந்து நின்று, தனது பாரமான தலையைப் பின்புற மாகச் சாய்த்துக்கொண்டு நடனம் ஆடத் தலைப்பட்டாள்.

"சிரிக்க விரும்புவர்கள் சிரித்துவிட்டுப் போகட்டும்! யாக்கோவ்! நீ வாத்தியத்தை வாசி" என்று சொன்னுள்.

என் அம்மான் நிமிர்ந்து உட்கார்ந்து, காலை நீட்டிக் கொண்டு, கண்களைப் பாதி மூடியவாறு கருவியை மீட்டி, சவுக்க காலத்தில் வாசிக்க ஆரம்பித்தார். சிக்காநோக் சிறிது நேரம் அசைவற்று நின்ருன். பிறகு தாவிக் குதித்து, என் பாட்டியைச் சுற்றி அவள் சென்ற இடம் எல்லாம் சென்று கும்மாளிபோட்டு ஆடினுன். என் பாட்டியோ காற்றில் ஊர்ந்து செல்பவள்போல அமைதியாகத் தரையில் நழுவி நழுவிச் சென்ருள். தன் கைகளை அசைத்துக்கொண்டும் புரு வத்தை நெளித்துக்கொண்டும், கரிய விழிகளால் தூரத்தைக் கவனித்துக்கொண்டும், அவள் நடனம் ஆடினுள். அவ ளுடைய ஆட்டம் நகைக்கத்தக்கதாய் இருந்தபடியால், வேண்டும் என்றே நான் ஒரு உறுமல் போட்டேன். கிரிக் கோரி என்னைப் பார்த்துத் தன் விரல்களை ஆட்டினுன்; மற்ற வர்களும் அதிருப்தியோடு என்னை முறைத்துப் பார்த்தார்கள்.

"ஐவானே! நீ அப்பால் போய்விடு" என்று கிரிக் கோரி சிரித்துக்கொண்டே சொன்னுன். உடனே கீழ்ப்படிந்து சிக்காநோக் அப்பால் சென்று ஓர் இடத்தில் அமர்ந்துகொண் டான். தாதி யெவ்ஜீனியா தன் தொண்டையைக் கனைத்துக் கொண்டு, இனிய குரலில் அழுத்தமாகக் கீழ்வரும் பாடலைப் பாடினுள்:

*வாரம் முழுதும் ஓயாமல், சனிக்கிழமை வரும்வரை, கன்னிப் பெண் ஒருத்தி பின்னல் வேலை செய்தாள்.*

*அவளுடைய விரல்கள் மெலிந்து பலம் குன்றிப்போயின ; முகம் எவ்வளவோ வெளிறிப்போய் மாசடைந்து தென்பட்டது.*

நடனம் ஆடுவதைக் காட்டிலும் கதை சொல்லுவதற்கே என் பாட்டி பிறந்திருப்பவளாகத் தோன்றியது. அவள் எச்சரிக்கையாகவும் மெதுவாகவும் ஒருபுறத்திலிருந்து மறுபுறத்துக்கு அசைந்தாடிக்கொண்டும் போனாள். கை இடுக்கலின் மூலம் அங்கும் இங்கும் கவனித்துக்கொண்டே போனாள் ; தயங்கித் தயங்கி, எச்சரிக்கையாகத் தன் வழியே அசைந்தாடிச் சென்றாள். பயந்து, திடும் என நடுங்கி நின்றுகொண்டாள் ; முகத்தைச் சுளித்துக்கொண்டு, நடுங்கினாள். பிறகு திடும் என அவளுடைய வதனத்தில் கனிவும் புன்னகையும் தோன்றின. யாருக்கோ வழியைவிட விரும்புபவள்போல, மற்றவர்களைத் தள்ளிக்கொண்டு அப்பால் நகர்ந்து போனாள். தலையைத் தாழ்த்திக்கொண்டு, முகத்திலே இன்பக் களையும் புன்னகையும் அரும்ப, எதையோ ஆழ்ந்து செவிமடுத்தவாறு நின்றாள். திடீரென உற்சாகம் மேலிட்டு, நடனம் ஆடத் தொடங்கினாள் ; முன்னைக் காட்டிலும் விரைப்பாகவும் உயரமாகவும் நிமிர்ந்து நின்றும் பம்பரம் போலச் சுழன்றாள். புத்துயிர் பெற்று, இளமை எழில் பொங்க, மோகன வசீகரத்துடன் அவள் தென்பட்டாள். இத்தகைய சந்தர்ப்பங்களில் அவளைப் பார்த்த கண்களை அப்பால் அகற்றுவது எவருக்குமே இயலாத ஒரு காரியமாக இருக்கும்.

இந்த நேரம் முழுதும் தாதி யெவ்ஜீனியா எக்காளம் போல ஊதிக்கொண்டே இருந்தாள் :

*ஞாயிற்றுக்கிழமை காலைப் பிரார்த்தனையிலிருந்து அவர்கள் நடனம் ஆடினார்கள்.*

பொழுது புலரும்வரை அவர்கள் ஆடிக்கொண்டே இருந்தார்கள்.

விரைவிலேயே திங்கட்கிழமை வந்துவிட்டது.

விடுமுறை நாளும் போய்விட்டது.

நடனம் முடிந்ததும் என் பாட்டி சமோவார் அடுப்பு அருகே சென்று அமர்ந்துகொண்டாள். எல்லோரும் அவளைப் பாராட்டிப் புகழ்ந்தார்கள். ஆனால், அவளோ அடக்கமாக அவர்களின் பாராட்டுதலை மறுத்தாள் :

"போதும்! போதும்! தேர்ச்சிபெற்ற நடன மாதுயாரையும் நீங்கள் பார்த்ததில்லை என்று தோன்றுகிறது" என்று சொல்லியவாறு, கலைந்துபோன தன் கூந்தலைச் சரிப்படுத்திவிட்டுக்கொண்டாள். "பாலாக்கானுவில் நான் இருந்தபோது ஒரு பெண் இருந்தாள். அவள் யாரைச் சேர்ந்தவள் என்பதும் அவள் பெயரும் இப்போது எனக்கு நினைவு இல்லை. அவளைப்போல யாராலும் நடனம் ஆட முடியாது. அவள் ஆடுவதைப் பார்த்த யாரும் பரமானந்தத்தால் ஆர்ப்பரிக்காமல் இருக்க முடியாது. அவளையே பார்த்துக்கொண்டு இருக்க உங்கள் இதயம் புளகாங்கிதம் அடைந்துவிடும்; பிறகு எதையுமே பார்க்க உங்களுக்கு ஆவல் தோன்றாது. பாபியான நான் அவளைப் பார்த்து எவ்வளவு பொறுமைப்பட்டு இருப்பேன் தெரியுமா ?" என்று சொன்னாள்.

"பாடகர்களையும் ஆடகர்களையும் பூமியில் சிறந்தவர்கள் என்று சொல்ல வேண்டும்" என்று தாதி யெவ்ஜீனியா அழுத்தமாகச் சொன்னாள். பிறகு டேவிட் அரசனைப் பற்றி ஏதோ சிலவற்றைப் பாடத் தொடங்கினாள்.

"நடன மேடையில் நடனமாடும் தொழில் எனக்குக் கிடைக்க வேண்டும். அதனால் ஜனங்களை நல்ல முறையில் உன்னால் மகிழ்விக்க முடியும்" என்று சிக்காநோக்கின் தோள்

மீது தன் கையைப் போட்டுக்கொண்டே என் அம்மான் யாக்கோவ் அவனைப் பாராட்டினார்.

" பாட வேண்டும் என்பதே என் ஆசை ; ஆண்டவன் எனக்கு இனிமையான ஒரு குரலை அருள் சுரந்து இருந்தால், பத்து ஆண்டுகள்வரை நான் இடைவிடாது பாடிக்கொண்டே இருப்பேன் ; பிறகு நான் சந்நியாசியாக ஆக நேரினும், அதை நான் பொருட்படுத்த மாட்டேன் " என்று சிக்கானோக் வருத்தத்துடன் கூறினான்.

எல்லோரும் வோட்கா மதுவை அருந்தினார்கள் ; கிரிக்கோரி சிறப்பாக அருந்தினான்.

" கவனமாய் இரு கிரிக்கோரி ! இல்லாது போனால் உன் கண் முழுதுமே பொட்டையாகிவிடும் " என்று குவளை நிறைய நிறைய மதுவை ஊற்றிக்கொண்டே அவனை என் பாட்டி எச்சரித்தாள்.

" அதனால் என்ன ? யாவற்றையும் பார்த்து முடித்த எனக்கு இனிக் கண்களே தேவையில்லை " என்று பதில் சொன்னான் கிரிக்கோரி.

இப்படி அவன் அதிகம் பேசினானே தவிர, போதை ஏறும் அளவுக்கு அவன் குடிக்கவில்லை. எந்த நேரமும் என் தந்தையைப்பற்றி என்னிடம் பேசியபடி இருந்தான்.

" அவர் பெரிய மனது படைத்தவர் ; என் சிறந்த நண்பர் ! மாக்ஸிம் சாவட்டாயெவிச் " என்று சொன்னான்.

அவன் சொன்னதை அங்கீகரித்து என் பாட்டியும் பெருமூச்சுவிட்டாள்.

" ஆம். ஆண்டவனுடைய குழந்தைபோல அவர் விளங்கினார் " என்று சொன்னாள்.

இவை அனைத்தும் என் உள்ளத்தில் அதிக உத்வேகத்தை உண்டாக்கின ; என் உள்ளம் உணர்ச்சிப் பிரவாகத்தால் நிறைந்து இருந்தது. ஒருவித அமைதியும் சலிப்பற்ற

ஒருவித மயக்க நிலையும் இந்தச் சூழ்நிலையில் நிலவின. ஜனங்களின் இதயங்களில் இன்பமும் துன்பமும் ஒன்றாகக் கலந்தே இருந்தன. ஒன்றை ஒன்று பிரிக்க முடியாதவாறு அவை இரண்டும் ஒன்றிக் கலந்து இருந்தன. விவரிக்க முடியாத படுவேகத்தில் தந்திரமாக ஒன்றின் ஸ்தானத்தை மற்று ஒன்று அபகரித்துக்கொண்டன.

குடித்துப் பழக்கப்படாத என் அம்மான் யாக்கோவ், ஒரு முறை எதையோ நினைத்துத் தன் சட்டையைக் கிழித்து விட்டுக்கொண்டார் ; தனது சுருட்டை மயிரையும், மூக்குக்கும் தொறுத்திய தன் உதடுக்கும் இடையிலே இருக்கும் நிறமற்ற தன் மீசையையும் பிய்த்துக்கொள்ளத் தொடங்கினர்.

“ எதற்காக ? எதற்காக ?” என்று கூவிக்கொண்டே கண்ணீர் உகுத்தார். “அது ஏன் அப்படியாயிற்று ?” என்று கேட்டார்.

கன்னங்களிலும் புருவத்திலும் மார்பிலும் அடித்துக் கொண்டு சிறிது நேரம் பொறுமிப் பொறுமி அழுதார்; “நான் வீணன் ; அயோக்கியன் ; எனது ஆத்மா வீணுகிவிட்டது ” என்று பொறுமினர்.

“ ஆகா! உண்மைதான் ” என்று உறுமினன் கிரிக்கோரி.

“ போதும் யாக்கோவ் ! நமக்குப் போதிக்க விரும்புவதை நற்சிந்தையுள்ள ஆண்டவன்தான் அறிவார் ” என்று சொல்லிவிட்டு, சிறிது வெறிகொண்டவள் போன்று, தன் புதல்வனின் கரங்களைப் பிடித்துக்கொண்டாள் என் பாட்டி.

எதையோ சிறிது பருகிய பின்னர்தான் அவள் நலத்துடன் தென்பட்டாள். புன்னகை தவழும் அவளுடைய கரிய கண்கள், அன்போடு ஒவ்வொருவரையும் பார்த்துப் பிரகாசித்தன. வியர்த்துப்போன தனது முகத்தைக் கைக்குட்டையால் விசிறிக்கொண்டே இசைநயம் தோய்ந்த இனிய குரலில் “ ஆண்டவனே ! ஆண்டவனே ! எங்கள் எல்லோ

ருக்கும் எவ்வளவு நல்லதாயிற்று ! எங்கள் எல்லோருக்கும் எவ்வளவு நல்லது ஆயிற்று என்பதை நீரே தெரிந்துகொள்ளும்'' என்று சொன்னாள்.

இதுதான் அவளுடைய வாழ்க்கையின் இலட்சியமாயும் இதய தாபமாயும் இருந்தது.

கவலையற்றுத் திரிகிற என் அம்மான் கதறுவதும் கண்ணீர் உகுப்பதும் எனக்கு ஆச்சரியத்தை விளைவித்தன. அவர் ஏன் இப்படி அடித்துக்கொண்டு அழுகிறார் என்று நான் என் பாட்டியைக் கேட்டேன்.

தனது வழக்கத்துக்கு மாறான தொனியில், வேண்டா வெறுப்பாக "உனக்கும் இது தெரிய வேண்டுவதுதான்'' என்று அவள் முணுமுணுத்தாள். "இன்னும் கொஞ்ச காலம் பொறுத்திரு ; இப்போதே அவசரப்பட்டு இத்தகைய காரியங்களில் நீ தலையிடுதல் கூடாது'' என்றாள்.

இந்தப் பதில் எனது ஆவலை மேலும் கிளறிவிட்டது. தொழிற்சாலைக்குச் சென்று ஐவானை இதுபற்றி நான் விசாரிக்கத் தொடங்கினேன். அமைதியாகச் சிரித்தானே தவிர, நான் கேட்ட கேள்விக்கு ஐவான் பதில் சொல்லவில்லை. தன் கடைக்கண்ணால் மேஸ்திரியைப் பார்த்துவிட்டு, தொழிற்சாலையிலிருந்து என்னை வெளியே தள்ளினான்.

"இந்தத் தாழிகள் ஒன்றில் முக்கி, பிரகாசமான பச்சை நிறச் சாயத்தால் உன்னை நான் நனைப்பதற்கு முன்னர் இங்கேயிருந்து நீ பேசாமல் போய்விடு'' என்று அவன் இரைச்சல் போட்டான்.

தாழ்வாகவும் விசாலமாகவும் கட்டப்பட்டிருந்த அடுப்பின்மீது மூன்று தாழிகள் இருந்தன. அந்தத் தாழிகளுக்கு முன்னே நின்றவாறு நீண்ட கறுப்புக் கழியால் ஒரு தாழியில் இருப்பதை மேஸ்திரி கிண்டிக் கிளறிக்கொண்டு இருந்தான். அதற்குள் கிடந்த துணியைத் தூக்கிப் பார்த்து,

சாயத் தண்ணீர் அதிலிருந்து வடிவதைக் கவனித்தான். தோலால் செய்த தூசி தாங்கியை அவன் அணிந்து இருந்தான்; பிரகாசமான நெருப்பு அதில் பிரதிபலித்து, நானுவிதமான நிறபேதங்களைக் காட்டியபடியால், அவனுடைய ஆடை, பின்னல் வேலை செய்யப்பட்ட பாதிரியின் ஆடைபோல விளங்கியது. தாழிகளிலிருந்த சாயத் தண்ணீர் தளதளத்துக் கொதித்தது. குளிராகவுள்ள முற்றத்தின் வழியாகவும் கதவின் மூலமும் ஒருவிதமான காரப் புகை எங்கும் பரவியது.

மூக்குக் கண்ணுடிகளுக்குக் கீழே இருந்த, ரேகை படர்ந்த தனது சிவந்த கண்களால் மேஸ்திரி என்னை உற்றுப்பார்த்தான். பிறகு ஐவான் பக்கமாகத் திரும்பி "ஏதாவது கொஞ்சம் விறகு உன்னுல் சேகரித்து வர முடியுமா?" என்று கடுமையான தொனியில் கேட்டான்.

சிக்காநோக் முற்றத்துக்குள் ஓடின பிறகு, சாந்தாலின் இருந்த ஒரு கோணிப்பைமீது அமர்ந்துகொண்டு "இங்கே வா" என்று சைகையால் என்னை அழைத்தான்.

தன் மடிமீது என்னை அவன் தூக்கி வைத்துக்கொண்டான்; அவனுடைய மென்மையான அன்பு கனிந்த தாடி என் கன்னத்தில் உராய்ந்தது. அவன் அப்போது கூறின விஷயங்கள் என்னுல் ஒருபோதுமே மறக்கக் கூடியவை அன்று.

"தன் மனைவியை உன் அம்மான் அடித்துக் கொன்றுபோட்டார்; அந்த நினைப்பு அடிக்கடி ஊடாடி மனச்சாட்சியை உறுத்தி அவருடைய அமைதியைக் குலைத்துவிடுகிறது; தெரிகிறதா? எல்லாவற்றையும் நீ தெரிந்துகொள்ள வேண்டும். கண்களைத் திறந்துகொண்டு, கவனமாக இரு; இல்லையேல் உனக்கும் தொந்திரவுகள் வந்துசேரும்" என்று சொன்னுன்.

என் பாட்டியிடம் பேசுவதுபோலவே கிரிக்கோரியிடம் பேசுவதும் எளிதாக இருந்தது; எனினும் அச்சுறுத்தக் கூடியதாக இருந்தது. தான் அணிந்து இருக்கும் கரிய மூக்குக்கண்

ணுடிகளின் வழியாகவே யாவற்றையும் ஊடுருவிப் பார்த்துவிடும் ஆற்றல் அவனுக்கு இருப்பதுபோலத் தோன்றியது.

"இறந்து போகும் அளவுக்கு அவளை எப்படித்தான் அவர்கள் அடித்தார்களோ?" என்று நிதானமாக அவன் சொல்லத் தொடங்கினுன். "அவர்கள் அடித்துக் கொன்ற விதத்தைச் சொல்லுகிறேன் கேள்; அவளைப் படுக்கை அறைக்குள் அழைத்துப் போய், தலைமுதல் யாவற்றையும் மூடி, இரவு தவருமல் நையப் புடைத்துப் புடைத்து வந்தபடியால், அவள் இறந்துபோனுள். இதை அவரால் உன்னிடம் சொல்ல முடியவில்லை" என்ருன்.

இந்தச் சமயத்தில் விறகுக் கட்டு ஒன்றைச் சுமந்து கொண்டு ஐவான் வந்து சேர்ந்தான். வந்தவன் நெருப்பின் முன்னே சென்று அமர்ந்து தனது கைகளைச் சூடாக்கிக்கொண்டான். அவன் இருப்பதைப்பற்றிய சிந்தனை அற்று மனத்தில் பதியும்படியாக, கிரிக்கோரி தொடர்ந்து சொல்லலானுன்.

"தன்னைக் காட்டிலும் நல்லவளாய் இருந்த காரணத்தால், பொறுமைவயப்பட்டு அவளை அவர் அடித்து நொறுக்கி இருக்கக் கூடும். குழந்தாய்! காஷ்ரீன் குடுபத்தினருக்கு நல்லது எதுவும் பிடிக்காது. நல்லதைக் கடைப்பிடித்து ஒழுக இயலாத அவர்கள் பொருமைவயப்பட்டு நல்லதையே அழித்து ஒழித்துவிடுகிருர்கள். உன் தந்தையை அவர்கள் எப்படிக் கசக்கிப் பிழிந்து சாகடித்துவிட்டார்கள் என்பதை உன் பாட்டியையே கேட்டு நீ தெரிந்துகொள். பொய் என்பதைப் பொறுக்க மாட்டாத, பொய் என்பதையே பேசி அறியாத அவள் உனக்கு எதையும் மறைக்காமல் கூறுவாள். இடையிடையே உன் பாட்டி ஒரு துளி பொடி போட்டுக் கொள்வாள் என்பது உண்மையாயினும், உன் பாட்டியை ஒருவகையில் சிறந்த ஒரு அடியார் என்றே சொல்லாம். அவள்

புனிதமான பெண்மணி. அவளுடன் தொடர்பு வைத்துக் கொள், குழந்தாய்!'' என்று சொன்னன்.

என்னை அப்பால் தள்ளிவிட்டு, பீதியும் அதிர்ச்சியும் உற்று எழுந்து முற்றத்துக்குள் போய்விட்டான். அவன் வாயிலைக் கடப்பதற்கு முன்னே முந்திக்கொண்டு வானியா என்னை அணுகி "அவனைக் கண்டு பயப்படாதே; அவன் நல்லவன்'' என்று சொல்லி, தன் கையை தலைமீது வைத்துக் கொண்டு ரகசியமாக "நேரே, அவன் கண்களையே, கூர்ந்து கவனி; இந்த மாதிரியாகப் பார்ப்பவர்களை அவன் பெரிதும் நேசிப்பான்'' என்று சொன்னன்.

விநோதமான முறையில் ஒவ்வொன்றும் தடம்புரண்டு கிடந்தது. வேறு வாழ்க்கைமுறை எனக்குப் பழக்கம் இல்லை. என் தாய் தந்தையர் இந்த விதமாக வாழவில்லை என்ற தெளிவற்ற நினைப்பு மட்டும் எனக்கு இருந்து வந்தது. அவர்கள் வேறு வகையில் பேசினர்கள்; வேறு வகையில் பொழுது போக்கினர்கள்; இருக்கும்போதும் நடக்கும்போதும் ஒருவருடன் ஒருவர் நெருங்கிப் பழகிய எப்பொழுதுமே அன்னியோன்னியமாக வாழ்ந்தார்கள். ஜன்னல் அருகே அமர்ந்து மாலை நேரங்களில் பாட்டுப் பாடினர்கள். நீடித்த நேரம் பலமாகச் சிரித்தார்கள். அவர்கள் பாடுவதைக் கேட்பதற்கு அண்டை வீட்டுக்காரர்கள் வந்து கூடிவிடுவார்கள். நிமிர்ந்து பார்க்கிற அண்டை வீட்டுக்காரர்களின் முகங்கள் எச்சல் தாம்பாளங்களைப்போல, இருப்பதாக எனக்கு எப்பொழுதுமே தோன்றும். ஆனல் இங்கேயோ நிலைமைகள் முற்றும் நேர்மாருக இருந்தன. ஜனங்கள் அபூர்வமாகத் தான் சிரித்தார்கள். அப்படிச் சிரித்தாலும் எதையோ கிண்டல் செய்யத்தான் சிரிக்கிருர்கள் என்பதாக நீங்கள் நிச்சயமாக நம்பலாம். ஒருவரை ஒருவர் அவர்கள் எப்பொழுதுமே ஏசிக்கொண்டார்கள்; பயமுறுத்திக்கொண்டார்

கள். மூலை முடுக்குகளுக்குச் சென்று ரகசியம் பேசிக்கொண்டார்கள். மழையில் ஒடுங்கிப் போகும் தூசிபோல, எதுவும் விளங்காமல் அடங்கி ஒடுங்கிப் போய், குழந்தைகள் வாய் அடைத்துக் கிடந்தார்கள். அந்நியன் போன்ற ஓர் உணர்வு இந்த வீட்டில் எனக்கு ஏற்பட்டது. ஆயிரம் ஊசிகளால் குத்துப்படுவதைப் போன்று, என்னைச் சுற்றியிருந்த வாழ்க்கை எனக்கு இருந்தது. சந்தேகங்கள் தோன்றி, கஷ்டத்துடன் எதையும் கவனிக்கும்படியாக என்னைக் கட்டாயப்படுத்தின.

ஐவானுடன் எனக்கு இருந்த நட்பு வளர்ந்தது. உதயத்திலிருந்து இரவு நெடுநேரம்வரை வீட்டு அலுவல்களை என் பாட்டி சுறுசுறுப்பாகக் கவனித்துக்கொண்டே இருப்பாள். ஆகையால் பகற்பொழுதில் பெரும் பாகத்தை சிக்காநோக்கோடு கூடத்திரிவதில் நான் கழிக்க நேர்ந்தது. என் தாத்தா என்னைச் சவுக்கால் அடிக்கும்போதெல்லாம், தன் கைகளால் அணைத்துக்கொண்டு என்னை அவன் காப்பாற்றுவான்; அதனால் வீங்கிப்போகும் தனது விரல்களை என்னிடம் மறுநாள் காட்டி வருத்தப்பட்டுக்கொள்வான்.

“இதனால் எனக்கு எவ்வித பிரயோஜனமும் இல்லை. உனக்கும் இது உதவுவதாய் இல்லை. ஆனால் எனக்குக் கிடைத்திருப்பதை நீயே பார்! இதுதான் கடைசி முறை. இனிமேல் உனக்குக் கிடைப்பதை நீதான் பொறுத்துக்கொள்ள வேண்டும்” என்று சொல்வான்.

ஆனால் அடுத்த முறையிலும் தண்டனை முழுவதையும் தானே ஏற்றுக்கொள்ள முன்வந்துவிடுவான்.

“தண்டனையை ஏற்றுக்கொள்ள மாட்டேன் என்று நீ முன்பு கூறினையே?”

“சொல்வது, செய்வது இரண்டும் வெவ்வேறு இனத்தைச் சேர்ந்தவை. ஏன் இப்படிச் செய்கிறேன் என்பது எனக்கே விளங்கவில்லை.”

பாசமும் பக்தியும் சிக்காநோக்கிடம் எனக்கு அதிகரிக்கும் வகையில் ஒரு விஷயத்தை நான் தெரிந்துகொண்டேன்.

காயடிக்கப்பட்ட வெண்சிவப்பு நிறமுள்ள ஷாராப் என்ற குதிரையை சிக்காநோக் வெள்ளிக்கிழமைதோறும் விசாலமான "ஸ்லெட்ஜ்" வண்டியில் பூட்டுவான். (முரட்டுத்தனமான இந்தக் குதிரையிடம் என் பாட்டிக்குப் பிரியம் அதிகம்.) பெரிய தொப்பியை எடுத்து அணிந்துகொள்வான்; ஆட்டுத் தோலினால் குட்டையாகச் செய்த பச்சை நிற இடைக் கச்சையை இறுக்கமாகக் கட்டிக்கொண்டு வாராந்திர உணவுப்பொருள்களை வாங்கும்பொருட்டுச் சந்தைக்கு புறப்பட்டுப் போவான். சில சமயங்களில் நீண்ட நேரம்வரை திரும்ப மாட்டான். சலிப்படைந்து போய் ஒவ்வொருவரும் ஜன்னல் அருகே சென்று கவனித்தபடி இருப்பார்கள். பனி உறைந்து கிடக்கும் ஜன்னல் கண்ணாடியில் மூச்சுவிட்டுக் கொண்டே தெருவை எட்டிப்பார்ப்பார்கள்.

"இன்னும் வரவில்லையா ?"

"இன்னும் வரவில்லை."

என் பாட்டி மிகவும் கவலைப்பட்டுக்கொள்வாள்.

"ஆ ஆ ! என் செய்வது!" என்று தன் புதல்வர்களிடமும் கணவரிடமும் சொல்லுவாள். "நல்ல மனிதனையும் நல்ல குதிரையையும் சாகடித்த குற்றம் உங்கள் அனைவரையும் சாரப் போகிறது. வெட்கம் இல்லாத விலங்குகளே ! மனச்சாட்சி என்பதே உங்களுக்குக் கிடையாதா ! இருப்பதைக் கொண்டு உங்களால் திருப்தியுடன் வாழ முடியவில்லையா ! முட்டாள் கூட்டம் ! பேராசைக்காரர்கள் ! உங்கள் எல்லோரையும் ஆண்டவன் சரியாகத் தண்டிப்பார்" என்று கடிந்து உரைப்பாள்.

முகத்தைச் சுளித்துக்கொண்டு என் தாத்தா முனங்குவார் :

"சரி சரி! இதுதான் கடைசித் தடவை" என்று சொல்லுவார்.

சில சமயங்களில் சிக்காநோக் நண்பகலிலேயே திரும்பி விடுவான். என் தாத்தாவும் அம்மான்மார்களும் முற்றத் துக்கு விரைந்து அவனைச் சந்திப்பார்கள். அவர்களைப் பின் தொடர்ந்து என் பாட்டி போவாள். பயங்கரமான முறையில் பொடியை உறிஞ்சிக்கொண்டும் கரடியைப்போல அசைந்து அசைந்து ஆடிக்கொண்டும் செல்வாள். இத்தகைய சமயங் களில் என்ன காரணத்தாலோ அவளைப் பார்க்க விகாரமாய் இருக்கும். குழந்தைகளும் விரைந்தோடி வருவார்கள். 'ஸ்லெட்ஜ்' வண்டி நிறைய வாங்கி வந்திருக்கும் பண்டங் களை மகிழ்ச்சியோடு இறக்கத் தொடங்குவார்கள். புதிதாகச் சுடப்பட்ட முழுப் பன்றிகள், மீன்கள், பல்வகை இறைச்சித் துண்டங்கள் ஆகியவற்றை வண்டியிலிருந்து இறக்குவார்கள்.

தனது கூரிய சிறிய கண்களால் ஸ்லெட்ஜ் வண்டியைத் துருவிப்பார்த்துக்கொண்டே "சொல்லியனுப்பின சாமான்களை எல்லாம் வாங்கிவந்துவிட்டாயா?" என்று தாத்தா கேட்பார்.

"இப்பொழுது சொல்லியதை எல்லாம் வாங்கிவந்து விட்டேன்" என்று ஐவான் மகிழ்ச்சியோடு பதில் சொல் வான். முற்றத்தில் குதித்தவாறே, கையுறை போட்ட தனது கைகளை உராய்ந்து சூடுபடுத்திக்கொள்வான்.

"இப்படிக் கையுறைகளைத் தேய்ப்பதை நிறுத்து. அதனுல் செலவு அதிகமாகும்" என்று என் தாத்தா அவனைக் கடுமையாகக் கடிந்துகொண்டார். பிறகு, அவனைப் பார்த்து "ஏதாவது சில்லறை மீதம் கொணர்ந்திருக்கிறுயா ?" என்று கேட்டார்.

"இல்லை."

'ஸ்லெட்ஜ்' வண்டியை மெதுவாகச் சுற்றிப்பார்த்துக் கொண்டே என் தாத்தா முணுமுணுப்பார்.

"மீண்டும் மோசமான சாமான்களாகவே நீ வாங்கி வந்திருப்பாய்போல் தோன்றுகிறதே. பணம் கொடுக்காமல் இவற்றில் சிலவற்றையாவது நீ வாங்காமலா இருந்திருப்பாய்? இத்தகைய காரியங்கள் என் இல்லத்தில் நடவாமல் நீ பார்த்துக் கொள்; தெரிகிறதா?" என்பார்.

பிறகு முகம் முழுவதையும் சுளித்துக்கொண்டு வேகமாக அப்பால் போய்விடுவார்.

பின்னர் என் அம்மான்மார்கள் உற்சாகத்துடன் 'ஸ்லெட்ஜ்' வண்டியை அணுகி, பறவைகளின் எடை, மீன், வாத்து ஈரல்கள், பசுங்கன்றின் கால் இறைச்சி, இறைச்சித் துண்டங்கள் ஆகியவற்றின் எடைகளை நிதானிப்பார்கள்.

"நல்ல சாமான்களாய்ப் பொறுக்கி வாங்கிவந்து இருக்கிறாய்" என்று பாராட்டி, சீட்டி அடிப்பார்கள்.

என் அம்மான் மைக்கேல் ஆனந்த சாகரத்தில் மூழ்கி விடுவார். ஸ்லெட்ஜைச் சுற்றிச் சுற்றிவந்து துள்ளித்துள்ளிக் குதிப்பார்; வசந்த காலத்தில் மாங்கொத்திப் பறவை தன் அலகால் மரத்தை ருசிபார்ப்பதைப்போன்று, உதட்டைச் சப்பி ருசி பார்த்துக்கொள்வார்; அமைதியற்ற தன் கண்களை ஆனந்தமாக இடுக்கிக்கொண்டு பார்ப்பார். என் தாத்தாவைப் போலவே இவரும் மெலிந்து இருந்தார். நாடோடிகளைப் போலக் கறுப்பாயும் என் தாத்தாவைவிட உயரமாயும் இருந்ததைத் தவிர்த்து, மற்றவற்றில் என் தாத்தாவை ஒத்து இருந்தார். குளிரால் மரத்துப்போன தனது கைகளை, சட்டையின் கைகளில் திணித்துக்கொண்டு "கிழவன் உன்னிடம் எவ்வளவு பணம் தந்தார்?" என்று கேட்பார்.

"ஐந்து ரூபிள்கள்."

"பதினைந்து ரூபிள்கள் பெறுமதியான சாமான்கள் இருக்கின்றனவே? இவற்றை நீ எவ்வளவுக்கு வாங்கினாய்?"

“நான்கு ரூபிள் பத்துக் காப்பெக்குகளுக்கு வாங்கினேன்.”

“அப்படியானால் தொண்ணூறு காப்பெக்குகளை நீ உன் பையில் போட்டுக்கொண்டுவிட்டாயா? கேட்டாயா யாக்கோவ்! பணம் சம்பாதிப்பதற்கு இதுவும் ஒரு வழி.”

இதைக் கேட்ட அம்மான் யாக்கோவ் மெதுவாகச் சிரித்துக்கொண்டு நின்றார்; மூடுபனி நிறைந்த நீல வானத்தைப் பார்த்துச் சிமிட்டிக்கொண்டும் மேல் சட்டையை மட்டும் போட்டுக்கொண்டும் குளிரில் நின்றார்.

“அரைப் பயிண்டுக்காக ஒவ்வொருவரையும் இப்படி நிற்க வைத்துவிட்டாயே வானியா?” என்று அவர் இழுத்த குரலில் கேட்டார்.

குதிரையை வண்டியிலிருந்து என் பாட்டி அவிழ்த்துவிட்டாள்.

“அன்பே! உனக்கு என்ன நேர்ந்தது? பூனைக் குட்டியே! என்ன சமாச்சாரம்?” என்று முணுமுணுத்துக்கொண்டே தன் வேலையை அவள் கவனித்தாள். “ஏதாவது சாப்பிட வேண்டுமா? நேரே வலப்புறமாகப் போ. உனது குறும்புகளை ஆண்டவன் மறுத்து உரைக்க மாட்டார்” என்றாள்.

ஷாராப் என்ற அந்தப் பெரிய குதிரை தனது பிடரியை அசைத்துக்கொள்ளும்; தனது வெண்மையான பற்களால் அவளுடைய தோளைப் பிராண்டும். அவள் வைத்திருக்கும் பட்டுக் குட்டையைப் பிடுங்கிக்கொள்ளும்; மகிழ்ச்சிகரமான தனது கண்களால் அவள் முகத்தை ஏறிட்டுப் பார்க்கும். உடல்மீது படிந்துகிடக்கும் பனிக்கட்டிகளைத் தனது வால் நுனியால் தட்டிவிட்டுக்கொண்டு மெதுவாகக் கனைக்கும்.

“உனக்கு ஒரு ரொட்டித் துண்டம் வேண்டுமா?” என்று கேட்டவாறே உப்புப்போட்ட பெரிய துண்டம் ஒன்றை எடுத்து அதன் பற்களுக்கு இடையில் திணிப்பாள். தன்

உடையை அதன் வாய்க்குக் கீழே தூக்கிப்பிடித்துக்கொண்டும் அது மென்று தின்பதைக் கவனித்துக்கொண்டும் இருப்பாள்.

"பாட்டி! இந்தக் குதிரை எவ்வளவோ அழகாயும் புத்திசாதுரியமுள்ளதாயும் இருக்கிறது" என்று சொல்லிக் கொண்டே குதிரைக் குட்டிபோலத் துள்ளுவான் சிக்காநோக்.

"உன் வாலை எல்லாம் இங்கே ஆட்டாமல் அப்பால் போய்விடு" என்று சொல்லித் தனது காலை ஓங்கி உதைத்த வாறு என் பாட்டி கத்துவாள். "இத்தகைய நாட்களில் உன்னால் எனக்கு எவ்வித உபயோகமும் இல்லை தெரியுமா?" என்று சொல்லுவாள்.

சிக்காநோக் சந்தைக்குச் சென்றால் வாங்குவதைக் காட்டிலும் திருடுவதுதான் அதிகமாக இருக்குமாம். இப்படி என் பாட்டி என்னிடம் சொன்னாள்.

"உன் தாத்தா ஐந்து ரூபிள்கள் கொடுத்தனுப்புவார்; மூன்று ரூபிள்கள் செலவு செய்வான்; பத்து ரூபிள்கள் மதிப்புள்ள சாமான்களைத் திருடிக்கொள்வான்" என்று சிடுசிடுப்பாகச் சொன்னாள். "அயோக்கியப் பயலுக்குத் திருடுவதில் விருப்பம் அதிகம்! ஒரு முறை திருடி வெற்றிகண்டான். வீட்டிலுள்ள ஒவ்வொருவரும் சிரித்துவிட்டு அவனைப் பாராட்டினார்கள். இதனால் திருடுவதை அவன் பழக்கமாக ஆக்கிக் கொண்டுவிட்டான். வாலிப தசையில் உன் தாத்தா வறுமையால் நலிந்தவர்; அதனால் முதுமையில் கஞ்சத்தனமாய் இருக்கிறார். தான் பெற்ற குழந்தைகளிடத்திலுள்ள பாசத்தைக் காட்டிலும் பணத்திடம்தான் அவருக்குப் பாசம் அதிகம். எதுவுமே கொடாமல்எதையாவது பெற்றுக்கொள்வதில் அவருக்கு அளவிலா ஆனந்தம்.மைக்கேலும் யாக்கோவுமோ என்றால்..."

சலிப்பாகக் கையை ஒரு அசைப்பு அசைத்துவிட்டு, அவர்களைப்பற்றிய பேச்சை அத்துடன் நிறுத்திக்கொண்டு, சிறிது நேரம் அவள் மௌனமாக இருந்தாள்.

" அலியோஷா! இது ஒரு சிக்கலான விஷயம்" என்று பொடி டப்பியைப் பார்த்துக்கொண்டே தொடர்ந்துசொன்னுள். "இந்த விஷயத்தை இப்படிச் சிக்கலாக்கினவள் அந்தப் பொட்டைக் கிழவிதான். இந்தச் சிக்கலை உன்னுலும் என்னுலும் அறுக்க முடியாது என்பதைப்பற்றி நீ ஆச்சரியப்படத் தேவை இல்லை. வானியா திருடுவதை ஒரு முறை கண்டு விட்டார்களோ, அவனை அடித்துக் கொல்லாமல் அவர்கள் விட மாட்டார்கள்..."

மீண்டும் சிறிது நேரம் அவள் மௌனமாய் இருந்தாள். தனது மென்மையான குரலில் மேலும் தொடர்ந்து சொல்லத் தொடங்கினுன்.

" என்ன அதிசயம்! நம்மிடம் சட்ட திட்டங்களுக்குக் குறைவில்லை. ஆனுல், அவற்றுக்கு அடிப்படையாக உண்மை என்பதையே காணேம்..."

இனிமேல் திருடக் கூடாது என்று சிக்காநோக்கை நான் மறு நாள் வேண்டிக்கொண்டேன்.

"உன்னை அவர்கள் அடித்துக் கொன்றுபோடுவார்கள்" என்று சொன்னேன்.

" அவர்கள் என்னைப் பிடிக்க முடியாதபடி நான் அப்பால் போய்விடுவேன். நான் கெட்டிக்காரன். எனது குதிரையும் வேகமாக ஓடக் கூடியது" என்று சொல்லி அவன் சிரித்தான். அந்தச் சிரிப்பு உடனே ஒரு முகச் சுளிப்பினுல் மறைந்துவிட்டது. " திருடுவது தவறுனது, ஆபத்தானது என்பதை நான் அறிவேன். திருடுவதை ஒரு விளையாட்டாகக் கருதித்தான் நான் திருடி வருகிறேன். பணத்தை மீதப்படுத்திக்கொள்ள என்னுல் முடிவது இல்லை. வார முடிவுக்குள் உன் அம்மான்மார்கள் என்னிடம் இருப்பதை எல்லாம் எடுத்துக்கொண்டுவிடுவார்கள். அவர்களே வைத்துக் கொண்டு போகட்டும் என்று அதைப்பற்றி நான் கவலைப்படு

வது இல்லை. போதிய அளவு எனக்குச் சாப்பிடக் கிடைக்கிறது '' என்றான்.

திடீரென என்னைத் தூக்கி மெதுவாக ஒரு ஆட்டு ஆட்டினான்.

'' நீ மெலிந்தும் எடை குறைந்தும் இருக்கிறாய். எனினும் உனக்கு எலும்புகள் நன்றாய் இருக்கின்றன. நீ நல்ல பலசாலியாக வளர்வாய்; நான் சொல்வதைக் கேள். சித்தார் வாசிக்கக் கற்றுக்கொள். உனக்குக் கற்றுத் தரும்படி உன் அம்மான் யாக்கோவைக் கேள்; ஏமாந்து போகாதே! நீ மிகவும் சிறுவனாய் இருக்கிறாய்; அதுதான் இப்போதுள்ள சங்கடம். சிறுவனே எனினும் தெம்பு இருக்கிறது. உன் தாத்தாமீது உனக்குப் பிரியம் இல்லை என்று நான் நினைக்கிறேன். சரியா ?'' என்று கேட்டான்.

'' தெரியாது '' என்று நான் பதில் சொன்னேன்.

'' பாட்டியைத் தவிர்த்து காஷ்ரீன் குடும்பத்தார்களில் யாரையும் எனக்குப் பிடிக்காது. பேய் பிசாசுகள் மட்டுமே அவர்களை விரும்பக் கூடும்.''

'' என்னையுமா ?''

'' நீ காஷ்ரீன் குடும்பத்தைச் சேர்ந்தவன் அன்று. நீ பெஷ்கோவ் குடும்பத்தைச் சேர்ந்தவன். இது வேறு ரத்தம்; வேறு கூட்டம்.''

திடீரென அவன் என்னை இறுக்கமாகப் பிடித்துக் கொண்டு, தொண்டை கம்மிய நிலையில் சொன்னான் :

'' ஆண்டவனே! எனக்குப் பாட முடிந்திருக்குமானால்! மற்றவர்களின் இதயங்களை நான் உருகி நெகிழச் செய்து இருக்க மாட்டேனா? நல்லது சகோதரா! வேலையைக் கவனிக்க வேண்டும் '' என்றான்.

பிறகு, அவன் என்னைத் தரைமீது விட்டுவிட்டான்; தனது கை நிறைய ஆணிகளை அள்ளித் தன் வாயில் போட்டுக்

கொண்டு, வட்டமான பெரிய சதுரப் பலகை ஒன்றில், நனைந்து போயிருந்த கறுப்புச் சாமான் எதையோ ஒன்றை வைத்து அறையத் தொடங்கினன்.

இதற்குச் சிறிது நேரத்துக்குப் பின்னர் அவன் கொல்லப் பட்டான்.

அவன் கொல்லப்பட்ட விதமாவது : வீட்டின் வாயிலை அடுத்து, சுவரில் சாய்ந்தவாறு, முற்றத்தில், ஓக் மரத்தால் செய்யப் பெற்ற பிரமாண்டமான சிலுவை ஒன்று இருந்தது. அதற்குக் கனத்த பாத பீடம் ஒன்று இருந்தது. நீண்ட காலமாகவே முற்றத்தில் இந்தச் சிலுவை கிடந்து வந்தது. இந்த வீட்டுக்கு நான் வந்த நாள்முதலாகவே அதை நான் கவனித்தது எனக்கு நினைவு இருக்கிறது. நான் பார்த்த சமயம் அந்தச் சிலுவை புதிதாகவும் மஞ்சள் நிறத்துடனும் இருந்தது. இலையுதிர் காலத்தில் பெய்யும் மழையால் நனைந்து இப்போது அது கறுத்துப்போய்க் கிடந்தது. பண்படுத்தப் பட்ட ஓக் மரம்போல அதிலிருந்து வெறிப்பான ஒரு நெடி வீசியது. எங்களுடைய சிறிய முற்றத்தில், பாதையை அடைத் துக்கொண்டு அது கிடந்தது.

தன் மனைவியின் கல்லறைமீது நாட்டி வைக்கும் விருப் பத்துடன் என் அம்மான் யாக்கோவ் அதை விலைக்கு வாங்கி இருந்தார். அவள் இறந்துபோன முதல் ஆண்டு நிறைவு நாளில் தன் தோள்மீது சுமந்து சென்று, கல்லறைமீது நாட்டச் சபதம் எடுத்துக்கொண் டிருந்தார்.

முதல் ஆண்டு நிறைவு சனிக்கிழமை யன்று வந்தது. குளிர்காலம் தொடங்கிய சமயம். குளிரும் காற்றும் பனியும் கூரைகளை எல்லாம் பிய்த்துக்கொண்டு கோரமாக வீசின. என் தாத்தாவும் பாட்டியும் மற்ற மூன்று குழந்தைகளும் சடங்கில் கலந்துகொள்ளும் பொருட்டு முன்னதாகவே வண்டியில் புதைகுழிக்குப் போய்விட்டார்கள். மற்றவர்

களும் முற்றத்துக்குச் சென்றுவிட்டார்கள். செய்த ஏதோ ஒரு குற்றத்துக்குத் தண்டனையாக நான் மட்டும் வீட்டில் கிடந்தேன்.

வழக்கப்படி என் அம்மான்மார்கள் கறுப்புக் கோட்டு களை அணிந்துகொண்டார்கள். சிலுவையைத் தூக்கி ஒரு தலைப்பை யாக்கோவின் தோளிலும் மற்றொரு தலைப்பை மைக்கேல் தோளிலும் வைத்துக்கொண்டார்கள். கிரிக்கோரி யும் இன்னொரு புதிய மனிதனும் சிலுவையின் கனத்த பாத பீடத்தைச் சிரமத்துடன் தூக்கி, சிக்கானோக்கின் விசால மான தோள்மீது வைத்தார்கள். அசைந்தாடிய அவன், தன்னை நிதானப்படுத்திக்கொள்வதற்காகத் தன் கால்களை அகட்டி வைத்துக்கொண்டான்.

" உன்னால் சமாளித்துக்கொள்ள முடியுமா ?" என்று கேட்டான் கிரிக்கோரி.

" முடியாது ; அதிகக் கனமாய் இருக்கிறது" என்றான் சிக்கானோக்.

" பொட்டைப் பயலே ! வாயிலைத் திறந்துவிடு " என்று உறுமினார் அம்மான் மைக்கேல்.

" வானியா ! உனக்கு நாணமாக இல்லையா ? நாங்கள் இருவரும் உன்னைவிடப் பலம் குன்றியவர்கள் ஆயிற்றே ?" என்று சொன்னார் அம்மான் யாக்கோவ்.

வானியாவை விட்டுவிட்டு, கிரிக்கோரி சென்று கதவைத் திறந்தான். கதவைத் திறந்துகொண்டே கடுமையாக அவனை எச்சரித்தான் :

" அதிகச் சிரமப்பட்டு உன்னை நீயே வதைத்துக்கொள் ளாதே ! ஆண்டவன் உனக்குத் துணை இருப்பார்!" என்றான்.

" சொறிபிடித்த கிழட்டு முட்டாளே!" என்று வீதியில் நின்றபடி கத்தினார் அம்மான் மைக்கேல்.

முற்றத்தில் இருந்த ஒவ்வொருவரும் சிரித்துவிட்டு, தடித்த குரலில் பேசத்தொடங்கினார்கள். சிலுவை அங்கிருந்து அகற்றப்பட்டதில் மகிழ்ச்சி அடைந்தவர்கள்போல் தென் பட்டார்கள்.

கையைப் பிடித்து என்னை அழைத்துக்கொண்டு, கிரிக் கோரி தொழிற்சாலைக்குள் நுழைந்தான்.

" இன்று உன் தாத்தா உன்னைச் சவுக்கால் அடிக்காமல் இருக்கக் கூடும் ; ஏனெனில் அவர் இன்று நல்ல மனநிலையில் இருக்கிறார்."

சாயம் தோய்ப்பதற்குத் தயாராக இருந்த செம்மறியாட்டு ரோமக் குவியல்மீது என்னை அவன் உட்கார வைத்தான். அந்த ரோமத்தைக் கொண்டு மெதுவாக எனக்குப் போர்த்தி விட்டான். தாழிகளிலிருந்து வந்த நீராவியை மோப்பம் பிடித்துக்கொண்டே, சிந்தனை நிறைவோடு என்னிடம் அவன் பேசத்தொடங்கினான்.

" குழந்தாய் ! முப்பத்து ஏழு ஆண்டுகளாகவே உன் தாத்தாவை நான் அறிவேன். இந்தத் தொழில் தொடங் கினதையும் நான் அறிவேன் ; இனி இது முடிவுறப்போவதை யும் நான் பார்க்கப்போகிறேன். இருவரும் நெருங்கிய நண்பர் களாகி இந்தத் தொழிலைச் சேர்ந்து தொடங்கினோம் ; சேர்ந்தே முடிவுசெய்தோம். உன் தாத்தா கெட்டிக்காரர் ! அதனால் தன்னைத்தானே எஜமானர் ஆக்கிக்கொண்டுவிட்டார் ; என்னால் முடியாது போயிற்று. ஆனால், எல்லோரையும்விடக் கெட்டிக்காரரான ஆண்டவன் ஒருவர் இருக்கிறார். அவர் ஒரு முறை புன்முறுவல் பூத்தால் போதும். எத்தகைய சிறந்த அறிவாளியும் முட்டாள்போல் முழித்து நிற்க நேரும். விஷயங்கள் எதற்காக நடக்கின்றன ? எப்படி நடக்கின்றன என்பதை உன்னால் இப்போது தெரிந்துகொள்ள முடியாது. ஆனால், ஒவ்வொரு விஷயத்தையும்பற்றி உனக்குத் தெரிந்

திருப்பது நல்லது. அநாதைக் குழந்தைக்கு வாழ்க்கை எளிதாய் இருக்காது. உன் தந்தை மாக்ஸிம் சாவாட்டாயோவிச் இருந்தால், அவர்தான் வெற்றி வீரராய் விளங்கி இருப்பார். அவருக்குச் சகல விஷயங்களும் தெரியும். அதனல்தான் உன் தாத்தாவுக்கு உன் தந்தையைப் பிடிக்காமல் இருந்தது. ஆகவே அவருடன் எத்தகைய தொடர்பும் வைத்துக்கொள்ள விரும்பாமல் உன் தந்தை இருந்தார்......"

அன்புகனிந்த இந்த வார்த்தைகளை அமர்ந்துவாறே கேட்பது அதிக பிரியத்தை உண்டுபண்ணியது. சிவப்பும் மஞ்சளும் கலந்த நெருப்பு அடுப்பில் எரிவதைப் பார்ப்பதும், தாழிகளிலிருந்து பால்போன்ற நீராவியானது மேகம்போலக் கிளம்பி, சாய்வான மச்சுமீது படிந்து உறைவதைப் பார்ப்பதும் பிரியத்தை உண்டுபண்ணின. சிதைந்த வெடிப்பான வழியாக நீலநிற ஆகாயம் சிறிது தெரிந்தது. காற்று அடங்கிவிட்டது ; சூரியன் பிரகாசித்தது. பொடியாக்கிய கண்ணாடி தூவப் பெற்றதுபோல, பார்வைக்கு முற்றம் தோன்றியது. ஸ்லெட்ஜ் வண்டிகள் இறைச்சலிட்டுக்கொண்டு ஓடிவருவது வீதியிலிருந்து கேட்டது. வீடுகளின் புகைப்போக்கிகளிலிருந்து, நீலநிறப் புகை சுருள் சுருளாகக் கிளம்பியது ; தாங்களும் தங்கள் கதையைச் சொல்ல விரும்புவதைப் போன்று, மெல்லிய நிழல் பூச்சிகள் பனி உரைப்புமீது ஓடின.

நீண்ட தாடியும் பெரிய காதுகளும் உடைய, உயரமும் உடற்கட்டும் வாய்ந்த கிரிக்கோரி, அன்புகனிந்த மந்திரவாதிபோல, தொப்பியில்லாமல் நின்றுகொண்டு, கொதிக்கும் சாயத்தைக் கிண்டிவிட்டுக்கொண் டிருந்தான். "இவ்வாறு இவ்வாறு செய்யுங்கள்" என்று கட்டளை பிறப்பித்துக் கொண்டும் இருந்தான்.

"யாரையும் கூர்ந்து நேரே அவன் கண்களைப் பார்; அப்படிப் பார்த்தால் உன்னைத் துரத்திவருகிற நாய்கூடத் தயங்கி நின்றுவிடும்..."

கனமான அவனுடைய மூக்குக் கண்ணுடி வில்லைகள் மூக்கின் தண்டை அழுத்திய காரணத்தால், என் பாட்டிக்கு இருப்பதைப்போலவே, அவனுக்கும் அந்த இடம் நீலநிறமாக மாறி இருந்தது.

திடீரெனத் தயங்கி நின்று "என்ன அது?" என்று கிரிக்கோரி கேட்டான். ஒரு கணம் கவனமாகக் கேட்டு விட்டு, அடுப்பின் வாயைக் காலால் உதைத்து மூடிவிட்டு, முற்றத்தின் குறுக்கே நடந்தான்; நானும் அவனைத் தொடர்ந்து போனேன்.

அடுக்களைத் தரையின் நடுவே சிக்காநோக் மல்லாந்த வாக்கில் கிடந்தான். அம்புபோல் நீண்ட விசாலமான வெளிச்சம் இரு கற்றைகளாக, ஜன்னல் மூலம் பாய்ந்து கொண்டிருந்தது. ஒன்று அவனுடைய முகத்திலும் மார்பிலும் மற்றென்று அவனுடைய கால்களிலும் விழுந்துகொண் டிருந்தது. புது வகையான ஒரு வெளிச்சம் அவன் நெற்றியில் பிரகாசித்தது. புருவங்கள் உயர்ந்து இருந்தன. கரிப் புகை படர்ந்திருந்த மச்சுப் பலகையை அவனுடைய கோணல் கண்கள் உற்று நோக்கின; அவனுடைய கரிய உதடுகள் வளைந்து கோணிப்போய், ஊதாநிற நுரையைக் கக்கின. வாய் இடுக்குகளிலிருந்து ரத்தம் பெருகி, அவனுடைய கழுத்திலும் தரையிலும் உடம்புக்குக் கீழும் பெருகி ஓடியவண்ணம் இருந்தது. கால்கள் வளைந்து கிடந்தன; நிஜார்கள் அவிழ்ந்து போய் தரையில் ஒட்டிக்கொண்டன. இதனால் அவை நனைந்து விட்டன என்பது துலக்கமாயிற்று. தரையை மண்ணால் மெழுகி இருந்தார்கள்; சூரியனில் காய்ந்து பிரகாசமாகும்படி செய்து இருந்தார்கள். சிற்ருறுபோல ரத்தம் கதவுப்

பக்கமாக ஓடியது. வெளிச்சம் விழுந்த இடத்தையும் கடந்து ரத்தம் பளபளப்புடன் பிரகாசித்தது.

அப்பால் அகன்று கிடந்த விரல்களைத் தவிர்த்து, சிக்காரோக்கின் உடல் முழுதும் அசைவற்றுக் கிடந்தது. அந்த விரல்கள் தரையைக் கீறிக்கொண்டு கிடந்தபடியால், சாயக் கறைபடிந்த அவனுடைய நகங்கள் சூரிய ஒளியில் பிரகாசித்தன.

ஐவானுக்குப் பக்கத்தில் சென்று குனிந்து தாதி யெவ்ஜீனியா, மெழுகுவர்த்தியை அவன் கைகளிலே வைக்கப் போனாள். ஆனால், அவனால் அதைப் பிடித்துக்கொள்ள முடியவில்லை. கீழே விழுந்து ரத்தத்தில் நனைந்து மெழுகு வர்த்தி அணைந்துபோயிற்று. அதை எடுத்துத் துடைத்து விட்டு, நடுங்கிக்கொண் டிருந்த அவனுடைய கரங்களில் மீண்டும் வைக்க முயன்றார்கள். அடக்கப்பட்ட பொறுமல் உணர்ச்சி அடுக்களையில் நிலவியது. கதவின்மீது மோதுகிற காற்றைப்போல அந்த உணர்ச்சி என்னை மோதித் துரத்திய தால், கதவின் இடுக்கலில் போய் நான் ஒட்டிக்கொண்டேன்.

தலையை ஆட்டியவாறே உணர்ச்சியற்ற குரலில் "அவன் தடுமாறி விழுந்துவிட்டான்" என்று என் அம்மான் யாக்கோவ் சொன்னார். களையிழந்து முகம் வாடி உணர்ச்சியற்றவராய் அவர் விழித்துக்கொண் டிருந்தார்.

"கீழே விழுந்துவிட்டதனால் அவனை அது நசுக்கி விட்டது ; முதுகில் நன்றாக அடிபட்டுவிட்டது. சரியான நேரத்தில் நாம் கீழே போட்டு இராவிட்டால் நம்மையும்கூட இது நசுக்கி இருக்கும்" என்று சொன்னார்.

"அப்படியானால் இவனை நசுக்கிக் கொன்றது நீர்தான்" என்று கிரிக்கோரி கடுகடுப்புடன் சொன்னான்.

"நல்லது. நாங்கள் என்று நீ நினைக்கிறாய் ?" என்று என்று கேட்டார் அவர்.

“ நீங்கள் தான் ” என்று பதில் சொன்னான் கிரிக்கோரி.

ரத்தம் பெருகிக்கொண் டிருந்தது ; கதவு அருகே ஒரு குளம்போல உருவாகி, அது கருத்து வந்தது ; மேலே எழும்புவதுபோலவும் இருந்தது. தூங்குபவன்போலக் கிடந்த சிக்காநோக் சப்தங்கள் போட்டுக்கொண்டு கிடந்தான். அவனுடைய கடைவாயிலிருந்து ஊதாநிற நுரை வெளிப் பட்டுக்கொண் டிருந்தது. உடம்பு உருகி, தட்டையாகிக் கொண்டே வந்தது; தரையோடு தரையாக ஒட்டிப்போவதைப் போல, தட்டையாக்கிக்கொண்டு வந்தது.

“ தந்தையை அழைத்துவரும் பொருட்டு, மாதா கோவிலுக்கு மைக்கேல் குதிரையுடன் சென்று இருக்கிறான் ” என்று அம்மான் யாக்கோவ் மெதுவாகச் சொன்னார். “ வண்டிக்குள் அவரைத் திணித்துக்கொண்டு விரைவாக இங்கே வந்து சேர்ந்தேன்...பாதபீடத்தை நான் தூக்கிச் செல்லாமல் இருந்தது நல்லதாய்போயிற்று. இல்லாவிட்டால் இப்போது நான் எங்கே இருந்திருப்பேனோ......?”

மீண்டும் ஒரு முறை தாதி சென்று, சிக்கோநோக்கின் கையில் மெழுகுவர்த்தியை வைத்தாள். மெழுகுவர்த்தியின் ஒழுக்குகளும் கண்ணீர்த் துளிகளும் அவனுடைய உள்ளங் கையில் விழுந்தன.

“ அவன் தலைமாட்டில் எப்படியாவது மெழுகுவர்த் தியை வையுங்கள் ” என்று கிரிக்கோரி முரட்டுத்தனமாகச் சொன்னான்.

“ நல்லது.”

“ அவனுடைய தொப்பியை அகற்றிவிடு.”

தாதி தொப்பியை அகற்றினாள். ஐவானுடைய தலை தரைமீது தொப்பென்று விழுந்தது. தலையைப் புரட்டிப் பார்த்தபோது, கடை வாயிலிருந்து மட்டும் இரத்தம் மள மளவென்று கொட்டியது. நீண்ட நேரம் இப்படிப் பயங்கர

மாகக் கொட்டிக்கொண்டே இருந்தது. ஓய்வு கிடைத்து விட்டால், எழுந்து உட்கார்ந்து வெறுப்பாகத் துப்பிவிட்டு, வழக்கப்படி "பூ உஷ்ணம் இது!" என்று சிக்கானோக் சொல்லக் கூடும் என்பதாக முதலில் நான் நினைத்தேன்.

ஞாயிற்றுக்கிழமைகளில், மத்தியானச் சாப்பாட்டுக்குப் பிறகு தூங்கி விழித்ததும், அவன் இப்படித்தான் எப்பொழுதுமே சொல்லுவது வழக்கம். எழுந்து உட்காருவதற்குப் பதிலாக, படுத்து ஊதிப் போய்க்கொண்டு கிடந்தான் அவன். சூரியன் மறைந்துவிட்டது. ஒளிக் கற்றைகள் குறுகி, இப்பொழுது ஜன்னல் கதவில் மட்டும் விழுந்தன. அவனுடைய முகத்திலும் கைகளிலும் கறுப்பு அதிகரித்துவிட்டது. விரல்கள் அசையவில்லை. வாயிலிருந்து நுரை வெளிப்படுவது நின்று போயிற்று. அவன் தலைமாட்டில் மூன்று மெழுகு வர்த்திகளை ஏற்றி வைத்தார்கள். அவற்றின் தங்கநிற ஒளி, நீலம் கலந்த அவனுடைய கறுப்பு ரோமக் கற்றையைப் பிரகாசிக்கச் செய்து, மூக்கு நுனியைத் தழுவிச் சென்றது; ரத்தக் கறை படிந்திருந்த அவனுடைய பற்கள், அவனுடைய கன்னத்தில், அசைந்தாடும் வெளிச்சப் புள்ளிகளைப் பரப்பியது.

அவனுக்குப் பக்கத்தில் மண்டியிட்டவாறு அமர்ந்து தாதி அழுதுகொண் டிருந்தாள்.

"ஏ அப்பாவியான சிறிய புறாவே! எவ்வளவு இன்பமானவன் நீ" என்று மெதுவாகச் சொல்லிக்கொண்டாள்.

பயங்கரமாயும் குளிராயும் இருந்தது. மேஜைக்குக் கீழே சென்று நான் ஒளிந்துகொண்டேன். ராக்கூன் கம்பளிக் கோட்டை அணிந்துகொண்டு தள்ளாடியவாறு என் தாத்தா அடுக்களைக்குள் நுழைந்தார்; கழுத்துப் பட்டையைச் சுற்றி, சிறிய குஞ்சங்கள் தொங்கிய பெரிய கோட்டை அணிந்து கொண்டு என் பாட்டியும் அவரைத் தொடர்ந்து வந்தாள்.

அவர்களுடன் அம்மான் மைக்கேலும் குழந்தைகளும் அறிமுகமில்லாத ஜனங்கள் பலரும் கூடவந்தார்கள்.

கோட்டைக் கழற்றித் தரைமீது எறிந்துவிட்டு "வேசிக்குப் பிறந்தவர்கள்! ஒருவனை இப்படியும் செய்வார்களா? இன்னும் ஐந்து ஆண்டுகள் இருந்திருப்பானாயின் இவன் எடைக்கு ஈடாகத் தங்கத்தையே கொடுக்கலாமே!" என்று இறைந்தார் என் தாத்தா.

தரைமீது கிடந்த துணிகள் ஐவானைப் பார்க்கமுடியாமல் என்னை மறைத்தன; ஆகவே நகர்ந்து நல்ல இடத்துக்குப் போன நான் என் தாத்தாவின் வழியில் வந்துவிட்டேன்; தன் காலால் உதைத்து என்னை அப்பால் தள்ளிவிட்டு, தனது சிறிய சிவந்த முஷ்டியை என் அம்மான்மார்களைப் பார்த்து ஓங்கியவாறே "நீங்கள் எல்லாம் ஓநாய்ப் பிறவிகள்தான்" என்று அவர் உறுமினார்.

தனது விரல்களை இறுக்கமாகப் பொத்திக்கொண்டு, ஒரு விசுப்பலகைக்குச் சென்று அவர் தொப்பென்று உட்கார்ந்தார்; விம்மிவிம்மி யழுதுகொண்டே கிரீச்சிட்ட குரலில் அவர் முணுமுணுத்தார்.

"உன்னால் தாங்க முடியாது என்பது எனக்குத் தெரியும். ஏ வானியா! முட்டாளே! இனி எங்களால் என்ன செய்ய முடியும்? என்னதான் செய்ய முடியும்? குதிரைக்கு வயதாகித் கிழடுதட்டிவிட்டது. சேணத்தையும் விற்றாயிற்று... நல்லது தாயே! இன்னும் கொஞ்சமே எஞ்சியுள்ள நமது கடைசிக் காலத்தில் ஆண்டவன் இதையும் நமக்குச் செய்ய விரும்பினார் போலும்; தாயே! நீ என்ன நினைக்கிறாய்?" என்றார்.

ஐவானுக்குப் பக்கத்தில் தரையில் கிடந்து என் பாட்டி புரண்டாள்; ஐவானுடைய முகத்தையும் தலையையும் மார்பையும் தடவிப்பார்த்தாள்; கண்களைக் கவனித்தாள்; கைகளைத்

தூக்கித் தேய்த்துப் பார்த்தாள். மெழுகுவர்த்திகளை அணைத்தாள் ; கடைசியாகக் கஷ்டப்பட்டுக்கொண்டு பெரிய கறுப்பு உடலைத் தூக்கிக்கொண்டு எழுந்தாள் ; அவளுடைய கறுப்பு உடை பிரகாசித்தது ; தனது கரிய கண்களைப் பயங்கரமாக உருட்டி விழித்துக்கொண்டே “ நாசமாயப்போகிறவர்களே ! இங்கேயிருந்து போய்விடுங்கள் ” என்று மெதுவாகச் சொன்னாள்.

என் தாத்தாவைத் தவிர்த்து மற்றவர்கள் எல்லோரும் போய்விட்டார்கள்.

கண்ணியமாகவும் பிறருக்குத் தெரியாமலும் சிக்காநோக் அடக்கம் செய்யப்பெற்றான்.

## 4

அகலமாக இருந்த ஒரு படுக்கைமீது நான் படுத்துக் கிடந்தேன். கனமான மெத்தை ஒன்று என்னைச் சுற்றிலும் கிடந்தது. என் பாட்டி பிரார்த்தித்துக்கொண்டிருப்பது என் காதில் விழுந்தது. மண்டியிட்டு அமர்ந்து, ஒரு கையைத் தன் மார்பில் வைத்துக்கொண் டிருந்தாள்; மற்றொரு கையால் சாவதானமாகச் சிலுவைச் சின்னம் வரைந்துகொண்டாள்.

ஜன்னலுக்கு அப்பால் பனி உறைப்புகள் வெடிப்பது என் காதில் விழுந்தது. பச்சை நிற நிலவு ஒளி, பனி, உறைந்து கிடக்கும் பூவேலை நிறைந்த ஜன்னல் கதவைக் கடந்து, தன் மஞ்சள் நிற ஒளியைக்கொண்டு, அன்புகனிந்த அவளுடைய வதனத்திலும் பிரதானமாகத் தெரியும் அவளுடைய மூக்கிலும் கண்களிலும் ஒளியைப் பரப்பியது. தன் தலைமீது என் பாட்டி அணிந்திருந்த பட்டாடை, உலோகம் போலப் பிரகாசித்தது. அவளுடைய உடுப்பு, தோள்பட்டைகளி

லிருந்து மடிப்பு மடிப்பாகத் தொங்கிவிழுந்து. அவளைச் சுற்றிலும் தரையில் அடுக்கு அடுக்காகக் கிடந்தது.

பிரார்த்தனை முடிந்ததும், தன் உடுப்புகளை அமைதியாகக் களைந்து, மூலையில் இருந்த ஒரு உடுப்புப்பெட்டியில் அழகாக என் பாட்டி அடுக்கிவைத்தாள். பிறகு, அயர்ந்து தூங்கு பவள்போலப் பாசாங்கு செய்து படுக்கைமீது படுத்துக் கொண்டாள்.

"அட போக்கிரிப் பயலே! இப்படிப் பாசாங்கு செய்யாதே; நீ தூங்கவில்லை; ஏ பூருவே - கிருவே! இப் பொழுது நீ தூங்கிக்கொண்டா இருக்கிறாய்? எங்களுக்கும் மெத்தையில் கொஞ்சம் இடம் கொடு" என்று மெதுவாகச் சொன்னாள்.

என்ன நடக்கப்போகிறது என்பதை அறிந்த எனக்கு வந்த சிரிப்பை அடக்கிக்கொள்ள முடியவில்லை. ஆகவே அவள் என்னைப் பார்த்து "உன்னுடைய கிழப் பாட்டியிடம் இப்படி நீ விளையாட்டுக்காட்டலாமா?" என்று இரைந்தாள்.

பிறகு மெத்தையின் ஒரு மூலையைப் பிடித்து, திறமை யாகவும் வலுவாகவும் சுண்டியிழுத்தாள்; நான் ஆகாயத்துக் குத் தூக்கப்பட்டு, சுழன்று சுழன்று பிறகு மெத்தைமீது வந்து தொப்பென்று விழுவதைக் கண்டதும் என் பாட்டி வயிறு குலுங்கச் சிரித்தாள்.

"ஏ சின்ன தேவப்பயலே! இது உனக்கு வேண்டுமடா! இப்படித்தான் வேண்டும்" என்று சொன்னாள்.

சில சமயங்களில் பிரார்த்தனையை அவள் நீண்ட நேரம் செய்துகொண் டிருப்பாள்; அவள் படுக்க வருவதுகூடத் தெரியாமல் நான் தூங்கிப்போய்விடுவேன்.

சண்டைகள், சச்சரவுகள், கஷ்டங்கள் ஆகியன நேருகிற தினங்களில், அனேகமாக அந்தத் தினங்கள் நீண்ட பிரார்த்தனையோடுதான் முடிவது உண்டு; தனக்கு

நேர்ந்தவற்றை எல்லாம் விரிவாக எடுத்து ஆண்டவனிடம் என் பாட்டி விளக்கிக்கொண் டிருப்பது, கேட்பதற்கு விநோத மாக இருக்கும். மலைபோன்ற உருவம் படைத்த அவள் மண்டி யிட்டு ஆண்டவனை விரைவாகப் பிரார்த்திக்கத்தொடங்குவாள்; வாய்க்குள்ளே மெதுவாகப் பிரார்த்திக்கத் தொடங்கிப் படிப் படியாகக் குரலை உயர்த்திக்கொண்டே வந்து கதறுவாள்.

"ஒவ்வொருவரும் நல்ல முறையில் வாழ விரும்புது இயற்கை என்பதை, ஆண்டவனே! நீர் அறிவீர்; யாரும் விரும்புவதுபோல, மூத்தவன் மைக்கேல் நகரில் இருப்பது அவசியமாகும். ஆற்றைக் கடந்து அவனை ஒரு புது இடத்துக் குப் போகும்படி சொல்வது குற்றமாகும். இதை இதுவரை யாரும் முயன்று பார்த்தது இல்லை; அதனால் ஏற்படும் பலா பலன்களையும் யாராலும் சொல்ல முடியாது. யாக்கோவை தந்தையாய் இருப்பவர் அதிகமாக விரும்புகிறார்; பாரபட்ச மாகத் தன் குழந்தைகளைத் தந்தை ஒருவர் இப்படி நேசிப்பது சரியாகுமா? வயதாகிப்போன அவர் பிடிவாதமாய் இருக் கிறார்; ஆண்டவனே! அவருக்கு நீர் கொஞ்சம் அறிவைப் புகட்டுவது நல்ல காரியமாகும்."

தன் ஆண்டவனுக்கு அறிவுரை வழங்கிக்கொண்டே பிரகாசமான தனது பெரிய கண்களில், கறுப்பு நிறத்திலுள்ள விக்கிரகங்களை அவள் ஒரு முறை பார்ப்பாள்.

"ஆண்டவனே! தன் புதல்வர்களுக்கு இடையே பாகப் பிரிவினையை எவ்வாறு செய்துகொள்வது என்பதை அவருக்கு ஒரு கனவின் மூலமாக நீர் அறிவுறுத்தக் கூடாதா?" என்று இறைஞ்சுவாள்.

பிறகு சிலுவைச் சின்னம் வரைந்துகொண்டு, தன் நெற்றி சமக்காளத்தில் தோயும் அளவுக்குக் குனிந்து, ஆண் டவனை வணங்குவாள். பின்னர் நிமிர்ந்து உட்கார்ந்து, மனத் தில் உணர்வு ஏற்பட்டுப் பதியுமாறு பேசுவாள்.

"வார்வாராவுக்குத் துளி மகிழ்ச்சி ஏற்படும்படி தாங்கள் செய்யக் கூடாதா? தங்கள் அருளுக்குப் பாத்திரமாகாதவாறு என்ன குற்றத்தை அவள் தங்களுக்கு இழைத்துவிட்டாள்? மற்றவர்களைக் காட்டிலும் கீழாய நிலையில் அவள் இருப்பதற்குக் காரணம் என்ன? வாலிபமும் மிடுக்கும் நிறைந்த நங்கை ஒருத்தி இப்படிக் கஷ்டப்படுவதைப் பற்றித் தாங்கள் கேள்விப்பட்டது உண்டா? இனி. ஆண்டவனே! கிரிக்கோரியைப்பற்றி. நாளுக்கு நாள் அவனுடைய கண்கள் கெட்டு வருகின்றன. முழுதும் கெட்டுப்போனால் பிச்சை வாங்கி உண்பதைத் தவிர்த்து அவனுக்கு வேறு வழி இல்லாது போகும். இது சரிதானா? தாத்தாவின் தொழிலில் அவனுடைய பலம் முழுவதும் ஒருங்கே செலவழிந்துவிட்டது......ஆனால், கிழவர் அவனுக்கு ஒரு உதவியும் செய்ய மாட்டேன் என்கிறார். ஆண்டவனே! அன்பு நிறைந்த ஆண்டவனே!" என்பாள்.

தூங்குபவள்போலக் கைகளைத் தொங்கவிட்டுக்கொண்டும் தலையைத் தளர்த்திக்கொண்டும் நெடிது நேரம் மௌனமாக இருப்பாள்.

கடைசியாகத் தனது புருவத்தை நெறித்துக்கொண்டு சொல்வாள். "சொல்லுவதற்கு வேறு என்ன இருக்கிறது? உம் அன்பர்களிடம் கருணை காட்டும். சபிக்கப்பட்ட முட்டாள் நான் என்பதை நன்கு அறிந்த நீர், என்னை மன்னித்துவிடும். எனது மடமைதான் என்னைப் பாபத்துக்கு இழுத்துப்போகிறது. நான் தீய நெஞ்சு உடையவள் அன்று."

பிறகு நெடியதொரு பெருமூச்சுவிட்டு, அன்புகனிந்த திருப்தியோடு சொல்வாள்.

"அன்பு நிறைந்த ஆண்டவனே! உமக்குத் தெரியாதது எதுவும் இல்லை. உமக்குத் தெரிய முடியாததும் கிடையாது. தேவ அருள்பெற்ற தந்தையே!" என்பாள்.

என் பாட்டியின் கடவுளை நான் அதிகம் நேசித்தேன். அவளுக்கு உற்றவராகவும் உரியவராகவும் அவர் திகழ்ந்தார்; நான் அடிக்கடி அவளிடம் "கடவுளைப்பற்றி எனக்குச் சொல்லு" என்று கேட்பது உண்டு.

கடவுளைப்பற்றிப் பேச நேரும்பொழுது எல்லாம் விசேஷ உவகையோடு அவள் பேசுவாள். கீழே உட்கார்ந்துகொண்டும் கண்களை மூடிக்கொண்டும் மென்மையான குரலில் புதுமை யான வார்த்தைகளால் அவள் பேசுவாள்; தனது ஆடை களைச் சரிப்படுத்திக்கொண்டு, சரியாக அமர்ந்து, கைக்குட் டையைத் தலைமீது போட்டுக்கொண்டு, தனது கற்பனைக் கோட்டைகளைக் கட்டியவாறு அவள் இருக்கும்போதே, நான் தூங்கிப்போனது எனக்கு இன்னும் நினைவு இருக்கிறது.

"அங்கே ஒரு குன்றின்மீது ஆண்டவன் அமர்ந்து இருக்கிறார்; சுற்றிலும் சொர்க்கத்தைச் சேர்ந்த வெளிகள் இருக்கின்றன. வெள்ளிமயமான எலுமிச்சை மரத்தின் கீழே நீலக்கல் சிங்காதனத்தில் அவர் வீற்றிருக்கிறார். சொர்க்கத் தில் குளிர் காலம் கிடையாதாகையால், வருஷ முழுதும் அந்த மரம் காய்க்கிறது. இலையுதிர் காலம் கிடையாதாகையால், இடையீடின்றி வருஷ முழுதும் தவறாமல் பூத்துக் குலுங்கி, சொர்க்கத்தில் வாழும் அடியார்களுக்கு இன்பத்தை விளை விக்கிறது; ஆண்டவனைச் சுற்றி, பனியைப்போல் நெருக்க மாகவும் தேனீக்களைப்போல் கூட்டம் கூட்டமாகவும் தேவ கணங்கள் பறந்துகொண் டிருப்பார்கள்; அல்லது வெண் புறாக்கள் கூட்டமாகப் பறந்து திரிவதைப்போன்று வானத்தி லிருந்து பூமிக்குப் பறந்து திரிந்து திரும்புவார்கள். பூமியில் இருக்கிற சீவராசிகளைப்பற்றி ஆண்டவனிடம் தெரிவிப்பார் கள். உனக்கு, எனக்கு, தாத்தாவுக்கு எனத் தனித் தனியாக நம் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு தேவதூதன் உண்டு. தான் படைத்த சீவராசிகள் அனைத்தினிடமும் பாரபட்சம்

பாராட்டாமல் ஆண்டவன் சமதையாகவே நடந்துகொள்வார். உனக்காக இருக்கும் தேவதூதன் ஆண்டவனை அணுகி 'ஆண்டவனே! அலெக்ஸி என்பவன் தனது நாக்கை வெளியே நீட்டித் தன் தாத்தாவைக் கேலி செய்தான்' என்பான். உடனே ஆண்டவன் 'அப்படியானல் கிழவன் அவனுக்கு உதை கொடுக்கட்டும்!' என்று உத்தரவிடுவார். எல்லோரிடமும் எல்லாக் காரியங்களிலும் ஆண்டவன் இப்படித்தான் நடந்துகொள்கிறார். தத்தம் தகுதிக்கு ஏற்ப ஒவ்வொருவரும் பலாபலன்களை அனுபவிக்கிறார்கள். சிலர் சந்தோஷப்படுகிறார்கள்; சிலர் கவலைப்படுகிறார்கள். இறக்கைகளை அடித்து மகிழ்ச்சியுடன் பறந்தவாறு 'வானத்தில் இருக்கும் ஆண்டவனுடைய புகழ் ஓங்குக!' என்று தேவதூதர்கள் சொல்வதைக் கேட்பது ஆனந்தமாய் இருக்கும். 'நல்லது! அன்பர்களே! இது மகிழ்ச்சியாய் இருந்தால் இதன்படியே செய்யுங்கள்' என்றுகூறுவதுபோலஆண்டவன்சிரித்துக்கொண்டிருப்பார்.''

என் பாட்டியும் தனக்குத் தானே சிரித்துக்கொண்டு தன் தலையை அசைத்துக்கொள்வாள்.

"இவற்றை எல்லாம் நீ பார்த்திருக்கிறாயா?"

"நான் பார்த்தது இல்லை; ஆனல் தெரியும்" என்று சிந்தனையில் ஆழ்ந்தவாறே பதில் சொல்வாள்.

கடவுளைப்பற்றியும் சொர்க்கத்தைப்பற்றியும் தேவதூதர்களைப்பற்றியும் பேச நேரும்பொழுது எல்லாம் அடக்க ஒடுக்கத்துடன் பணிவுள்ளவளாக அவள் ஆகிவிடுவாள்; வயதின் சுவடுகளைக் கடந்து அவளுடைய முகம் துலங்கும்; அன்புகலந்த பசிய ஒளி கண்களிலிருந்து பிரகாசிக்கும். சுற்றிலும் பூவேலை செய்யப்பட்ட கனமான சாட்டின் பட்டுத் துணியைக் கழுத்தைச் சுற்றிப் போர்த்துக்கொண்டு, அசையாமல் நான் உட்கார்ந்து இருப்பேன்; அவள் கூறும் கதைகளை

இன்னும் கேட்க வேண்டும் என்ற விருப்பத்துடன் அமர்ந்து இருப்பேன்.

"ஆண்டவனுடைய திருமுகத்தை மனிதர்கள் நேருக்கு நேரே பார்க்கக் கூடாது; பார்த்தால் கண்கள் அவிந்து போகும். அடியார்களால் மட்டுமே கண்களை அகல விழித்து ஆண்டவனைப் பார்க்க முடியும். ஆனால் தேவதூதர்களை நான் பார்த்திருக்கிறேன். இதயம் பரிசுத்தமாய் இருந்தால்தான், உனது ஊனக் கண்களுக்கு அவர்கள் தென்படுவார்கள். அதிகாலையில் ஒரு முறை பிரார்த்தனை செய்துகொண்டு நான் மாதா கோயிலில் நின்றேன். பீடத்து அருகே நின்ற இரண்டு தேவ தூதர்களை என்னால் பார்க்க முடிந்தது; மூடுபனியைப் போன்று இருந்த அவர்களை நான் நேரடியாகப் பார்த்தேன். ஒளிப்பிளம்புபோல அவர்கள் பிரகாசித்தார்கள்; வலைப்பின்னலைப் போன்றும் பூக்கள் நிரம்பியதாகவும் இருந்த இறக்கைகள் தரை அளவு தொங்கின; கிழப் பாதிரி இலியாவுக்கு, பீடத்தைச் சுற்றி நின்று, அவர்கள் உதவிபுரிந்தார்கள். தளர்ந்து போன முதுமை நிரம்பிய தனது கைகளைப் பிரார்த்தனை செய்ய அவர் உயர்த்தும்பொழுது, அவருடைய முழங்கைகளுக்கு முட்டுக்கொடுத்து, அவர்கள் தாங்கிக்கொண்டார்கள். மூப்பாயும் பொட்டையாயும் இருந்த அவர் ஒவ்வொன்றிலும் தட்டுத் தடுமாறி மோதிக்கொண்டார். சிறிது காலத்துக்குப் பின்னர் அவர் இறந்துபோனார். அவர்களை நான் பார்க்க நேர்ந்தபோது ஆனந்த சாகரத்தில் நான் அமுங்கிப் போனேன். அதனால் இதயம் விம்மி வெடித்துவிடுவதுபோல் ஆயிற்று; கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் மளமள வென்று கொட்டியது. ஆண்டவன் சந்நிதானத்தில் அனைத்தும் வானத்தில் இன்பம் விளைவிப்பதாய் உள்ளன; அலியோஷா! என் புறாவே-கிளியே! இந்த மண் உலகத்திலும் அனைத்தும் அருமையாய் இருக்கின்றன" என்றாள்.

“ நமது வீட்டில்கூட அருமையாய் இருக்கிறதா ?” என்று நான் கேட்டேன்.

“ ஆம். புனித கன்னியின் புகழ் எங்கும் பரவட்டும் ” என்று சொல்லி, என் பாட்டி சிலுவைச் சின்னம் வரைந்து கொண்டாள்.

இது எனக்குக் குழப்பமாய் இருந்தது ; எங்கள் இல்லத்தில் எல்லாம் சரியாக இருக்கின்றன என்பது ஒப்புக் கொள்ளத்தக்கது அல்ல ; நாளுக்கு நாள் உறவு முறையில் நெரிசல் அதிகமாகி வந்தது.

அம்மான் மைக்கேலுடைய அறையின் கதவு திறந்து கிடந்தபோது ஒரு முறை அதன் வழியாக நான் போக நேர்ந்தது. மாமி நாட்டாலியா வெளுத்துப்போய் வீட்டைவிட்டு வெளியே வந்தாள். தனது கைகளை மார்பின்மீது வைத்து அழுத்திக்கொண்டும் பயந்த குரலில் மெதுவாகக் கதறிக் கொண்டும் “ ஆண்டவனே ! இந்த இடத்திலிருந்து என்னை அழைத்துக்கொள்ளும் ; நான் போக வேண்டும் ...” என்று சொன்னாள்.

அவள் பிரார்த்தனையையும் கிரிக்கோரி முணுமுணுத்து இறைஞ்சியதையும் நான் புரிந்துகொண்டேன்.

“ விரைவில் எனக்குக் கண் அவிந்துவிடும் ; நான் பிச்சை வாங்கி உண்ண நேரும் ; இதைக் காட்டிலும் அது மேலானது ” என்று அவன் முணுமுணுத்தான்.

அவசரப்பட்டுத் தன் கண்களை அவன் பொட்டையாக்கிக்கொள்ளப் போகிறான் என்றும் அவனை அழைத்துக் கொண்டு அவனுக்கு வழிகாட்டியாக நான் இருப்பது என்றும் உலகத்தில் சுற்றித் திரிந்து பிச்சை வாங்கி நாங்கள் இருவரும் உண்பது என்றும் நான் ஆசைப்பட்டேன். இதைப் பற்றி ஒரு முறை அவனிடமும் சொன்னேன். இதைக் கேட்ட அவன் தனது தாடி குலுங்கச் சிரித்தான்.

" சரி. இருவரும் ஒன்ருகவே செல்வோம். எல்லோர் காதிலும் விழும்படியாகத் தெருக்கள்தோறும் இறைந்து நான் பிச்சை கேட்கிறேன். 'சாயத் தொழிற்சாலைக்குச் சொந்தக்காரர் வாசிலி காஷ்ரீன் பேரன் இவன்' என்று சொல்லிப் பிச்சை கேட்கிறேன். இது வேடிக்கையாக இருக்கு மல்லவா?" என்று சொன்னுன்.

என் மாமி நாட்டாலியாவின் உதடுகள் அடிக்கடி வீக்க மாக இருப்பதையும் அவளுடைய மஞ்சள் நிற முகத்தில் கறுப்பும் நீலமும் கலந்த காயங்கள் இருப்பதையும் நான் கவனித்து வந்தேன்.

" அம்மான் அவளை அடிப்பது உண்டா?" என்று நான் என் பாட்டியைக் கேட்டேன்.

" தந்திரமாக அடிக்கிருன். அவன் நாசமாய்ப் போக! அடிப்பதற்கு உன் தாத்தா இடம் கொடுக்க மாட்டார். அத ணுல் அவன் இரவு நேரங்களில் அடிக்கிருன். அவன் கேவல மானவனுய் இருக்கிருன்; அவளுக்கோ அவனை எதிர்க்கத் தைரியம் இல்லை" என்று பெருமூச்சுவிட்டுக்கொண்டே என் பாட்டி பதில் சொன்னுள்.

தன் கதைக்கு மெருகு ஏற்றி அவள் தொடர்ந்து சொன்னதாவது:

"முன்பு அடித்ததுபோல இந்தக் காலத்தில் அவர்கள் அடிப் பது இல்லை. சில சமயங்களில் பற்கள் அல்லது காது முதலிய வற்றில் அடிப்பார்கள். இல்லாது போனுல் இரண்டொரு நிமி ஷங்கள் கூந்தலைச் சுண்டிச் சுண்டி இழுப்பார்கள். ஆனுல் மணிக்கணக்காக இப்படி வாதனைப்படுத்திக்கொண்டே இருப் பார்கள். ஈஸ்டர் முதல் நாள் அன்று ஒரு முறை உன் தாத்தா என்னை அடித்தார். பொழுது புலர்ந்ததும் காலையில் என்னை அடிக்கத் தொடங்கியவர் சாயுங்காலம்வரை இடையிடையே சிறிது ஓய்வு எடுத்துக்கொண்டு தொடர்ந்து அடித்தபடி

இருந்தார். குதிரைச் சேணத்தையோ அல்லது கையில் கிடைத்த எதை எல்லாமோ எடுத்து அடித்தார்.''

'' எதற்காக அடித்தார் ?''

'' எதற்கு என்று இப்போது நினைவு இல்லை. பாதி உயிரே போய்விடும்படியாக என்னை ஒரு முறை அடித்துவிட்டார்; ஐந்து தினங்கள்வரை சாப்பிட எதுவுமே தராமல் என்னைப் பட்டினிபோட்டுவிட்டார்கள். எப்படியோ சமாளித்துக் கொண்டு அந்த நாட்களை நான் கழித்தேன். மீண்டும்........''

இந்த உண்மைகள் தெரியவந்ததும் நான் வாயடைத்து ஊமையானேன். உருவத்தில் என் தாத்தாவைக் காட்டிலும் என் பாட்டி இரண்டு மடங்கு பருமன் உள்ளவள் ; இவளை என் தாத்தா எப்படி அடித்திருக்கக் கூடும் என்பதை என்னால் நம்ப முடியவில்லை.

'' உன்னைக் காட்டிலும் அவ்வளவு அதிக பலமுடையவரா அவர் ?''

'' என்னைக் காட்டிலும் அவர் பலம் அதிகம் உடையவர் அன்று ; ஆனால் வயதானவர். இதைத் தவிர்த்து அவர் என் கணவர். அவர் பொறுப்பில் ஆண்டவன் என்னை ஒப்படைத்து இருக்கிறார். அவர் செய்வதை எல்லாம் பொறுத்துக்கொள்ளும்படி உத்தரவிட்டிருக்கிறார்.''

விக்கிரகங்கள்மீது படிந்துள்ள தூசுகளை அவள் அகற்றுவதையும் அவற்றின் பீடங்களை அவள் சுத்தி செய்வதையும் விருப்போடு நான் கவனிப்பது உண்டு. டாம்பீகமாகச் செய்யப்பட்ட விக்கிரகங்கள் பல எங்களிடம் இருந்தன. முத்துகளும் இதர விலையுயர்ந்த ரத்தினங்களும் வெள்ளியில் வைத்துப் பதிக்கப்பட்டதாய் இருந்தன. அவற்றை எடுக்கும்போது பதனமாக அவள் எடுப்பாள்.

"எத்தகைய இனிய முகம்!" என்று கூறிக்கொண்டே, சிலுவைச் சின்னம் வரைந்துகொண்டு அவற்றை அவள் முத்தமிடுவாள்.

"யாவற்றிலும் நூலாம் படையும் தூசும் படிந்துவிட்டன. சர்வவல்லமை பொருந்திய ஆண்டவனின் ஆசீர்வாதம் பெற்று, விவரிக்க முடியாத பேரானந்தத்தை இவை அருளட்டும். அலியோஷா! என் புரூவே-கிரூவே! இந்த விக்கிரகம் எவ்வளவு நேர்த்தியாய் இருக்கிறது பார்த்தாயா! துளித்துளி விக்கிரகங்கள்தான். இருந்தும் ஒவ்வொன்றும் தனித் தனி சோபையுடன் விளங்குகின்றன. ஒன்றுக்கு 'பன்னிரண்டு ஓய்வு நாட்கள்' என்று பெயர். இதில் அன்புகனிந்த பெண்மணி பியடோரோவஸ்கி என்ற கன்னி நடுவே இருக்கிறாள். 'தாயே! என் கல்லறையின் பக்கத்திலிருந்து அழாதே!' என்பது இந்த விக்கிரகத்தின் பெயர்" என்பாள்.

மனத்தளர்வுள்ள என் அம்மான் மகள் காட்ரீனா பொம்மைகளை வைத்துக்கொண்டு விளையாடுவதைப்போல, விக்கிரகங்களை வைத்துக்கொண்டு என் பாட்டி வெகுளித்தனமாயும் சிரத்தையோடும் விளையாடுகிறாளோ என்று சில சமயங்களில் எண்ணத் தோன்றும்.

தனித்தும் கூட்டமாகவும் பேய்களை அவள் அடிக்கடி பார்த்து இருக்கிறாளாம்.

"ரூடல்ப்பின் இல்லத்தைக் கடந்து ஓர் இரவு லெந்தில் நான் போய்க்கொண் டிருந்தேன். நிலவு ஒளியில் யாவும் துலக்கமாய்த் தெரிந்தன; திடீரென்று புகைப்போக்கி அருகே கூரைமீது இருட்டில் ஏதோ ஒன்று திமுதிமுவென்று நடப்பதாகத் தோன்றியது. பெரிதாயும் ரோம அடர்த்தியுள்ளதாயும் இருந்தது; தனது கொம்புகளையும் வளைத்துக்கொண்டு புகைப் போக்கிக்குள் பார்த்து, மோப்பம் பிடித்து உறுமியது; தன் வாலைக் கூரைமீது தூக்கித் தூக்கி அடிப்ப

தும் பெரிய காலால் மிதிப்பதுமாக இருந்தது. நான் சிலுவை அடையாளம் வரைந்துகொண்டு 'தன் பகைவர்கள் மன மாற்றம் பெறும்பொருட்டு ஏசுநாதர் மீண்டும் உயிர்பெற்று எழுவார் !' என்றேன். உடனே கிரீச் என்ற சப்தத்துடன் நழுவி முற்றத்தில் வந்து விழுந்து அது மடிந்துபோய்விட்டது. தங்கள் உபவாசத்தை முடித்துக்கொள்ள ரூடல்ப் குடும்பத்தினர் ஏதாவது சமைத்து இருக்கக் கூடும் ; மோப்பம் பிடித்து அதை இந்தப் பேய் நாடிற்றோ என்னவோ......"

குட்டிக்கரணம் போட்டு, முற்றத்தில் பேய் விழுந்ததை நினைத்தபோது எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது. என் பாட்டியும் என்னோடு சேர்ந்து சிரித்தாள்.

"சின்னக் குழந்தைகள்போலக் குறும்புகள் செய்ய அவற்றுக்குப் பிடிப்பது இல்லை. ஒரு நாள் நள்ளிரவில் எழுந்து குளிக்கும் அறையை நான் கழுவிக்கொண் டிருந்தேன். திடீரென அடுப்பின் கதவைத் திறந்துகொண்டு இந்தப் பேய்கள் சிறிய வடிவத்திலும் மிகச் சிறிய வடிவத்திலும் பச்சை நிறத்திலும் கறுப்பு நிறத்திலும் கரப்பான்பூச்சியைப் போல வந்தன. நான் கதவுப் பக்கமாக ஓடினேன் ; அங்கே போய்ச் சேர்வதற்கு என்னை அவை விடவில்லை. லட்சக் கணக்கில் இந்தப் பேய்கள் என்னைச் சுற்றிச் சூழ்ந்துகொண்டன ; குளிக்கும் அறை முழுதும் அவை நிறைந்துவிட்டபடியால் என்னால் அப்பால் இப்பால் நகர முடியவில்லை. பாதங்களிலும் கால்களிலும் ஏறிக்கொண்டு அவை என்னைக் கடித்தன; பிராண்டின; கொட்டின. சிலுவை அடையாளம் வரைந்துகொண்டு, அவற்றை அப்பால் போகும்படி செய்யக்கூட என்னால் முடியவில்லை. பூனைக்குட்டிகளைப்போன்று மென்மையாகவும் கதகதப்பாவும் அடர்ந்த உரோமம் உள்ளதாகவும் அவை இருந்தன. பின்னங் கால்களால் நின்றுகொண்டும் திரும்புவதும் புரள்வதுமாக இருந்து, தன் சின்னஞ் சிறிய பற்களையும்

பச்சை நிறக் கண்களைக் காட்டிக்கொண்டும் திரிந்தன. தனது தலை ஓரத்தில் இருந்த கொம்புகளை அசைத்துக்கொண்டும் தனது குட்டை வால்களை ஆட்டிக்கொண்டும் திரிந்தன...... ஆண்டவனே! எனக்கு எவ்வளவு கஷ்டமாய் இருந்தது! உணர்வை இழந்துவிட்ட எனக்கு மீண்டும் உணர்வு வந்து பார்த்தபோது, மெழுகுவர்த்தி கிட்டத்தட்ட எரிந்துபோய் விட்டது. தண்ணீர் முழுதும் குளிர்ந்துபோய்விட்டது. தரை முழுவதிலும் தண்ணீர் சிதறிக் கிடந்தது. 'பூ! உங்களைக் கொள்ளைநோய் பிடிக்க! பேய்களான நீங்கள் நாசமாய்ப் போக!' என்று எனக்கு நானே நினைத்துக்கொண்டேன்" என்று சொன்னாள்.

நான் கண்களை மூடிக்கொண்டேன். சாம்பல்நிறக் கல் அடுப்பின் கதவு திறந்து, அதன் வழியாகப் பேய்கள் வரிசை வரிசையாக வந்தன. தடுமாறிக்கொண்டு வந்த அவை, குளிக்கும் அறையை நிறைத்துவிட்டன; துஷ்டத்தனம் வாய்ந்த தம் ஊதா நாக்குகளை வெளியே நீட்டின. இது வேடிக்கையாய் இருந்ததோடு பயங்கரமாயும் இருந்தது. தன் தலையை அசைத்துவிட்டு, என் பாட்டி கண நேரம் சும்மா இருந்தாள். மீண்டும் கற்பனைக் கனல் அவளைப் பிடித்துக்கொண்டது.

"ஜனங்கள் பேய்களைப் பழிப்பதையும் சபிப்பதையும் நான் பார்த்து இருக்கிறேன். ஒரு நாள் இரவு குளிர்காலத்தில் கூதல் காற்று கோரமாக அடித்தது. தூக்காவ் குளக்காலை நான் கடந்துகொண்டிருந்தேன்; அங்கேயிருந்த பனிக்கட்டிப் பள்ளம் ஒன்றில் உன் தந்தையை அமிழ்த்திவிட யாக்கோவும் மைக்கேலும் விரும்பியதாக உன்னிடம் சொன்னது எனக்கு நினைவு இருக்கிறது. அந்த இடத்துக்குத்தான் நான் போய்க்கொண்டிருந்தேன். குளக்காலின் அடியில் இருந்த பாதை வழியாக நான் போனபோது திடீரென சீட்டி அடிப்பதும் கிரீச்சிடுவதும் என் காதில் விழுந்தன. கறுப்புக்

குதிரைகள் பூட்டிய வண்டி ஒன்றை வண்டிக்காரன் ஒருவன் விரட்டிக்கொண்டு என்னை நாடி வருவது எனக்குத் தெரிந்தது. உருண்டை வடிவமுள்ள பேய் ஒன்று கூர்மையான சிவப்புத் தொப்பி ஒன்றை அணிந்து, நின்றவாறு, கடிவாளத்துக்குப் பதிலாக சங்கிலிகளைத் தன் கையில் பிடித்துக் கொண்டு கைகளை நீட்டி வண்டியை ஓட்டிக்கொண்டு வந்தது. குளக்காலைக் கடந்து குதிரைகளால் போக முடியவில்லை. ஆகவே, அவை பனிக்கட்டிக் குளத்துக்கே இழுத்துக் கொண்டு போய்விட்டன. வண்டிக்குள்ளும் பேய்கள் இருந்தன. அவை கூச்சலிட்டுக்கொண்டும் சீட்டி அடித்துக்கொண்டும் தொப்பியை ஆட்டிக்கொண்டும் இருந்தன. நெருப்பு வண்டி போவதுபோல வெகுவேகமாகப் பறந்து, கடிய வேகத்தில் என்னைக் கடந்து ஏழு வண்டிகள் சென்றன. கறுப்பு நிறம் எவ்வளவு கறுமையாய் இருக்குமோ அப்படியே குதிரைகளும் கறுமையாக இருந்தன. அவற்றிடையே ஜனங்கள் தங்கள் தாய் தந்தையரைச் சபித்துக்கொண் டிருந்தார்கள். இத்தகைய ஜனங்களைக் கண்டால் பேய்களுக்கு ஒரே கொண்டாட்டம். பேய்கள் இத்தகையோரைத் தேடிக் கண்டுபிடித்து, இரவு நேரத்தில் இவர்களை ஓட்டம்விட்டுக் களிக்கின்றன. அன்று இரவு நான் பார்த்தது, பேய்களின் கலியாண தினமாகும்.''

எளிமையாகவும் மனத்தில் பதியும்படியாகவும் என் பாட்டி எதையும் சொல்வாள் ; அவள் சொல்வதை நம்பாமல் யாராலும் இருக்க முடியாது.

முள் பாதையில் நடந்து சென்று, ருஷ்யர்களைத் துன்புறுத்திக் கொள்ளையடிக்காதே என்று ''திருட்டு இளவரசன்'' எங்கலிச்சீவாவுக்குப் புனித கன்னி போதனை செய்ததுபற்றி அவள் பாடும் பாடல்கள் சிறப்புடையனவாய் இருக்கும் ; ஆண்டவனுடைய பக்தன் அலெக்ஸியைப்பற்றியும் போர்

வீரன் ஐவானைப்பற்றியும் பாட்டுகள் பாடுவாள்; அறிஞன் வாஸிலிஸாவைப்பற்றியும் போப் என்ற ஆட்டைப்பற்றியும், ஆண்டவனுடைய புனித குமாரரைப்பற்றியும் கதைகள் சொல்வாள்; மார்பா போசானிட்ஸாவைப்பற்றியும் திருடர் தலைவன் பாபா உஸ்தாவைப்பற்றியும் எகிப்தியப் பாபி மரியாவைப்பற்றியும் திருடனுடைய தாய்க்குள்ள கவலைகள்பற்றியும் பயங்கரமான கதைகளை அவள் கூறுவாள்; சொல்லச் சொல்லக் குறையாமல், கதைகள், கட்டுக்கதைகள், பாடல்கள் முதலியன அவளிடம் வளர்ந்துகொண்டே போகும்.

எந்தவிதமான தீய சக்திக்கோ, பேய் பிசாசுகளுக்கோ, என் தாத்தாவுக்கோ, மற்ற ஜனங்களுக்கோ அவள் பயப்பட மாட்டாள்; ஆனால், கரப்பான் பூச்சிகளைக் கண்டால் பயந்து நடுங்கிச் செத்தே போவாள்; தூரத்தில் வரும்போதே அவற்றை அவள் கண்டுபிடித்துவிடுவாள்; சில சமயங்களில் தூங்கும்போது அவள் என்னைத் தட்டி எழுப்பி மெதுவாக "என் அன்பே! அலியோஷா! அதோ கரப்பான் ஊர்ந்து வருகிறது. ஏசுநாதர்மீது அன்புள்ள நீ அதைக் கொன்று போடு" என்பாள்.

அரைத் தூக்க நிலையில் இருந்துகொண்டே மெழுகு வர்த்தியைப் பொருத்தி, கைகளாலும் முழங்காலாலும் ஊர்ந்து, கரப்பானைத் தேடிப் பார்ப்பேன்; எனது முயற்சிகள் பெரும்பாலும் வெற்றிபெறுவது இல்லை.

"ஒன்றையும் காணோமே" என்று நான் அவளிடம் சொல்வேன். அவளோ போர்வையைத் தலைமீது போர்த்துக்கொண்டு, தனது தலையை அசைத்தவாறு பெருமூச்சுவிட்டுக்கொண்டு படுக்கைமீது கிடப்பாள்.

"ஓகோ! ஆம்! அதோ இருக்கிறது! உன்னை வேண்டுகிறேன்; தேடிப்பார்; அது நிச்சயமாக அங்கே இருப்பதாகத் தோன்றுகிறது" என்பாள்.

அவள் சொல்வது பெரும்பாலும் சரியாக இருக்கும்; படுக்கைக்கு அப்பால் வெகு தூரத்தில் எங்கோ ஒரு இடத்தில் கரப்பான்பூச்சி கட்டாயம் இருக்கும்.

"அதை நீ கொன்றுவிட்டாயா? ஆண்டவனுடைய புகழ் ஓங்கட்டும். என் அன்பே! உனக்கு எனது நன்றி" என்று கூறிக்கொண்டே போர்வையைத் தலையிலிருந்து அகற்றிப் போட்டுவிட்டு மகிழ்ச்சியோடு புன்னகை புரிவாள்.

கரப்பான்பூச்சியைக் கண்டுபிடிக்க நான் தவறிவிட்டேனயின், அவளுக்குத் தூக்கம் கெட்டுவிடும்; இரவின் அமைதியில் ஒரு சந்தடி கேட்டாலே போதும்; பயத்தால் அவள் உடம்பு கிடுகிடு என நடுங்கும். மூச்சை அடக்கிக்கொண்டே மெதுவாக "அது கதவு அருகே இருக்கிறது......உடுப்புப் பெட்டிக்குக் கீழே இப்போது போய்விட்டது" என்று மெதுவாகக் கூறுவாள்.

"கரப்பான்பூச்சிகளுக்கு இப்படி ஏன் பயப்படுகிறாய்?"

"பயப்படக் கூடிய ஜந்துவா அது? கரும் பேய்கள்! அங்கும் இங்கும் ஊர்ந்து திரிகின்றன. வாழ்க்கையில் ஏதாவது பயன்படுமாறு ஒவ்வொரு ஜீவ ஜந்துவையும் ஆண்டவன் படைத்து இருக்கிறார். ஆயிரக்கால் பூச்சி இருந்தால் அது வீட்டில் ஈரம் படிந்திருப்பதைக் குறிக்கும்; படுக்கை மீது மூட்டைப்பூச்சிகள் திரிந்தால் அதனால் சுவர்களில் அழுக்கு இருப்பதை தெரிந்துகொள்ளலாம்; தலையில் பேன் இருந்தால், உனக்கு உடம்பில் நோய் பீடித்து இருக்கிறது என்பது பொருள். இவை அனைத்தும் யாருக்கும் தெளிவாகத் தெரிந்தவைதான்; ஆயினும் கரப்பான்பூச்சிகளால் ஏதாவது பிரயோஜனம் உண்டு என்பது யாருக்காவது தெரியுமா? அப்படி இருக்கும்போது அவை வாழ்வதால் என்ன பிரயோஜனம்?" என்று அறிவுசான்ற முறையில் கேட்பாள்.

ஒரு முறை அவள் மண்டியிட்டு, அமர்ந்து ஆண்டவனுடன் உணர்ச்சிபூர்வமாக உரையாடத் தொடங்கிவிட்டாள்; கதவை இடித்துத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்த என் தாத்தா கம்மலான குரலில் "நல்லது தாயே! ஆண்டவனுடன் சம்பாஷணை நடத்தியது போதும்; தொழிற்சாலை தீப்பற்றி எரிகிறது" கூவினர்.

"என்ன?" என்று அலறிக்கொண்டே என் பாட்டி தட்டுத் தடுமாறி எழுந்தாள். பெரிய வரவேற்புக் கூடத்தைக் கடந்து இருட்டில் அவர்கள் இருவரும் கூச்சலிட்டுக்கொண்டு நடந்தார்கள்.

"யெவ்ஜீனியா! விக்கிரகங்களைக் கீழே இறக்கிவை! நாட்டாலியா! குழந்தைகளுக்கு உடைகளைப் போட்டுவிடு" என்று என் பாட்டி இறைந்து கடுமையாக உத்தரவிட்டாள்.

"ஆஹா" என்று ஊளையிட்டார் என் தாத்தா.

அடுக்களைக்குள் நான் ஓடினேன். முற்றத்தில் இருந்து ஜன்னல் தங்கம்போலத் தகதகத்தது; தங்கமயமான நெருப்புப் பொறிகள் பறந்து வந்து தரைமீது விழுந்தன; அம்மான் யாக்கோவ் வெறுமனே தன் காலில் பூட்ஸைப் போட்டுக்கொண்டார்; அந்த இடங்கள் எல்லாம் தனது உள்ளங்கால்களைத் தடுப்பதுபோல அவர் தாவித் தாவிக் குதித்தார். "நெருப்பை வைத்தவன் மைக்கேல்தான்; நம்மீது நெருப்பை வைத்துவிட்டு அவன் ஓடியே போய்விட்டான்" என்று கதறினர்.

"சீச்சீ நாயே!" என்று என் பாட்டி அவரை இடித்துத் தள்ளினள்; கீழே விழும் நிலையில் தட்டுத் தடுமாறி கதவுக்கும் அப்பால் அவர் போய்ச் சேர்ந்தார்.

ஜன்னல் கதவுகளில் பனி உறைப்புகள் இருந்தன; தொழிற்சாலையின் கூரை எரிவதும் திறந்துகிடந்த கதவின் வழியாகத் தீப்பிழம்பு சுழன்று சுழன்று பரவுவதும் எனக்குத்

தெரிந்தன. சிவந்த மலர்போன்ற தீப்பொறிகள் அமைதி சூழ்ந்த புகைபற்ற இரவில் பொறிப் பொறியாகப் பறந்தன. மிக உயரத்தில்தான் புகைமேகம் வியாபித்துப் பரவியது. வெள்ளிவீதிபோல இருந்த நட்சத்திரக் கூட்டத்தை மறைக் காமல் இருந்தது. தணல் பிளம்பின் தகதகப்பால் பனிக்கட்டி கள் சிவப்பாகப் பிரகாசித்தன. சீற்றத்துடனும் தகதகப்புட னும் எரிந்துகொண் டிருந்த முற்றத்தின் மூலையை நாடிப் போக விரும்புவதைப் போன்று, வெளியில் இருக்கும் வீடு களின் சுவர் எல்லாம் நடுநடுங்கின. சிவந்த தங்க நிற முள்ள நீண்ட நெருப்புக் கங்குகள் கூறையின் காய்ந்த பலகைகள்மீது வேகமாகச் சாடின. அங்கிருந்த நீண்ட புகைப்போக்கி வழியாக லேசான புகை குபுகுபு வென்று புகைந்தது. மெதுவான வெடிப்பும் பட்டின் சலசலப்பும் ஜன் னல் கதவில் ஏற்பட்டன. நெருப்பு அதிகரித்தது. அதனு டைய பளபளப்பில் தொழிற்சாலையே அழகாக உருமாறிவிட் டது. மாதாகோவிலில் தென்படும் விக்கிரகபீடம் பார்ப்ப வர்களின் உள்ளத்தைக் கவர்ந்து ஈர்த்தது.

தலைமீது கனமான ஆட்டுத்தோல் ஒன்றைப் போட்டுக் கொண்டு, யாருடைய பூட்ஸையோ காலில் மாட்டிக்கொண்டு, நுழைவாயிலில் நின்று முன் மண்டபத்தை எட்டிப் பார்த் தேன். நெருப்பின் தகதகப்பால் என் கண்களே பூத்துவிட் டதுபோல எனக்குத் தோன்றியது. என் தாத்தாவும் மாமா வும் கிரிக்கோரியும் போட்ட கூச்சலும் கூப்பாடும் என் காதைச் செவிடாக்கின; என் பாட்டி நடந்துகொண்ட முறை எனக்கு அச்சத்தை விளைவித்தது. வெற்றுச் சாக்கை என் பாட்டி தன் தலைமீது போட்டுக்கொண்டாள்; குதிரைப் போர் வையை எடுத்துத் தன் உடம்பைச் சுற்றிக்கொண்டாள். நெருப்புக்கு இரையாகிக்கொண் டிருக்கும் தொழிற்சாலைக் குள் நுழைந்து "முட்டாள்களே! சல்பூரிக் ஆசிட்! சல்பூரிக்

ஆசிட் எல்லாம் நாசமாகிவிடும்'' என்று அலறிக்கொண்டே நெருப்பினிடையே ஓடினாள்.

"கிரிக்கோரி! அவளை நிறுத்து; இல்லையேல் அவள் தொலைந்து போவாள்'' என்று ஓலமிட்டார் தாத்தா.

ஆனால் அதற்குள்ளாக என் பாட்டி திரும்பிவிட்டாள். தன் தலையெல்லாம் புகைபடிந்து இருக்க, தலையை ஆட்டிய வாறே, சல்பூரிக் ஆசிட் இந்த ஜாடியைத் தூக்கிக்கொண்டு அதன் பளுவைத் தாங்க முடியாமல் வந்து சேர்ந்தாள்.

"தந்தையே! குதிரையைக் கொண்டுவாருங்கள்; என் மீது கிடக்கும் உடைகளை அகற்றுங்கள், என்மீது நெருப்புப் பற்றியிருப்பதை நீங்கள் காணவில்லையா?'' என்று இருமி இருமிக்கொண்டே கோரமாகக் கூறினாள் என் பாட்டி.

அவள் தோள்மீது கிடந்த குதிரைப் போர்வையைக் கிரிக்கோரி அகற்றினாள். பிறகு ஒரு மண்வெட்டியை எடுத்துப் போய், தொழிற்சாலையின் வாயில் முன்பு கிடந்த பெரிய பெரிய பனிப் பாறைகளை உடைத்து நொறுக்கினான். கோடரியைக் கையில் எடுத்துக்கொண்டு என் அம்மான் அவளைச் சுற்றித் துள்ளிக் குதித்தார். பனிக்கட்டியை அள்ளி அவள்மீது வீசியவாறே என் தாத்தா என் பாட்டியைத் தொடர்ந்துபோய்க்கொண் டிருந்தார். சல்பூரிக் ஆசிட் ஜாடியை என் பாட்டி பனிப்பள்ளத்தில் புதைத்தாள். பிறகு ஓடிப்போய் முற்றத்தின் கதவைத் திறந்துவிட்டாள்.

ஓடிவந்த ஜனங்களைத் தலையால் வணங்கி "அண்டை வீட்டார்களே! களஞ்சியத்தைக் காப்பாற்றுங்கள்'' என்று கதறினாள். "களஞ்சியத்துக்கும் வைக்கோல் போருக்கும் நெருப்புப் பரவுகிறது. எங்கள் வீடுகள் எல்லாம் எரிந்து தரைமட்டம் ஆகிவிடும்; பிறகு உங்கள் வீடுகளையும் பற்றிக் கொள்ளும். ஆகையால், கூரையை வெட்டி எறியுங்கள்; வைக்கோலைத் தோட்டத்துக்குள் அள்ளிப் போடுங்கள். கிரிக்

கோரி! தரையில் வீணாகக் கிடக்கிற பனிக்கட்டிகளை அள்ளி மேலே வீசு ; யாக்கோவ் ! ஓடித் திரிவதை நிறுத்திக்கொண்டு ஜனங்களிடம் மண்வெட்டியும் கோடாரியும் எடுத்துவந்து கொடு. நல்லவர்களே ! சேர்ந்து உதவுங்கள் ! ஆண்டவன் நமக்கு உதவுவார் '' என்று கதறினாள்.

நெருப்பைப்போலவே அவளும் கவர்ச்சிகரமாக இருந்தாள். அவளை அடித்துத் துரத்துவதுபோல நெருப்புப்பிரகாசித்தது. அவளோ கறுப்பு நிழல்போல அங்கும் இங்கும் தாவித் தாவித் திரிந்தாள். எந்த இடத்திலும் இருந்தாள்; யாவற்றையும் கவனித்தாள் ; எல்லோரையும் உத்தரவிட்டாள்.

ஷாராப் என்ற அந்தக் குதிரை முற்றத்துக்குள் ஓடி, பின் கால்களைத் தூக்கி என் தாத்தாவை அப்பால் தள்ளி விட்டது. நெருப்பின் ஒளியால் குதிரையினுடைய வட்ட விழிகள் சிவப்பு நிறத்தில் பிரகாசித்தன. சீறிச் சீறி என் தாத்தாவை அது ஏமாற்றப் பார்த்தது ; கட்டுக்கடங்காமல் இருந்தபடியால், கடிவாள வாரைவிட்டு விட்டு, என் தாத்தா அப்பால் போய்விட்டார்.

''தாயே ! அதைப் பிடித்துக்கொள் '' என்று கூவினார்.

பின்னங் கால்களில் நின்றுகொண் டிருந்த குதிரையை அணுகி அசையாமல் நின்றுகொண்டு என் பாட்டி தன் கைகளை நீட்டினாள். அந்தக் குதிரை நன்றாகக் கனைத்து விட்டு, அடங்கி அமைதியாக நின்றுகொண்டு நெருப்பைப் பார்த்துத் திருட்டுவிழி விழித்தது.

'' பயப்பட வேண்டாம் '' என்று சொல்லிக் குதிரையின் பிடரியில் தட்டிக்கொடுத்தவாறே அதன் கடிவாளத்தை என் பாட்டி பிடித்துக்கொண்டாள். ''பயங்கரமான இந்த நேரத்தில் எங்களைவிட்டுவிட்டு நீ போக எண்ணுகிறாயா ? ஏ சின்னஞ் சிறு போக்கிரி எலியே !'' என்று என் பாட்டி அதைக் கடிந்துகொண்டாள்.

அவளைக் காட்டிலும் உருவத்தில் மூன்று மடங்கு பெரி தான அந்தச் சிறிய சுண்டெலி அவளைப் பின்தொடர்ந்து வாயிலண்டை போயிற்று; என் பாட்டியின் முகத்தைப் பார்த்தவாறே கனைத்துக்கொண்டு சென்றது.

முணுமுணுத்தவாறு ஆடைகளுக்குள் இருந்த குழந்தை களை, மூட்டைகளைத் தள்ளுவதுபோல தள்ளிக்கொண்டு, தாதி யெவ்ஜீனியா வெளியே வந்தாள்.

" வாஸிலி வாஸிலியேவிச்! அலெக்ஸியைச் காணுமே" என்று கதறினாள்.

" விரைந்து தேடிப்பார்! விரைந்து தேடிப்பார்!" என்று பதில் சொன்னார் என் தாத்தா. ஆனால் நானோ முன் மண்டபத்தின் படிகள் ஓரத்தில் ஒளிந்துகொண்டபடியால் யெவ்ஜீனியாவால் என்னையும் சேர்த்து அழைத்துப் போக முடியவில்லை.

தொழிற்சாலையின் கூரை இடிந்து தகர்ந்து விழுந்தது. புகை சுருள் சுருளாக வானளாவக் கிளம்பியது. நெருப்புப் பிடித்த கைவாரங்கள் ஆகாயத்தில் பறந்தன. உள்ளே யிருந்து நீல, மஞ்சள், பச்சை நிற அனல் பிழம்புகள் சீறிச் சீறிப் புறப்பட்டன. முற்றத்தைப் பஸ்மீகரம் செய்துவிட்டு, ஜனங்களை நாடி அவை வந்துகொண் டிருந்தன. சொக்கப் பானை போன்று எரிந்துகொண்டிருந்த இந்தப் பெரு நெருப் பின்மீது பனிக்கட்டிகளை அள்ளி வீசி ஜனங்கள் அதை அணைக்க முயன்றார்கள். தாழிகள் பயங்கரமாகக் கொதித்து, அடர்ந்த மேகம் போன்ற நீராவியைக் கக்கின; புதுவகை யான ஒருவித நெடியுடன் அது முற்றம் முழுதும் வியாபித்து, கண்களைக் கலங்கும்படி செய்தது. படிக்கட்டுகளிலிருந்து இறங்கி வந்து, என் பாட்டியிடம் போய் நான் விழுந்தேன்.

" நீ நசுங்கிப் போய்விடுவாய்! அப்பால் போ; அப்பால் போ" என்று கதறினாள் என் பாட்டி.

சிறகு சொருகிய உலோகத் தொப்பி அணிந்த குதிரை வீரன் ஒருவன் முற்றத்துக்குள் பாய்ந்தான்; அவனுடைய இளஞ் சிவப்பு நிறக் குதிரையின் வாயில் நுரை வடிந்தது. சவுக்கை எடுத்து ஓங்கியவாறே "வழிவிடுங்கள்!" என்று பயமுறுத்தும் பாவனையில் அவன் சொன்னான்.

சிறிய மணிகள் சலசல என்று ஒலித்தன. யாவும் உற்சாகமாகவும் திருநாள் போலவும் இருந்தன. முன் மண்டபத்துக்கு என்னை மேலும் தள்ளி "நான் சொல்வது உன் காதில் விழவில்லையா? இங்கிருந்து அப்பால் போய்விடு" என்றாள் என் பாட்டி.

அவளுடைய வார்த்தைகளுக்குக் கீழ்ப்படியாது இருப்பது இத்தகைய சமயங்களில் இயலாத காரியம். ஆகையால் அடுக்களைக்குள் ஓடி மீண்டும் ஜன்னல் அருகே நான் நின்று கொண்டேன். ஆனால், ஜனங்களோ நெருங்கிக் கும்பலாக நின்று, நெருப்பு எரிவதைப் பார்க்க முடியாமல் தடுத்துவிட்டார்கள். குளிர்காலத் தொப்பிகளுக்கும் குல்லாய்களுக்கும் மத்தியில், உலோகக் கவசத் தொப்பிகள் பளபளப்பது என் கண்களுக்குத் தெரிந்தது.

தண்ணீரைப் பீய்ச்சியும் ஊற்றியும் விரைவில் நெருப்பை அணைத்தார்கள். ஜனங்கள் எல்லோரையும் போலீஸ்காரர்கள் அடித்துவிரட்டிவிட்டார்கள்; கடைசியாக, என் பாட்டி அடுக்களைக்குள் வந்து சேர்ந்தாள்.

"யார் இங்கே இருப்பது? நீயா? இன்னும் உறங்கவில்லையா? பயமாய் இருக்கிறதா? பயப்படாதே. இப்போது எல்லாம் முடிந்துவிட்டது" என்றாள்.

அவள் வந்து எனக்குப் பக்கத்திலே அமர்ந்து முன்னும் பின்னும் அசைந்து ஆடிக்கொண்டிருந்தாள். ஒரு வார்த்தை கூட அவள் பேசவில்லை. மீண்டும் அமைதியான இரவிலும் இருட்டிலும் இருப்பது மகிழ்ச்சியை அளித்தது; எனினும்

நெருப்பு அணைந்து போனது எனக்கு வருத்தத்தை உண்டு பண்ணியது.

கதவு வழியாக வந்து என் தாத்தா "தாயே!" என்று கூப்பிட்டார்.

"ஊம்" என்றாள் என் பாட்டி.

"தீ சுட்டுவிட்டதா?"

"அவ்வளவு அதிகம் இல்லை."

தீக்குச்சியை எடுத்து அவர் உராய்ந்தார்; காட்டுப்பூனை போன்ற அவருடைய முகத்தில் கரி அப்பி இருப்பது நீல வெளிச்சத்தில் தெரிந்தது. மேஜைமீது இருந்த மெழுகு வர்த்தியை ஏற்றிவைத்துவிட்டு, என் பாட்டிக்கு அருகே சென்று அவர் அலுப்போடு உட்கார்ந்தார்.

"நீங்கள் குளியுங்களேன்" என்று என் பாட்டி அவரிடம் சொன்னாள். அவளுடைய உடம்பிலும் கரி அப்பி, உடம்பு புகைநாற்றம் அடித்தது.

"சில சமயங்களில் ஆண்டவன் உன்பால் கருணைகாட்டி விடுகிறார். அறிவுசான்ற சொற்களைப் பேசும்படி செய்துவிடு கிறார்" என்று சொல்லி, தாத்தா பெருமூச்செறிந்தார்.

பிறகு, முதுகில் தட்டிக்கொடுத்து, பல்லைக் காட்டியவாறே "சில கணங்கள் மட்டுமே ஆண்டவன் உனக்கு அறிவுச் சுடரைக் கொளுத்துகிறார்" என்றார்.

இதைக் கேட்டு நகைத்துவிட்டு என் பாட்டி ஏதோ சொல்ல வாயெடுத்தாள். அதற்குள் என் தாத்தா தன் முகத்தைச் சுளித்துக்கொண்டு "கிரிக்கோரியைத் தொலைத்துத் தலைமுழுக வேண்டியதுதான்; அவனுடைய கவனக் குறைவால் தான் இது நேர்ந்திருக்கிறது. தன் காலத்தையும் கடந்து வாழ்கிற இந்தக் குடியானவன் ஒழிந்து தொலையட்டும். முன் மண்டபத்தில் இருந்து முட்டாள்போல யாக்கோவ் கதறு கிறான். நீ எழுந்து அவனிடம் போவது நல்லது..." என்றார்.

எழுந்து ஒரு கையைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு விரல்களை ஊதியவாறே என் பாட்டி புறப்பட்டுப்போனுள்.

"யாவற்றையும் ஆரம்பத்திலிருந்தே பார்த்துவிட்டாயா?" என்று என்னைக் கவனியாமலே என் தாத்தா என்னைக் கேட்டார். "உன் பாட்டியைப்பற்றி நீ என்ன நினைக்கிறுய்? அவள் கிழவி என்பதை மறந்துவிடாதே... அடிபட்டு உள்ளம் உடைந்து இருக்கிறுள்... உனக்குக் கொஞ்சம் இருக்கிறது! மற்றவர்களுக்கோ ஒன்றுமே இல்லை."

தலையைக் குனிந்துகொண்டு சிறிது நேரம் அவர் பேசாமல் இருந்தார். பிறகு எழுந்து எரிந்துபோயிருந்த மெழுகுவர்த்திக் கட்டையை எடுத்து எறிந்துவிட்டு "உனக்குப் பயமாகவா இருக்கிறது?" என்று கேட்டார்.

"இல்லை."

"சரி. எதற்கும் நீ பயப்படாதே."

ஏதோ வெறுப்போடு தன்மீது கிடந்த சட்டையைக் கழற்றிவிட்டு, மூலையில் இருக்கிற குளிக்கும் அறைக்குப் போனுர் என் தாத்தா.

காலால் ஓங்கி உதைத்து இரைந்தவாறே "நெருப்புப் பற்றிக்கொள்ளச் செய்வது மடத்தனம்; நெருப்புப் பற்றக் காரணமாய் இருப்பவனை மடையன் அல்லது திருடன் என்று குற்றம் சாட்டி, ஒரு பொது இடத்தில் நிறுத்தி, அவனை அடித்து நொறுக்குவது அவசியமாகும். இத்தகைய கயவர்களை நடத்த வேண்டிய முறை இதுதான். இப்படிச் செய்தால் வீட்டில் தீவைக்க மற்றவர்கள் அஞ்சுவார்கள்......எதற்காக இப்படி உட்கார்ந்து இருக்கிறுய்? படுக்கப்போ" என்று அதட்டினுர்.

நான் எழுந்து போனேன். அன்று இரவு என்னுல் தூங்க முடியவில்லை. படுக்கைக்குள் பதுங்கிக் கிடந்த நான், மனித இயல்புக்கு ஒவ்வாத ஓலம் ஒன்று காதில் விழுவது

கேட்டு எழுந்து மீண்டும் அடுக்களைக்குள் ஓடினேன். அறையின் நடுவே என் தாத்தா நின்றுகொண்டிருந்தார். சட்டை அணியாமல் கையில் ஒரு மெழுகுவர்த்தியைப் பிடித்துக் கொண்டு நின்றார். மெழுகுவர்த்தி நடுங்கியது; நின்ற இடத்தைவிட்டு நகர முடியாமல் காலைத் தூக்கித் தூக்கி உதறிக்கொண்டிருந்தார்.

“ தாயே! யாக்கோவ்! என்ன சமாச்சாரம்?” என்று அவர் பெருமூச்செறிந்தார்.

அடுப்பின்மீது ஏறி ஒரு மூலையில் நான் பதுங்கிக்கொண்டேன். நெருப்புப் பற்றி எரிந்த சமயம் நிலவின குழப்பம் போலவே மீண்டும் யாவும் குழம்பித் தாறுமாறாகிவிட்டன. ஒரு வித கால கதியோடு அலைமேல் அலை வந்து சுவர்களிலும் முகட்டிலும் மோதுவதுபோலக் கதறி அழுவது காதில் விழுந்தது; வரவரப் பலமாகவும் இடைவிடாதும் கேட்டுக் கொண்டிருந்தது. என் தாத்தாவும் அம்மாவும் பயித்தியம் பிடித்தவர்கள்போல அங்கும் இங்கும் ஓடிக்கொண்டிருந்தார்கள். அடுக்களையைவிட்டு வெளியே போய்விடும்படி என் பாட்டி அவர்களிடம் கூச்சல் போட்டாள். அடுப்புக்குள் பெரிய கட்டைகளைத் திணித்துத் திணித்து, கிரிக்கோரி பெரும் இரைச்சல் போட்டான். தண்ணீர் காயவைக்கும் வேம்பாக்களில் நீரை நிரப்பிவிட்டு, ஆஸ்ட்ராக்கான் ஒட்டகம் தலையை ஆட்டுவதுபோல ஆட்டிக்கொண்டு அங்குமிங்கும் திரிந்தான்.

“ நெருப்பு தொடர்ந்து எரியட்டும்” என்று என் பாட்டி உத்தரவிட்டாள்.

எதையோ பொருத்துவதற்காகக் கிரிக்கோரி அடுப்பின் மீது ஏறியபோது, என் கால்கள் அவன்மீது இடறவே அவன் பயத்தால் நடுங்கிப்போனான். “ பூ! இங்கே இருப்பது யார்? என்னை இப்படி நடுங்க வைத்துவிட்டாயே? இருக்கக்கூடாத இடத்தில்தான் நீ பெரும்பாலும் இருப்பாய்!”

“என்ன நடக்கிறது ?”

“உன் மாமி நட்டாலியாவுக்குக் குழந்தை பிறக்கிறது” என்று அடுப்பிலிருந்து குதித்துக்கொண்டே பதில் சொன்ஞன் கிரிக்கோரி.

என் தாய் பிரசவித்தபோது இப்படி அலறி ஓலமிட்டதாக எனக்கு நினைவு இல்லை.

வெந்நீர் பாத்திரத்தைத் தூக்கி அடுப்பின்மீது வைத்து முடித்ததும் மேலே ஏறிவந்து எனக்குப் பக்கத்தில் அமர்ந்து கொண்டு, தன் பையில் இருந்து களிமண் குழாய் ஒன்றைக் கிரிக்கோரி எடுத்தான்.

குழாயை என்னிடம் காட்டிக்கொண்டே “புகைப் பிடித்து என் கண்களை நான் குணப்படுத்திக்கொள்ளப் போகிறேன். உன் பாட்டி பொடிப்போட்டுக்கொள்ளும் படியாக யோஜனை கூறுகிருள் ; எனக்குப் புகைப் பிடிக்கத் தான் பிரியமாய் இருக்கிறது” என்ருன்.

அடுப்பின் ஓரத்தில் கால்களைத் தொங்கப்போட்டுக் கொண்டு அவன் உட்கார்ந்தான் ; மெழுகுவர்த்தியின் மங்கிய வெளிச்சத்தைக் கூர்ந்து கவனித்தான். அவனுடைய காது களிலும் கன்னத்திலும் கரி அப்பி இருந்தது. சட்டை கிழிந்துபோய் இருந்தது. கோணலாக நீட்டிக்கொண்டிருந்த அவனுடைய விலா எலும்புகள் எனக்குத் தெரிந்தன. அவனுடைய கரிய மூக்குக் கண்ணுடிகளில் ஒரு வில்லை தெரித்துப் பெரிய துண்டமாகக் கீழே விழுந்தது. அதனுல் அவனுடைய கண், ஒரு புண்போலச் சிவந்து தெரிந்தது.

குழாயில் புகையிலையைத் திணித்துக்கொண்டே பெண்கள் முணகுவதை உற்றுக் கேட்டுக்கொண்டு அமர்ந்து இருந்த அவன், குடித்துவிட்டவன்போல ஏதோ முணுமுணுத்தான்.

“உன் பாட்டிக்கு நெருப்புக் காயங்கள் அதிகம் ஏற்பட்டுவிட்டதுபோல் தோன்றுகிறது. பிரசவத்தை அவள்

எப்படிக் கவனிக்கப் போகிறுளோ தெரியவில்லை ? உன் மாமி என்ன ஆவாளோ ? அவளை எல்லோரும் மறந்துபோனூர்கள். நெருப்பு பற்றிக்கொண்டதுமே பயத்தால் அவள் முணகத் தொடங்கினுள்...உயிருள்ள ஒரு ஜீவனை இந்த உலகுக்குக் கொணர்வதில் எவ்வளவு கஷ்டங்கள் ஏற்படுகின்றன என் பதைப் பார்த்தாயா ? இருந்தும் பெண்களை யாரும் மதிப்பது இல்லை. தாய் என்று எண்ணிப் பெண்களைப் பெருமையோடு நடத்த வேண்டும். இதை ஒருபோதும் மறவாதே " என்று சொன்னுன்.

தூங்கி விழுந்த அவன் கதவு சாத்தப்படும் சத்தம் கேட்டுத் திடுக்கிட்டு விழித்தான். அம்மான் மைக்கேல் குடி போதையில் கதறினுர். ஒரே சந்தடி. புதுமையான வார்த்தை கள் என் செவியில் விழுந்தன.

" சொர்க்கவாயில் திறக்கும் நேரம் நெருங்கிவிட்டது..."

" விளக்கு எண்ணெயும் கரியும் 'ரம்மும்' கலந்து அவளுக்குக் கொடுங்கள். அரைக் கிளாஸ் விளக்கெண்ணெய், அரைக் கிளாஸ் ரம், ஒரு தேக்கரண்டி கரி..."

" நான் அவளைப் பார்க்க வேண்டும் " என்று அம்மான் மைக்கேல் கேட்டுக்கொண்டே இருந்தார்.

அவர் தரையில் உட்கார்ந்து இருந்தார். கால்களுக்கு நடுவே துப்பிக்கொண்டும் கைகளால் தரையை ஓங்கி அறைந்து கொண்டும் இருந்தார். தாங்க முடியாத அளவு அடுப்பில் சூடேறிவிட்டதால் நான் கீழே இறங்கிக்கொண்டேன். இறங் கியதும் என்னைக் கால் இடுக்கிப் பிடித்துக்கொண்டு என் அம்மான் நெருக்கினுர். தரையில் விழுந்து மோதி எனக்குத் தலையில் அடிபட்டுவிட்டது.

" மடையன் " என்று கதறினேன்.

அவர் துள்ளிக் குதித்துப் பெரிய சப்தத்துடன் என்னைத் தூக்கி மேலே வீசினர். "அடுப்பில் மோதி உன்னை நொறுக்கப் போகிறேன் பார்" என்று உறுமினர்.

உணர்வு வந்தபோது என் தாத்தாவின் மடியில் நான் படுத்துக் கிடப்பது எனக்குத் தெரியவந்தது. விக்கிரகங்கள் வைக்கப்பட்டிருக்கும் மூலையில் அவர் உட்கார்ந்து இருந்தார். என்னை அசைத்தாட்டிக்கொண்டே, "நமக்கு மன்னிப்பே கிடைக்க மாட்டாது; நம்மில் ஒருவருக்குமே கிடைக்க மாட்டாது" என்று முகட்டில் தன் கண்களைப் பதித்தவாறே முணகிக்கொண்டிருந்தார்.

அவருடைய தலைக்கு மேலே விக்கிரகங்களிடை வைக்கும் விளக்கு பிரகாசித்துக்கொண் டிருந்தது. அறையின் நடுவில் இருந்த ஒரு மேஜைமீது மெழுகுவர்த்தி ஒன்று பொருத்தி வைக்கப்பட்டு இருந்தது. குளிர்காலத்து மங்கிய காலை நேரம் ஜன்னல் வழியாக எட்டிப்பார்த்தது.

குனிந்து பார்த்துக்கொண்டே "உனக்கு என்ன கஷ்டமாய் இருக்கிறது?" என்று வினவினர் என் தாத்தா.

எல்லாமுமே எனக்குக் கஷ்டமாய் இருந்தது. எனது தலை நனைந்து இருந்தது. உடம்பு ஈயத்தைப்போல் இருந்தது. எதையும்பற்றிப் பேச எனக்கு விருப்பம் இல்லை. என்னைச் சுற்றி யிருந்த அனைத்தும் எனக்கு விபரீதமாயும் புதுமையா யும் தோன்றின; என்னைச் சுற்றிக் கிடந்த நாற்காலிகளில் எல்லாம் எனக்கு அறிமுகமில்லாத ஜனங்கள் குந்தி இருந் தார்கள். ஊதா உடை தரித்த பாதிரி ஒருவர் உட்கார்ந்து இருந்தார்; தலை நரைத்துப்போன கிழவர் ஒருவர் கண்ணாடி போட்டுக்கொண்டு இருந்தார். ராணுவ உடையை அணிந்துகொண்டு வேறு ஒருவர் இருந்தார். இன்னும் வேறு பலரும் இருந்தார்கள். எதையோ ஆவலோடு எதிர் பார்த்து இருப்பவர்கள் போல, விரைப்பாகவும் அசைவற்றும்

மரப்பொம்மைகளை ஒப்ப அவர்கள் உட்கார்ந்து இருந்தார்கள். அருகே தண்ணீர் தெரித்துச் சிதறுவதை உற்றுக் கேட்டபடி இருந்தார்கள். கைகளைப் பின்புறத்தில் கட்டிக் கொண்டு, கதவு அருகே என் அம்மான் யாக்கோவ் நின்று கொண்டிருந்தார்.

"யாக்கோவ்! இவனை அழைத்துப் போய் படுக்க வை" என்று என் தாத்தா சொன்னார்.

என் அம்மான் என்னைக் கூப்பிட்டார்; காலை ஊன்றிய வாறு மெதுவாக நடந்து நாங்கள் என் பாட்டியின் அறைக்குப் போய்ச் சேர்ந்தோம். நான் படுக்கையில் படுத்துக்கொண்டதும் அவர் மெதுவாக "உன் மாமி நட்டாலியா இறந்து போனாள்..." என்று என் அம்மான் மெதுவாகச் சொன்னார்.

இதைக் கேட்டு நான் ஆச்சரியத்தில் மூழ்கிவிடவில்லை; கொஞ்ச காலமாகவே அவள் வீட்டுக்குள் நடமாடவில்லை; அடுக்களைக்கு வரவும் இல்லை; சாப்பிட வரவும் இல்லை.

"பாட்டி எங்கே?"

"அங்கே இருக்கிறாள்" என்று கையை அசைத்தவாறே என் அம்மான் பதில் சொன்னார். காலில் ஒன்றும் இல்லாமல் தன் கால்களை மெதுவாக ஊன்றிக்கொண்டு அவர் மெதுவாக வந்ததுபோலவே நடந்து திரும்பிவிட்டார்.

படுக்கையில் கிடந்தவாறே கவலையோடு சுற்றுமுற்றும் பார்த்தேன்; ஜன்னல் கதவில் பயங்கரமான மொட்டை முகங்கள் தெரிந்தன. உடுப்புப் பெட்டிக்கு மேலே ஒரு மூலையில் என் பாட்டியின் உடை தொங்கிக்கொண்டிருந்தது. இதை நான் தெரிந்துகொண்டபோதிலும், இப்போது இந்த உடையில் ஏதோ உயிருள்ள ஜீவன் ஒன்று நிழல் வடிவத்தில் பதுங்கிப் பதுங்கித் திரிவதாக எனக்குத் தோன்றியது. நான் என் தலையைத் தலையணையில் புதைத்துக் கொண்டும் ஒரு கண்ணால் கதவைப் பார்த்துக்கொண்டும் கிடந்

தேன். கீழே குதித்து ஓடிப்போக விரும்பினேன். அறை மிகவும் சூடாக இருந்தது. அடுக்களைத் தரையில் ரத்தம் ஒழுகி, சிக்கோநாக் இறந்துபோனது நினைவு வந்துவிட்டபடி யால், அறையில் ஏதோ ஒரு துர்வாடை வீசுவது போல எனக்குத் தோன்றியது. என் தலையோ அல்லது இதயமோ வெடித்துவிடுவதுபோல இருந்தது. ஒரு ஸ்லெட்ஜ் வண்டியில் வீட்டை விட்டு ஒரு குளிர்காலத்தில் என்னை இழுத்துக் கொண்டுபோய் தள்ளிவிடுவதுபோல வீட்டுக்குள் இருக்கும் அனைத்தும் என்னைத் துன்புறுத்தின....

மெதுவாகக் கதவைத் திறந்துகொண்டு என் பாட்டி வந்து சேர்ந்தாள். கதவைத் தன் தோளால் இடித்துத் தள்ளிக் கொண்டே அதில் சாய்ந்தவாறு நின்றாள். விக்கிரகத்தின் அருகே எரிந்த நீல விளக்குப் பக்கமாகத் தன் கைகளை நீட்டி "எனது எளிய இந்தக் கரங்கள்... இவற்றுக்குத்தான் எத்தனை வேதனைகள்..." என்று தெளிவாகவும் குழந்தை யுள்ளம் படைத்த குரலிலும் மெதுவாகச் சொன்னாள்.

## 5

வசந்த காலத்தில் பாகப் பிரிவினை ஆரம்பமாகியது. யாக்கோவ் நகரில் தங்கிவிட்டார்; மைக்கேல் ஆற்றைக் கடந்து போய்விட்டார். போலிவாயாத் தெருவில் என் தாத்தா நல்ல வீடாக ஒரு வீட்டை விலைக்கு வாங்கினார். அந்த வீட்டின் தளத்தில் நல்ல கூடம் ஒன்றும் அழகிய சிறிய அறை ஒன்றும் தோட்டம் ஒன்றும் இருந்தன; வில்லோச் செடிகள் முளைத்த பாறை ஒன்று அதை அடுத்து இருந்தது.

“சவுக்குகள் ஏராளமாக இருக்கின்றன” என்று கண்ணடித்துக்கொண்டே என் தாத்தா என்னிடம் சொன்னார். மென்மையான தரையில் நடந்துகொண்டே நாங்கள் தோட்டத்தைச் சுற்றி ஆராய்ந்தோம். “விரைவில் உனக்கு நான் எழுதப் படிக்கக் கற்றுத் தருகிறேன்; அப்போது எல்லாச் சவுக்குகளும் அழகாக வளர்ந்துவிடும்” என்றார்.

வீடு முழுவதிலும் குடிக்கூலிக்கு இருப்பவர்கள் இருந்தார்கள். மாடியில் தனக்கு என என் தாத்தா ஒரு பெரிய அறையை வைத்துக்கொண்டார். விருந்தினர்களும் அதில் தான் தங்கினார்கள். எங்களுக்காக என் பாட்டி கீழே ஒரு அறையை வைத்துக்கொண்டாள். இந்த அறைக்குத் தெருவை ஒட்டியவாறு ஒரு ஜன்னல் இருந்தது; மாலை நேரங்களிலும் விடுமுறை நாட்களிலும் குடிகாரர்கள் கூடத்திலிருந்து வெளிப்படுவதை ஜன்னலில் சாய்ந்து நின்றவாறு நான் கவனிப்பது வழக்கம். அவர்கள் தட்டுத்தடுமாறித் தள்ளாடிக் கொண்டு தெருவில் திரிவார்கள்; சாக்கடைக்குள் போய் விழுவார்கள். சில சமயங்களில் மாமூட்டைகள் தூக்கி எறியப்படுவதைப் போன்று தெருவில் தூக்கி எறியப்படுவார்கள். அவர்களோ எழுந்து மீண்டு கதவண்டை போவார்கள். அவர்களை உள்ளே நுழையவிடாமல் கதவு சாத்தப்பெறும்; கண்ணாடிகளின் சலசலப்பும் துருப்பிடித்த கீல்தகட்டின் ஓலமும் கேட்கும். இதன் பிறகு சண்டை தொடங்கும். மேலே இருந்தபடி பார்ப்பதற்கு இவை பிரியமாய் இருக்கும். தன் புதல்வர்கள் திறந்து இருக்கும் தொழிற்சாலைகளைச் செம்மையாக நடக்க உதவும் பொருட்டு ஒவ்வொரு நாளும் காலையில் என் தாத்தா போய்விடுவார். மாலையில் சோர்வுற்று மனம் தளர்ந்து வெறுப்போடு எரிச்சலுடன் திரும்புவார்.

என் பாட்டி தைப்பாள்; உணவு தயாரிப்பாள்; தோட்டத்தைக் கொத்துவாள்; காண இயலாத விசையினால்

ஊந்தப்பட்ட பாரியான முகட்டைப் போல, நாள் முழுதும் சுறுசுறுப்புடன் திரிவாள். ஒரு சிமிட்டா பொடியை எடுத்து விருப்போடு போட்டுக்கொள்வாள் ; வியர்த்துக் கொட்டும் முகத்தைத் துடைத்துக்கொண்டு கவனிப்பாள்.

" கால முடிவுவரை அடியார்களின் புகழும் தேவ தூதர்களின் புகழும் ஓங்கட்டும். என் புருவே - கிருவே ! அலியோஷா ! கடைசியாக நமக்கு அமைதியான வாழ்க்கை ஏற்பட்டு இருக்கிறது. புனித கன்னியின் அருளால் இப்பொழுது எல்லாம் செம்மையாகிவிட்டன."

ஆனல், எனக்கோ எங்கள் வாழ்க்கை அமைதியான வாழ்க்கையாகத் தோன்றவில்லை. காலையிலிருந்து மாலைவரை, வீட்டுக்குள்ளும் முற்றத்திலும் குடி இருப்பவர்கள் சுற்றித் திரிந்தார்கள். அண்டை வீட்டுக்காரர்கள் அடிக்கடி எட்டிப் பார்த்தார்கள்; எதற்காகவோ விரைந்தார்கள்; எதற்காகவோ தாமதித்தார்கள் ; எதற்காகவோ எப்பொழுதும் தயாராக இருந்தார்கள்.

என் பாட்டியை " அக்குலீனு ஐவானோவா " என்று அவர்கள் அழைத்தார்கள்.

நட்புரிமையோடு அக்குலீனு ஐவானோவா அவர்களைப் பார்த்துப் புன்முறுவல் பூப்பாள்; அவர்கள் கூறுவதைக் கவனமாகக் கேட்பாள் ; பெருவிரலால் மூக்குக்குள் பொடியைச் செலுத்திக்கொண்டு, சிவப்புப் பூப்போட்ட கைக்குட்டையால் மூக்கைத் துடைத்துக்கொள்வாள்.

" அட்டைகளைத் தொலைக்க வேண்டுமானல் குளிக்கும் அறையை நீங்கள் அடிக்கடி கழுவிவிட வேண்டும். மிளகு எண்ணெயைத் தெளிக்க வேண்டும். தோல்களுக்குக் கீழே அட்டைகள் இருந்தால், வாத்துக் கொழுப்பு சுத்தமானது ஒரு தேக்கரண்டி, பாதரசம் குளோரைடு ஒரு தேக்கரண்டி, மூன்று துளி பாதரசம் இவற்றைப் பீங்கான் கலுவத்தில்

போட்டு ஏழு முறைக் கலக்க வேண்டும். பிறகு தேய்த்துக் கொள்ள வேண்டும். செம்புக் கரண்டியையோ அல்லது மரக் கரண்டியையோ ஒருபோதும் உபயோகிக்கக் கூடாது. அதனுல் பாதரசம் கெட்டுப்போகும். செம்போ வெள்ளியோ அதில் படக் கூடாது; அது ஆபத்தை உண்டுபண்ணும்.''

சில சமயங்களில் அவள் நன்ருக யோசித்துவிட்டுச் சொல்வாள் :

'' அஸாப் என்ற சந்நியாசினியை மடத்தில்சென்று காண்பது நல்லது ; அவள் மிகவும் நல்லவள் ; நீ கேட்கிற கேள்விக்கு எனக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை '' என்பாள்.

மருத்துவச்சியாக உதவிபுரிந்து பிரசவங்களைக் கவனிப்பாள் ; குடும்பச் சச்சரவுகளைத் தீர்த்துவைப்பாள் ; நோயுற்ற குழந்தைகளுக்குச் சிகிச்சை செய்வாள். '' கன்னிக் கனவு '' கண்டு, பெண்களின் நல்லதிர்ஷ்டத்தைப்பற்றிக் கூறுவாள் ; குடும்ப விஷயங்களில் புத்திமதி கூறுவாள்.

''எந்தச் சமயத்தில் ஊறுகாய்போடவேண்டும் என்பதை வெள்ளரிக்காயே சொல்லிவிடும். மண் வாசனை நின்றுவிட்டால் உடனே உப்புப் போட்டு வெள்ளரிக்காய்களை ஊறப் போட்டுவிட வேண்டும். நல்ல ' வாஸ் ' தயார் செய்வதற்கு அவற்றை நன்ருகக் கலக்க வேண்டும். இனிப்பானவற்றை 'வாஸ்' ஏற்க மாட்டாது. கிஸ்மிஸ் பழங்கள் சிலவற்றையோ தேக்கரண்டி அளவு சீனியையோ போட வேண்டும். ' வாரீநெட் தயிர் ' செய்வதில் பலவிதம் உண்டு. டான்டிய முறை, ஸ்பானிய முறை, காகாஷிய முறை எனப் பலவிதங்களில் அதைத் தயார் செய்யலாம்.''

முற்றத்துக்குப் போனுலும் சரி, தோட்டத்துக்குப் போனுலும் சரி, அண்டை அயலார் வீட்டுக்குப் போனுலும் சரி, எப்பொழுதும் விடாமல் அவளை நான் தொடர்ந்து திரிந்தேன் ; மணிக்கணக்கில் உட்கார்ந்துகொண்டு அங்கே அவள்

தேநீர் பருகுவாள் ; கதைகள் சொல்லுவாள். நானும் அவளில் ஒரு அங்கமாகிவிட்டேன். சோர்வில்லாதவளும் அன்பு நிறைந்தவளுமான இந்த மூதாட்டியைத் தவிர்த்து வேறு எதையும் யாரையும்பற்றிய நினைப்பு எனக்கு அந்தக் காலத்தில் இருந்தது இல்லை.

சில சமயங்களில் இடையிடையே கொஞ்ச நேரம் என் அன்னை தென்படுவாள் ; கடுகடுப்பும் பெருமையும் அவளிடம் இன்னும் குறையாமல் இருந்தன ; யாவற்றையும் வெறுப்போடும் சலிப்போடும் பார்த்தாள். நெடிது நேரம் தன்னைப்பற்றிய நினைப்பு ஏற்பட இடம் கொடாமல் அவள் எழுந்து போய்விடுவாள்.

ஒரு நாள் என் பாட்டியைப் பார்த்து "நீ ஒரு மந்திரவாதியா ?" என்று நான் கேட்டேன்.

"இப்படி எண்ணும்படியாக உன்னை இப்போது செய்தது எது ?" என்று அவள் சிரித்துக்கொண்டே கேட்டாள். ஆனால் திடுமென அக்கரைவயப்பட்டு "என்னால் மந்திரவாதியாக முடியுமா என்ன ? அதற்கு எவ்வளவோ கற்க வேண்டும். ஆனால், எனக்கோ ஒரு அட்சரம்கூடத் தெரியாது! உன் தாத்தா எவ்வளவு படித்தவர் என்பதை நீயே பார். அறிவுக்குத் தகுதியுள்ளவளாக ஆசீர்வாதம் பெற்ற கன்னி என்னைக் கருதவில்லை" என்பாள்.

பின்னர், தன் வாழ்க்கையில் நடந்த சில விஷயங்களைப் பற்றி என்னிடம் கூறினாள்.

"நான் ஒரு அநாதையாக வளர்ந்தவள் ; கணவன் இன்றி என் தாய் வாழ்ந்தாள் ; அதனால் அவதிப்பட்டு நொண்டியானவள் அவள். வேலைக்காரியாக இருந்த காலத்திலிருந்தே அவளுக்குத் தன் எஜமானரிடம் பயம் அதிகம். ஒரு நாள் இரவு ஜன்னல் வழியாக அவள் வெளியே குதித்துவிட்டாள். அவளுடைய தோள்பட்டையிலும் விலா எலும்பு

களிலும் நன்ருக அடிபட்டுவிட்டது. இதனல் அவளுக்கு முக்கியமான வலது கை சுருங்கிப் போய்விட்டது. இவள் சிறந்த பின்னல் வேலைக்காரி. இவளால் இனிப் பிரயோஜனம் இல்லை என்பது தெரியவந்ததும் அந்தப் பெரிய மனிதர், அவள் எப்படியாவது சமாளித்துக்கொள்ளட்டும் என்று வேலையிலிருந்து நீக்கிவிட்டார். ஆனல் ஒரு கையை வைத்துக் கொண்டு அவளால் பிழைக்கவா முடியும் ? அதனல் அவள் பிச்சைக்காரியாக ஆனுள். அந்தக் காலத்தில் பலாக்கானு ஜனங்கள் பணத்துடனும் வசதியுடனும் இருந்தார்கள். சிறந்த பின்னல் வேலைக்காரர்களாகவும் தைரியமான தச்சர்களாகவும் ஒருவரை ஒருவர் விஞ்சியர்களாகவும் இருந்தார்கள். ஆகை யால் நானும் என் அன்னையும் இலையுதிர்காலத்திலும் குளிர் காலத்திலும் நகரத்துக்குள் சென்று பிச்சை வாங்கி உண்டு வாழ்ந்தோம். தேவதூதன் காப்பிரியல், தன் வாளை ஓங்கி, பனியை விரட்டியோட்டியபிறகு, பூமி முழுதும் வசந்தகாலம் வந்தது. பிறகு எங்களால் எவ்வளவு தூரம் நடக்க முடியுமோ அவ்வளவு தூரம் நடந்து முரோம் போய்ச் சேர்ந்தோம். பிறகு யூரிவெட்சுக்குக் போய், வோல்கா நதி நெடுக நடந்து அமைதியான ஓகாவை அடைந்தோம். கோடை காலத்திலும் வஸந்த காலத்திலும் பூமியில் நடப்பது எவ்வளவு இன்பத் தைத் தருவது தெரியுமா ! தரை மெதுவாகவும் புற்கள் வெல் வெட்டைப் போன்றும் இருக்கும். நாம் இன்புற்று மகிழ்வ தற்காக நிலங்களில் மலர்களைத் தூவி அழகுபடுத்தி இருந் தது கன்னித் தெய்வம். நம் இதயம் களிப்பால் துள்ளி மகிழ எத்தனையோ பெரிய வெளிகள் இருக்கின்றன ! என் அன்னை தம் நீலநிறக் கண்களைப் பாதிமூடிக்கொண்டு பாடத் தொடங்குவாள் ; அவளுடைய மென்மையான இனிய குரல் சொர்க்கலோகம்வரை எட்டும். அவளைச் சுற்றியுள்ள அனைத் தும் அவளுடைய பாடலை விருப்போடு செவிமடுத்துக் கேட்

கும். பிச்சை வாங்கிக்கொண்டே திரிவது ¦அப்போது எவ்வளவு இன்பத்தை நல்கியது தெரியுமா ! எனக்கு வயது பத்து நிரம்பியதும் என்னையும் தன்னுடன் பிச்சை கேட்க அழைத்துச் செல்ல என் தாய் நாணப்பட்டாள். இது அவமானமாகத் தோன்றிய காரணத்தால் பலாக்காணுவிலே தங்கிவிட்டாள். அவள் மட்டும் தனித்து வீடு வீடாகச் சென்று பிச்சை வாங்கி வருவாள். ஞாயிற்றுக்கிழமைகளில் மாதா கோவில் முன் மண்டபத்தில் அமர்ந்து பிச்சை கேட்பாள். இந்த நேரத்தில் எல்லாம் நான் வீட்டிலிருந்து பின்னல் வேலே கற்றுவந்தேன். அப்பாவியான என் அன்னைக்கு உதவிபுரிய எனக்கு அதிக ஆவல் இருந்தும் என்னுல் அதை விரைவில் கற்றுக்கொள்ள முடியவில்லே. போட்ட மாதிரி சரியாகப் பின்ன வராதபடியால், ஜன்னல்கள் வழியாகக் கண்ணீர் வழிந்தோட உட்கார்ந்து இருந்தேன். இரண்டு ஆண்டுகளுக்கு அதிகமாகப் பயின்று பயின்று பின்னல் வேலேயை நான் கற்றுக்கொண்டுவிட்டேன். எனது புகழ் நகர முழுதும் பரவத் தொடங்கியது. சிறப்பான பின்னல்கள் எதுவும் செய்யவேண்டியதிருந்தால் ஜனங்கள் என்னிடம் வந்தார்கள். ‘நல்லது அலுக்கியா’ எனக்கு ஒரு ‘பாப்பின் குருவி போட்டுத்தா’ என்று கேட்டார்கள். இது எனக்கு மகிழ்ச்சியை அளிக்கவில்லே. இந்தப் பெருமை எல்லாம் எனக்கு உரியதன்று ; எனக்குப் பின்னல் வேலே கற்றுத்தந்த என் தாய்க்கு உரியதாகும். ஒரு கையால் அவளால் வேலேசெய்ய முடியாதுபோயிற்று. இருந்தும் அந்தக் கலேயை மற்றவர்களுக்குப் போதிக்க அவள் நன்ருக அறிந்திருந்தாள். நல்ல ஒரு ஆசிரியரைப் பத்துத் தொழிலாளர்களுக்கு சமதையாகச் சொல்லலாம். அம்மா ! இன்று முதல் பிச்சை வாங்குவதை நிறுத்திவிட்டு, என் கைகளால் உழைத்து உழைத்து என்னே

என்னால் இப்போது போஷிக்க முடியும்' என்று பெருமையோடு சொன்னேன். 'உஸ், சும்மாகிட. அந்தப் பணத்தை எல்லாம் உனக்குச் சீதனம் தருவதற்காக வைத்துக்கொள்ள வேண்டாமா ?' என்று என் அன்னை சொன்னாள். சிறிது காலத்துக்குப் பின்னர் உன் தாத்தா வந்து காட்சி அளித்தார். குறிப்பிடத்தக்க ஆண்மகனாயும் இருபத்து இரண்டு வயதினராயும் புர்லாக்களுக்கு மேற்பார்வையாளராயும் இருந்து வந்தார். அவருடைய தாய் என்னை மேலும் கீழும் பார்த்தாள்; பிச்சைக்காரியின் புதல்வியாக இருக்கும் நான் கடமை தவறாத மனைவியாக ஆகக் கூடும் என்பதை அவள் தெரிந்துகொண்டாள்......உம். அவளும் பன்றொட்டி விற்று வாழ்பவள் தான். கெட்ட மனமுடைய பெண்மணி......சரி. இறந்துபோனவர்களைப்பற்றி ஏன் கெடுதலாய்ப் பேசுவானேன் ? நமது உதவியின்றியே ஆண்டவன் யாவற்றையும் பார்த்துக்கொண் டிருக்கிறார்......ஆண்டவன் அதைப் பார்க்கிறார் ; தீயசக்திக்கு அது தேவைப்படுகிறது......"

இப்படிச் சொல்லிவிட்டு வயிறு குலுங்க அவள் சிரித்தாள். அவளுடைய மூக்கு வேடிக்கையாக நடுங்கியது ; அவளுடைய கண்கள் வாஞ்சை ததும்பி வழிய என்னைக் கவனித்தன ; வார்த்தைகளால் வருணிக்கமுடியாத வாஞ்சை அவற்றில் பிரதிபலித்தது.

அமைதியான ஒரு மாலை நேரத்தில் என் தாத்தாவின் அறையில் நானும் என் பாட்டியும் தேநீர் அருந்தியது எனக்கு இன்னும் நினைவு இருக்கிறது. என் தாத்தா உடம்பு சுகமில்லாது இருந்தார். சட்டை எதுவும் போடாமல் பெரிய துண்டைப் போட்டு உடம்பை மூடிக்கொண்டு படுக்கைமீது உட்கார்ந்து இருந்தார். நெற்றியில் அரும்பிய வியர்வைத் துளிகளை அடிக்கடி அந்தத் துண்டால் துடைத்துக்கொண்டார். அவருடைய குரலில் கறகறப்பும் திணறலும் இருந்தன.

அவருடைய பச்சை நிறக் கண்களில் கோளை சாடியிருந்தது; முகம் சிவந்தும் வீங்கியும் இருந்தது. கூர்மையான அவருடைய சிறிய செவிகள் குறிப்பாகச் சிவந்து இருந்தன. தேநீர் கோப்பையை வாங்கிக்கொள்வதற்காக அவர் கையை நீட்டிய போது, பரிதவிக்கத்தக்கவாறு அது நடுங்கியது. முன்னைப் போல் இல்லாமலும் தன் குணத்தைக் காட்டாமலும் அவர் பணிவுடன் இருந்தார்.

"நீ ஏன் எனக்குச் சீனி போட்டுத் தர மாட்டேன் என்கிறுய்?" என்று, செம்மையாக வளர்க்காத குழந்தை குறைசொல்வதுபோல, என் பாட்டியை அவர் குறை கூறினுர்.

"உங்களுக்குச் சீனியைக்காட்டிலும் தேன் நல்லது; அதனுல்தான்" என்று அடக்கமாக ஆனுல் அழுத்தமாக என் பாட்டி பதில் சொன்னுள்.

அதிகமாக முணுமுணுத்து முணகிக்கொண்டே சூடான தேநீர் முழுவதையும் அவர் குடித்துவிட்டார்.

"நான் இறந்துபோகாமல் பார்த்துக்கொள்."

"கவலைப்படாதீர்கள்; பார்த்துக்கொள்கிறேன்."

"அவ்வாறே பார்த்துக்கொள்; இப்போது நான் இறந்து போவேனுயின், நான் வாழ்ந்த சுவடே இல்லாதுபோய் யாவும் வீணுகிவிடும்" என்றுர்.

"பேசாமல் படுத்துக்கொள்ளுங்கள்."

ஒரு நிமிஷம் கண்களை மூடிக்கொண்டு அமைதியாகப் படுத்துக் கிடந்தார். தனது நீலநிற உதடுகளை மட்டும் சப்பிக் கொண்டு கிடந்தார். பிறகு, திடும் என யாரோ தன்னைக் கிள்ளிவிட்டதைப் போன்று துள்ளிக்குதித்து உட்கார்ந்தார்.

"யாக்கோவுக்கும் மைக்கேலுக்கும் விரைவில் கலியாணத்தை முடித்துவிட வேண்டும். மனைவிமார்கள் வந்து நாலைந்து குழந்தை குட்டிகள் பிறந்துவிட்டால் அவர்கள் அடங்கிப்போவார்கள். இல்லையா?" என்று கேட்டார்.

இதன் பின்னர் அந்த நகரிலுள்ள ஒவ்வொரு வாலிபப் பெண்ணின் பெயரையும் என் தாத்தா வரிசையாகச் சொல்லிக்கொண்டே வந்தார். என் பாட்டியோ பதில் எதுவும் சொல்லாமல் கோப்பைக்குப் பின் கோப்பையாகக் குடித்துக் கொண்டே உட்கார்ந்து இருந்தாள். ஏதோ ஒரு பிசகான வதந்தியை நம்பி என்னை வெளியே போகக்கூடாது என்று என் தாத்தா தடுத்துவிட்டார். ஆகவே, ஜன்னல் அருகே அமர்ந்து அந்திவேளைச் சூரியன் மங்குவதையும் அதனுடைய ஒளி வீட்டு ஜன்னல் கண்ணாடிகளில் பாய்ந்து பளபளப்பதையும் நான் பார்த்துக்கொண்டு இருந்தேன்.

தோட்டத்திலே பெர்ச் மரங்களைச் சுற்றி வண்டுகள் ரீங்காரம் செய்துகொண்டிருந்தன. அடுத்து இருந்த முற்றத்தில் கொல்லன் ஒருவன் சம்மட்டியால் அடித்துக்கொண்டு இருந்தான். இன்னும் சிறிது தூரத்தில் கத்தரிக்குச் சாணை பிடிப்பவன் சாணை வைப்பது என் காதில் விழுந்தது. தோட்டத்துக்கு அப்பால் இருந்த பாறையில், புதர்களுக்கு இடையே குழந்தைகள் கூச்சலிட்டு விளையாடிக்கொண்டிருந்தார்கள். அவர்களுடன் சேர்ந்து விளையாட வேண்டும் என்ற விருப்பம் எனக்கு மிகுதியாக இருந்தது. அந்தி மயங்கிய இந்த நேரத்தில் என் இதயம் கவலையால் பொருமிப்போய் இருந்தது.

திடீரென என் தாத்தா புத்தம் புதிய புத்தகம் ஒன்றைத் தன் கையில் எடுத்துக்கொண்டு, அதைத் தன் உள்ளங்கையில் தட்டியவாறே மகிழ்ச்சியோடு என்னைக் கூவி அழைத்தார்:

"ஏ வாலிபப் பயலே! முட்டைக்கோஸ் காதுகள் உள்ளவனே! இங்கே வா! கரிமூஞ்சிப் பயலே! உட்கார். அந்த அடையாளத்தைப் பார்க்கிறாயா? 'ஏ' என்பது ஆப்பிளுக்காக உள்ளது. 'ஏ' என்பது ஆப்பிளைக் குறிக்கிறது. 'பி' என்பது 'பட்டரை'—அதாவது வெண்ணெய்யைக்

குறிக்கிறது. 'சி' என்பது செல்லாரை—அதாவது அறையைக் குறிக்கிறது. இது என்ன சொல்? பார்க்கலாம்" என்றார்.

"பி" என்பது 'பட்டரை'—அதாவது வெண்ணெயைக் குறிக்கிறது.

"சரி, இது எதைக் குறிக்கிறது?"

"'சி' என்பது செல்லாரை—அதாவது அறையைக் குறிக்கிறது."

"தவறு! 'ஏ' ஆப்பிளைக் குறிக்கிறது. கவனித்துப் பார். 'டி' என்பது டின்னரை, அதாவது சாப்பாட்டைக் குறிக்கிறது. 'இ' என்பது 'எவர்' என்பதையும் 'எப்' என்பது பாதர்—அதாவது தந்தை என்பதையும் குறிக்கிறது. சரி, இது என்ன?"

"எவர் என்பதை 'இ' என்ற எழுத்துக் குறிக்கிறது."

"சரி. இது எதைக் குறிக்கிறது?"

"'டி' என்பது டின்னரை—அதாவது சாப்பாட்டைக் குறிக்கிறது."

"ரொம்பச் சரி. இது எதைக் குறிக்கிறது?"

"'ஏ' என்பது ஆப்பிளைக் குறிக்கிறது."

இந்தச் சமயத்தில் என் பாட்டி குறுக்கிட்டு "தந்தையே! அமைதியாக நீங்கள் படுத்திருப்பதுவே நல்லது" என்றாள்.

"வாயைமூடு! என் மனத்திலுள்ள தொல்லைகளை மறப்பதற்காக இவற்றை நான் செய்துகொண்டிருக்கிறேன். அலெக்ஸி! மேலும் தொடர்ந்து படி" என்றார் தாத்தா.

ஈரமாகவும் சூடாகவும் இருந்த தன் கையை என் கழுத்தைச் சுற்றிப் போட்டுக்கொண்டு, எழுத்துக்களை அவர் எனக்குச் சுட்டிக்காட்டினார். மற்றொரு கையால் புத்தகத்தை என் மூக்கு அருகே பிடித்துக்கொண்டார். சாராயம், வியர்வை, வேகவைத்த வெங்காயம் ஆகியவற்றின் வாடை ஒன்றாகச்

சேர்ந்து அவரிடமிருந்து அடித்தபடியால் எனக்கு மூச்சுத் திணறிப்போய்விட்டது. புது விதமாக அவர் உணர்ச்சிவயப் பட்டு என் காது அருகே வந்து இரைந்து "'கே' என்பது கிட்சனை — அதாவது அடுக்களையைக் குறிக்கிறது. 'எல்' என் பது லேடியை—அதாவது சீமாட்டியைக் குறிக்கிறது" என்று சொன்னர்.

இவை தெரிந்த வார்த்தைகள்தான் எனினும் எந்த வகையிலும் ஸ்லாவோனிய எழுத்துக்களுக்கு இவை ஒத்த தாக இல்லை. 'எல்' என்று எழுத்து புழுவைப்போல் இருந் ததே அல்லாமல் சீமாட்டியைக் குறிப்பதாக இருக்கவில்லை. 'எப்' என்ற எழுத்து கூனல் விழுந்த கிரிக்கோரியைக் குறிப்பதாக இருந்ததே அல்லாமல் தந்தையைக் குறிப்பதாக இல்லை. தொறுத்திக்கொண் டிருந்த 'பி' என்ற எழுத்து என்னையும் என் பாட்டியையும் ஒன்றுசேர்த்துக் குறிப்பிடு வதுபோல் இருந்தது. எல்லா எழுத்துக்களிலும் ஏதோ ஒன்று என் தாத்தாவை நினைவுபடுத்துவதாய் இருந்தது. கிரமமாகவும் கிரமம் தவறியும் அரிச்சுவடியைப் புகுத்து வதில் என் தாத்தா மும்முரமாக இருந்தார். தனக்கு இருந்த உற்சாகத்தை எனக்கும் ஏற்படச் செய்ய அவர் ஆசைப்பட் டார். வியர்க்கத் தொடங்கியதால் பலம்கொண்ட மட்டும் நான் கத்தினேன். இது வேடிக்கையாக இருக்கவே அவர் சிரித்துவிட்டார். அந்தச் சிரிப்பு, கூடவே அவருக்கு இருமலை யும் கிளப்பிவிட்டது.

"தாயே! இதை அவன் எப்படிப் படிக்கிறன் என்ப தைப் பார்" என்று சொல்லிப் புத்தகத்தை நெஞ்சோடு சேர்த்துவைத்துப் பிடித்துக்கொண்டார். "பூ! நீ ஒரு ஆஸ்ட்ராகான் கழிசடை! என்ன இப்படி உளறுகிருய்?"

"நீங்கள்தான் உளறுகிறீர்கள்.......?"

என் பாட்டியையும் தாத்தாவையும் பார்ப்பது மனதுக்கு மகிழ்ச்சியை அளித்தது. அவளோ மேஜைமீது தம் கைகளை ஊன்றி, தன் முஷ்டியைக் கன்னங்களில் வைத்துக்கொண்டு, சிரித்தவாறே எங்களைக் கவனித்தாள்.

"தலைதெரிக்கப் பேசியது போதும்போதும்" என்றாள்.

நட்புரிமையோடு என் தாத்தா என் பக்கமாகத் திரும்பி, "காயலாக இருப்பதால்தான் இப்படி நான் இரைய நேருகிறது. நீ ஏன் பிள்ளை இப்படி இரைகிறாய்?" என்று என் தாத்தா விளக்கம் கேட்டார்.

வியர்வை கசிந்த தன் தலையை அசைத்துக்கொண்டு என் பாட்டியைப் பார்த்து "இவனுக்கு ஞாபகசக்தி குறைவு என்று நட்டாலியா சொன்னது பிசகு; இந்தப் பயலுக்குக் குதிரையைப்போல ஞாபகசக்தி இருக்கிறது. மேலும் படியடா அமுங்குமூஞ்சி!" என்றார்.

கடைசியாக, படுக்கையைவிட்டு விளையாட்டாக அவர் என்னைத் தள்ளிவிட்டார்.

"இப்போது இது போதும். புத்தகத்தை வைத்துக் கொண்டு படி; பிழையில்லாமல் அரிச்சுவடி முழுவதையும் நாளை நீ ஒப்பிக்க வேண்டும். அப்படி ஒப்பித்தால் உனக்கு ஐந்து காப்பெக்குகள் தருகிறேன்" என்றார் என் தாத்தா.

புத்தகத்தை வாங்குவதற்காக நான் கையை நீட்டிய போது, என்னைத் தன் அருகே இழுத்துக்கொண்டு, "உன்னைப் புறக்கணித்துவிட்டு, உன் தாய் செல்லக் காரணம் என்ன? குழந்தாய்!" என்று கேட்டார்.

"தந்தையே! இப்படி அவனிடம் பேசுவதற்கு உங்கள் அறிவு குழம்பிவிட்டதா என்ன?" என்றாள் என் பாட்டி.

"அதனால் ஏற்பட்ட புண் என்னை...செய்திருக்காவிட்டால் இப்படி நான் பேசி இருக்க மாட்டேன். இந்தப் பெண்ணும் இப்படித் தவறிவிட்டாளே!" என்றார் அவர்.

பிறகு சுறுசுறுப்பாக என்னை அப்பால் தள்ளிவிட்டு "வெளியே சென்று விளையாடு. தெருவுக்குப் போகாதே. தோட்டத்திலாவது அல்லது முற்றத்திலாவது விளையாடு. கேட்கிறதா ?" என்று சொன்னார்.

தோட்டத்தில் விளையாடுவதையே நான் பெரிதும் விரும்பினேன். சரிவில் நான் ஏறி வருவதைக் கண்டதுமே பாறையில் இருக்கிற சிறுவர்கள் கல்லை எடுத்து என்மீது எறிவார்கள் ; நானும் அதே முறையில் அவர்களுக்குப் பதிலடி கொடுப்பேன்.

என்னைப் பார்த்ததுமே "அதோ வந்துவிட்டான் மூட்டை" என்று சிறுவர்கள் ஆர்ப்பரித்தார்கள். "அதோ போகிறான்" என்று சொல்லி விரைந்து தங்கள் ஆயுதங்களைப் பொறுக்கத் தலைப்பட்டார்கள்.

"மூட்டை" என்பதன் பொருள் எனக்கு விளங்கவில்லை. அவமதிப்பான பெயராக அது எனக்குத் தோன்றவில்லை. ஆயினும் அனேகரை எதிர்த்துத் தைரியமாக நிற்பது ஒருவித மகிழ்ச்சியை அளித்தது. சரியாகக் குறி வைத்து எறிந்த கல், எதிரியைத் துரத்துவதையோ அல்லது அடிபடாமல் புதர்களில் ஒளிந்துகொள்ளச் செய்வதையோ காண்பது மனத்துக்கு உற்சாகத்தை அளித்தது. பகைமையின் காரணமாக இந்தச் சண்டைகள் நிகழவில்லையாதலால், இதனால் மன நோவு ஏற்படவில்லை.

எழுத்துக்களை நான் விரைவில் கற்றுக்கொண்டேன். இதுதான் ஒரு வேளை என்மீது என் தாத்தாவுக்கு அதிக பிரியம் ஏற்படச் செய்து அடிக்கடி என்னை அடிக்காமல் அவரைச் செய்ததுபோலும். ஆனால் என்னைப் பொருத்தவரை முன்னைக் காட்டிலும் எனக்கு அதிக அடிகள் விழவேண்டும் என நான் கருதினேன். எனக்கு வயதும் துணிச்சலும் அதிகமாகிவிட்ட காரணத்தால், என் தாத்தா இட்ட கட்டளைகளை

யும் அவருடைய வார்த்தைகளையும் மதிக்காமல் அலட்சியமாக நான் நடக்கத் தொடங்கினேன். இத்தகைய சமயங்களில் என்னை அவர் கோபித்துக்கொண்டார்; முஷ்டியை உயர்த்தி என்னைப் பயமுறுத்தினர்.

காரணமில்லாமலே அடிக்கடி அவர் அடித்து வருகிறார் என்பதாக எனக்குத் தோன்றியது. ஒரு நாள் இதை நான் அவரிடமே சொல்லிவிட்டேன்.

இதைக் கேட்டதும் மெதுவாக என் தவடையில் அவர் தட்டிக்கொடுத்தார். என்னை முறைத்துப் பார்த்து "என் ன்னன...?" என்று தயங்கி உதட்டைச் சூள்கொட்டிக் கொண்டு "நீ ஒரு சின்னப் போக்கிரியடா! உனக்குக் கிடைத்த உதைகள் போதுமானதா அல்லவா என்பதை நிர்ணயிக்க நீ யார்? என்னைத் தவிர வேறு யாருக்கும் அதை நிர்ணயிக்க அதிகாரம் இல்லை. பூனைப் பயலே!" என்றார்.

நான் திரும்பியபோது தோளில் கையைப் போட்டுப் பிடித்துக்கொண்டு மீண்டும் என்னைக் கவனித்தார்.

"நீ ஒரு சரியான முட்டாள்; இல்லாவிட்டால் பேதை" என்று சொன்னர்.

"தெரியாது" என்று நான் பதில் சொன்னேன்.

"உனக்குத் தெரியாதா? நிசமாகத் தெரியவே தெரியாதா? நல்லது; சொல்லுகிறேன்; கேள். நீ ஒரு பேதைதான். பேதையாய் இருப்பவன் முட்டாளைவிடச் சிறந்தவன். கன்றுக்குட்டிபோல நீயும் ஒரு முட்டாள். தெரிகிறதா? வெளியே சென்று விளையாடு" என்றார்.

'சால்டர்' எழுத்துக்களை ஒவ்வொரு எழுத்தாக நான் படிக்கத் தொடங்கினேன். தேநீருக்குப் பிறகு மாலையில் வழக்கமாக நாங்கள் படிப்பது உண்டு. ஒவ்வொரு முறையும் பாடல்கள் முழுவதையும் நான் படித்துவிடுவேன்.

'பி' வெண்ணெய்யைக் குறிக்கும். 'எல்' சீமாட்டியைக் குறிக்கும். 'ஈ' எப்பொழுது என்பதையும் 'எஸ்' சீனியையும் 'டி' சாப்பாட்டையும் 'பிளஸெட்' ஆசீர்வாதத்தையும் குறிக்கும். "அவன் ஆசீர்வாதம் பெற்றவன்." ஆள்க்காட்டி விரலை வைத்து ஒவ்வொரு எழுத்தாக நான் கூட்டிப் படித்தேன். இப்படிப் படிப்பது சலிப்புத் தட்டிய காரணத்தால், பல்வகையான கேள்விகள் என் உள்ளத்தில் கிளைக்கத் தொடங்கின.

"யாக்கோவ் அம்மான்! ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் என்றால் யார்?" என்று கேட்டேன்.

"உன் தலையில் நான் ஒரு குட்டு வைக்கிறேன். ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் யார் என்பது அதன் பின்னர் தெரியும்" என்று என் தாத்தா எரிச்சலோடு பதில் சொன்னார். உடனே, தான் கோபப்பட்டுக்கொண்டது சரியல்ல என்பதை உணர்ந்து கொண்டார். பழக்கத்தினால் ஏற்பட்ட ஒரு வழக்கமாக அவருக்கு ஆகிவிட்டது. மரியாதையாகவும் அவர் இப்படி அதட்டுவது உண்டு.

நான் தவறாக நினைக்கவில்லை. சிறிது நேரம் சென்ற பின் என்னைப் பற்றிய சிந்தனையின்றி என் தாத்தா முணுமுணுக்கலானார்.

"ஆடவும் பாடவும் சந்தர்ப்பம் வாய்க்கும்போது அரசர் டேவிட்டைப் போல இவன் சரியாக நடந்துகொள்கிறான். வேலை செய்யச் சந்தர்ப்பம் வந்தால் அப்சாலோமைக் காட்டிலும் மோசமானவனாய் இருக்கிறான். பூ! பாடகனும் வேடிக்கைக்காரனும் விளையாட்டுக்காரனும்! பசும்புல் தரைமீது உற்சாகமாக ஆடுகிறான். இந்த ஆட்டம் எவ்வளவு காலத்துக்குத்தான் இருக்குமோ பார்ப்போம். நெடு நாளைக்கு ஓடாது" என்று முணுமுணுத்தார்.

படிப்பதை நிறுத்திவிட்டு அவர் சொல்வதை நான் செவிமடுத்தேன். முகத்தைச் சுழித்துக்கொண்டு கவலையோடு இருப்பதைக் கவனித்தேன். கண்களை ஒடுக்கிக்கொண்டு தூரத்தில் இருப்பது எதையோ அவர் கவனித்தார். வழக்கமான கடுகடுப்புக் குறைந்து அன்புதோய்ந்த கவலை அவருடைய முகத்தில் பிரதிபலித்தது. அவருடைய தங்கநிறப் புருவங்கள் நெளிந்தன ; தன் விரல்களால் மேஜைமீது அவர் தாளம் போட்டபோது, கறைபடிந்த அவருடைய நகங்கள் பளபளத்தன.

" தாத்தா !"

" என்னடா ?"

" எனக்கு ஒரு கதை சொல்லுங்கள்."

"சோம்பேறிப் பயலே! உனது பாடத்தை நீ தொடர்ந்து படியடா !" என்று முணுமுணுத்துவிட்டு, அப்பொழுதுதான் தூங்கி விழித்தவர்போலத் தன் கண்களை அவர் தேய்த்துக்கொண்டார். "சால்டரைக் காட்டிலும் வேதாளக் கதைகளைக் கேட்பதில் உனக்குப் பிரியம் அதிகம் இருக்கிறதாக்கும் " என்றார்.

சால்டரை அவர் மனப்பாடமே செய்து வைத்து இருந்தார் ; படுக்கைக்குச் செல்லுமுன் ஒவ்வொரு நாளும் மாலையில் அதில் ஒரு பகுதியைப் படிப்பதாகச் சபதம் எடுத்துக்கொண்டு இருந்தார். மாதாகோயில் பிரசங்கமேடையில் பாதிரியார் முணுமுணுப்பதைப் போல முணுமுணுத்தவாறே அதை அவர் படிப்பார். இப்படிப்பட்டவருக்கே சால்டரைக்காட்டிலும் வேதாளக் கதைகளைக் கேட்பதில் பிரியம் அதிகம் இருக்கிறதோ என நான் சந்தேகித்தேன்.

ஆகவே, கதை சொல்லும்படியாக அவரை நான் வற்புறுத்தினேன். கடைசியாக இசைந்து அவர் கதை சொல்லத் தொடங்கினார்.

“ சரி சரி. சால்டரை நீ வாழ்க்கை முழுதுமே படிக்கலாம். நீதி பரிபாலனம் செய்யும் ஆண்டவனிடம் விரைவில் நான் போய்ச் சேர வேண்டியவன்” என்றார்.

பிறகு சாய்மானக் குறிச்சியின் ஒரு ஓரத்தில் உட்கார்ந்து கொண்டு, தலையை நிமிர்த்தி முகட்டையே கவனித்தார். முன்பு நடந்தவற்றை நினைந்து அதில் லயித்துப்போய் இருந்தார். வியாபாரி ஜாயேவ் கடையைக் கொள்ளையடிப்பதற்காகக் கள்ளர் கூட்டம் ஒன்று பலாக்கானுவுக்கு வந்ததாம். என் தாத்தாவுடைய தகப்பனார் ஜனங்களுக்கு அபாயத்தை அறிவிக்கும் பொருட்டு மணியை அடிக்க ஓடினாராம். அதற்குள் கள்ளர்கள் விரைந்து கத்தியதால் அவரை வெட்டி வீழ்த்திவிட்டார்களாம்; வெட்டுண்ட அவருடைய சடலத்தை மணிக்கூண்டுக்குள் தூக்கி எறிந்துவிட்டார்களாம்.

“ அந்தச் சமயம் நான் சிறு பையனாக இருந்தபடியால், நடந்தவற்றை என்னால் பார்க்க முடியவில்லை. அதைப் பற்றிய நினைவும் எனக்கு இல்லாது போயிற்று. பிரஞ்சுக்காரர்கள் வந்த காலமான 1812 எனக்கு நினைவு இருக்கிறது. அந்தச் சமயம் எனக்கு வயது பன்னிரண்டு. அப்போது முப்பது கைதிகளை அவர்கள் பலாக்கானுவுக்கு அடித்து ஓட்டிக் கொண்டு வந்தார்கள். அவர்கள் எல்லோரும் எலும்பும் தோலுமாய் இருந்தார்கள்; கிடைத்தவற்றை ஆடையாக அணிந்து இருந்தார்கள். பிச்சைக்காரர்களைவிட அவர்களின் நிலை மோசமாய் இருந்தது. எலும்பும் தோலுமாயும் கை கால்கள் விரைத்துப் போயும், நிற்க முடியாமல் அவர்கள் தள்ளாடிக்கொண்டு நின்றார்கள். அவர்களைக் கொன்றுவிடக் குடியானவர்கள் விரும்பினார்கள். ஆனால் அவர்களை ஓட்டி வந்த காவல்காரன் அதற்கு இடம் கொடுக்கவில்லை. பட்டாளத்திலிருந்து படைவீரர்கள் வந்து, குடியானவர்களைக் குடிசைக்குள் விரட்டி ஓட்டினார்கள். பின்னர் அவர்களுக்கு

இடையே ஒருவருக்கு ஒருவர் பழக்கம் ஏற்பட்டுவிட்டது. பிரஞ்சுக்காரர்களோ சாதுரியமானவர்களாய்ச் சுறுசுறுப் புள்ளவர்களாய் வேடிக்கையாகப் பேரம் பேசுபவர்களாய் உற்சாகம் பிறந்துவிட்டால் பாடும் இயல்புபடைத்தவர்களாய் இருந்தார்கள். அவர்களைப் பார்ப்பதற்காக நிழினியிலிருந்து மூன்று குதிரை வண்டியில் - ட்ரையோகாவில் - ஜனங்கள் கூட்டம் கூட்டமாக வந்து போனார்கள். வந்தவர்களில் சிலர் பிரஞ்சுக்காரர்களைப் பார்த்துச் சபித்து, அடிக்க விரும்புபவர் கள்போலத் தங்கள் முஷ்டியை ஆட்டிக்காட்டினார்கள். சிலர் அடிக்கவும் போய்விட்டார்கள். வேறு சிலர், அவர்களின் சொந்த மொழியிலேயே அவர்களுடன் அன்புகனியப் பேசி, பணங்களும் துணிகளும் கொடுத்து அவர்களை உற்சாகப் படுத்தினார்கள். வயதான கனவான் ஒருவர் தன் முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டு அழத் தொடங்கினார். 'பேய்க் குணம் படைத்த நெப்போலியன் பிரஞ்சு மக்களுக்குச் செய் திருப்பதைப் பாருங்கள்!' என்று சொன்னார். அன்புகனிந்த கனவானை ருஷ்யர் ஒருவர் அந்நிய நாட்டார்மீது இந்த முறையில் பரிவு காட்டுவதை நீயே நினைத்துப் பார்........"

ஒரு கணம் அவர் மௌனமாக இருந்தார். கண்களை மூடிக்கொண்டு தனது கேசத்தைத் தடவிவிட்டுக்கொண் டார். சென்ற கால நிகழ்ச்சிகளைக் கஷ்டத்துடன் நினைவுபடுத் திக்கொண்டு கவனமாக மீண்டும் தொடர்ந்து சொல்லத் தொடங்கினார் :

"குளிர் காலம் ; வாடைக் காற்று கோரமாகத் தாக்கி, குடிசைகள்மீது மோதிற்று ; பிரஞ்சுக்காரர்கள் ஜன்னல் அருகே ஓடிவந்து என் தாயைக் கூப்பிடுவார்கள். என் தாய் பன்ரொட்டி செய்து விற்று வந்தாள். ஜன்னலைத் தட்டித் துள்ளிக் குதித்து பன்கள் வேண்டும் என்று அவர்கள் கூச்சல் போடுவார்கள். குடிசைக்குள் நுழைய என் தாய் அவர்களை

அனுமதிக்க மாட்டாள் ; ஜன்னல் வழியாகவே பன்ரொட்டி களை அவர்களிடம் கொடுப்பாள். அடுப்பிலிருந்து எடுத்துச் சூடாக ஆவி கிளம்புகிறபோதே ஆவலோடு வாங்கி, தங்கள் சட்டைகளுக்குள் பதுக்கிக்கொள்வார்கள் அவர்கள்; பனியால் விறைத்துப்போயிருக்கும் தங்கள் உடலைஒட்டி, இதயத்துக்கு நேரே வைத்துக்கொள்வார்கள். இதை அவர்களால் எப்படித் தான் பொறுத்துக்கொள்ள முடிந்ததோ ! குளிர் தாங்க முடியால் அவர்களில் பெரும்பாலோர் மடிந்துபோனார்கள். உஷ்ண தேசத்திலிருந்து வந்திருந்த அவர்கள் இத்தகைய கொடுங் குளிருக்குப் பழக்கப்பட்டவர்கள் இல்லை. எங்கள் வீட்டுக் கொல்லையில் இருந்த குளிக்கும் அறையில் அவர் களில் இருவர் வசித்தார்கள். அதிகாரி ஒருவரும் மிரான் என்ற அவருடைய உதவியாளனும் வசித்தார்கள். அதிகாரி உயரமாயும் மெலிந்தும் எலும்பும் தோலுமாயும் காணப்பட் டார். முழங்கால்வரை தொங்குகிற பெண் உடுப்பு ஒன்றை அணிந்துகொண்டு அவர் அங்கும் இங்கும் அலைந்தார். அமைதியானவர்தான் எனினும், அவர் சரியான குடிகாரனய் இருந்தார். ஒரு பக்கத்தில் பீர் வடித்து என் தாய் விற்று வந் தாள். அந்தப் பீர் முழுவதையும் அவரே வாங்கிக் குடித்து விட்டு, பாட்டுக்கள் பாடத் தொடங்குவார். நமது மொழியி லும் கொஞ்சம் கற்றுக்கொண்டு உளறத் தொடங்கினர் ; 'உங்கள் நாடு வெண்மையாய் இல்லை; கறுப்பாயும் கரடுமுரடா யும் இருக்கிறது ' என்று உளறினர். மிகவும் சிதைந்த சொற் களால் அவர் பேசினர். எனினும் அது எளிதில் புரிந்து கொள்ளத்தக்கதாய் இருந்தது. நமது வட பகுதிகள் முழு தும் கரடுமுரடானவை என்று அவர் கூறியது முற்றும் உண்மை. போகப் போக, வோல்கா நதி தீரத்தில் நிலம் கத கதப்பாயும் மென்மையாயும் இருக்கும். காஸ்பியன் கடல் போய்விட்டால் பனி என்பதே முற்றும் இருக்காது. வேதத்

திலும் ஆக்ட்டுகளிலும் கீதப் புத்தகத்திலும் குளிரைப் பற்றியோ பனியைப்பற்றியோ பிரஸ்தாவம் எதுவும் இருப் பதை நீ காண முடியாது. இது நிஜம். இந்தப் பகுதிகளில் தான் ஏசுநாதர் வாழ்ந்து இருப்பார் என்று தோன்றுகிறது.... கீதப் புத்தகத்தை விரைவில் படித்து முடித்துவிட்டு, வேதங் களை நீயும் நானும் சேர்ந்து படிக்கத் தொடங்குவோம்.''

மீண்டும் அவர் மௌனமாகி, சொக்கிவிழுந்து தூங்கி ஞர். அவருடைய மனம் எதிலாவது லயித்து இருந்தால், கண்களை இடுக்கிக்கொண்டு ஜன்னல் வழியாக ஊன்றிப் பார்ப்பார். அவருடைய உருவம் சிறுத்துவிட்டது போலத் தோன்றும்.

"தொடர்ந்து சொல்லுங்கள்'' என்று அமைதியாக அவரை நான் தூண்டினேன்.

" சரி '' என்று சொல்லி, அவர் சொல்ல ஆரம்பித்தார்; " எதைப்பற்றி நான் பேசிக்கொண்டிருந்தேன்? பிரஞ்சுக் காரர்களைப் பற்றியா? நல்லது. அவர்களும் நம்மைப்போலவே மனிதர்கள்தான்; பாபிகளான நம்மைக்காட்டிலும் தீயவர்கள் அன்று. "மாதாம்! மாதாம்!'' என்று கூச்சலிட்டு என் தாயை அவர்கள் துரத்திவருவார்கள். 'மாதாம்' என்றால் இவர்கள் மொழியால் 'என் பெண்ணே' என்பது பொருளாம். ஐந்து பூட்கள்* கொண்ட மாவு மூட்டை ஒன்றை, ஒரு அவுன்ஸ் என்பதாக நினைத்து லாவகமாகச் சுமந்துகொண்டு, 'அந்தப் பெண்' வீட்டை நாடி வந்துகொண்டிருப்பாள். காளைபோலப் பலசாலியாக அவள் இருந்தாள். இதனால் இருபது வயது எனக்கு ஆகும்வரை என்னைத் துன்புறுத்தி வேலைகள் செய்யச் சொல்லவில்லை. அந்தச் சமயத்தில் நான் நோஞ்சனுகக்கூட இருக்கவில்லை. அட்ஜுடண்டு மிரானுக்குக் குதிரைகள் என்

*பூட்: ஒரு முகத்தல் அளவை.

ருல் பிரியம் அதிகம். வீடு வீடாகச் சென்று குதிரைகளைத் தேய்க்கத் தனக்கு அனுமதி தருமாறு சாடை செய்து கேட்பார்; எதிரியான இவன் குதிரைகளைக் கெடுத்துவிடுவானோ என்று ஜனங்கள் முதலில் பயந்தார்கள். சிறிது காலத்துக்குப் பின் குடியானவர்கள் தாங்களே சென்று, "ஹேற மிரான்! இங்கே வாருங்கள்!" என்று கூப்பிடத் தலைப்பட்டார்கள்; அவர் சிரித்துவிட்டு, காளையைப்போல் கழுத்தை நீட்டிக் கொண்டு ஓடி வருவார். அவருடைய ரோமம் காரட்டுக்கிழங்கைப்போல் சிவப்பாய் இருந்தது. அவருக்குப் பெரிய மூக்கும் தடித்த உதடுகளும் இருந்தன. சிறந்த லாயக்காரன் என்று அவரைச் சொல்லலாம். குதிரைகளுக்கு ஏற்படுகிற பல்வகையான நோய்களை அவர் குணப்படுத்தத் தெரிந்து கொண்டு இருந்தார். பின்னர் நிழினியில் லாயக்காரனாக இருந்து குதிரைகளைக் கவனித்துக்கொண் டிருந்தார். ஆனால் தலைக்கனம் அதிகமாகிவிடவே, நெருப்பு அணைப்பவர்கள் அவரை அடித்துக் கொன்றுவிட்டார்கள். அதிகாரியோ வர வர நோஞ்சலாகிக்கொண்டு வந்தார்; வஸந்த காலத்தில் அடியார் நிக்கோலாய் தினத்தன்று அமைதியாக இறந்துபோனார். குளிக்கும் அறை ஜன்னல் அருகே சாய்ந்து கனவு கண்டு கொண்டிருந்த அவர், தனது தலை ஜன்னலுக்கு வெளியே தொங்க, காலமாகிவிட்டார். அவர் இறந்துபோனதற்காக நான் வருந்தினேன்; இரண்டொரு துளி கண்ணீரும் சிந்தினேன். நல்ல ஆத்மா அவர். என் காதுகளைப் பற்றிக்கொண்டு மெதுவாகத் தனது தாய்மொழியில் எதையாவது அவர் சொல்வது வழக்கம். அவர் சொல்லும் வார்த்தைகளின் பொருள் எனக்கு விளங்கவில்லையாயினும், கேட்பதற்கு அது இனிமையாக இருந்தது. இந்த உலகத்தில் மனிதாபிமானம் அதிகமாக இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். ஒரு முறை தனது தாய்மொழியைக் கற்றுத்தருவதற்கு அவர்

தொடங்கினர். ஆனல் கற்றுத்தரக் கூடாது என்று என் தாயார் தடுத்துவிட்டாள். என்னை ஒரு பாதிரியிடம் அழைத்துப்போய் அதற்காக அடி வாங்கித் தந்தாள். இந்த அதிகாரியைப்பற்றி அவரிடம் தெரிவித்து வருத்தப்பட்டாள். சகோதரா! அந்தக் காலத்தில் ஜனங்கள் கட்டுப்பாடுடன் இருந்தார்கள். நாம் செய்த காரியத்துக்காக நாம் வருந்த வேண்டியது இல்லை. மற்றவர்கள் கஷ்டத்தை ஏற்றுக்கொள் வார்கள். அதை நம்மால் மறந்துபோக முடியாது. நான் பொறுத்துக்கொண்ட கஷ்டங்களுக்கு என்னையே ஒரு உதாரணமாகக் கொள்ளலாம்.''

இருட்டாகிக்கொண்டு வந்தது. இருட்டில் என் தாத்தா வின் உருவம் விநோதமாக விரிவடைவதுபோல் தோன்றியது. பூனைக் கண்களைப்போல அவருடைய கண்கள் பிரகாசித்தன. தான் கூறிவந்த கதையை அமைதியாகவும் எச்சரிக்கையாக வும் விருப்போடும் சொல்லி வந்தாரெனினும், தன்னைப் பற்றிப் பேச நேர்ந்த சந்தர்ப்பங்களில் உணர்ச்சிவயப்பட்டுத் தற்பெருமையோடும் அகந்தையோடும் அவர் பேசினர். தன் னைப்பற்றி அவர் மிகையாகப் பேசுவதையும், அடிக்கடி அவர் உபதேசங்கள் செய்வதையும் நான் கேட்க விரும்பவில்லை.

''அதை நினைவில் இருத்திக்கொள்; இதை மறந்து போகாதே!'' என்று அடிக்கடி சொல்லி எச்சரிப்பார்.

எத்தனையோ விஷயங்களைப்பற்றி அவர் எனக்குச் சொல்லி இருக்கிறர். அவற்றை நான் மறந்து இருப்பின் எனக்கு எவ்வளவோ மகிழ்ச்சியாய் இருந்திருக்கும். போதனைகளை அகற்றிவிட்டுப் பார்த்தால்கூட, நெருப்புத் துண்டம்போல என் நெஞ்சில் ஒட்டிக்கொண்டு அவை இன் னும் வேதனை தருகின்றன. உண்மையான நிகழ்ச்சிகளை மட்டும் சொல்வாரேயன்றி, வேதாளக் கதைகளை அவர் ஒரு போதும் சொல்ல மாட்டார். கேள்விகள் கேட்டால் அவர்

சள்ளைப்படுகிறார் என்பதை அறிந்துகொண்ட நான் அவரைக் கேள்விகள் கேட்டு நச்சரிப்பது என்று முடிவு செய்தேன்.

" யார் சிறந்தவர்கள் ? ருஷ்யர்களா ? அல்லது பிரஞ்சுக் காரர்களா ?"

" யாரால் சொல்ல முடியும் ? சொந்த நாட்டில் வாழ்ந்த பிரஞ்சுக்காரர்களை நான் ஒருபோதும் பார்த்தது இல்லை " என்று அவர் எரிச்சலோடு பதில் சொன்னார். " தன் சொந்த வளைக்குள் வாழ நேரும் எலிகூட எப்பொழுதும் சௌகரிய மாகத்தான் வாழும்."

" ருஷ்யர்கள் அனைவரும் சௌகரியமாகவா வாழ் கிறார்கள் ?"

" சிலர் சௌகரியமாய் வாழ்கிறார்கள் ; சிலர் சௌகரிய மாய் வாழவில்லை. அடிமைகளாக இருந்த காலத்தில், வார்க்கப் பட்ட இரும்புபோல, அவர்கள் சௌகரியமாய் இருந்தார்கள். கால்களைப் பிணிந்திருந்த விலங்குகள் அகன்றதும், சாப்பாட் டுக்கு இல்லாமல் இப்போது அவர்கள் தவிக்கிறார்கள். கன வான்களாய் இருப்பவர்கள் கடினசித்த முடையவர்களாய் இருப்பார்கள் என்பது உண்மைதான் ; ஆயினும் குடியானவர் களைக் காட்டிலும் அவர்கள் அறிவாளிகளாய் விளங்கினார்கள். எல்லோரையுமே இப்படிச் சொல்லிவிட முடியாது.கனவானாய் இருப்பவர் ஒரு முறை நல்லவராக நடந்துகொண்டுவிட்டா ரானால், பிறகு எப்பொழுதும் நல்லவராகவே நடந்துகொள் வார். எதைத் திணித்தாலும் ஏற்றுக்கொள்ளும் கோணிப் பைகள்போல, அவர்களில் சிலர் வடிகட்டின முட்டாள்களாக வும் இருக்கிறார்கள். நம்மில் அனேகர் வெற்றுக் குடுக்கை களாய் இருக்கிறார்கள்.பார்த்தால் முதலில் அவர்கள் மனிதன் போன்றே இருப்பார்கள். நெருங்கிப் பார்த்தால், சாரத்தை எல்லாம் பூச்சிகளுக்கு இரையாகக் கொடுத்துவிட்டு வெறும் சக்கை மட்டும்தான் எஞ்சி இருப்பது தெரியவரும். நாம்

கொஞ்சம் கற்றுக்கொள்வது அவசியமாகும்; நமது அறிவைக் கூர்மைப்படுத்திக்கொள்ள வேண்டும்; ஆனல் எதாவது எஞ்சியிருந்தால்தானே கூர்மைப்படுத்த முடியும்? ஒன்றுமே இல்லாதபோது என் செய்வது ?''

" ருஷ்யர்கள் பலசாலிகளா ?''

" சிலர் பலசாலிகளாய் இருக்கிருர்கள். ஆயினும் பலத்துக்கு மதிப்புக் கிடையாது ; திறமைக்குத்தான் மதிப்பு உண்டு. ஒரு குதிரைக்கு முன்னே மனிதனுடைய பலம் மட்டும் பிரயோஜனப்படாது; மனிதனைக் காட்டிலும் குதிரை அதிக பலமுடையது.''

" எதற்காகப் பிரஞ்சுக்காரர்கள் நம்முடன் சண்டையிடுகிருர்கள் ?''

" சரி சரி ; யுத்தங்களைப்பற்றிக் கேட்கிருயா ? அவை ஸார் சர்க்கரவர்த்தி கவனித்துக்கொள்ள வேண்டிய காரியம். எதற்காக யுத்தங்கள் நடக்கின்றன என்பதை நம்மைப் போன்ற அப்பாவிகளால் தெரிந்துகொள்ள முடியாது.''

"போனப்பார்ட்டு என்பவர் யார்?'' என்று நான் கேட்டபோது, என் தாத்தா சொல்லிய பதிலை நான் ஒரு போதும் மறக்க முடியாது.

" அவர் ஒரு தைரியசாலி ; பிரபுக்கள் அதிகாரிகள் போன்ற வேற்றுமைகள் இல்லாமல் யாவரும் சமதையாக வாழும் பொருட்டு, வாழவைக்க விரும்பி, இந்த உலகம் முழுவதையும் தன் ஆதிக்கத்தின்கீழ் கொண்டுவர அவர் விரும்பினர். பெயர்கள் வெவ்வேருக இருப்பினும், உரிமைகள் எல்லோருக்கும் ஒன்று போலவே இருக்கும். எல்லோரும் ஒரு சமயத்தையே சார்ந்து நிற்பார்கள். உண்மையில் இது அறிவுக்கு ஒவ்வாத ஒரு போக்காகும். நண்டுகள் மட்டும்தான் ஒன்றுபோல இருக்கக் கூடும். மீன்களை எடுத்துப்பார். அவற்றில் எத்தனையோ வகைகள் இருக்

கின்றன. பூனை-மீன்களோடு சாலமன் மீன்கள் நட்புரிமை யோடு பழக முடியாது ; வரால் மீனும் கெண்டை மீனும் அமைப்பில் ஒன்றுபோல இல்லை. நம் நாட்டிலும் போனப் பார்ட்டுகள் இருந்திருக்கிறார்கள்; ஸ்டீபன் ராஷினையும் எமிலி யான் புக்காசாவையும் அப்படிப்பட்டவர்கள் என்று சொல்ல லாம். இவர்களைப்பற்றி எல்லாம் பின்னர் ஒரு முறை நான் உனக்குச் சொல்கிறேன்...''

சில சமயங்களில் கண்களை அகல விழித்து நீண்ட நேரம் என்னையே அவர் உற்றுப் பார்ப்பார். இதற்கு முன்னர் என்னைப் பார்த்து இராதவர் போலப் பார்த்துக்கொண்டே இருப்பார். இது எனக்கு மிகவும் அறுவருப்பாக இருந்தது.

என் தாயைப் பற்றியோ அல்லது தந்தையைப் பற்றியோ என்னிடம் அவர் ஒருபோதும் பேசியதே கிடையாது.

சில சமயங்களில் என் பாட்டியும் வந்து எங்கள் உரை யாடலில் கலந்துகொள்வாள். ஒன்றும் பேசாமல் ஒரு மூலை யில் அமர்ந்து அமைதியாகக் கேட்டுக்கொண்டு இருப்பாள் ; பிறகு திடீரென அன்புகனிந்த குரலில் ஒரு கேள்வியைக் கேட்பாள்.

" தந்தையே ! கன்னி மாதாவை வழிபடுவதற்கு நீங் களும் நானும் முரோமுக்குச் சென்றோமே, அது தங்களுக்கு நினைவு இருக்கிறதா ? அந்தக் காலம் எவ்வளவோ நேர்த்தி யான காலம் ! அது எந்த வருஷத்தில் ?'' என்று கேட்பாள்.

" எனக்குச் சரியாக நினைவு இல்லை. கொள்ளை நோய் வருவதற்கு முன்பு என்று நினைக்கிறேன் ; அந்த வருஷம் தான் ஒலோன்சான்களைக் காட்டில் வலைபோட்டு அரித்துப் பார்த்தார்கள்.''

" ஆமாம். அவர்களுக்காக எவ்வளவோ நாம் பயந்தோமே...''

" ஊம்.''

ஒலோன்சான்கள் என்பவர்கள் யார் என்றும் எதற்காக அவர்கள் காட்டில் ஒளிந்துகொண்டு இருந்தார்கள் என்றும் நான் கேட்டேன். இதற்கு என் தாத்தா வெறுப்போடு பதில் சொன்னார் :

" தொழிற்சாலைகளில் வேலை செய்யாமல் ஓடிப்போய் ஒளிந்துகொண்ட அடிமை-விவசாயிகள் இருக்கிறார்களே அவர்களுக்குத்தான் ஒலோன்சான்கள் என்று பெயர்."

" அவர்களை எப்படி அவர்கள் பிடித்தார்கள் ?"

" நீ எப்படி நினைக்கிறாய் ? விளையாடும்போது சில பையன்கள் ஓடுவார்கள். சில பையன்கள் அவர்களைத் துரத்திப் பிடிப்பார்கள் ; இல்லையா ? ஒரு முறை அவர்களைப் பிடித்துவிட்டால் அவர்களுக்குச் சவுக்காலும் தடியாலும் உதை கிடைக்கும். நாசிகளில் துவாரம் போட்டுவிடுவதும் உண்டு. இவர்கள் தண்டிக்கப்பட்டவர்கள் என்பதற்கு அறிகுறியாக இவர்களின் நெற்றிகளிலே அடையாளங்கள் இட்டு விடுவதும் உண்டு."

" எதற்காக ?"

" யாருக்குத் தெரியும்? அது ஒருவிதமான தீயகாரியம். ஓடியவர்களா அல்லது ஓடியவர்களைத் துரத்திப் பிடித்தவர்களா ? இவர்களில் தவறு செய்தவர் யார் என்பதைச் சொல்வது கடினம்."

" தந்தையே ! அந்தப் பெரு நெருப்புக்குப் பின்னர் என்ன நடந்தது என்பது உங்களுக்கு நினைவு இருக்கிறதா ?" என்று இடையே ஒரு கேள்வியைப் போட்டு வைப்பாள் என் பாட்டி.

சரியாகச் சொல் என்று கண்டிப்பவர்போல என் தாத்தா அவளைப் பார்த்து " எந்தப் பெரு நெருப்பைப்பற்றிக் கேட்கிறாய் ?" என்று கேட்டார்.

இத்தகைய பழைய சம்பவங்களை நினைவுகூர்ந்துகொள்வதில் மூழ்கிப்போகும் அவர்கள், நான் ஒருவன் இருக்கிறேன் என்ற எண்ணமே இல்லாமல் பேசிக்கொண்டு இருப்பார்கள். அமைதியாகவும் கச்சிதமான கால அளவோடும் அவர்கள் பேசுவார்கள். சில சமயங்களில் அவர்கள் பேசிக்கொள்வது பாட்டுப் பாடுவதைப் போன்று இனிமையாக இருக்கும். நெருப்புகளை, நோய்களை, மனிதர்களை வதைப்பதை, அபாயத்தால் ஏற்பட்ட சாவுகளை, தந்திரமான கையாடல்களை, மத வெறியர்களை, நினைவிலிருந்து துடைத்துவிட முடியாத உயர் வகுப்புக் கனவான்களைப் பற்றிய பாட்டுப்போல அந்தப் பாட்டுத் தோன்றும்.

"நாம் எவ்வளவோ காலம் வாழ்ந்துவிட்டோம்! எவ்வளவோ பார்த்துவிட்டோம்!" என்று என் தாத்தா அலுத்துக்கொள்வார்.

"நாம் வாழ்ந்தது ஒரு கெட்ட வாழ்வா? வார்வாரா பிறந்த வருஷம் வசந்த காலம் எவ்வளவு நேர்த்தியாய் இருந்தது பார்த்தீர்களா?" என்று சொன்னாள் என் பாட்டி.

"அது 48-ல் நடந்தது. ஹங்கேரிமீது படை எடுப்பு நடந்த வருஷம் அது. வார்வாராவுக்குப் பெயர் சூட்டிய மறு தினம், பெயர் வைத்த திக்கானை அவர்கள் இழுத்துப் போய் விட்டார்கள்."

"பின்னர் அவர் திரும்பவே இல்லை" என்று பெருமூச்சுவிட்டாள் என் பாட்டி.

"அவர் திரும்பி வரவில்லை; படகுமீது தண்ணீர் நிற்காததைப் போன்று, ஆண்டவனுடைய கருணையும் அன்று முதல் நம்மைவிட்டு நழுவிவிட்டது. ஆஹா! வார்வாரா!"

"தந்தையே! போதும்."

"ஏன் போதும் என்கிறாய்?" என்று என் தாத்தா அவளைக் கடிந்து கோபித்துக்கொண்டார். "எவ்வளவுதான்

நீ கவனித்து வளர்த்தபோதிலும் நம் குழந்தைகள் கெட்டவர்களாய்ப்போய்விட்டார்கள்; நாம் பட்ட பாடு எல்லாம் வீணுகி விட்டது. விழலுக்கு இறைத்த நீர் போல் ஆகிவிட்டது. நற்கலத்தில் பெய்வதாக நினைத்துத்தான் நீயும் நானும் காரியங்களைச் செய்து வந்தோம். சாரத்தைவிட்டுச் சக்கை மட்டும் நம் கைகளில் எஞ்சும்படியாக ஆண்டவன் பார்த்துக்கொண்டு விட்டார்.

இதைச் சொல்லிவிட்டு, சூடுண்டவர்போல அவர் வாய் விட்டுக் கதறினர். தன் குழந்தைகளைப் புறக்கணித்துப் பேசியவாறு அறையில் அங்கும் இங்கும் ஓடிக்கொண்டிருந்தார் ; எலும்பும் தோலுமாக இருந்த தனது சிறிய முஷ்டியை என் பாட்டி பக்கம் திரும்பி, அடிக்க விரும்புபவர்போல அசைத்துக் காட்டினர்.

" ஏ சதிகாரி ! ஏமாந்து போகிறவளே ! நாய்கள்போல வாழும்படியாக அவர்கள் எல்லோரையும் கெடுத்தவள் நீதான்" என்று உறுமினர்.

மனக்கசப்புத் தீவிரமாகிவிட்ட காரணத்தால் விக்கிரகங்கள் இருக்கும் மூலைக்கு அவர் இழுத்துச் செல்லப்பட்டார். அங்கே சென்று தனது மென்மையான மார்பில் அடித்துக் கொண்டு அவர் கண்ணீர் உகுத்துக் கதறினர் :

" ஆண்டவனே ! மற்றவர்களைக் காட்டிலும் நான் தீயவனு ? அப்படி ஏன் நான் தீயவன் ஆனேன் ?" என்று கதறினர்.

வருத்தத்தையும் ஆத்திரத்தையும் கண்ணீர்த் துளிகளால் நனைந்த கண்கள் வெளிப்படுத்தின. அவருடைய உடம்பு முழுதும் வெலவெலத்து ஆடியது.

என் பாட்டி இருட்டில் அமைதியாக உட்கார்ந்து, சிலுவைச் சின்னம் வரைந்துகொண்டாள் ; கடைசியாக எழுந்து என் தாத்தாவை அணுகி " எது எது செய்ய வேண்டும் என்

பதை ஆண்டவன்தான் அறிவார் ; நம் குழந்தைகளைக் காட்டிலும் சிறந்த குழந்தைகள் அதிகம் பேர் இல்லை. எங்கு பார்த்தாலும், தந்தையே! ஒரு மாதிரியாகச் சண்டையும் சச்சரவும் குமுறலுமாகவே இருக்கிறது. தாங்கள் இழைந்த பாபங்களை எல்லாம் சகல தாய் தந்தையர்களும் தங்கள் தங்கள் கண்ணீரை உகுத்துத்தான் கழுவிக்கொள்ள வேண்டியது இருக்கிறது. தாங்கள் மட்டும் இதற்கு விதிவிலக்கு அல்ல" என்று சொன்னாள் என் பாட்டி.

சில சமயங்களில் அவள் கூறும் வார்த்தைகளால் அமைதி அடைந்து, களைப்போடு சென்று சலிப்புடன் படுக்கையில் படுத்துக்கொள்வார் என் தாத்தா. நானும் என் பாட்டியும் மெதுவாக எங்கள் அறைக்குப் போய்விடுவோம்.

ஆனால் ஒருமுறை இதமான வார்த்தைகள் கூறுவதற்காக அவரிடம் என் பாட்டி சொன்றபோது, எழுந்து ஒரு சுற்றுச் சுற்றி, அவள் முகத்தில் பலமான ஒரு குத்துவிட்டார் என் தாத்தா. தள்ளாடி விழுந்த என் பாட்டி, வாயில் தன் கையை வைத்துப் பொத்திக்கொண்டாள் ; உணர்வு வந்த பின் அமைதியும் சாந்தமும் நிலவிய குரலில் "நீர் ஒரு முட்டாள் !" என்று சொல்லி, என் தாத்தாவின் காலடியில் ரத்தத்தைத் துப்பினாள்.

அவரே தன் கைகளைத் தலை அளவு உயர்த்தி, "இங்கே இருந்து போய்விடு ; இல்லாது போனால் உன்னை நான் கொன்றுபோடுவேன்" என்று இரு முறை உறுமினார்.

"முட்டாள்" என்று சொல்லிக்கொண்டே என் பாட்டி எழுந்து கதவு அருகே போனாள். அவரோ அவளைத் தூக்கிக்கொண்டு அவள் பின்னே போனார். என் பாட்டியோ சாவதானமாக உள்ளே நுழைந்து கதவை என் தாத்தாவின் முகத்தில் சாத்திவிட்டாள்.

" கிழட்டுச் சிறுக்கி !" என்று என் தாத்தா சீறினர். நெருப்புக் கங்குபோல உள்ளம் குமுறி, ஒரு கம்பியை எடுத்துத் தன் நகங்களை அவர் கீறிவிட்டுக்கொண்டார்.

அடுப்பை அடுத்துக்கட்டப்பட்டிருந்த ஒருமேடைமீது, என் கண்களை நம்பமுடியாமல் உயிர்போய்விட்டவன்போல நான் உட்கார்ந்து இருந்தேன். நான் காண என் பாட்டியை அவர் அடித்தது இதுதான் முதல் தடவை ; அதைப் பார்த்த நான் வெறுப்பினுல் அதிர்ச்சி அடைந்து போனேன். ஒரு புதிய குணம் அவரிடம் இருக்கிறது என்பதை இந்தச் செயல் வெளிப்படுத்திற்று. எவ்வித முகாந்திரமும் இல்லாமல் அவளை அவர் அடித்தது, அதிக வேதனையை உண்டுபண்ணி என் மனத்தை அழுத்தியது. கதவில் இருந்த கம்பியைப் பிடித்துக்கொண்டு அவர் நின்றார். தான் சாம்பலோடு சாம் பலாகிவிட்டவர் போன்று, சாம்பல் நிறமாகவும் குறுகிக் கொண்டும் அவர் வந்தார். தீடிரென அவர் அறையின் மத்தி யில் போய் மண்டியிட்டு அமர்ந்து கைகளால் தன்னைத் தாங் கிக்கொண்டு குனிந்தார் ; பிறகு நிமிர்ந்து உட்கார்ந்து " ஆண்டவனே ! ஆண்டவனே !" என்று மார்பில் அடித்துக் கொண்டு கதறினர்.

மேடைமீது கிடந்த வெப்பமான ஓடுகளை, பனிக்கட்டி யைத் தொடுவதுபோல வெறுப்புடன் ஒதுக்கிவைத்துவிட்டு நான் ஓடிப் போய்விட்டேன். மாடியில் என் பாட்டி வாயைக் கழுவிக் கொப்பளித்துக்கொண்டு உலவி உலவி வந்தாள்.

" காயம்பட்டுவிட்டதா ?" என்று நான் கேட்டேன்.

மூலைக்குச் சென்று அங்கே இருந்த குப்பைத்தொட்டி யில் தன் வாயில் இருந்த தண்ணீரை அவள் துப்பினுள். " எல்லாம் சரியாகிவிட்டது ; பற்கள் ஒன்றும் விழவில்லை. உதட்டில் மட்டும்தான் காயம்" என்று அமைதியாக அவள் பதில் சொன்னுள்.

" எதற்காக உன்னை அவர் அடித்தார் ?"

" நிதானம் தவறிப்போய் இப்படி அடித்துவிட்டார் " என்று ஜன்னலுக்கு வெளியே பார்த்துக்கொண்டே அவள் பதில் சொன்னாள். வயதாகிப்போன அவருக்குக் கஷ்டங்களைப் பொறுத்துக்கொள்வது அதிக சிரமமாய் இருக்கிறது. ......இதை மறந்துவிட்டு நீ சென்று படுத்துக்கொள் " என்று சொன்னாள்.

வேறு எதையோபற்றி நான் மேலும் வினவினேன். வழக்கத்துக்கு மாறாகக் கடுமையான தொனியில் " கட்டுப் படாத உன்னைப்போன்ற ஒரு பையனும் இருப்பானா ? நான் சொல்வது உன் காதில் விழவில்லையா ? போய்ப் படுத்துக் கொள் " என்று சொன்னாள்.

ஜன்னல் அருகே அமர்ந்து உதட்டை அவள் உறிஞ்சிக் கொண்டாள் : அடிக்கடி கைக்குட்டையில் துப்பிக்கொண் டாள் ; என் உடைகளைக் களைந்துகொண்டே அவளை நான் கவனித்தேன். அவள் தலைக்கு மேலே இருந்த இருள்படர்ந்த வானத்தில், நட்சத்திரங்கள் அங்கு ஒன்றும் இங்கு ஒன்று மாகத் தெரிந்தன. புறத்தே யாவும் ஒளிமயமாயும் அகத்தே யாவும் இருள்மயமாயும் இருந்தன.

நான் படுக்கையில் படுத்துக்கொண்டதும் அவள் வந்து மெதுவாக என் நெற்றியைத் தடவிக்கொடுத்தாள். " நீ அமைதியாகத் தூங்கு. நான் அவரிடம் போகிறேன்........ ஏ புருவே கிருவே! என்னைப்பற்றி எதுவும் நீ கவலைப்பட்டுக் கொள்ளாதே. எல்லாம் என் தவறுதான்......தூங்கு போ " என்று சொன்னாள்.

என்னை முத்தமிட்டுவிட்டு அவள் போய்விட்டாள். நானோ கவலையால் நெஞ்சடைத்துப்போய்க் கிடந்தேன். கதகதப்பாயும் மென்மையாயும் இருந்த படுக்கையிலிருந்து குதித்து எழுந்து ஜன்னல் அருகே போனேன். தாங்க முடி

யாத வேதனையால் உள்ளம் நைந்துபோய், வெறுமையாகக் கிடந்த வீதியை வெறிக்க வெறிக்கப் பார்த்துக்கொண்டு நின்றேன்.

## 6

மீண்டும் வாழ்க்கை கஷ்டமாகத் தொடங்கியது. ஒரு நாள் மாலை தேநீருக்குப் பிறகு, நானும் என் தாத்தாவும் கிதப் புத்தகம் படித்துக்கொண் டிருந்தோம். என் பாட்டி பாத்திரங்களைக் கழுவிக்கொண்டிருந்தாள். இந்தச் சமயத்தில் மாமா யாக்கோவ் அறைக்குள் வேகமாக நுழைந்தார். தேய்ந்துபோன துடைப்பத்தைப்போல அவர் சீர்குலைந்து இருந்தார். உபசார வார்த்தைகள் எதுவுமே சொல்லாமல் தொப்பியை ஒரு மூலையில் எறிந்துவிட்டு, முரட்டுத்தனமாகச் சைகைகள் காட்டிக்கொண்டு அவர் பேசத் தொடங்கினர்:

" அப்பா! மைக்கேல் சங்கடத்தில் மாட்டிக்கொண்டு விட்டார். வீட்டிலே சாப்பிட்டுச் சரியாகக் குடித்துவிட்டு, பைத்தியக்காரன்போல வெளியே போனர். பாத்திரங்களை உடைத்துவிட்டு, வாடிக்கைக்காரருக்கு உரிய கம்பளி உடுப்பைக் கிழித்துவிட்டார். ஜன்னலை உடைத்துவிட்டு என்னையும் கிரிக்கோரியையும் திட்டுகிருர்; இங்கே வந்து உம்முடனும் சண்டைபோடப் போகிருராம். 'அப்பாவின் தாடி முழுவதையும் பிய்த்து எறியப் போகிறேன் பார்' என்று ஊளையிடுகிருர். 'அவரை நான் கொல்லப் போகிறேன்' என்று கூச்சல் போடுகிருர். நீங்கள் ஜாக்கிரதையாக இருப்பது நல்லது......"

மேஜைமீது சாய்ந்து, மெதுவாகத் தன் கால்களைத் தாத்தா இழுத்து வைத்துக்கொண்டார். முகம் எல்லாம்

சுருங்கி அவருடைய மூக்கு அருகே வந்துவிட்டது. பார்ப்பதற்கு அது ஒரு சிறு படகுபோலத் தோன்றியது.

" தாயே! இதைக் கேட்டாயா? இதைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்? பெற்ற தகப்பனையே கொல்ல வருகிறானும்! நீ பெற்ற பிள்ளையின் லட்சணத்தைப் பார்! நல்லது, பையன்களே! காலம் வந்துவிட்டது! காலம் வந்துவிட்டது!" என்று சிடுசிடுத்தார்.

தோளை அகலமாக்கிக்கொண்டு, தரைமீது நடந்து கொடுத்தார். பிறகு கதவு அருகே சென்று, அதைச் சாத்திக் கனமான தாழ்ப்பாளைப் போட்டார்.

" நீங்கள் இருவரும் வார்வாராவின் சீதனத்தைப் பங்கிட்டுக்கொள்வதில் முனைந்து இருக்கிறீர்கள் என்பதை நான் அறிவேன்" என்று என் அம்மான் யாக்கோவைப் பார்த்து என் தாத்தா சொன்னார். "உங்களுக்குக் கிடைக்கப்போவது இதுதான்" என்று சொல்லி என் அம்மானின் மூக்கில் என் தாத்தா இடித்தார்.

"ஏன் அப்பா! என்மீது இப்படிச் சீறி விழுகிறீர்கள்?" என்று சொல்லியவாறே என் அம்மான் பின்னடைந்துகொண்டார். " நீங்கள் மட்டும் என்னவாம்? நீங்கள்கூடத்தான் அதை விரும்புகிறீர்கள் என்பதை நான் அறிவேன்" என்று வருத்தத்தோடு சொன்னார்.

எதுவுமே சொல்லாமல் விரைவாகக் கோப்பைகளை எடுத்து என் பாட்டி அலமாறியில் அடுக்கிவைத்தாள்.

" நான் உங்களைக் காப்பாற்ற வந்திருக்கிறேன்" என்றார் என் அம்மான்.

" ஆஹா!" என்று சொல்லி என் தாத்தா குத்தலாகச் சிரித்தார். " நல்ல காரியம் மகனே! நன்றி! தாயே! இந்த நரிப்பயலுக்கு எதையாவது—கம்புஅல்லது இரும்பு—கொடு. யாக்கோவ் வாசிலியேவிச்! கதவை உடைத்துக்கொண்டு

உன் சகோதரன் உள்ளே நுழைந்ததும் இதை அவனிடம் கொடுத்து என் தலையில் அடிக்கச் சொல்'' என்றார்.

சட்டைப் பைகளுக்குள் தன் கைகளைப் போட்டுக் கொண்டு என் அம்மான் ஒரு பக்கமாக ஒதுங்கிக்கொண்டார்.

"நான் சொல்வதை நம்பாவிட்டால் போங்களேன்'' என்று சொன்னார் என் அம்மான்.

"உன்னை நம்புவதா?'' என்று தன் காலால் பூமியை மிதித்தவாறே என் தாத்தா கேட்டார். "ஒரு பூனையை நம்புவேன், எலியை நம்புவேன், ஒரு கங்காருவைக்கூட நம்புவேன்; ஆனால் உன்னை மட்டும் என்னால் நம்ப முடியாது. குடிக்க மதுவைக் கொடுத்து அவனைத் தூண்டிவிட்டவன் நீதான். இது எனக்குத் தெரியும். அவனை நன்றாக அடி. உன் இஷ்டம்போல் அவனை அடித்தாலும் அடி அல்லது என்னை அடித்தாலும் அடி'' என்று சொன்னார்.

என் பக்கமாகத் திரும்பி மெதுவாக "மாடிக்கு ஓடி ஜன்னல் அருகே அமர்ந்து அம்மான் வருகிறாரா என்று பார்த்துக்கொண்டிரு. வருவது தெரிந்தால் எங்களிடம் வந்து விவரத்தைத் தெரிவி'' என்று சொன்னாள் என் பாட்டி.

மாடிக்கு ஓடி ஜன்னல் அருகே சென்று நான் அமர்ந்து கொண்டேன். கோபமடைந்துள்ள அம்மான் வந்து சேர்ந்தால் என்ன செய்வாரோ என்ற பயம் சிறிது இருந்தபோதிலும், பொறுப்பான காரியம் ஒன்றை என்னை நம்பி என்னிடம் ஒப்படைத்தது குறித்து, பெருமையால் நான் பூரித்துப் போனேன். விசாலமாய் இருந்தது எனினும், வீதி அதிகத் தூசு படிந்திருந்தது. அதன்மீது வண்டித் தடங்கள் வளைந்து வளைந்து தெரிந்தன. இடப்புறமாக அது வெகுதூரம் சென்று, பாறையைக் கடந்து ஒஷ்ட்ரோஸ்நாயா சதுக்கம் வரை சென்றது. அங்கே பழைய சிறை ஒன்றின் சாம்பல் நிறக் கட்டிடம், களிமண் தரைமீது தனது நான்கு கோபுரங்

களுடன் உறுதியாக நின்றுகொண்டிருந்தது. இந்தக் கட்டடத்தைப் பார்க்கும்போது அழகும் அழுத்தமும் கவலையும் ஒருங்கே மனத்தில் தோன்றின. வலப்புறத்தில் எங்கள் வீட்டை அடுத்து மூன்று வீடுகள் இருந்தன. அதன் பின்னர் அந்தத் தெரு சென்னயா சதுக்கம் வரை நீண்டு சென்றது. அதன் எதிரே கைதிகளுக்கான மஞ்சள் கூடங்கள் இருந்தன. கோபுரத்தின்மீது நெருப்பு எரிந்துகொண்டிருந்தது. அதன் உச்சியில் சங்கிலியால் பிணைக்கப்பட்ட நாய்போன்று, காவல்காரன் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்தான். சதுக்கத்தில் பள்ளங்களும் குழிகளும் இருந்தன. ஒரு குழியில் பச்சைச் செடி படர்ந்திருந்தது. வலப்புறத்தில் துக்கோவ் குளம் இருந்தது. இந்த இடத்தில் இருந்த பனிக்கட்டிப் பள்ளம் ஒன்றில்தான் என் அப்பாவை என் அம்மான்மார்கள் தூக்கிப் போட்டுவிட்டார்கள் என்று ஒரு முறை என் பாட்டி என்னிடம் சொன்னாள். நான் இருந்த ஜன்னலுக்கு நேரே சிறு வீதி ஒன்று இருந்தது. அதில் வரிசையாகச் சிறிய வீடுகள் இருந்தன. அதன் கடைக்கோடியில் மூன்று முனிவர் மாதாகோயில் இருந்தது. பாரியான கட்டிடமாக அது அமைந்திருந்தது. ஜன்னல் வழியாக எட்டிப்பார்த்தால் வீட்டின் கூரைகள், பச்சை அலைகள் மோதும் பழத்தோட்டம்மீது குப்புறக் கவிழ்க்கப்பட்ட படகுகள்போல் இருந்தன.

நாங்கள் இருந்த வீதியில் வீடுகள் தூசு படிந்து இருந்தன. குளிர்காலத்தில் நீடித்து வீசும் கொடிய காற்றாலும் இலையுதிர் காலத்தில் கொட்டுகிற அளவற்ற மழையாலும், மங்கிப்போய், மாதாகோவில் முன் மண்டபத்தில் திரண்டு நிற்கும் பிச்சைக்காரர்களின் கூட்டம்போல ஒன்று சேர்ந்து அந்த வீடுகள் இருந்தன. எதையோ எதிர்பார்த்துக் காத்து இருக்கும் என்னைப்போல அந்த வீடுகளும் ஜன்னல்களை வெளியே

நீட்டியவாறு, சிரத்தையோடு பார்த்துக்கொண்டு நின்றன. கரப்பான் பூச்சிகள் அடுப்பின்மீது சிந்தனையுடன் ஏறுவதைப் போன்று, சில ஜனங்கள் சாவதானமாக வீதியில் நடந்து கொண் டிருந்தார்கள். வெறுப்பூட்டும் உஷ்ணம் ஜன்னல் வழியாகப் பரவிவந்தது. வசந்த காலத்து வெங்காய வாடை, காரட் வாடையையும் வெறுக்கத்தகுந்த பைரோக் வாடையும் கலந்து அடித்து மூக்கைத் துளைத்தது. இன்றுகூட இத் தகைய வாடைகளை என்னால் பொறுக்க முடிவது இல்லை.

அந்தக் காட்சி நூதனமாக என் நெஞ்சை உறுத்தியது. அதை என்னால் சகித்துக்கொண்டு இருக்க முடியவில்லை. இரும்பைக் காய்ச்சி என் நெஞ்சில் ஊற்றுவதுபோலவும் அது என் மார்பையும் விலா எலும்புகளையும் நெருக்குவது போலவும் நீரில் குமிழிபோல நான் மறைந்துவிடுவதுபோல வும், எனக்குத் தோன்றியது. சவ அடக்கப் பெட்டிபோல் இருந்த அந்தச் சின்ன அறைக்குள் என்னால் இருக்க முடியவில்லை.

திடீரென என் அம்மான் மைக்கேல் வருவதை நான் பார்த்துவிட்டேன். குறுக்கு வீதி முனையிலிருந்த ஒரு சாம்பல் நிற வீட்டிலிருந்து அவர் புறப்பட்டுவந்தார். தொப் பியைக் கீழ் நோக்கி இழுத்துவிட்டிருந்தபடியால், காதுகள் நீட்டிக்கொண்டு வெளியே தெரிந்தன. கட்டையான பழுப்பு நிறக் கோட்டையும் தூசு படிந்த முழங்கால் - பூட்ஸையும் அவர் அணிந்து இருந்தார். கால்சிராயில் இருந்த பையில் ஒரு கையைப் போட்டுக்கொண்டும் மற்றொரு கையால் தன் தாடியைப் பிடித்துக்கொண்டும் இருந்தார். அவர் முகம் எனக்குத் தெரியவில்லை. வீதியின் குறுக்கே பாய்ந்து தனது கரிய ரோமம் நிறைந்த கரங்களை என் தாத்தாவின் வீட்டுக் குள் திணிக்க விரும்புவர்போல அவர் நின்றுகொண்டு இருந்தார். அவர் வந்துவிட்டார் என்பதை இறங்கிப்போய்

அவர்களிடம் தெரிவிக்க நான் பிரியப்பட்டேனுயினும், ஜன்னலைவிட்டு அப்பால் நகர எனக்கு மனம் வரவில்லை. தூசுபடிந்த தனது சாம்பல்நிறப் பூட்ஸைக் கண்டு பயப்படு பவர்போல, பதுங்கிப் பதுங்கிக் கவனமாக அவர் குறுக்கு வீதியில் வந்தார். கூடத்தின் கதவை அவர் திறந்தபோது கீல் தகடுகள் கிறீச்சிட்ட ஒலியும் கண்ணுடிகளின் சலசலப்பும் என் காதில் விழுந்தன.

கீழே ஓடி என் தாத்தா இருந்த அறையின் கதவை நான் தட்டினேன்.

கதவைத் திறக்காமலே "யார் அது?" என்று என் தாத்தா கடுகடுப்பாகக் கேட்டார். "நீயா? சரி சரி. கூடத் துக்குள் போய்விட்டான் என்கிருயா? சரி. எங்கேயிருந்து வந்தாயோ அங்கேயே திரும்பிப் போய்விடு."

"எனக்குப் பயமாய் இருக்கிறது..."

"வேறு வழி யில்லை."

நான் போய்விட்டேன். இருண்டு வந்தது. தூசு அதிகமாகக் கிளம்பி வீதியை இருட்டாக்கியது. எண்ணெ யில் எரியும் மஞ்சள்நிற விளக்குகள் ஜன்னல்களில் தெரிந்தன. நேர்த்தியான இனிமையுடன் கூடிய கவலை தோய்ந்த இசை வெள்ளம் நரம்பு வாத்தியத்திலிருந்து கிளம்பி, வீதியைக் கடந்து ஒரு வீட்டிலிருந்து வந்தது. கூடத்திலிருந்து யாரோ பாடிக்கொண்டு இருந்தார்கள். கதவு திறக்கும்போதெல்லாம் அதுப்பால் நைந்த குரல் ஒன்று என் காதில் வந்து விழுந்தது. ஒற்றைக் கண் பிச்சைக்காரன் நிகிடுஷ்காவின் குரல் இது என்பதை நான் தெரிந்துகொண்டேன். தாடியுள்ள இந்தக் கிழவனுக்கு ஒரு கண் முற்றும் மறைந்து இருந்தது. வலது கண்ணோ சூடான நெருப்பைக் கங்கை நிகர்த்துச் சிவப்பாய் இருந்தது. கதவை

யாரும் சாத்துவார்களாயின், கோடரியால் வெட்டுண்டது போல, பாட்டு, தடைப்பட்டு நின்றுபோகும்.

இந்தப் பிச்சைக்காரனைப் பார்த்து என் பாட்டி பொருமைப்பட்டாள்; அவன் பாடுவது அவள் காதில் விழுந்துவிட்டால் போதும். "அற்புதமான அனேக பாடல்களைப் பாடுகிற இவன் எவ்வளவு பெரிய அதிர்ஷ்டசாலி" என்று பெருமூச்செறிந்து சொல்வாள். சில சமயங்களில் முற்றத்துக்கே அவனைக் கூப்பிட்டுவிடுவாள். அவன் வந்து முன் கூடத்தில் பிரம்பில் சாய்ந்தவாறு உட்கார்ந்துகொண்டு, பாட்டுக்கள் பாடுவான்; கவிதைகளை ஒப்பிப்பான். அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு இடைமறித்து என் பாட்டி சிற்சில கேள்விகளைக் கேட்பாள்:

"புனித கன்னி ரியாசானில் வசித்து இருக்கிறாள் என்று நீ கருதுகிறாயா?"

"அவள் எங்கும் இருந்திருக்கிறாள்; சகல மாகாணங்களிலும் வசித்து இருக்கிறாள்" என்று உறுதியாக அவன் பதில் கூறுவான்.

தூக்கத்தின் சோர்வு வீதி நெடுகிலும் கண்களுக்கும் புலனாகாதபடி மெல்ல எட்டிப்பார்த்தது, எனக்கும் தூக்கம் வந்து என் கண்களைச் சுழற்றியது. என் பாட்டியோ அல்லது தாத்தாவோ வந்திருந்தால் எப்படி இருந்திருக்கும்! என் தந்தை எப்படிப்பட்டவராய் இருந்திருக்கக் கூடும்! என் தாத்தாவுக்கும் அம்மான்மார்களுக்கும் அவரைப் பிடிக்கவில்லை; ஆனால் என் பாட்டியும் கிரிக்கோரியும் தாதி யெவ்ஜீனியாவும் அவரைப் புகழ்ந்து உரைப்பானேன்? என் தாய் எங்கே யிருக்கிறாள்?"

வரவர என் அன்னையைப் பற்றிய நினைப்பே எனக்கு அதிகமாகி வந்தது. என் பாட்டி கூறும் கதைகளிலும் கர்ண பரம்பரைக் கதைகளிலும் வரும் வீரப் பெண்மணிபோல

அவள் எனக்குத் தோன்றினாள். தன் குடும்பத்தாருடன் சேர்ந்து வாழ என் தாய் பிரியப்படவில்லை என்பதால், எனது மதிப்பில் என் தாய் உயர்ந்து போனாள். வழிப்பறிக் கொள்ளைக் கூட்டத்தாருடன் சேர்ந்து ஒரு சாவடியில் அவள் வசிப்பது போன்றும், பணக்காரர்களைக் கொள்ளையிட்டு, அதை ஏழை மக்களிடையே திருடர்கள் பங்கிட்டுக் கொடுப்பது போன்றும் நான் கற்பனை செய்துகொண்டேன்; அல்லது காட்டிலுள்ள குகையில் வாழ்ந்துகொண்டு, அன்பு நெஞ்சம்படைத்த அந்தத் திருடர்களுக்குச் சமைத்துப் போட்டு, அவர்கள் திருடிவந்த தங்கத்தைப் பாதுகாத்துக் கொண்டிருக்கிறாளோ என்னவோ; அல்லது புனித கன்னி தன்னைத் தொடர்ந்து வர, "திருடர்-இளவரசி" எங்காலிச் சீவாவைப்போல, சுற்றியலைந்து பூமியிலுள்ள பொக்கிஷங்களைக் கணக்கிட்டுக்கொண்டு இருக்கிறாளோ என்னவோ; "திருடர் இளவரசிக்குச்" சொன்னதேபோல, புனித கன்னி கீழ்வருமாறு என் அன்னைக்கு உரைத்திருக்கக் கூடும்.

போராசைப்பட்டவளே! இது உனக்கு உரியது அன்று. பூமியிலுள்ள தங்கத்தையும் வெள்ளியையும் தோண்டி எடுக்க உனக்கு அதிகாரம் கிடையாது.

அதிக ஆசையுடையவளே! பூமியின் அடியின் இருக்கும் பொக்கிஷத்தில் உனது அவமானத்தை மறைத்துக்கொள்ள உனக்கு உரிமை கிடையாது.

"திருடர் - இளவரசி" கூறின பதிலையே என் அன்னையும் அவளுக்குக் கூறி இருப்பாள்:

வீரமற்ற கன்னியே! என்னை மன்னித்துவிடு; பாவம் செறிந்த என் ஆத்மாவிடம் பரிவு காட்டு;

நான் கொள்ளை யடிப்பது எனக்காக அன்று;

அன்புகனிந்த என் புதல்வனுக்காகத்தான் நான் கொள்ளை அடிக்கிறேன்.

என் பாட்டியைப்போல இரக்க நெஞ்சு படைத்த அந்தப் புனித கன்னி, என் அன்னையை மன்னித்துவிட்டுச் சொன்னாள் :

"ஏ குறும்புக்காரி வாரியூஷ்கா! திருத்த முடியாத தத்தாரிப் பெண்ணே!

போகத்தான் வேண்டுமாயின், உனக்கு இஷ்டமான வழியிலேயே நீ போ. செல்லவேண்டிய வழியைத் தேர்ந்து எடுத்துக்கொள் ; நாள் கவலை தோய்ந்ததாகட்டும்.

ருஷ்ய நாட்டில் வாழும் ஜனங்கள்மீது மட்டும் உன் கையை வையாதே ;

காட்டு வழியில் இருக்கும் மொர்டோவிய நாட்டிலோ அல்லது கால்மிக் ஜாதியார் வாழும் பசும்புல் வெளியிலோ கைவரிசையைக் காட்டு.

இத்தகைய கட்டுக்கதைகள் கனவுபோல் என் நினைவுக்குத் திரும்ப வருகின்றன. இந்த நினைவில் மூழ்கி இருந்த நான் கீழே யிருந்த முற்றத்திலிருந்தும் கூடத்திலிருந்தும் கூக்குரலும் சலசலப்பும் வருவதைக் கேட்டுத் துணுக்குற்றேன். ஆகவே ஜன்னல் வழியாக நான் எட்டிப் பார்த்தபோது, என் தாத்தாவும் அம்மான் யாக்கோவும் கண்ணாடிக் கடை வைத்திருக்கும் வேடிக்கை மனிதன் மெல்யானும் என் அம்மான் மைக்கேலைப் பிடித்து வாயிலுக்கு அப்பால் தள்ளுவதைக் கண்டேன். திரும்புவதற்கு அவர் திமிரிப் பார்த்தார் ; ஆனால் அவர்களோ காலால் உதைத்தும் கைகள்மீதும் முதுகிலும் தோள் பட்டைகளிலும் அடித்தும் துன்புறுத்தினார்கள். ஆகவே அவர் கடைசியாக,

தெருவின் புழுதிக்குள் ஓடி ஒளிந்துகொண்டார். வாயிலைச் சாத்தி, தாள் போட்டுப் பூட்டிவிட்டார்கள். கிழிந்துபோன அவருடைய தொப்பி வேலியில் தொங்கிக்கொண்டு இருந்தது. யாவும் அமைதியாகிவிட்டன.

சிறிது நேரம் படுத்துக் கிடந்துவிட்டு, அடியால் நைந்து காயமுற்று இருந்த என் அம்மான், எழுந்து உட்கார்ந்து பெரிய கூழாங்கல் ஒன்றை எடுத்து, கேட்டுக் கதவின்மீது வீசினார். மரத்தொட்டியின் அடியில் விழுவதுபோல அது வந்து தொப்பென்று விழுந்தது. கறுப்பு நிற ஜனங்கள் கண்ணாடிக் கடையைவிட்டு வெளியே ஊர்ந்து வந்து, இரைச்சலிட்டுக் கையை ஆட்டினார்கள். வீட்டு ஜன்னல்கள் வழியாகத் தலைகள் தெரிந்தன. மீண்டும் தெருவில் கூக்குரலும் சிரிப்பும் உண்டாயின. அரக்கர்கள் கதைகள்போல இது கவர்ச்சிகரமாய் இருப்பினும், பயங்கரமாயும் மனதுக்கு ஒவ்வாததாயும் இருந்தது.

திடும் எனச் சந்தடி குறைந்தது ; எல்லோரும் போய் விட்டார்கள் ; மீண்டும் ஒரே அமைதி.

கதவு அருகே கிடந்த ஒரு மரக் கிளைமீது அமர்ந்து, மூச்சுவிட முடியாமலும் அசைவற்றுக் கூனிக் குறுகியும் என் பாட்டி உட்கார்ந்து இருந்தாள். நான் அவள் எதிரே போய் நின்று நனைந்து போயிருந்த அவளுடைய மென்மையான, அன்புகனிந்த, கன்னங்களைத் தடவிக் கொடுத்தேன். நான் எதிரே நிற்கிறேன் என்ற நினைப்பே இல்லாமல், மனம் கசந்துபோய் எதையோ முணுமுணுத்தவாறு அவள் உட்கார்ந்து இருந்தாள்.

" ஆண்டவனே ! நானும் என் குழந்தைகளும் பட்ட அவதிகள் போதாதா ? எங்களுக்கு நல்லறிவு ஏற்படும்படி செய்யக் கூடாதா ? கடவுளே! உதவி செய்து எங்களை......" என்று சொன்னாள்.

பொலிவாயாத் தெருவிலுள்ள இந்த வீட்டில் ஒரு ஆண்டுக்கு அதிகமாக—ஒரு வசந்தத்திலிருந்து மற்றொரு வசந்தம்வரை—என் தாத்தா வசிக்கவில்லை என்பதுபோல் எனக்குத் தோன்றியது. குறுகிய இந்தக் காலத்துக்குள்ளாகவே அந்த வீட்டின் பெயர் ஊர் அறிந்த ஒரு பெயராயிற்று. பெரும்பாலும் ஞாயிற்றுக்கிழமை தவறாமல் எங்கள் வீட்டின் 'கேட்' அருகே வந்து அந்த வரிசை முற்றும் "காஷ்ரீன் வீட்டிலே மற்றும் ஒரு சச்சரவு நடக்கிறது" என்று குதூகலத்துடன் ஓடி ஓடிச் சிறுவர்கள் தெரிவிப்பார்கள்.

மாலை நேரங்களில் அம்மான் மைக்கேல் வழக்கமாக வீட்டுக்குத் திரும்பி, முற்றுகையிட்டதுபோல இரவு முற்றும் வீட்டிலேயே தங்குவார்; வீட்டில் வசிப்பவர்கள் குலைநடுக்க முற்றுக் கிடப்பார்கள். சில சமயங்களில் தனக்கு உதவியாக குனாவிநோ தொழிற்சாலையில் வேலை செய்யும் முன்பின் யோசியாத முரட்டுத்தனமுள்ள இரண்டு ஒரு வாலிபர்களையும்கூட அழைத்து வருவார். அவர்கள் பாறை வழியாக ஏறித் தோட்டத்துக்குள் குதிப்பார்கள். குடிபோதையால் உந்தப்பட்டு, தத்தம் மனம்போனவாறு நடக்கத் தலைப்படுவார்கள். ராஸ்பெரி, கிஸ்மிஸ் முதலிய பழச் செடிகளைத் தூரோடு பிடுங்கி எறிவார்கள். ஒரு நாள் இரவு குளிக்கும் அறையை உடைத்து நாசப்படுத்திவிட்டார்கள்; உடையத்தக்கவற்றை எல்லாம்-வேம்பா, அலமாரி, குறிச்சிகள்-தூளாக்கி நொறுக்கி விட்டார்கள். அடுப்பைப் பிடுங்கி அப்பால் போட்டுவிட்டார்கள்; தரையிலிருந்த சின்னச் சின்னத் திண்ணைகளை உடைத்து விட்டார்கள்; கதவையும் நிலையையும் பெயர்த்து உடைத்துப் போட்டுவிட்டார்கள்.

தனது சொத்துகள் இப்படியாக நாசமாக்கப்படுவதை ஜன்னல் அருகே நின்று தலைகுனிந்தவாறு என் தாத்தா கவனித்துக்கொண் டிருந்தார்.

என் பாட்டியோ இருள் சூழ்ந்த முற்றத்துக்குள் சென்று மறைந்துவிட்டாள். "மைக்கேல்! என்ன செய்கிறுய் என்பதை எண்ணிப் பார் மைக்கேல்!" என்று அவள் வேண்டுவது அவள் குரல் மூலம் தெரிந்தது.

கேவலமும் முட்டாள்தனமும் கொண்ட ருஷ்ய வசைமொழிகள்தான் இதற்குப் பதிலாகக் கிடைத்தன. இந்த வசைமொழிகளுக்குப் பொருள் என்ன என்பதை இவற்றைக் கக்குகிற அந்த விலங்குகளால் அறிந்துகொள்ளவும் முடியாது; தெரிந்துகொள்ளவும் முடியாது.

இத்தகைய சமயங்களில் என் பாட்டியைத் தொடர்ந்து திரிவது இயலாத காரியம்தான்; எனினும், அவள் இல்லாத இடத்தில் இருப்பது எனக்குப் பயத்தை உண்டுபண்ணியது; ஆகவே என் தாத்தாவின் அறைக்கு நான் போய்விட்டேன்.

"அட சனியனே! இங்கேயிருந்து போய்த் தொலே" என்று கறகறப்பாகக் கூவினுர் என் தாத்தா.

ஆகவே மாடியிலிருந்த அறைக்கு ஓடி, என் பாட்டியைக் காணுமல் இருக்கக்கூடாது என்ற எண்ணத்துடன் இருட்டில் நான் தோட்டத்தை எட்டிப் பார்த்தேன். அவளே அவர்கள் கொன்றுலும் கொன்றுவிடக் கூடும் எனப் பயந்து, இரைச்சலிட்டுக் கதறியவாறே அவளேக் கூப்பிட்டேன். என் பாட்டி வரவில்லே. ஆனுல், என் குரலேக் கேட்டதும் குடிபோதையில் இருந்த என் அம்மான் என் தாயைக் கேவலமாக ஏசினுர்.

இப்படிப்பட்ட ஒரு நாள் மாலே என் தாத்தா நோய் வாய்ப்பட்டுக் கிடந்தார். படுக்கைமீது கிடந்த அவர், தலேயணேமீது இருந்த தலேயை அங்கும் இங்கும் உருட்டி உருட்டிக் கதறினர்.

"இதற்காகத்தானு நான் வாழ்ந்தேன்? பாபங்கள் செய்து சொத்துகள் சேர்த்தேன்? நிறைந்த அவமானம் தரும் காரியமாக இது இராதுபோனுல், போலீஸைத்

தருவித்து, கவர்னர் முன்னுல் அழைத்துப் போகச் செய்து இருப்பேன்......என்ன அவமானம்? தம் குழந்தைகள் செய்யும் தொந்திரவைப் பொறுக்க முடியாமல் பெற்றோர் போலீஸாரிடம் முறையிட்டதை யாராவது கேள்விப்பட்டது உண்டா? கிழவனே! இங்கே படுத்துக்கிடப்பதைத் தவிர்த்து, உன்னுல் வேறு ஒன்றும் செய்ய முடியாது!'' என்று சொல்லிக்கொண்டார்.

திடும் எனத் தன் காலைப் படுக்கை ஓரத்தில் தொங்க விட்டுக்கொண்டு எழுந்து, தள்ளாடித் தள்ளாடி ஜன்னல் அருகே போய்ச் சேர்ந்தார்.

"எங்கே போகிறீர்கள் ?'' என்று இரைந்துகொண்டே என் பாட்டி அவருடைய கையைப் பிடித்தாள்.

வருந்திப் பெருமூச்சு விட்டுக்கொண்டே "ஒரு விளக்கைக் கொண்டுவா'' என்று என் தாத்தா உத்தரவிட்டார்.

என் பாட்டி ஒரு மெழுகுவர்த்தியைப் பொருத்திக் கொடுத்ததும், அதை ஒரு துப்பாக்கிபோலத் தன் முன்னே பிடித்துக்கொண்டு ஜன்னல் அருகே நின்று ஏளனம் செய்யத் தொடங்கினுர்.

"பூ! மிஷா! வெறியும் சொறியும் பிடித்த நாயே! இரவில் வந்து திருடுகிற பயலே!'' என்று ஏசினுர்.

உடனே ஜன்னல் மேல் பாகம் நொறுங்கி, பாதிச் செங்கல் ஒன்று, என் பாட்டிக்குப் பக்கத்தே இருந்த மேஜை மீது வந்து விழுந்தது.

"குறி தவறிவிட்டது!'' என்று என் தாத்தா ஊளையிட்டார்; அவரால் அழவும் முடியவில்லை; சிரிக்கவும் முடியவில்லை.

என்னைத் தூக்குவதைப்போலவே, தம் கைகளால் என் தாத்தாவைத் தூக்கி வந்து, படுக்கைமீது என் பாட்டி

படுக்க வைத்தாள். பிறகு அவரைப் பயமுறுத்தும் தோரணை யில் அவள் சொன்னதாவது :

"கிறிஸ்துமீது அன்புள்ள தாங்கள் ஏன் இப்படிச் செய்கிறீர்கள்? ஏதாவது நேர்ந்திருந்தால், அவன் சைபீரியா போகாமல் தீராதே! இந்த மாதிரியான சமயங்களில்தான் தான் சைபீரியா போகநேரும் என்பதை அவன் உணர்ந்து செய்கிருன் என்று தாங்கள் கருதுகிறீர்களா?"

படுத்துக்கிடந்த அவர் தன் கால்கள் நடுநடுங்கியவாறே "அவன் என்னைக் கொன்றுவிட்டுப் போகட்டும்" என்று பொறுமிப் பொறுமிச் சொன்னர்.

காலால் மிதிக்கும் சப்தமும் கூப்பாடும் வெளியில் இருந்து கேட்டன. மேஜைமீது கிடந்த செங்கல்லை எடுத்துக் கொண்டு ஜன்னல் அருகே நான் ஓடினேன். என்னைப் பிடித்து ஒரு மூலையில் தள்ளி, "புத்திகெட்ட சோம்பேறிப் பயலே!" என்று என் பாட்டி சீறினள்.

மற்ருெரு சமயம் என் அம்மான் பெரிய தடி ஒன்றை எடுத்துக்கொண்டு புழக்கடை வழியாக வந்து வாயிலில் நின்று அதை ஆட்டிக்கொண்டே இருந்தார். அவருக்காக என் தாத்தா கூடத்தில் காத்து நின்ருர்; குடியிருப்பவர் இருவர் கையில் தடிகளுடன் அவருக்கு உதவியாக நின்ருர் கள். கண்ணுடிக் கடைக்காரனுடைய தடித்த மனைவியும் ஒரு உருண்டைக் கம்பு சகிதமாக நின்ருள். இவர்கள் எல் லோரையும் முண்டியடித்துக்கொண்டு, என் பாட்டி வந்தாள்.

"என்னைப் போகவிடுங்கள்; நான் அவனிடம் இரண் டொரு வார்த்தைகள் பேச வேண்டும்" என்ருள்.

"கரடி வேட்டை" என்ற ஓவியத்தில் ஈட்டியை வைத்துக்கொண்டு குடியானவன் நிற்பதைப்போல, தன் கை யில் வைத்திருந்த தடியைத் தூக்கிப் பிடித்தவாறு என் தாத்தா ஒற்றைக் காலால் நின்ருர். என் பாட்டியோ

அவரை இடித்துக்கொண்டு பாய்ந்தாள்; காலையும் முழங் கையையும் ஒடுக்கிக்கொண்டு, ஒன்றும் பேசாமல் அமைதி யாக என் தாத்தா அவளைத் தள்ளிவிட்டார். வரப்போ கிறவனைப் பயந்து நடுங்கவைக்கும் பாவனையில் அவர்கள் நால் வரும் நின்றார்கள். சுவரில் தொங்கிய விளக்கு, தன் தகுதிக்கு ஏற்ப அவர்கள் முகத்தில் ஒளியைப் பரப்பியது; என் பாட்டி திரும்பிவிட வேண்டும் என்ற எண்ணத்துடன் மாடி அறையில் நான் கவலையோடு கவனித்துக்கொண்டு நின்றேன்.

கதவை என் அம்மான் பயங்கரமாகத் தட்டினார். கீழே யிருந்த கீல் முறிந்து ஒருவித சப்தத்துடன் ஆடியது; மேலே யிருந்த கீலில் கதவு தொங்கியது; அதுவும் முறிந்து விழுந்து விடும்போல் தோன்றியது. தனக்கு உதவியாக நின்றவர்களைப் பார்த்துக் கலக்கமடைந்த குரலில், "காலிலும் கையிலும் அவனை அடியுங்கள்; தலையில் மட்டும் அடித்துவிடாதீர்கள்" என்று என் தாத்தா சொன்னார்.

கதவை அடுத்து, சிறிய ஜன்னல் ஒன்று இருந்தது; எனினும் தலையை நீட்டி எட்டிப் பார்ப்பதற்குப் போதிய அளவு அது பெரிதாய் இருந்தது. இந்த ஜன்னலின் கண் ணாடியை முன்பே என் அம்மான் உடைத்துவிட்டார். கண் பிடுங்கப்பட்ட துவாரம்போல, உடைந்துபோன கண்ணாடிகள் வரிசையில் நீட்டி நிற்க, நடுவே கருப்பு நிறத்தில் பெரிய துவாரம் ஒன்று இருந்தது.

என் பாட்டி ஜன்னலுக்கு ஓடி, தன் கையை வெளியே நீட்டி ஆட்டியவாறு "மிஷா! ஏசு பெருமானை நினைந்தாவது அப்பால் போய்விடு! இல்லாதுபோனால் வாழ்க்கை முழுதும் ஊனப்பட்டு முடவனாகக் கிடக்கும்படி உன்னை அவர்கள் செய்துவிடுவார்கள். ஆகையால் போய்விடு; போய்விடு" என்று பதறினாள்.

அவளுடைய கைகள்மீது தடியால் அவர் அடித்தார். கனமான ஏதோ ஒன்று மின்னல் வேகத்தில் வந்து அவள் கைமீது விழுந்ததை நான் பார்த்தேன். "மிஷா! ஓடிவிடு" என்று கூவிக்கொண்டே என் பாட்டி தரைமீது உட்கார்ந்தவள், தடுமாறிவிழுந்து மௌனமாகிவிட்டாள்.

"ஆஹா - தாயே!" என்று பயந்துபோய் என் தாத்தா ஓலமிட்டார்.

கதவைத் திறந்துகொண்டு, கறுப்பு ஓட்டையின் வழியாக என் அம்மான் குதித்தார். ஆனால் உடனே, குப்பையை அள்ளி வீதியில் எறிவதுபோல, முன் மண்டபத்தில் தூக்கி எறியப்பட்டார்.

கண்ணாடிக் கடைக்காரன் மனைவி என் பாட்டியை, என் தாத்தாவின் அறைக்கு அழைத்துப் போனாள். என் தாத்தாவும் விரைவில் அவர்களைத் தொடர்ந்துபோனார்.

என் பாட்டியை அணுகிக் குனிந்து பார்த்துக்கொண்டே "எலும்பு எதுவும் முறிந்துவிட்டதா?" என்று கவலை தோய்ந்த குரலில் அவர் கேட்டார்.

கண்களைத் திறவாமலே "ஆம். முறிந்துவிட்டது போலத்தான் தோன்றுகிறது. ஆனால் நீங்கள் அவனை என்ன செய்தீர்கள்?" என்று என் பாட்டி கேட்டாள்.

"பெண்ணே! புத்தியோடு பேசு" என்று என் தாத்தா அவளைக் கோபித்துக்கொண்டார். "என்னை ஒரு விலங்கு என்று நீ கருதிவிட்டாயா? என்ன? அவனை நாங்கள் கட்டிப்போட்டுவிட்டோம். அவன் கூடத்தில் கிடக்கிறான். ஒரு வாளி தண்ணீரை அவன்மீது நான் ஊற்றினேன். உனக்கு ஏற்ற பிசாசுதான் அவன். இந்தக் குணம் அவனுக்கு எப்படி வந்ததோ?" என்று கேட்டார்.

என் பாட்டி முணகினாள்.

“ நடம் பார்ப்பவளை அழைத்துவர ஆள் அனுப்பி இருக்கிறேன். வேதனையைக் கொஞ்சம் பொறுத்துக்கொள் ” என்று சொல்லி அவளுக்குப் பக்கத்தில் படுக்கைமீது என் தாத்தா உட்கார்ந்தார். “ தாயே ! சாவு ஒன்றுதான் இனிப் பாக்கி. காலத்துக்கு முன்னரே கல்லறைக்கு நம்மை இட்டுச் சென்றுவிடும்போல் தோன்றுகிறதே ” என்றார்.

“ கொடுக்க வேண்டியதை அவர்களுக்குக் கொடுத்து விடுங்களேன்.”

“ வார்வாரா கதி என்ன ஆவது ?”

நீண்ட நேரம் அவர்கள் இப்படிப் பேசிக்கொண்டு இருந் தார்கள். அமைதியாகவும் வருத்தத்தோடும் என் பாட்டி பேசினாள் ; என் தாத்தாவோ இரைந்தும் கோபமாகவும் பேசினார்.

சிறிது நேரத்துக்குப் பின், கூனல்விழுந்த சிறிய கிழவி ஒருத்தி அங்கே காட்சி அளித்தாள். அவளுடைய வாய், காதுவரை இரு புறமும் நீண்டு இருந்தது ; கீழ்த் தவடை ஆடிக்கொண்டு இருந்தது ; மீனுக்கு இருப்பதைப்போல அவளுடைய மேல்வாய் திறந்திருந்தது. கூர்மையான அவ ளுடைய மூக்கு, மேல்உதட்டை வெட்டிப் பிளப்பதுபோல் இருந்தது. அவளுக்குக் கண்கள் இருப்பதாகத் தோன்ற வில்லை. அடி எடுத்து வைக்க முடியாமல் அவள் கஷ்டப் பட்டாள். கம்பைப் பூமியில் ஊன்றி நகர்ந்தவாறே அவள் வந்தாள் ; அவள் தூக்கிவந்த சிறிய மூட்டையில் சலசலப்பு இருந்தது.

என் பாட்டியை நாடி வருகிற எமனே என்று இவளை நான் கருதிவிட்டேன். ஆகவே வெகு வேகமாக ஓடி “இங்கே யிருந்து போய்விடு ” என்று என் பலம் கொண்ட மட்டும் அவளிடம் நான் கத்தினேன்.

எதுவுமே செய்யாமல் என்னைப் பிடித்து இழுத்துக் கொண்டு மாடியில் இருந்த அறைக்கு என் தாத்தா போய் விட்டார்.

## 7

என் தாத்தா ஒரு கடவுளையும் என் பாட்டி மற்று ஒரு கடவுளையும் வணங்குவதாக, வெகு ஆரம்பத்திலேயே நான் தெரிந்துகொண்டேன்.

எழுந்ததும், காலையில், வியக்கத்தக்க தனது கூந்தலை நீண்டநேரம் என் பாட்டி கோதிவிட்டுக்கொண்டிருப்பாள். கறுப்புப் பட்டுப்போன்று இருக்கும் தனது கூந்தலை, தலையைக் குலுக்கிக்கொண்டும் வாயை மடித்துக்கொண்டு அவள் வாரி விட்டுக்கொள்வாள் ; "ஏ கொள்ளை நோயே! சனியனே! நீ நாசமாய்ப் போக!'' என்று பெருமூச்சுவிட்டு அதைச் சபிப்பாள்.

கிட்டத்தட்டக் கூந்தலைச் சிக்கெடுத்து முடித்ததும் கொண்டை போட்டுக்கொள்வாள் ; கோபமாக எதையோ முணுமுணுத்துக்கொண்டு வேகமாக உடம்பைக் கழுவிக் கொள்வாள். தூக்க மயக்கத்தால் தனது பெரிய முகத்தில் ஏற்பட்டுள்ள சுருக்கங்களையும் கோடுகளையும் கழுவி அகற்றிக் கொள்ளாமலே விக்கிரகங்கள் முன்னர் சென்று மண்டியிட்டு அமர்வாள். இதன் பின்னரே உண்மையான காலை ஸ்நானம் என்பது தொடங்கி, புத்தொளி பெற்ற மலர்ந்த முகத்துடன் அவள் திகழ்வாள்.

நிமிர்ந்து உட்கார்ந்து, தலையை உயர்த்தி, காஸான் கன்னிமாதாவின் உருண்டை முகக்தை வாஞ்சையோடு பார்ப் பாள் ; ஆவலோடு சிலுவைச் சின்னம் வரைந்துக்கொள்வாள்.

"ஏ ஆசீர்வாதம் பெற்றகன்னிமாதா! வந்துகொண்டிருக்கிற இன்றைய தினமானது உனது ஆசீர்வாதங்களை நிறையப் பெறும் நன்னாளாக விளங்கட்டும்" என்று வேண்டுவாள்.

பிறகு தரை அளவு தாழ்ந்து வணங்கிவிட்டு, மெதுவாக நிமிர்ந்து உட்கார்ந்துகொள்வாள்; மீண்டும் ஆவல் மிகுதியோடு மெதுவாக வேண்டுவாள்.

"இன்ப ஊற்றே! எடுத்துரைக்க முடியாத எழில் நலமே! பூத்துக்குலுங்கும் ஆப்பிள் மரத்தை நிகர்த்தவளே!" என்பாள்.

நாள்தோறும் காலையில் புத்தம் புதிய வார்த்தைகளைச் சொல்லிப் பாராட்டிப் புகழ்ந்து அகமகிழ்வாள். இப்படி அவள் இறைஞ்சி வேண்டுவதை நான் ஆவலோடு கவனமாக ஒவ்வொரு வார்த்தையும் கேட்பேன்.

"தெய்வீக நலம் வாய்ந்த அன்புகனிந்த பரிசுத்த உள்ளமே! என் ஆவிக்கு ஒளிபோன்றவளே! எனது குடும்பத்தைக் காப்பவளே! பிரகாசமாகவும் தங்க மயமாகவும் வானத்தில் திகழும் சூரியனே! ஆண்டவனுடைய அருமைத் தாயே! தீமைகள் அண்டாமல் எங்களைக் காப்பாற்று; தேவையற்ற நிந்தனை மொழிகள் ஏற்படாமல் காப்பாற்று; காரணமில்லாமல் மனக்குறைப்பட்டு நொந்துகொள்ளாமல் என்னைத் தடுத்து நிறுத்து" என்று வேண்டுவாள்.

அவளுடைய கரிய விழிகளுக்கு அடியிலே புன்னகை அரும்புவது தெரியும்; தனது கனத்த கையை மெதுவாக அசைத்து அவள் சிலுவைச் சின்னம் வரைந்துக்கொள்ளும் போது, அவளுக்கு இளமை திரும்பி வருவது போலத் தோன்றும்.

"அன்பு நிறைந்த ஏசுநாதரே! ஆண்டவனுடைய புதல்வரே! பாபியான என்பால் கருணை காட்டும்; உம் தாயை நினைந்து என்மீது கருணை காட்டும்."

எப்பொழுதுமே பாராட்டிப் பரவிப் என் பாட்டி பிரார்த்தனை செய்வாள். உண்மையும் எளிமையும் நிறைந்த உள்ளத்திலிருந்து வரும் பாராட்டுதல்கள் அவை.

நீண்ட நேரம் பிரார்த்தனை செய்வதில் காலை நேரத்தை அவள் செலவிட மாட்டாள். என் தாத்தா வேலைக்காரன் வைத்துக்கொள்ளாதிருந்தபடியால், சமோவார் அடுப்பைப் பற்ற வைப்பது அவசியமாக இருந்தது. காலையில் தாமதமாக அவருக்குத் தேநீர் கிடைக்குமாயின் என் தாத்தா அவளைக் கடுமையாகவும் ஆத்திரமாகவும் முடிவில்லாமலும் ஏசிக்கொண்டே இருப்பார்.

என் பாட்டிக்கு முன்னதாக எழுந்துவிட்டால், சில சமயங்களில் மாடிக்குவந்து என் தாத்தா பார்ப்பார். அப்போது என் பாட்டி பிரார்த்தனையில் ஈடுபட்டு இருப்பாள். தனது கரிய மெல்லிய உதடுகளின் கடைக்கோடியில் வெறுப்புடன் கலந்த புன்னகை அரும்ப, அவள் செய்யும் பிரார்த்தனையை அமைதியாகவும் கவனத்தோடும் கேட்டுக்கொண்டு நிற்பார். பிறகு காலைச் சிற்றுண்டி அருந்தும்போது இதுபற்றிய தன் அபிப்பிராயத்தை வெளியிடுவார்.

"மந்த புத்தியுள்ளவளே! பிரார்த்தனை எப்படிச் செய்ய வேண்டும் என்பதை நான் உனக்கு எத்தனையோ முறை சொல்லித் தந்திருக்கிறேன். ஆனால் நீயோ பிடிவாதமான ஆசாரப்புரட்டன்போல முணுமுணுத்துக்கொண்டே இருக்கிறாய்! ஆண்டவன் இதை எப்படித்தான் பொறுமையோடு கேட்டுத் தெரிந்துகொள்கிறாரோ தெரியவில்லை" என்பார்.

"நீங்கள் எதைக் கேட்கிறீர்கள் என்பதைப்பற்றி அக்கறை இல்லை. யாவற்றையும் அறிந்துகொள்ளும் ஆற்றல் ஆண்டவனுக்கு நிச்சயமாக உண்டு" என்று என் பாட்டி உறுதியோடு சொல்வாள்.

" சுவாஷ் ஜாதியாளைப்போல நீயும் ஒரு பைத்தியம்" என்பார் என் தாத்தா.

நாள் முழுதும் அவளுடைய ஆண்டவன் அவள் கூடவே இருப்பார். விலங்குகளிடமும்கூட ஆண்டவனைப்பற்றி என் பாட்டி பேசுவாள்; ஜீவராசிகள் அனைத்தும் - மனிதன், நாய், பறவை, ஈ, செடிகொடிகள்கூட - ஆண்டவனிடம் எளிதில் இறைஞ்சி மன்றாட முடியும் என்பதை நான் தெரிந்துகொண்டேன். எல்லோரிடமும் பாரபட்சமின்றி அவர் அன்பு பாராட்டினர்; ஆகவே உலகத்திலுள்ள அனைத்தும் பாரபட்சமின்றி அவரை நேசித்தன.

கண்ணாடிக்கடைக்காரன் மனைவி குறும்புத்தனமான ஆண்பூனை ஒன்றை வளர்த்தாள். சாம்பல்நிற உடலும் தங்க நிறக் கழுத்தும் உடைய அந்தப் பூனையை எல்லோரும் நேசித்தார்களாயினும் வெறுக்கத்தக்கதாயும் பெருந்தீனி தின்பதாயும் அது இருந்தது. அந்தப் பூனை ஒரு நாள் ஒரு பறவையைப் பிடித்துவிட்டது. பூனையின் வாயிலிருந்து அதைப் பிடுங்கி, "கடவுளைப்பற்றிய அச்சமே உன் நெஞ்சில் கிடையாதா! இது தான் உன்னோடுள்ள சங்கடம்; பயங்கரமான பிராணியே!" என்று அதை என் பாட்டி கோபித்துக்கொண்டாள்.

என் பாட்டி கூறின இந்த வார்த்தைகளைச் செவிமடுத்த கண்ணாடிக் கடைக்காரன் மனைவியும் காவல்காரனும் சிரித்து விட்டார்கள். ஆனல் அவளோ அவர்களைப் பார்த்துக் கோபமாக "கடவுளைப்பற்றிய எண்ணம் விலங்குகளுக்குக் கிடையாது என்று நீங்கள் கருதுகிறீர்களா என்ன? கல்நெஞ்சு படைத்த ஜந்துக்களே! சின்னஞ் சிறிய விலங்குக்குக்கூட ஆண்டவனைப்பற்றித் தெரியும்" என்று கடிந்து உரைத்தாள்.

கொழுத்துக் கவலையற்று வாழும் ஷாராப் என்ற குதிரைக்குச் சேணம் பூட்ட நேரும்பொழுது "ஆண்டவனுடைய சேகவனே! நீ ஏன் சந்தோஷமற்றுக் காணப்படுகிறாய்?

உனக்கு வயதாகி வருகிறது என்று கவலைப்படுகிருயா...?" என்று கேட்பாள்.

பெருமூச்சுவிட்டுக் குதிரை தன் தலையை அசைத்துக் கொள்ளும்.

இருந்தும் ஆண்டவன் திருப்பெயரை என் தாத்தா அடிக்கடி உச்சரித்ததைப்போன்று என் பாட்டி அதை உச்சரிக்கவில்லை. என் பாட்டியின் கடவுளை என்னுல் புரிந்து கொள்ள முடிந்தது. அவரிடம் எனக்குப் பயம் தோன்றவில்லை. எனினும் அவரிடம் பொய் சொல்ல எனக்குத் தைரியம் வரவில்லை. அது எனக்கு நாணத்தை உண்டு பண்ணியது. இதன் காரணமாகவே என் பாட்டியிடமும் நான் ஒருபோதும் பொய் சொன்னது கிடையாது. இத்தகைய அன்பு நிறைந்த கடவுள் ஒருவரிடம் எதையும் மறைப்பது முற்றும் இயலாத ஒரு காரியமா இருத்தது. ஆகவே, பொய் சொல்ல வேண்டும் என்ற விருப்பம் எனக்கு இருந்ததாக நினைவு இல்லை.

கண்ணுடிக் கடைக்காரன் மனைவி ஒரு நாள் என் பாட்டியோடு சண்டை போட்டாள். பேதை நெஞ்சுள்ள என் பாட்டியைப் பலவாறு நிந்தித்துப் பேசி, ஒரு காரட்டைக்கூட என் பாட்டிமீது அவள் எறிந்துவிட்டாள்.

"நேர்த்தியான பெண்ணே! நீ ஒரு முட்டாள்" என்று என் பாட்டி அமைதியாக எதிர்த்துச் சொன்னுள். என் பாட்டி நடந்துகொண்ட முறை கண்ணுடிக் கடைக்காரன் மனைவியை அதிகமாக உறுத்தியது. ஆகவே, என் பாட்டியை அவள் பழிவாங்கத் தீர்மானித்தாள்.

கண்களே இல்லாத, இரண்டு தவடைகளுள்ள கொழுத்த இந்த முட்டாள் பெண்பிள்ளையை எப்படி அடித்துத் தொந்திரவு கொடுப்பது என்று சில சமயங்களில் நான் யோசித்தது உண்டு.

இப்படி நேரும் பூசல்களில் அண்டை வீட்டுக்காரர்கள் எப்படி வஞ்சம் தீர்த்துக்கொள்கிறார்கள் என்பதை நான் கவனித்து வந்து இருக்கிறேன். பூனைகளின் வால்களை வெட்டி எறிவது, நாய்களுக்குப் பாஷாணம் இடுவது, கோழிக்குஞ்சுகளைக் கொல்வது, எதிரியின் அறைக்குள் இருட்டு நேரத்தில் தெரியாமல் புகுந்து, முட்டைக்கோஸ் ஊறுகாய் அல்லது மற்ற ஊறுகாய்கள் இருக்கும் ஜாடிகளில் மண்ணெண்ணையை ஊற்றிவிடுவது, குவாஸ் என்ற மது இருக்கும் பீப்பாயைத் திறந்துவிட்டுவிடுவது போன்ற காரியங்களைச்செய்து அவர்கள் வஞ்சம் தீர்த்துக்கொண்டார்கள். இந்த மாதிரி வஞ்சம் தீர்த்துக்கொள்வது எனக்குத் திருப்தியை அளிக்கவில்லை. ஆகவே தைரியமானதும் பயங்கரமானதுமான வேறு ஒரு வழியை யோசிக்க வேண்டுவது எனக்கு அவசியம் ஆயிற்று.

ஆகவே அடியில் வருமாறு செய்வது என நான் முடிவு செய்தேன்: கண்ணாடிக் கடைக்காரன் மனைவி நிலவறைக்குள் இறங்கும் சமயம் பார்த்து உடனே மூடியைப் போட்டு, அதை நான் பூட்டிவிட்டேன். பிறகு அதன் மீது நின்றுகொண்டு சந்தோஷத்தால் ஆர்ப்பரித்துச் சாவியை முகட்டின்மீது எறிந்துவிட்டேன். பின்னர் என் பாட்டி சமைத்துக்கொண்டு இருந்த அறைக்குள் புகுந்தேன். நான் ஏன் இப்படிக் குதூகலத்துடன் இருக்கிறேன் என்பதை முதலில் அவளால் அறிந்துகொள்ள முடியவில்லை. விவரம் தெரியவந்ததும் அதற்கு உடந்தையாக இருந்த உறுப்புகளுக்குச் சரியான உதை விழுந்தது. முற்றத்துக்கு இழுத்துப் போய், முகட்டில் ஏறிச் சாவியை எடுத்துவரும்படி என்னை ஏவினாள் என் பாட்டி. அவளுடைய இந்த நடத்தையால் உக்கிப்போயிருந்த நான் முகட்டில் ஏறிச் சாவியை எடுத்து வந்து கொடுத்துவிட்டு, முற்றத்தில் இருந்த ஒரு மூலைக்கு ஓடிப் பதுங்கிக்கொண்டு கவனித்தேன். கைதியாகிக் கிடந்த,

என்னுல் வெறுக்கப்பட்ட கண்ணுடிக் கடைக்காரன் மனை விக்கு விடுதலை வழங்கி, அவளை அழைத்துக்கொண்டு என் பாட்டி வந்து சேர்ந்தாள். விருப்போடு அவர்கள் இருவரும் என்னைப் பார்த்துச் சிரித்தார்கள்.

தனது தடித்த முஷ்டியை ஆட்டியவாறே "உன்னை என்ன செய்கிறேன் பார்!" என்று கண்ணுடிக் கடைக்காரன் மனைவி என்னைப் பயமுறுத்தினுள். ஆனுல் கண்ணற்ற அவளுடைய முகத்தில் நல்லெண்ணத்துடன் கூடிய புன்முறுவல் அரும்பியது. என் பாட்டியோ பிடறியைப் பிடித்து என்னை அடுக்களைக்குள் தள்ளிக்கொண்டு போனுள்.

"எதற்காக நீ இப்படிச் செய்தாய்?" என்று அவள் என்னைக் கேட்டாள்.

"உன்மீது காரட்டை அவள் எறியவில்லையா? அதற்காகத்தான்" என்று நான் பதில் சொன்னேன்.

"ஓகோ! எனக்காகத்தானு நீ இப்படிச் செய்தாய்? சின்னப் பயலே! உன்னை என்ன செய்கிறேன் பார். சுண்டெலியுடன்கூட உன்னையும் அடுக்களையில் இருக்கச் செய்து விடுகிறேன். அதன் பின்னர்தான் உனக்குக் கொஞ்சமாவது புத்தி வரும். உனது வீரத்தனம் எல்லாம் அப்போதுதான் தெரியும்! எல்லோரும் வாருங்கள். சின்னக் குமிழி போன்ற இந்தப் பொடியன் தெரிப்பதற்குள் நீங்கள் வந்து இவனைப் பாருங்கள். இதை உன் தாத்தாவிடம் நான் தெரிவிப்பேனு யின், உன் முதுகுத் தோலை அவர் உரித்து எடுத்துவிடுவார். மாடியில் இருக்கும் அறைக்குச் சென்று புத்தகத்தை எடுத்துப் படி" என்ருள் என் பாட்டி.

அன்று எஞ்சியிருந்த பகல் முழுதும் அவள் என்னுடன் பேசவில்லை. ஆனுல் மாலையானதும் தனது பிரார்த்தனையை முடித்துக்கொண்டு, படுக்கை அருகே வந்து அமர்ந்து, மறக்க முடியாத இந்த வார்த்தைகளை அவள் என்னிடம் சொன்னுள்.

" புருவே-கிருவே! நான் சொல்வதைக் கவனமாகக் கேட்டு நினைவில் இருத்திக்கொள்: பெரியவர்கள் சம்பந்தப் பட்ட விஷயங்களில் ஒருபோதும் தலையிட்டுக்கொள்ளாதே. ஆசையாலும் உழைப்பினாலும் உந்தப்பட்டுப் பெரியவர்கள் கெட்டுப்போய் இருக்கிறார்கள்; சிறுவனான நீ அவற்றால் இன்னும் கெட்டுப்போகவில்லை. சிறுவனாக உள்ள நீ சிறு பிள்ளைபோல இருந்து வாழ்க்கை நடத்தி வா. எந்த வழியில் நீ செல்ல வேண்டும்? நீ செய்ய வேண்டிய காரியம் என்ன என்று உனக்குக் காட்டி அதற்கு ஏற்ப ஆண்டவன் உனது இதயத்தைப் பரிபக்குவம் செய்யும்வரை இப்படி நடப்பாயாக! தெரிகிறதா? எதற்காக யாரைக் குற்றம் சொல்வது என்பது எல்லாம் நீ கவனிக்கவேண்டிய காரியங்கள் அன்று. ஆண்ட வனே நிதானித்துத் தண்டனை கொடுப்பார். அது அவருடைய காரியமே யன்றி, நம்முடைய காரியம் அன்று."

பிறகு ஒரு நிமிடம் சும்மா இருந்தாள். இதற்கு இடை யில் கொஞ்சம் பொடி போட்டுக்கொண்டு, தனது வலது கண்ணைச் சிமிட்டியவாறே அவள் சொன்னாள். "யாரைக் குற்றம் சொல்லுவது என்பது சில சமயங்களில் ஆண்டவ னுக்கே கஷ்டமாய்ப் போய்விடுவதும் உண்டு."

" யாவுமே அவருக்குத் தெரிய மாட்டாதா?" என்று ஆச்சரியத்துடன் நான் கேட்டேன்.

" அப்படி அவர் கவனிப்பாரானால், எத்தனையோ காரி யங்களை ஜனங்கள் செய்யாமல் விட்டுவிடக் கூடும். வானத்தில் இருந்தவாறே பாபிகளான நம்மை அவர் கவனித்துக்கொண்டு இருக்கிறார். இப்படிப் பார்க்கநேரும் சில சமயங்களில் அவர் கண்ணீர்விட்டுப் பொருமி அழுதுவிடுவதும் உண்டு. ' என் ஜனங்களே, ஜனங்களே! என் அன்புக்குரிய ஜனங்களே!' என்று அவர் அழுதுவிடுகிறார். ' உங்களை நினைக்கும்போது

என் இதயம் எவ்வளவு ரத்தம் சிந்துகிறது தெரியுமா?' என்று சொல்லுகிறார்.''

இப்படிச் சொல்லிவிட்டு, அவளும் அழுதுகொண்டே இருப்பாள்; வடியும் கண்ணீரைத் துடைத்துக்கொள்ளக்கூடப் பிரியம் இன்றி, விக்கிரகங்கள் இருக்கிற மூலைக்குப் பிரார்த்தனை செய்யப் போய்விடுவாள்.

அன்று முதல் அவளுடைய ஆண்டவன் எனக்கு அருமையானவராகவும் என்னால் புரிந்துகொள்ளக் கூடியவராகவும் ஆகிவிட்டார்.

ஆண்டவன் எங்கும் நிறைந்தவர், யாவற்றையும் அறிந்தவர், யாவற்றையும் பார்ப்பவர், கஷ்ட காலத்தில் மனிதனுக்கு உதவுபவர் என்று, பாடம் சொல்லித் தரும்பொழுது, என் தாத்தாவும் சொல்லி இருக்கிறார். ஆனால், என் பாட்டியைப் போல் என் தாத்தா பிரார்த்தனை செய்வது இல்லை.

காலையில் விக்கிரகங்கள் இருக்கும் மூலைக்குப் போகு முன்பு, கை, கால், உடம்பைக் கவனமாகக் கழுவிக்கொண்டு, உடை அணிந்துகொள்வார்; தனது சிவந்த கூந்தலையும் தாடியையும் வாரிவிட்டுக்கொள்வார்; கண்ணாடி முன் நின்று தனது கால்சட்டையைச் சரிப்படுத்திக்கொள்வார்; கழுத்துக் குட்டையை, தான் அணிந்து இருக்கும் 'வெஸ்டு' கோட்டுக்குள் திணித்துக்கொள்வார்; பிறகுதான் கள்ளத்தனமாக விக்கிரகங்கள் இருக்கிற மூலைக்கு மெதுவாகப் போவார். குறிப்பிட்ட ஓர் இடத்தை அடைந்ததும் அந்த இடத்திலேயே எப்பொழுதும் நின்றுகொள்வார்; அவர் நிற்கும் இடத்தில் தரையில் பாவியுள்ள கற்கள் குதிரைக் கண்கள் போன்று இருக்கும். போர்வீரனைப்போல, பக்கத்தில் கைகளைத் தொங்கவிட்டுக்கொண்டு விரைப்பாக நிற்பார். ஒரு நிமிடம் மௌனமாக நின்று, மெலிந்து கூர்மையான தனது தலையைத் தாழ்த்தி வணங்குவார். ''தந்தையின் பெயராலும்

புதல்வரின் பெயராலும் பரிசுத்த ஆவியின் பெயராலும்'' என்று திருத்தமாகச் சொல்வார்.

இந்த வார்த்தைகளைக் கூறியவுடனே குறிப்பாக அந்த அறை முற்றும் நிசப்தம் நிலவுவதாக எனக்குத் தோன்றும். அங்கே பறக்கிற ஈக்களும்கூட அடக்க ஒடுக்கமான மரியாதையுடன் பறப்பதாகத் தோன்றும்.

பின்னர் அவர் தலைநிமிர்ந்து நிற்பார்; அவருடைய புருவ மயிர்கள் சிலுசிலுத்து நிற்கும்; தங்க மயமான அவருடைய தாடி, தரைக்கு நேரே தொங்கும். பாடம் ஒப்பிப்பவர்போல உறுதியான தொனியில், தனது பிரார்த்தனையை அவர் செய்வார்; தான் சொல்லும் வார்த்தைகளை அழுத்தமாகவும் அதிகார தோரணையோடும் சொல்வார்:

"இறுதித் தீர்ப்பு நாள் வரும்போது மனிதர்கள் செய்த தவறுகளை எடுத்துக்காட்ட எந்த மனிதனுக்கும் தெரியாது......"

மார்பில் மெல்லத் தட்டிக்கொண்டு, தனது வேண்டுகோளை அழுத்தமாகத் தெரிவிப்பார்:

"நான் உமக்கு எதிரிடையாகத்தான், உம் ஒருவருக்கு மட்டும்தான், பாபம் செய்து இருக்கிறேன். நான் செய்யும் பாபங்களைப் பார்க்காமல் உமது முகத்தை மறைத்துக் கொள்ளும்......"

சமயக் கோட்பாடுகளைப் படிக்கும்போதெல்லாம் ஒவ்வொரு வார்த்தையையும் அழுத்தம் திருத்தமாகச் சொல்வார். தனது வலது காலால் தாளம் போட்டுக்கொள்வார். நேர்த்தியாகவும் பரிசுத்தமாகவும் அதிகார தோரணையிலும் நிற்கிற அவர், தனது உடம்பு முழுவதையும் விக்கிரகங்கள் பக்கமாகச் சாய்த்துக்கொண்டு நிற்பார்; அப்போது அவர் வளர்ந்தும் மெலிந்தும் உறுதியாக நிற்பதுபோலத் தோன்றும்.

“ குணப்படுத்துவதில் பெரியவரான நீர், எனது இதயத்திலிருக்கும் சகல தீமைகளையும் அகற்றிவிடும். எனது ஆவி கதறுவதற்குச் செவிசாய்த்துக் கருணைகாட்டும்; ஆண்டவனுடைய மாதாவே !” என்பார்.

பிறகு அவர் மெல்ல மெல்ல அழுவார் ; அவருடைய பசிய கண்களில் கண்ணீர் மல்கி நிற்கும்.

“ ஆண்டவனே ! நான் செய்யும் காரியங்கள் என் மனச் சாட்சிக்கு இயையும்படி இருக்கச் செய்யும் ; என்னால் தாங்க முடியாததற்கு அதிகமான சுமையை என்மீது சுமத்தாதேயும்......”

விறுவிறுப்பாகவும் நடுக்கத்துடனும் மீண்டும் மீண்டும் அவர் சிலுவைச் சின்னம் வரைந்துக்கொள்வார். முட்டப் போகும் ஆட்டைப் போலத் தனது தலையை அசைத்துக் கொள்வார். ஈழைசாடிய குரலில் விம்மி விம்மி யழுதவாறு பேசுவார் ; பிற்காலத்தில் யூதர்களின் திருச்சபைக்கு நான் போக நேர்ந்தபோது, ஒரு யூதனைப்போன்றே என் தாத்தாவும் பிரார்த்தனை செய்திருக்கிறார் என்பதை நான் தெரிந்துகொண்டேன்.

நீண்ட நேரமாக ‘ சமோவார் ’ அடுப்பிலிருந்து நீராவி வந்துகொண்டு இருந்தது. கிராமியப் பாலடைக் கட்டி திணித்த கம்பு ரொட்டியின் வாசனை அறை முழுதும் பரவி மூக்கைத் தொளைத்தது. என் வயிறு பசியால் கதற ஆரம் பித்தது. நிலைப்படியில் என் பாட்டி பெருமூச்சுவிட்டுக் கொண்டும் முகத்தைச் சுழித்துக்கொண்டும் சாய்ந்துகொண் டும் நின்றாள். அவளுடைய கண்கள் தரைமீது பதிந்து இருந்தன. சூரிய ஒளி மகிழ்ச்சியோடு ஜன்னல் வழியாகப் பாய்ந்தது. பனித்துளிகள் மரங்களின்மீது முத்துகள் போலப் பிரகாசித்தன. ஆப்பிள், வெங்கயம், கிஸ்மிஸ் ஆகியவற்றின்

மணம் காற்றின்மீது மிதந்து வந்தது. தனது பிரார்த்தனை யைத் தொடர்ந்து சொல்லி அழுது, என் தாத்தா ஓலமிட்டுக் கொண்டிருந்தார்.

"கடையனும் சபிக்கப்பட்டவனுமாக நான் ஆகிவிட்டேன். எனது ஆவலின் தீவிரத்தை ஆண்டவனே! நீர் தணியச் செய்யும்."

அவர் வழக்கமாகச் செய்கிற காலைப் பிரார்த்தனையும் மாலைப் பிரார்த்தனையும் எனக்கு மனப்பாடமே ஆகிவிட்டது. அவர் எதையும் விட்டுவிடுகிறாரா அல்லது அவர் தவறு செய்கிறாரா என்பதை நான் கூர்ந்து கேட்பது உண்டு.

இப்படியான தவறுகளை அவர் அபூர்வமாகத்தான் செய்வார்; எனினும், தவறு நேரும் காலத்தில் அதை எடுத்துக்காட்டும்போது எதிரியை வெற்றிகொண்ட ஒரு வகை எக்களிப்பே எனக்கு ஏற்பட்டுவிடும்.

தனது பிரார்த்தனை முடிந்ததும், என் தாத்தா என்னையும் என் பாட்டியையும் பார்த்து "காலை வாழ்த்து!" என்று சொல்வார்.

நாங்களும் குனிந்து வணங்குவோம்; பிறகு மேஜைக்குச் சென்று அவரவர்களுக்கு உரிய இடத்தில் சாப்பிட அமர்ந்து கொள்வோம்.

"'போதிய' என்பதை நீங்கள் விட்டுவிட்டீர்கள்" என்று என் தாத்தாவைப் பார்த்து நான் சொல்வேன்.

"நீ சொல்வது பொய்யா? இல்லையா?" என்று அவர் அவநம்பிக்கையோடு கேட்பார்.

"இல்லை. எனது தேவைக்குப் 'போதிய' நம்பிக்கை எனக்கு ஏற்படட்டும் என்று சொல்ல வேண்டிய இடத்தில் 'போதிய' என்ற வார்த்தையை நீங்கள் சொல்ல விட்டுவிட்டீர்கள்" என்று நான் தெரிவித்தேன்.

" ஊம் ஊம் " என்று கண்ணைச் சிமிட்டிக்கொண்டே குற்றத்தைத் தெரிந்துகொண்டவர்போல என் தாத்தா முணு முணுத்தார்.

எப்போதாவது ஒரு நாள் நான் கூறினதற்கு எதிராக எனக்கு வட்டியும் முதலும் சேர்த்துக் கிடைக்கும். ஆனால் இப்படியாகத் தவற்றை எடுத்துக்காட்டி அவருடைய மனம் குழம்பச் செய்வதோடு நான் திருப்தியடைய வேண்டிய தாயிற்று.

ஒரு நாள் என் பாட்டி வேடிக்கையாகச் சொன்னதாவது: " தந்தையே! நீர் சொன்ன வார்த்தைகளையே திரும்பத் திரும்பச் சொல்லிப் பிரார்த்தனை செய்வதால், அவற்றைக் கேட்டுக்கேட்டு ஆண்டவனுக்குச் சலிப்புத் தட்டியிருக்கும்."

"என்-ன்-ன்-ன? ஏதோ உளறுகிறாயே என்ன?" என்று என் தாத்தா அவளைக் கோபித்துக்கொண்டார்.

" உம்மைப் படைத்த ஆண்டவனிடம் நீர் கூறும் வார்த்தைகளில் ஒரு வார்த்தையாவது, உம் இதயத்திலிருந்து அந்தரங்க சுத்தியோடு வெளிவருவதாக இல்லை என்று நான் சொல்லுகிறேன் " என்று பதில் சொன்னாள் பாட்டி.

இதைக் கேட்டதும் நடுக்கமும் நாணமும் அடைந்து, குறிச்சியிலிருந்து துள்ளிக் குதித்து, ஒரு 'சாசரை' எடுத்து என் பாட்டிமீது எறிந்தார் என் தாத்தா. " கிழட்டுச் சதிகாரி! இங்கே இருந்து போய்விடு " என்று கண்ணாடியை ரம்பம் அறுக்கும்போது, கிறீச்சிடுவதைப் போன்று கிறீச் சிட்டு உறுமினார்.

ஆண்டவனுடைய பராக்கிரமத்தைப் பேச நேரும் பொழுது எல்லாம் அவருடைய இரக்கமின்மையை அழுத்த மாக எடுத்துக்காட்டித்தான் என் தாத்தா பேசுவார். உதாரணமாக, ஒரு காலத்தில் பாபம் செய்ததற்காக ஜனங் கள் வெள்ளத்தால் கஷ்டப்பட்டார்கள்; மற்றொரு முறை

அவர்கள் வாழ்ந்த நகரங்கள் தீக்கு இரையாகி நாசமாயின. தண்டனையாகக் கொள்ளை நோயும் பஞ்சமும் அவர்களைச் சாடித் துன்புறுத்தின. கொடியவர்களைத் தண்டிப்பதற்காக இருக்கும் வாள் போலவும் சவுக்குப் போலவும் ஆண்டவனை என் தாத்தா கருதினார்.

"ஆண்டவனுடைய சட்டதிட்டங்களை யார் மீறி நடக்கிறார்களோ, அவர்கள் கட்டாயம் கடைசியில் கஷ்டப்படுவார்கள்" என்று தனது எலும்புக் கைகளால் மேஜையைத் தட்டி அவர் என்னை எச்சரித்தார்.

ஆண்டவன் கொடுமை செய்பவர் என்பதை நம்புவது எனக்குச் சிரமமாய் இருந்தது. கடவுளைக் காட்டிலும் தனக்கு நான் அதிகம் பயப்பட வேண்டும் என்பதற்காகவே இந்த வார்த்தைகளைக் கண்டுபிடித்து என் தாத்தா சொல்லுகிறார் என்பதை நான் தெரிந்துகொண்டேன்.

"உங்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும் என்பதற்காகத்தானே இப்படி நீங்கள் சொல்லுகிறீர்கள்?" என்று வெளிப்படையாகவே அவரை நான் கேட்டுவிட்டேன்.

"ஆமாம்" என்று கள்ளங் கபடமில்லாமல் அவரும் அதை ஒப்புக்கொண்டார். "கீழ்ப்படிந்து நடக்காவிட்டால் உன் நிலை வேறு விதமாக இருக்கும்" என்று அவர் சொன்னார்.

"என் பாட்டிக்கும் அப்படித்தானா?"

"அந்த முட்டாள் கிழவி சொல்வதை நீ கேட்டு நடக்க வேண்டாம். படிக்காத பயித்தியக்காரியாக வாழ்க்கை முழுதும் அவள் இருந்து வந்திருக்கிறாள். முக்கியமான விஷயங்கள்பற்றி உன்னிடம் பேச வேண்டாம் என்று அவளை நான் எச்சரித்துவிடுகிறேன். சரி இப்போது நான் கேட்பதற்குப் பதில் சொல். எத்தனை வகையான தேவதூதர்கள் உண்டு? சொல் பார்க்கலாம்" என்று கடுமையாகக் கேட்டார்.

அதற்குப் பதில் சொல்லிவிட்டு அவரை மடக்கி நான் ஒரு கேள்வி கேட்டேன்.

" உயர்பதவிலுள்ள மனிதன் என்றால் அதன் பொருள் என்ன ?" என்று கேட்டேன்.

" எல்லா விஷயங்களையுமே நீ தெரிந்துகொண்டுவிட வேண்டுமா என்ன ?" என்று சொல்லி, கண்களைச் சிமிட்டி உதட்டைக் கடித்துக்கொண்டு அவர் உறுமினார். பிறகு ஏதோ ஒரு மறு எண்ணம் தோன்றி " அதற்கும் கடவுளுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை: இது மனிதர்கள் தம்மிடையே செய்துகொள்கிற ஒரு காரியம். சர்க்கார் அதிகாரிகளையும் அவர்களைப் போன்றவர்களையும் உயர் பதவியில் இருப்பவர்கள் என்று சொல்லலாம். சட்டத்தை எவன் மென்று விழுங்கிவிடுகிறானோ அவனையே சர்க்கார் அதிகாரி என்று சொல்லலாம் " என்று சொன்னார்.

" சட்டம் என்றால் என்ன ?"

" சட்டமா? சட்டம் என்பது ஜனங்கள் கடைப்பிடித்து ஒழுகுகிற ஒரு வழக்கம் " என்று புத்திசாதுரியமும் தந்திரமும் நிறைந்த தமது கண்களை விருப்போடு சிமிட்டிக்கொண்டு அந்தக் கிழவர் பதில் சொன்னார். " ஒன்றுசேர்ந்து வாழ நேரும் ஜனங்கள் தங்களுக்குள் ஒரு உடன்பாடு செய்து கொண்டு வாழ்கிறார்கள். அதற்குத்தான் சட்டம் என்று பெயர். எதையும் சிறந்த முறையில் செய்வதற்கு அது ஒரு சிறந்த மார்க்கமாக இருப்பதால் அதை ஒரு வழக்கமாகக் கடைப்பிடித்து, ஜனங்கள் அதைச் சட்டம் என்றும், விதி என்றும் கூறுகிறார்கள். ஒரு ஆட்டம் ஆடுவதற்கு எல்லாரும் முதலில் ஒன்று கூடுகிறார்கள். பின்னர் அந்த ஆட்டத்தை எப்படி ஆடுவது என்று வரையறை செய்து தங்களுக்குள் ஒரு முடிவு எடுக்கிறார்கள். அந்த முடிவே பிறகு சட்டமாக அமைகிறது " என்று சொன்னார்.

"அதிகாரிகள் எப்படி?"

"அவர்கள் கெட்ட பையன்களாக நடந்துகொள்வார்கள்; அவர்கள்தான் சட்டத்தைத் தகர்க்கிறவர்கள்."

"ஏன்?"

"சொன்னால் உனக்கு அது விளங்காது" என்று முகத்தைச் சுளித்துக்கொண்டு அவர் சொன்னார். "மனிதர்கள் செய்யும் காரியங்களுக்கு எல்லாம் மேல் அதிகாரியாக ஆண்டவன் ஒருவர் இருக்கிறார். இவர்கள் ஒன்றை விரும்புகிறார்கள்; ஆண்டவனோ வேறு ஒன்றை நினைக்கிறார். மனிதருடைய காரியங்கள் ஒரு வரையறைக்கு உள்பட்டது அன்று. ஆண்டவன் ஒரு சிறு மூச்சுவிட்டால் போதும். காற்றில் பறந்து சிதறும் தூசுபோல யாவும் பறந்து சிதறிப்போகும்."

அதிகாரிகளைப்பற்றி அக்கறையோடு விசாரிப்பதற்கு எனக்கு அனேக விஷயங்கள் இருந்தன; ஆகவே இதைப் பற்றி அழுத்தமாக அவரை நான் கேட்டு வந்தேன்.

"அம்மான் யாக்கோவ் இப்படி ஒரு பாட்டுப் பாடுகிறார்:"

புனித தேவதூதர்கள் - ஆண்டவனுடைய அடியார்கள்.
சர்க்கார் அதிகாரிகள் - சைத்தானுக்கு அடிமைகள்.

என் தாத்தா தன் கண்களை மூடிக்கொண்டார். தன் தாடியை உள்ளங் கையால் தூக்கி, வாய்க்குள் திணித்துக்கொண்டார். அவர் உள்ளூரச் சிரிக்கிறார் என்பது நடுநடுங்கும் அவருடைய கன்னங்கள் மூலம் தெரிந்தன.

"உன்னையும் யாக்கோவையும் ஒரு சாக்கில் போட்டுக் கட்டி ஆற்றில் எறிந்துவிட வேண்டியதுதான். அப்படிச் செய்தால் இந்த மாதிரியான பாட்டுக்களை அவனால் பாடவும் முடியாது; உன்னால் கேட்கவும் முடியாது. சமய விரோதிகளும் சமய நம்பிக்கையற்றவர்களும் விளையாட்டு மனப்

பான்மைகொண்டு கிண்டல் செய்வதற்காகப் பாடிய பாடல் ஆகும் இது '' என்று சொல்லிவிட்டு, ஒரு கணம் சிந்தனை யோடு என்னைப் பார்த்தார். பிறகு ஒரு பெரு மூச்சுவிட்டு "என்ன ஜனங்கள் !'' என்று சலித்துக்கொண்டார்.

கடவுளை மிக உயர்ந்தவர் என்றும் மனிதர்களின் செயல் களுக்கு எல்லாம் அப்பாலாக இருந்து அச்சுறுத்தக் கூடிய வர் என்றும் கடவுளைப்பற்றி என் தாத்தா கருதியிருந்த போதிலும், என் பாட்டியைப் போலவே அவரும் தான் செய்யும் காரியங்கள் அனைத்திலும் ஆண்டவனுக்குச் சம்பந் தம் உண்டு என்று கருதினார். ஆண்டவனுக்கும் அவருடைய எண்ணற்ற அடியார்களுக்கும் தொடர்பு உண்டு என்று நம்பி னார். நிக்கோலாய், யூரி, பிரால், லாவ்ர் ஆசியவர்களை மட்டுமே என் பாட்டி அடியார்களாக மதித்தாள். ஒரு கிராமத்தி லிருந்து மற்றொரு கிராமத்துக்கும் ஒரு நகரிலிருந்து மற்றொரு நகருக்குமாக அலைந்து திரிந்து, ஜனங்களுடைய இன்பதுன்பங்களில் பங்கு கொண்டு அவர்களுக்கு அந்த அடியார்கள் உதவினார்கள்; நல்லவர்களாக இருந்து அன்புடன் நடந்து கொண்டார்கள். என் தாத்தாவின் அடியார்கள் எல்லாரும் ஏறக்குறைய வேறு ரகத்தைச் சேர்ந்தவர்கள்; இவர்கள் எல்லாரும் உயிர் துறந்த தியாகிகள்; விக்கிரகங்களை உடைத்து எறிந்து, சீசர்களுக்கு எதிராக நின்றவர்கள்; அதனால் சித்திரவதைக்கு இலக்காகி, கம்பில் கட்டி நெருப்பில் இடப்பட்டவர்கள்; உயிருடன் தோலையுரித்து வதைக்கப் பட்டவர்கள்.

" ஐநூறு ரூபிள் லாபம் கிடைக்கும் அளவுக்கு இந்த வீட்டை விற்பதற்கு ஆண்டவன் எனக்கு உதவி செய் வாரானால், பிராணத் தியாகி நிக்கோலாய்க்கு நான் ஒரு ஆராதனை நடத்துகிறேன் '' என்று சில சமயங்களில் என் தாத்தா விருப்போடு சொல்வார்.

இதைக் கேட்டதும் என் பாட்டி நகைத்துவிட்டு "முட்டாள் கிழவர்! இவருடைய வீட்டை விற்றுக்கொடுப்பதைத் தவிர வேறு நல்ல காரியம் அடியார் நிக்கோலாய்க்கு இல்லை என்பதாக இவர் எண்ணிக்கொண் டிருக்கிறார்."

தன் கைப்பட குறிப்புகள் எழுதி என் தாத்தா வைத்திருந்த 'காலண்டரை' நான் பல வருடங்கள் வைத்திருந்தேன். அன்னா தினத்துக்கும் லோச்சிம் தினத்துக்கும் எதிரில் சிவப்பு மையால் கீழ்வரும் வாசகத்தை அவர் எழுதி வைத்திருந்தார்:

"தங்களுடைய கருணையால் பேராபத்திலிருந்து காக்கப் பெற்றவர்கள்" என்று.

அந்தப் பேராபத்து என்ன என்பது எனக்கு நினைவு இருக்கிறது. தன் உதவாக்கரைப் புதல்வர்களுக்குப் பணம் கடனாகக் கொடுக்கும்பொழுது, விலை மதிப்புள்ள பல்வகையான பொருள்களை அடமானம் வாங்கிக்கொண்டு, என் தாத்தா கடன் கொடுத்துவந்தார். இதை யாரோ போலீசாருக்கு அறிவித்து விட்டார்கள். ஓர் இரவு போலீஸ்க்காரர்கள் வந்து எங்கள் வீட்டைச் சோதனை போட்டார்கள். பெரிய சந்தடி உண்டாயிற்று; முடிவு இன்பமயமாக முடிந்தது. சூரியன் உதயம் ஆகும்வரை என் தாத்தா பிரார்த்தித்துக் கொண்டிருந்தார். பொழுது புலர்ந்ததும் அந்த வார்த்தைகளைக் காலண்டரில் என் முன்னிலையில் என் தாத்தா எழுதி வைத்தார்.

இரவுச் சாப்பாட்டுக்கு முன்னர் பிரார்த்தனைப் பாமாலையை எடுத்து என்னை அவர் படிக்கச் சொல்வார்; அல்லது யெப்ரெம் சிரினின் கனத்த புத்தகத்திலிருந்து படிக்கச் சொல்வார். சாப்பாட்டுக்குப் பிறகு தனது பிரார்த்தனையைத் தொடங்குவார். அமைதியான மாலை வேளையில், ஒரே விதமான வார்த்தைகளைத் திரும்பத் திரும்பச் சொல்லி,

பச்சாதாபப்பட்டு வருந்தும் பிரார்த்தனையைத் தொடங்கு வார்.

" இறவாத, கருணைமயமான அரசே ! கொடுப்பவரும் நீரே ; கொடுத்ததைத் திரும்ப எடுத்துக்கொள்பவரும் நீரே... ஆசைகாட்டி எங்களை மயங்கச் செய்யாதேயும் ; தீயவர்களிட மிருந்து எங்களைக் காப்பாற்றும். நான் செய்த பாபங்கள் நான் கொட்டும் கண்ணீரிலே கரைந்து போகட்டும்."

அடிக்கடி என் பாட்டி இப்படிச் சொல்லிக்கொள்வாள்.

" எனக்கு எவ்வளவோ களைப்பாய் இருக்கிறதே ! இரவுப் பிரார்த்தனையைக்கூடச் சொல்லாமல், நான் படுக்க வேண்டும் போல் தோன்றுகிறதே !" என்பாள்.

மாதா கோவிலுக்கு என் தாத்தா என்னை அழைத்துப் போவார் ; சனிக்கிழமைகளில் மாலைப் பிரார்த்தனைக்கும் ஞாயிற்றுக்கிழமைகளில் பொதுப்பிரார்த்தனைக்குப் பின்னரும் அழைத்துப் போவார். மாதா கோயில்களிலும் ஜனங்கள் கடவுளை எப்படிப் பிரார்த்தித்தார்கள் என்பதை என்னால் சொல்ல முடியும். புரோகிதனும் உதவிப் புரோகிதனும் என் தாத்தா வணங்கும் கடவுளை வணங்கினார்கள் ; ஆனால் பிரார்த் தனைப் பாமாலை பாடுபவர்களோ என் பாட்டி வணங்கும் தெய்வத்தைப் பாடினார்கள்.

குழந்தைப் பிராயத்தில் இரு கடவுள்களையும் என் மனம் ஒரு குருட்டாம் போக்காக எப்படிச் சித்தரித்தது என்பதை ஒருவாறு நான் தெரிவித்துவிட்டேன். குருட்டாம் போக் கான இந்தப் பாகுபாடு பிற்காலத்தில், என் உள்ளத்தில் ஆத்மீகப் பூசல்களுக்கு இடம் அளிப்பதாக ஆகிவிட்டது. யாரிடமும் அன்பு செலுத்தாத, யாரையும் சந்தேகக் கண் ணுடன் முறைத்துப் பார்க்கும் என் தாத்தாவின் கடவுளை எனக்குப் பிடிக்கவில்லை ; அவரிடம் எனக்கு அச்சமாய் இருந்தது. மனிதனிடமுள்ள தீயவற்றையும் கெட்டவற்றை

யும் கிளறிவிடுவதிலேயே அவருக்கு முக்கிய விருப்பம் இருப்பதாக எனக்குத் தோன்றியது. ஜனங்களை அவர் நம்பவில்லை என்பதும் அவர்கள் பச்சாதாபப்பட்டு வருந்த அவர் காத்து இருக்கிறார் என்பதும் ஜனங்களைத் தண்டிப்பதில் அவர் மகிழ்ச்சிகொள்கிறார் என்பதும் தெளிவாகத் தெரிந்தன.

அந்தக் காலத்தில் முக்கியமாக என் மனது ஆண்டவனைப் பற்றிய சிந்தனையிலேயே சுழன்றது ; வாழ்க்கையில் நான் கண்ட அழகு அது ஒன்றுதான். மற்றவை எல்லாம் கொடுமையும் அசுத்தமும் நிறைந்து, எனக்கு வெறுப்பையும் கவலையையும் ஊட்டின. என் பாட்டி வணங்கும் கடவுள் சகல ஜீவராசிகளுக்கும் நண்பராக விளங்கினார் ; எனது சூழ்நிலை முழுவதிலும் அது ஒன்றுதான் பிரகாசம் பொருந்தியதாகவும் சிறந்ததாகவும் எனக்குத் தோன்றியது. ஆண்டவன் செய்ய வேண்டிய நன்மைக்கு என் தாத்தாவின் கடவுள் ஏன் கண்ணை மூடிக்கொள்கிறார் என்பது எனக்கு இயல்பாகவே புரியாமல் இருந்தது.

இத்தகைய உணர்ச்சி என் உள்ளத்தில் அதிகமாக இருந்தபடியால், தெருவில் விளையாடுவதற்கு அவர்கள் என்னை அனுமதிக்கவில்லை. அந்த இடத்தில் கண்ட காட்சிகளைக்கொண்டு நான் போதை வயப்பட்டவன்போல் விளையாடினேன். அடிக்கடி சச்சரவுக்கோ குழப்பத்துக்கோ நான்தான் காரணமாக இருந்தேன். எனக்கு நண்பர்கள் எவரும் இல்லை. அண்டை வீட்டுக் குழந்தைகள் என்னிடம் பகைமை பாராட்டினார்கள். காஷ்ரீன் குடும்பத்தினன் என்று என்னை அழைப்பதை நான் வெறுத்தேன். இதை அறிந்துகொண்ட அவர்கள், இந்தப் பெயரையே ஒருவருக்கு ஒருவர் இரைச்சலிட்டுச் சொல்லிக்கொள்ளத் தொடங்கினார்கள்.

“ கருமி காஷ்ரீன் பேரன் இதோ வருகிறான் ; அவனைப் பாருங்கள் !” என்று சொன்னார்கள்.

" அவனைக் கீழே தள்ளுங்கள்."

இதிலிருந்து சண்டை ஆரம்பமாகும்.

என் வயதுக்கு ஏற்ற பலத்தைக் காட்டிலும் நான் அதிக பலசாலியாக இருந்தேன். நன்றாகச் சண்டைபோடும் திறனும் எனக்கு இருந்தது. இது என் பகைவர்களுக்குமே தெரியுமாதலால், ஒருபோதும் தனித்து வந்து அவர்கள் என்னுடன் சண்டை செய்வது இல்லை. இருந்தும் அவர்களுடன் சண்டை போடும் காலத்து என்னை அவர்கள் நையப் புடைத்துவிடுவார்கள். உதடுகள் காயமடைந்தும் ஆடைகள் கிழிந்தும் மூக்கில் ரத்தம் சொட்ட நான் வீடு திரும்புவது வழக்கம்.

என் பாட்டி பரிதாபத்தோடும் பயத்தோடும் என்னைச் சந்திப்பாள்.

"கேடுகெட்ட சின்னப் பயலே! மீண்டும் சண்டை போடத் தொடங்கிவிட்டாயா? என்ன செய்கிறேன் என்பதைப் பார். எதைத்தான் செய்வது?" என்று சொல்வாள்.

என் முகத்தைக் கழுவிவிட்டு அதில் ஒரு நாணயத்தை வைப்பாள்; இல்லாது போனால் சில பூண்டுகளை வைப்பாள். காயங்களுக்கு மருந்து தடவிவிடுவாள்.

"எதற்காக நீ இப்படி எல்லாம் சண்டை போடுகிறாய்? வீட்டில் சாந்தமான பிள்ளையாய் இருக்கிறாய். தெருவுக்குப் போனாலோ பிசாசாகவே மாறிப் போகிறாய்? அவமானம்! இனி உன்னை வெளியே விடாது கவனித்துக்கொள்ளும்படி உன் தாத்தாவிடம் சொல்லுகிறேன்" என்றாள்.

என் உடம்பில் வீக்கங்களும் காயங்களும் இருப்பதை என் தாத்தா கவனித்து இருக்கிறார் எனினும், அவற்றுக்காக அவர் ஒருபோதும் கோபப்பட்டுக்கொண்டது கிடையாது. "மீண்டும் உனக்கு மெடல்கள் கிடைத்துவிட்டனவா?

வீராதிவீரன் ! மீண்டும் உன்னைத் தெருவில் காணநேர்ந்தால் என்ன செய்வேன் தெரியுமா?'' என்று முணுமுணுப்பார்.

தெருவில் அமைதி நிலவும் காலத்தில் அங்கே போவதற்கு நான் பிரியப்படுவது இல்லை. ஆனால் சிறுவர்களின் மகிழ்ச்சிகரமான குரல் காதில் விழவேண்டியதுதான் தாமதம். என் தாத்தா செய்துள்ள எச்சரிக்கையையும் மறந்து முற்றத்திலிருந்து தெருவுக்கு நான் ஓடிவிடுவேன். வீக்கங்களையும் காயங்களையும் நான் பொருள்படுத்துவது கிடையாது. ஆனால் சிறுவர்களின் முரட்டு விளையாட்டுகளை என்னால் பொறுத்துக்கொள்ள முடிவது இல்லை. நான் அடிக்கடி பார்த்து வந்த இந்த முரட்டு விளையாட்டுகள் என்னைப் பைத்தியம் பிடித்தவன்போல் ஆக்கிவிடும். நாய்களை ஒன்றுடன் ஒன்று மோத விடுவது, சேவல் சண்டை விடுவது, பூனைகளைத் துன்புறுத்துவது, யூதர்களுக்குச் சொந்தமான ஆடுகளை அடித்து விரட்டுவது, குடிகாரப் பிச்சைக்காரர்களை அலைக்கழிப்பது, பக்திமான் "இக்கோஷா - சட்டைப் பைக்குள் சாவு'' ஆகியவற்றை என்னால் பொறுமையுடன் பார்த்துக்கொண்டு இருக்க முடிவது இல்லை.

நெட்டையாக வளர்ந்தும், உடம்பில் அழுக்குப் படிந்தும் எலும்பும் தோலுமாக இருந்த முகத்தில் தாடி அரும்பியும் இருந்த ஒருவரை நான் பிற்காலத்தில் சந்திக்கநேர்ந்தது. இவர்தான் இக்கோஷா. இவர் உடம்பு கூனிக் குறுகி இருந்தது; தன் கண்களைத் தரையில் ஊன்றிப் பார்த்தவாறே, ஆட்டுத்தோல் கோட்டை அணிந்துகொண்டு வீதி நெடுகிலும் அவர் செல்வார். துக்கத்தின் சாயல்படிந்த அவருடைய கரிய முகம் பீதியையும் மரியாதையையும் என்னிடம் உண்டு பண்ணின. இந்த மனிதர் ஏதோ ஒரு முக்கியமான காரியத்தில் ஈடுபட்டு இருக்கக் கூடும் என்றும் அவரைத் தடைப்படுத்துவது கூடாது என்றும் எனக்குத் தோன்றியது.

ஆனால் சிறுவர்களோ துரத்திக்கொண்டே ஓடி, அவருடைய கூனல் முதுகில் கல்லைவிட்டு எறிவார்கள். சில சமயம் இதைக் கவனிக்காதவர்போல அவர் இருந்துவிடுவார்; கல்லெறி தன்மீது விழாததுபோல் இருந்துகொள்வார்; பிறகு திடுமென நின்றுகொண்டு, தலையை நிமிர்த்திச் சுற்று முற்றும் பார்ப்பார். தூக்கத்திலிருந்து அரண்டு எழுந்தவர் போல, ரோமம் அடர்ந்த தனது தொப்பியைச் சரிப்படுத்திக் கொள்வார்.

"'சட்டைப் பையில் சாவு' இக்கோஷா! ஏ-இக்கோஷா! எங்கே போகிறாய்? உனது சட்டையைப் பார். அங்கே சாவு இருக்கிறதா இல்லையா என்று தேடிப்பார்" என்று சிறுவர் கூச்சலிடுவார்கள்.

தனது சட்டைப் பையைப் பிடித்துக்கொண்டு, குனிந்து கல்லையோ அல்லது மண்ணாங்கட்டியையோ அவர் எடுப்பார். நீண்ட தனது கையை அவலட்சணமாக அசைத்தாட்டி அவர்களை ஏசுவார். எப்பொழுது திட்டினாலும் அதே மூன்று வார்த்தைகளை மட்டும் சொல்லியே அவர் திட்டுவார். ஆனால் சிறுவர்களின் திட்டுதலோ அளவிட முடியா. சில சமயங்களில் அவர்களை விரட்டிக்கொண்டு நொண்டி நொண்டி ஓடுவார். அப்படி அவர் ஓடும்போது அவர் அணிந்திருக்கும் நீண்ட கோட்டு, தடைப்படுத்தி அவரைக் கீழே தள்ளிவிடும். காய்ந்த குச்சிகள்போல் இருக்கும் தனது கைகளில் தன்னைத் தானே அவர் தாங்கிக்கொள்வார். இந்தச் சமயத்தில் சிறுவர்கள் அவர்மீது கல்லை எடுத்து எறிவார்கள்; தைரியம் சிறிது அதிகமுள்ள சிறுவர்கள் அருகே ஓடி, கைநிறைய மண்ணை அள்ளி அவர் தலைமீது போட்டுவிட்டுத் தப்பித்து ஓடிவிடுவார்கள்.

எங்களிடம் மேஸ்திரி வேலைபார்த்த கிரிகோரி ஐவானேவிச் வீதியில் செல்லும்போது அவனை நடத்துவதைப்

பார்த்தால் அது மிக்க பரிதாபமாய் இருக்கும். கண்கள் முற்றுமே பொட்டையாகிப் போன காரணத்தால், நகர் முழுதும் அலைந்து, பிச்சைவாங்கி, காலத்தையும் பொழுதை யும் அவன் கழித்து வந்தான். அமைதியாகவும் உயரமாகவும் அழகாகவும் இருந்த அவனை, நரைத்த சிறிய கிழவி ஒருத்தி, ஒவ்வொரு ஜன்னலாக அழைத்துப்போய் " ஏசுநாதர்மீது அன்புபூண்டு, இந்தப் பொட்டைப் பிச்சைக்காரனுக்கு உதவுங்கள் " என்று கிறிச்சிட்ட குரலில் கேட்பாள்.

கிரிகோரி ஐவானேவிச் எதுவும்பேச மாட்டான்; அவனு டைய கருப்பு மூக்குக் கண்ணாடிகள் வீட்டின் சுவரையோ அல்லது ஜன்னலையோ அல்லது தான் சந்திக்கிற யாரையுமோ கூர்ந்து கவனிக்கும். ஆனால் அவனோ சாயம்தோய்த்து ஊறின தனது கரங்களால் விரைவாகத் தனது தாடியைத் தடவிவிட்டுக்கொள்வான் ; உதடுகளை மட்டும் இறுக்க மூடிக் கொண்டு இருப்பான். அடிக்கடி அவனை நான் சந்திப்பது உண்டு. இறுக்க மூடிய அவனுடைய உதடுகளிலிருந்து ஒரு சொல்லாவது வெளிப்பட்டதை நான் கேட்டதே இல்லை ; மற்றவற்றைக் காட்டிலும் இதுதான் - அவனுடைய இந்த மௌனம்தான் - என்னை அதிக வேதனையில் ஆழ்த்தியது. நான் ஒருபோதும் அவனை நெருங்கியது கிடையாது ; இது எனக்கு இயலுவது இல்லை ; ஆனால் அவனைக் சந்திக்கும் போது எல்லாம் விரைந்து வீட்டுக்கு ஓடி என் பாட்டியிடம் " கிரிகோரி வருகிறான் " என்று நான் சொல்வது உண்டு.

" ஆ. அப்படியா !" என்று கிளர்ச்சி அடைந்து அவள் வருத்தப்பட்டுக்கொள்வாள். " ஓடிப் போய் இதை அவ னிடம் கொடு " என்பாள்.

நான் முரட்டுத்தனமாக மறுத்துவிடுவேன். எழுந்து வெளியே போய் வாயிலண்டை நின்றவாறு அவனுடன் நீண்ட நேரம் அவள் பேசிக்கொண்டு இருப்பாள். சிரித்துத்

தன் தாடியை அவன் அசைத்துக்கொள்வானே தவிர்த்து, அவளுடன் ஒரு வார்த்தைகூட அவன் பேச மாட்டான்.

சில சமயங்களில் என் பாட்டி அவனை அடுக்களைக்கு அழைத்துப் போய் அவனுக்கு உணவு கொடுப்பாள். ஒரு முறை என்னை எங்கே என்று அவன் விசாரித்தான். பாட்டி என்னைக் கூப்பிட்டாள்; ஆனால் நானோ விறகுக் குவியலுக்குக்குப் பக்கத்தில் சென்று ஒளிந்துகொண்டேன். அவன் முன்னிலையில் இருப்பது பயங்கரமாகவும் நாணமாக இருந்தபடியால், அவனைச் சந்திக்க எனக்கு விருப்பம் உண்டாகவில்லை. இத்தகைய உணர்ச்சி என் பாட்டிக்கும் இருப்பதை நான் தெரிந்துகொண்டேன். ஒரே ஒரு முறை தான் நானும் அவளும் கிரிகோரியைப்பற்றிப் பேசி இருக்கிறோம். வாயிலைக் கடந்து அவன் சென்ற பிறகு, அழுது கொண்டு என் பாட்டி மெதுவாக முற்றத்துக்குத் திரும்பினாள். தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு அழுது சென்ற அவளை அணுகி, அவள் கையை நான் பிடித்துக்கொண்டேன். "அவனைக் கண்டதும் இப்படி ஏன் நீ ஓடி ஒளிந்துகொள்கிறாய்? உன்னை அவன் பெரிதும் நேசிக்கிறான். மிகவும் நல்லவனான அவன்..." என்று மெதுவாகச் சொன்னாள்.

"அவனுக்கு ஏன் உணவு அளிக்கத் தாத்தா விரும்பவில்லை?" என்று நான் அவளைக் கேட்டேன்.

"தாத்தாவா?"

அவள் என்னைத் தன் அருகே இழுத்துக்கொண்டு தீர்க்கதரிசனம் வாய்ந்த இந்த வார்த்தைகளைச் சொன்னாள்:

"நான் கூறும் வார்த்தைகளை நினைவில் இருத்திக்கொள். இதற்காக ஆண்டவன் நம்மைக் கடுமையான முறையில் தண்டிக்கப் போகிறார்! கடுமையான தண்டனை கிடைக்கப் போகிறது" என்றாள்.

அவள் நினைத்தது தவறவில்லை. பத்து ஆண்டுகளுக்குப் பின்னர், என் பாட்டி காலமான பிறகு, பித்துப்பிடித்த என் தாத்தா, நகரத்துத் தெருக்களில் வீடு வீடாக அலைந்து பிச்சை கேட்டுக்கொண்டு திரிந்தார். "நல்லவர்களே! பிரோக் ரொட்டியில் ஒரு துண்டு போடுங்கள்; ஒரு சிறு துண்டு போட்டால் போதும்...பூ இப்படியும் ஒரு ஜனங்களா!" என்று சொல்லிப் பிச்சை கேட்டு அலைந்தார்.

"பூ! இப்படி ஒரு ஜனங்களா!" என்ற வேதனை தரும் நெஞ்சைப் பிளக்கும் இந்த வார்த்தைகள் மட்டும்தான் அவரிடம் எஞ்சி நின்றன.

இக்கோஷா, கிரிகோரி ஐவானேவிச் இவர்களுடன்கூட, சீர்கெட்ட கிழவி வோரோனிகாவும் வருவாள். தெருவில் அவளைப் பார்த்ததுமே நான் அப்பால் ஓடியே போய்விடுவேன். ஞாயிற்றுக்கிழமைதோறும் அவள் காட்சி அளிப்பாள். போதையுடனும் சீர்குலைந்தும், பரட்டையாகத் தலையைப் போட்டுக்கொண்டும் தடித்த ஆகிருதியுடனும் காட்சி அளிப்பாள். கால்கள் பூமியில் படாதவாறும், தரையைத் தொட விரும்பாதவள் போலும் அவள் விசித்திரமாக நடப்பாள்; காமதூரமான பாடல்களைக் கிறீச்சிட்ட குரலில் கத்திக்கொண்டு, மேகத்தைப்போல அவள் சஞ்சரிப்பாள். அவளைக் கண்டதும் ஜனங்கள் கடைகளிலும் மூலை முடுக்குகளிலும் வேலிகளிலும் ஓடி ஒளிந்துகொள்வார்கள்; தெருவை அவள் சுத்தமாகப் பெருக்குவாள்; நீல நிறத்தில் பலூனைப் போல உப்பி இருக்கிற அவளுடைய சாம்பல் நிறக் கண்கள் பயங்கரமாக வெளியே தொறுத்திக்கொண்டு தெரியும். சில சமயங்களில் "என் குழந்தைகள் எங்கே? எங்கே?" என்று ஓலமிட்டுக்கொண்டே அவள் வருவாள்.

"இப்படி இவள் கூறுவதன் பொருள் என்ன?" என்று ஒரு முறை நான் என் பாட்டியைக் கேட்டேன்.

"இதைப் பற்றி நீ தெரிந்துகொள்ள வேண்டியது இல்லை" என்று முதலில் சொல்லிவிட்டு, பிறகு சில வார்த்தைகளால் அதை எனக்குச் சொன்னாள். வோராநாவ் என்ற அவளுடைய கணவன் அதிகாரியாக இருந்து வந்தானாம். உயர்பதவியை அடைவதற்காகத் தன் மனைவியை மேல் அதிகாரிக்கு அவன் விற்றுவிட்டானாம். அந்த அதிகாரி அவளை வேறு ஒரு இடத்துக்கு அழைத்துப்போய் இரண்டு ஆண்டுகள் வைத்திருந்தானாம். அவள் திரும்பிவந்தபோது அவளுடைய இரு குழந்தைகளும் - ஒரு ஆணும் ஒரு பெண்ணும் - இறந்துபோய்விட்டனவாம். பொதுப்பணத்தை எடுத்துச் சூதாடினபடியால், அவள் கணவன் சிறையில் இருக்கிறானாம். இந்தக் கவலையை மறப்பதற்காக அவள் குடித்தும் காமவாழ்க்கையில் ஈடுபட்டும் வருகிறாள். ஆகையால் ஞாயிற்றுக்கிழமைதோறும் வீதிகளில் நடமாட முடியாதபடி போலீஸார் அவளை அழைத்துப்போகிறார்கள்.

தெருக்களைக்காட்டிலும் வீடு சிறந்தது என்பது சந்தேகமற்ற விஷயம். சாப்பாட்டுக்குப் பிறகு அம்மான் யாக்கோவைச் சந்திப்பதற்காக என் தாத்தா போய்விடுவார்; என் பாட்டியோ ஜன்னல் அருகே அமர்ந்து கதைகள் கூறுவாள்; என் தகப்பனாரைப்பற்றியும் கூறுவாள். இவற்றைக் கேட்பதற்கு மிகவும் பிரியமாக இருக்கும்.

பூனையின் பிடியிலிருந்து காப்பாற்றின பறவையின் ஒடிந்து தொங்கிய இறக்கையை அவள் கத்தரித்துவிட்டாள். பறவையின் காலில் கெட்டிக்காரத்தனமாக ஒரு சிறு குச்சியைப் பொருத்தி வைத்திருந்தாள். இப்பொழுது குணமடைந்துள்ள அந்தப் பறவைக்கு என் பாட்டி கற்றுக் கொடுக்கத் தொடங்கினாள். ஜன்னல் இடைவெளியில் தொங்கும் பறவைக் கூண்டின் முன்னர்போய் நின்று தான் கற்றுக்

கொடுக்க விரும்பிய வார்த்தைகளைத் திரும்பத் திரும்ப அதற்குச் சொல்லிக்கொண்டு இருப்பாள்.

"'வந்து, பறவைக்கு இப்பொழுது கொஞ்சம் கூழ் வேண்டும்' என்று சொல்" என்பாள்.

பழமொழியில் வருகிற விகடன்போல, தனது உருண்டைக் கண்களால் அந்தப் பறவை என் பாட்டியைப் பார்க்கும். தனது மரக் காலைத் தூக்கி, கூண்டின் தரையில் அடிக்கும். 'ஓரியல்' பறவையைப்போல சீட்டி அடிக்கும்; குயிலைப்போலவும் 'ஜே' பறவையைப்போலவும் கத்தத் தொடங்கும்; பூனையைப்போன்று 'மியூ மீயூ' என்று கத்தும்; அல்லது நாயைப்போல குலைத்துப் பார்க்கும். ஆனால் மனிதனைப்போன்று பேசுவதற்கு அது மிகவும் சிரமப்பட்டது.

"இந்த அசட்டுத்தனம் எல்லாம் போதும்" என்று என் பாட்டி அதைக் கடுமையாகக் கோபித்துக்கொள்வாள்; "பறவைக்கு இப்போது கொஞ்சம் கூழ் வேண்டும் என்ற வார்த்தைகளைச் சொல்லிப் பார்" என்று அதைக் கோபித்துக் கொள்வாள்.

இறக்கை முளைத்த இந்தக் குரங்கு என் பாட்டி கூறின வார்த்தைகளுக்கு இயையக் கிரீச்சிட்டு ஏதோ கத்திவிட்டால் போதும்; மகிழ்ச்சி தாங்காது என் பாட்டி சிரித்து விடுவாள்; ஓட்டரிசிக் கஞ்சியை எடுத்துத் தன் கையாலே அதற்கு ஊட்டுவாள்.

"சரியான பித்தலாட்டம் உடைய பறவை நீ என்பது எனக்குத் தெரியும்!" என்று அதைக் கடிந்துகொள்வாள். "உனக்கு எது எது பிரியமோ அதை எல்லாம் சொல்லு" என்பாள்.

பேசுவதற்கு உண்மையாகவே அதற்கு அவள் கற்றுக் கொடுத்தாள். கொஞ்ச காலத்துக்குப் பின்னர், தனக்குக் கஞ்சி வேண்டும் என்று அது சுத்தமாகக் கேட்கத் தொடங்

கியது. இதைப் பார்த்ததும் "ஹல்லோ" என்ற வார்த்தையை நிகர்த்த ஏதோ ஒரு வார்த்தையைச் சொல்லி என் பாட்டி மகிழ்ச்சியால் ஆர்ப்பரித்தாள்.

முதலில் இந்தப் பறவை என் தாத்தாவின் அறையில் தொங்கிக்கொண்டு இருந்தது. என் தாத்தாவைப் போலவே அதுவும் பேசத் தொடங்கியதால், என் தாத்தா அதை எங்கள் மாடி அறையில் கட்டித் தொங்கவிடும்படி செய்து விட்டார். மிகச் சுத்தமாகவும் தெளிவாகவும் பிரார்த்தனை வார்த்தைச் சொல்லி என் தாத்தா பிரார்த்திப்பார். கூண்டுக் கம்பிகளின் வழியாகத் தனது மஞ்சள்நிற மூக்கை நீட்டிக் கொண்டு அந்தப் பறவை பேசத் தொடங்கும்.

"உண்மை, உண்மை; ஓகோ மிகவும் உண்மை!" என்று அது சொல்லும்.

இதை என் தாத்தா குற்றமாக எடுத்துக்கொண்டுவிட்டார். ஒரு நாள் என் தாத்தா பிரார்த்தனை செய்வதை அப்படியே நிறுத்திவிட்டு, தரைமீது ஓங்கி மிதித்து கோபத்தோடு கீழ்வருமாறு சொன்னார் :

"இந்தப் பிசாசை வேறு எங்காவது கொண்டுபோய்த் தொங்கவிடுங்கள் ; இல்லாது போனால் இதை நான் கொன்று போடுவேன்" என்று உறுமினார்.

எங்கள் இல்லத்தில் மகிழ்ச்சியும் வேடிக்கையும் தரும் அனேக விஷயங்கள் நடந்தன. இருந்தாலும் வேறு எங்காவது போய்விட வேண்டும் என்று சில சமயங்களில் நான் விரும்பியது உண்டு. ஏதோ ஒரு பெரிய சுமை என்னை அழுத்துவதுபோல எனக்குத் தோன்றியது. பார்க்கவும் முடியாமல் கேட்கவும் முடியாமல் உணரவும் முடியாமல், சாயக் குழியின் அடியில் நான் வாழ்ந்துகொண் டிருந்தேன். பொட்டையன்போலவும் பாதி உயிருடன் இருப்பவன் போலவும் வாழ்ந்தேன்.

## 8

முற்றும் எதிர்பாராத வகையில், கண்ணுடிக் கடைக் காரனுக்கு நாங்கள் இருந்த வீட்டை என் தாத்தா விற்று விட்டார். அதை விற்றுவிட்டு, கனுட்நாயாத் தெருவில் வேறு ஒரு வீடு விலைக்கு வாங்கினுர். இந்தத் தெரு அமைதி யாகவும் சுத்தமாகவும் இருந்தது. ஆனுல் கற்கள் பாவாமல் புல் மண்டிக் கிடந்தது. வீட்டைவிட்டு இறங்கினுல் வயலில் தான் நடக்கும்படியாக இருந்தது. பிரகாசமாக வர்ணம் பூசப் பெற்ற சிறிய சிறிய வீடுகள் வரிசையாக இருந்தன.

பழைய வீட்டைக் காட்டிலும் புது வீடு மகிழ்ச்சிகர மாயும் இன்பம் பயப்பதாயும் இருந்தது. தலைவாயிலில் கரும் சிவப்பு வர்ணம் பூசப்பட்டு இருந்தது. இந்தப் பகைப்புலத் தில் ஜன்னல்கள் மூன்றின் நீல நிறக் கதவுகளும் பூவேலை செய்யப்பெற்ற மாடி ஜன்னலின் கதவுகளும் துலாம் பரமாகக் காட்சி அளித்தன. வலப்புற முகட்டின்மீது இலு மிச்சை, எல்ம், ஆகியவற்றின் கிளைகள் தழுவிக்கொண்டு கிடந்தன ; முற்றத்தில் மனத்துக்கு இனிய பல மூலைகளும் தோட்டமும் இருந்தன. ஓடி ஒளிந்து விளையாடுவதற்கா கவே அமைத்துள்ள தோட்டம்போல அந்தத் தோட்டம் இருந்தது. மிகப் பெரியதாக இல்லை என்றுலும் அந்தத் தோட்டம் மனத்துக்கு இன்பம் பயப்பதாய் இருந்தது. மனத் தைக் கவரும் செடிகொடிகள் நிறைய மண்டிக்கிடந்தன. ஒரு மூலையில் விளையாட்டுப் பொம்மையின் அழகும் கச்சிதமும் வாய்ந்த குளிக்கும் அறை ஒன்று இருந்தது. அதற்கு எதிர் மூலையில் ஆழம் அதிகம் இல்லாத அகலமான குழி ஒன்று இருந்தது. அதில் புல் பூண்டுகள் முளைத்திருந்தன. முந்தி

யிருந்த குளிக்கும் அறையின் எஞ்சிய தீய்ந்துபோன பகுதிகள் தொறுத்திக்கொண்டிருந்தன. தோட்டத்தின் இடப்புறத்தில் கர்னல் ஒருவரின் லாயங்கள் இருந்தன. அதற்கு வலப்புறத்தில் பெட்லவ் குடும்பத்தாருக்குச் சொந்தமான துணை வீடுகள் இருந்தன. கடைக்கோடியில் பால்க்காரி பெட்ரோவ்னுவுக்குச் சொந்தமான வீடு இருந்தது. சிவந்த முகமும் பருத்த உடலும் படைத்த பெரிய மணியைப்போன்ற தோற்றமுடைய இவள், எப்பொழுதும் இரைச்சல் போட்டுக் கொண்டே இருப்பாள். கறுப்பாகவும் நெளிந்தும் வளைந்தும் இருந்த அவனுடைய சிறிய வீடு, பூமியில் சரியாகப் பதிந்து விட்டது. எங்கும் பாசியும் களானும் படர்ந்து இருந்தன. அதிலிருந்த இரண்டு ஜன்னல்கள் வயலைப் பார்த்துக்கொண்டு இருந்தன. ஆழமான ஜலதாரைகள் அதைத் தோண்டிக் கொண்டு சென்றன. தொலைவில் இருக்கிற காட்டின் நீலநிறத் தோற்றம் அதற்குக் கரைபோட்டு இருப்பதுபோல் தெரிந்தது. இலையுதிர் காலத்து சூரிய ஒளிபோல வெள்ளை நிறத்தில் தங்கள் வாள்கள் பிரகாசிக்க, போர்வீரர்கள் நாள் முழுதும் அங்கே 'கவாத்து' பழகிக்கொண்டு இருந்தார்கள்.

இதுவரை நான் பார்த்திராத ஜனங்கள் எங்கள் வீட்டுக்கு வந்து போனார்கள். முன்னுள்ள பகுதியில் தாத்தாரி இனத்தைச் சேர்ந்த ராணுவ அதிகாரி ஒருவர் இருந்தார். உருண்டு சிறியவளாக இருந்த அவருடைய மனைவி கூச்சலிட்டுச் சிரித்து உல்லாசமாய் அலங்கரிக்கப்பெற்ற சித்தாரை எடுத்துவைத்து, காலையிலிருந்து மாலைவரை பாடிக்கொண்டு இருப்பாள். கணீர் என்ற தனது குரலில் அவள் அடிக்கடி விருப்பத்துடன் பாடும் பாடல் ஆகும் இது :

*உன்னை நிந்திக்கிற ஒருத்தியை நீர் காதலிப்பதா ?*

*அது கூடவே கூடாது ; நீர் புத்திமானுய் இருப்பின், வேறு ஒரு பெண்ணை நாடிச் செல்லும்.*

உமது முயற்சியால் உமக்கு வெற்றி கிட்டும்.
உமக்குக் கிடைக்கும் பெண் முத்தைப்போல் இருப்பாள்!
ம்-ம்-ம் மிக அ-அ-அற்புதமான முத்தாக இருப்பாள்!

இவளுடைய கணவர் பந்தைப்போன்று உருண்டையாக இருந்தார். ஜன்னல் அருகே அமர்ந்து அவர் புகைப் பிடித்துக் கொண்டு இருப்பார்; அவருடைய நீல நிறக் கன்னங்கள் உப்பலாகத் தெரியும். மகிழ்ச்சி பிரதிபலிக்கும் தனது பழுப்பு நிறக் கண்களை அவர் உருட்டி உருட்டி விழிப்பார்; நாய் குரைப்பதைப் போன்று 'ருப் ருப்' என்று விநோதமான முறையில் அவர் இறுமுவார்.

பார வண்டி இழுப்பவர்கள் இருவரும் வாலே என்ற பெயருடைய, உயரமான, முகவாட்டமுள்ள தாத்தாரிச் சேவகன் ஒருவனும் பண்டகசாலைக்கும் லாயத்துக்கும் மேலே கதகதப்பான பகுதிகளில் வசித்தனர். பார வண்டிக் காரர்களில் ஒருவன் சிறியவனாயும் நரைத்துப் போயும் இருந் தான். அவனை மாமா பீட்டர் என்று அழைத்தார்கள். மற் றொருவன் அவனுடைய மருமகன்; பெயர் ஸ்டியோபா; செவிடனாயும் ஊமையனாயும் இருந்தான். ஸ்டியோபா பருத் தும் மென்மையாயும் இருந்தான்; அவனுடைய முகம் பித்த ளைத் தாம்பாளம்போல் இருந்தது. இவர்கள் எல்லோரும் எனக்குப் புதியவர்களாயும் சாத்தியக்கூறுகள் நிறைய உடையவர்களாயும் தென்பட்டார்கள்.

"இது மிக நேர்த்தி" என்ற பட்டப் பெயர் பெற்ற ஒருவர் அங்கே சாப்பிட்டுக்கொண்டு வசித்தார்; மிக்க இத மான மனிதராக இவர் எனக்குத் தோன்றினார். வீட்டின் புழக்கடையில் இருந்த அடுக்களைக்குப் பக்கத்து அறையில் இவர் வசித்தார். இவர் வசித்த அறை நீண்டதாயும் இரண்டு ஜன்னல்கள் உடையதாயும் இருந்தது. ஒரு ஜன்னல் தோட்

டத்தை நோக்கியும் மற்ருெரு ஜன்னல் முற்றத்தை நோக்கி யும் இருந்தது.

இந்த விடுதிவாசி உயரமாயும் கூனியும் இருந்தார். கல கலப்பாக இருந்த இவருடைய கரிய தாடி, இவர் முகத்தின் வெளிறிய தன்மையை அதிகப்படுத்திக் காட்டியது. அன் பைப் பிரதிபலிக்கும் தனது கண்களில் இவர் கண்ணுடிகள் போட்டு இருந்தார். பொதுவாக, எதிலும் தலையிட்டுக் கொள்ளாமல் ஒதுங்கி அமைதியாக இருந்தார். சாப்பாடோ அல்லது தேநீரோ தயாராகிவிட்டது என்று இவரிடம் தெரி வித்தால் " இது மிக நேர்த்தி " என்று இவர் பதில் சொல்வார்.

அவர் போன பின்னரும் சரி, இருக்கும்போதும் சரி, " இது மிக நேர்த்தி " என்று என் பாட்டி இவரை அழைப் பாள்.

" அலெக்ஸி! நீ சென்று 'இது மிக நேர்த்தியை' தேநீர் சாப்பிட அழைத்து வா " என்று சொல்லுவாள். இல்லாதுபோனல் " இது மிக நேர்த்தி! இன்னும் கொஞ்சம் சாப்பிடு! நீ அதிகம் சாப்பிட மாட்டேன் என்கிருயே " என்பாள்.

இவருடைய அறையில் மரப் பெட்டிகளும் மதச் சார் பற்ற புத்தகங்களும் நிறைய அடுக்கிவைக்கப்பட்டு இருந்தன. இத்தகைய புத்தகங்களை இதற்கு முன்பு நான் பார்த்தது கிடையாது.

நானுவித நிறங்கள் கொண்ட திரவம் அடைத்த போத் தல்கள் வரிசை வரிசையாக வைக்கப்பட்டு இருந்தன. இரும்பு, செப்புத் தகடுகளும் ஈயக்கட்டிகளும் இருந்தன. எப்பொழுதுமே பழுப்பு நிறத் தோல் ஜாக்கெட்டை அவர் அணிந்து இருந்தார். அவருடைய கால் சராய்கள் சாம்பல் நிறத்தில் இருந்தன; அதில் பல்வகையான வர்ணப் புள்ளிகள்

இருந்ததோடு மனத்துக்குப் பிடிக்காத ஒருவித நெடியும் அடிக்கும். காலையிலிருந்து இரவுவரை நின்றுகொண்டு அவர் ஈயத்தை உருக்குவார்; செம்பைப் பற்றவைப்பார். தனது சிறிய தாராசில் எதையோ நிறுப்பார்; விரல்களைச் சுட்டுக் கொண்டு ஊதிக்கொண்டு முணங்குவார். சுவரில் தொங்கும் வரிவடிவப் படங்களைப் பார்த்துக்கொண்டு நிற்பார். தனது மூக்குக் கண்ணாடியைத் துடைத்துக்கொண்டு, வரிவடிவப் படங்களைக் கூர்ந்து கவனிப்பார்; சுண்ணாம்புக்கட்டி போன்ற தனது மூக்கைப் படத்தை ஒட்டி வைத்துக்கொண்டு கவனிப் பார். சில சமயங்களில் அறையின் நடுவிலோ அல்லது ஜன்ன லுக்குப் பக்கவாட்டிலோ போய் நின்று அசையாமல் நீண்ட நேரம் கண்களை மூடிக்கொண்டு நிற்பார். தலையை அசைக்கா மலும் மௌனமாகவும் நிற்பார்.

முற்றத்தின் குறுக்கேயிருந்த கூடத்தின் முகட்டின் மீது ஏறிக்கொண்டு, திறந்து கிடக்கும் ஜன்னல் வழியாக அவரை நான் கவனித்தேன். மேஜைமீது 'அல்கஹால்' விளக்கு நீலநிறச் சுடர்விட்டு எரிந்துகொண்டு இருந்தது. அவருடைய கரிய உருவம் குனிந்து அதைப் பார்த்துக் கொண்டு இருந்தது. கிழிந்த நோட் புத்தகம் ஒன்றில் அவர் எதையோ எழுதினர். நீல நிறப் பனிக்கட்டித் துண்டுகள் போல, அவருடைய மூக்குக் கண்ணாடிகள் சலிப்போடு பிரகாசித்தன. இந்த மனிதருடைய மாயாஜால நடத்தை, முகட்டின்மீது மணிக்கணக்கில் என்னை இருக்கச் செய்து விடுவது உண்டு; அவர் செய்கிற விநோதங்களைக் காண என் உள்ளம் வேதனைப்பட்டுத் தவிக்கும்.

சில சமயங்களில் சட்டம்போட்ட ஜன்னல் அருகே நின்றுகொண்டும் கைகளைப் பின்புறமாகக் கோத்துக்கொண் டும் முகட்டை உற்றுக் கவனிப்பவர்போலவும் என்னைக் கவனிக்காதவர்போலவும் நிற்பார்; இது என் மனத்தை

உறுத்திவிடும். பிறகு திடும் என மேஜைக்குத் திரும்பச் சென்று, நன்ருகக் குனிந்துகொண்டு அதன்மீது கிடக்கும் பொருள்களையும் காகிதங்களையும் கிளறிப் பார்ப்பார்.

பணக்காரராயும் சிறந்த உடைகள் தரித்திருப்பவராயும் இருந்திருப்பின், இவரைக் கண்டு நான் பயந்துபோயே இருப்பேன். ஆனல் இவரோ ஏழையாய் இருந்தார். இவருடைய சட்டைக் காலர் அழுக்கடைந்தும் சுருங்கியும் இருந்தது ; இவர் அணிந்திருந்த தோல் ஜாக்கெட்டுக்கு வெளியே தெரிந்தது ; கால்சட்டைகள் கறை படிந்தும் ஒட்டுப்போட்டும் இருந்தன. வெறும் காலில் இவர் மாட்டியிருந்த பூட்ஸ்கள் தேய்ந்துபோய் போட்டுக்கொள்வதற்கு லாயக்கற்றவையாக இருந்தன. அச்சப்படத்தக்கதோ அல்லது அபாயகரமான எதுவுமோ ஏழை மக்களிடம் இராது. என் தாத்தா ஏழை மக்களிடம் வெறுப்புக்காட்டியதிலிருந்தும், என் பாட்டி அவர்கள்பால் இரக்கம் காட்டியதிலிருந்தும் இதை நான் தெரிந்துகொண்டேன்.

எங்கள் வீட்டில் இருந்தவர்களில் " இது மிக நேர்த்தியை " ஒருவருக்கும் பிடிக்கவில்லை. எல்லோரும் அவரை ஏளனமாகக் குறைத்துப் பேசினர்கள். போர்வீரனுடைய வேடிக்கைக்கார மனைவி அவரை " சுண்ணும்பு மூக்கன் " என்று அழைத்தாள். ரசாயன சாஸ்திரி என்றும் மந்திரவாதி என்றும் மாமா பீட்டர் அழைத்தார். ஆனல் என் தாத்தாவோ அவரை "மருந்துக் கடைக்காரன்"—அதாவது மாந்தரீகமான பொருள் வியாபாரம் செய்பவன் என்று அழைத்தார்.

" அவர் என்ன செய்துகொண் டிருப்பவர் " என்று ஒரு நாள் என் பாட்டியை நான் கேட்டேன்.

" இதைப்பற்றி எல்லாம் விசாரியாமல் வாயை மூடிக்கொண்டு சும்மா கிட " என்று என் பாட்டி கடிந்துகொண்டு எனக்குப் பதில் சொன்னுள்.

தைரியத்தை எல்லாம் ஒருங்கே வரவழைத்துக்கொண்டு ஒரு நாள் அவருடைய ஜன்னல் அருகே நான் சென்றேன். எனது உணர்ச்சியைக் கொஞ்சம்கூடக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் " நீங்கள் என்ன செய்துகொண் டிருக்கிறீர்கள் ?" என்று அவரை நான் கேட்டுவிட்டேன்.

அவர் புறப்பட்டு வந்து தனது மூக்குக் கண்ணாடிகள் வழியாக நீண்ட நேரம் என்னைக் கவனித்தார். நெருப்புச் சுட்டுக் காயம்பட்ட தனது கையை வெளியே நீட்டி " ஏறி உள்ளே வா " என்று சொன்னார்.

கதவு வழியாக வரச் சொல்லாமல் ஜன்னல் வழியாக அவர் என்னை வரச் சொன்னது, அவரிடம் எனக்கு இருந்த மதிப்பை அதிகரிக்கச் செய்தது. பெட்டிகள் ஒன்றின்மீது அவர் உட்கார்ந்துகொண்டார் ; என்னை அவருக்கு எதிரே அமரச் செய்து, முதலில் ஒரு புறமும் பின்னர் மற்றொரு புறமுமாகத் திரும்பிப் பார்த்துவிட்டு, " நீ எங்கிருந்து வந்திருக்கிறாய் ?" என்று கடைசியாக என்னை அவர் கேட்டார்.

இந்தக் கேள்வி எனக்குப் புதுமையாய் இருந்தது. ஏனெனில் அடுக்களை மேஜையில் அவருக்குப் பக்கத்தில் நாள்தோறும் நான்கு தடவைகள் இருப்பது உண்டு.

" இந்த வீட்டுக்காரருடைய பேரன் நான் " என்று அவருக்கு நான் பதில் சொன்னேன்.

" ஆகா. ஆம் " என்று சொல்லிவிட்டு, தன் விரல்களில் ஒன்றை ஆராய்ந்தபடியே மௌனத்தில் அவர் ஆழ்ந்து விட்டார்.

விஷயத்தை அவருக்கு இன்னும் நன்றாக விளங்க வைக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றியது.

" நான் காஷ்ரீன் குடும்பத்தைச் சேர்ந்தவன் இல்லை ; பெஷ்காவ் குடும்பத்தைச் சேர்ந்தவன் " என்றேன்.

"பெஷ்காவா ?" என்று தவருன முறையில் அந்த வார்த்தையை அழுந்தச் சொல்லிவிட்டு, "இது மிக நேர்த்தி" என்ருர் அவர்.

என்னை அப்பால் தள்ளிவிட்டு எழுந்து, திரும்பவும் மேஜை அருகே அவர் போனுர். "சரி, இங்கே அமர்ந்து கொள் ; சப்தம் எதுவும் போடாதே" என்று சொன்னுர்.

நீண்ட நேரம் உட்கார்ந்து நான் கவனித்துக்கொண்டு இருந்தேன். இடுக்கியால் செப்புத்துண்டு ஒன்றைப் பிடித்துக் கொண்டு ரம்பத்தால் ராவிப் பொடி செய்தார். போதிய அளவு பொடி சேர்ந்ததும், அந்தத் தங்கநிறத் தூளை எல்லாம் ஒரு குவியலாகச் சேர்த்து, அதை ஒரு தடித்த ஜாடிக்குள் அள்ளி வைத்தார். பிறகு ஒரு டப்பாவில் உப்பைப்போல் வெண்மை யாக இருந்த ஒரு பொடியை அள்ளி, தான் ராவின பொடி யோடு சேர்த்து ஏதோ ஒரு கறுப்பு நிறத் திராவகத்தை அதன்மீது ஊற்றினுர். ஜாடியிலிருந்த கலவை உஸ் என்ற சப்தத்துடன், ஒருவிதமான புகையைக் கக்கியது ; அந்தப் புகையிலிருந்து ஒருவித கார வாசனை வெளிப்பட்டு, என்னைக் கடுமையாக இறுமும்படி செய்துவிட்டது.

"இந்த வாசனை உனக்குப் பிடிக்கவில்லையா ?" என்று அந்த மாந்தரீகன் தற்பெருமையோடு கேட்டார்.

"ஆம்."

"ஆஹா ! சகோதரா ! அதுதான் நல்லது ; அதுதான் மிக்க நல்லது" என்று சொன்னுர்.

இப்படி இவர் தற்பெருமையடித்துக்கொள்வதற்குக் காரணம் எதுவும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை.

"இது தீயதாய் இருக்குமாயின், இது நல்லதாக இருக்க முடியாது" என்று கடுமையாக நான் சொன்னேன்.

கண்களைச் சிமிட்டிக்கொண்டு "அப்படி எல்லாம் சொல் லாதே" என்று அவர் சப்தம் போட்டார். "சகோதரா !

எல்லாச் சமயங்களுக்கும் இந்த உண்மை பொருந்தி வராது என்பதைத் தெரிந்துகொள். சரி, எலும்பாட்டம் விளையாட வருகிறாயா ?'' என்று கேட்டார்.

'' இல்லை. சொட்டாங்கி விளையாடுவாம்.''

'' நல்லது. சொட்டாங்கி ஆடுவோம்.''

'' சரி, ஆடுவோம்.''

'' நான் உனக்கு ஒரு குழல் செய்து தரட்டுமா ? அது உன்னைச் சிறந்த ஆட்டக்காரனாச் செய்யும்.''

'' சரி. செய்து தாருங்கள்.''

'' அப்படியானால் எலும்பாட்டம் விளையாடலாம்.''

மீண்டும் புகைகிற ஜாடியை எடுத்துக்கொண்டு அவர் என் அருகே வந்து நின்றார். '' இது நிறைய நான் உனக்கு நிரப்பித் தந்தால் நீ மீண்டும் இங்கே வரமாட்டாய் அல்லவா?'' என்று ஒற்றைக் கண்ணால் பார்த்துக்கொண்டே என்னை அவர் கேட்டார்.

இது என் மனத்துக்கு அதிக வேதனையை அளித்தது.

'' இனிமேல் ஒருபோதும் நான் இங்கே வரப்போவது இல்லை '' என்று எதிர்த்துச் சொல்லிவிட்டு நான் தோட்டத்துக்குள் சென்றுவிட்டேன்.

அங்கே அப்பிள் மரவேர்களில் என் தாத்தா உரமிட்டுக் கொண்டு இருப்பதைக் கண்டேன். அப்போது இலையுதிர் காலம் ; இலைகள் உதிரத் தொடங்கி நீண்ட நாட்கள் ஆகி விட்டன.

கத்தரிக்கோலை என்னிடம் நீட்டி '' இந்த ராஷ்பெரிச் செடிகளை வெட்டிவிடு '' என்றார் என் தாத்தா.

'' ' இது மிக நேர்த்தி ' வைத்த செடி ஆயிற்றே ?'' என்று நான் என் தாத்தாவிடம் சொன்னேன்.

'' எல்லாம் மோசமாய் இருக்கிறது '' என்று அவர் கோபத்தோடு பதில் சொன்னார். '' அறையை அவன் பாழ்

படுத்துகிறான் ; ஏற்கனவே தரையை எரித்துவிட்டான் ; சுவர் ஒட்டித்தாள்களைக் கறைப்படுத்திவிட்டான். சில தாள்களைத் துண்டுகளாகவும் கிழித்துவிட்டான். இவனுக்கு நோட்டீஸ் கொடுத்துவிட வேண்டியதுதான் " என்றார் என் தாத்தா.

ராஷ்பெரி செடிகளைச் சரிப்படுத்திக்கொண்டே " ஆம், அவ்வாறு செய்ய வேண்டியதுதான் " என்று நானும் ஒத்து ஊதினேன்.

ஆனால், நான் மிகவும் அவசரப்பட்டுவிட்டேன்.

மழை காலத்து மாலை நேரங்களில் என் தாத்தா வெளியே சென்றுவிட்டால், அடுக்களையில் என் பாட்டி விருந்திடத் தொடங்குவாள். தள்ளுவண்டிக்காரன், தளகர்த்தன், உற்சாகமுள்ள வாலிப நங்கை ஒருத்தி உள்பட, குடியிருப்பவர்கள் எல்லாரையும் அழைப்பாள். அழகிய பெட்ரோவ்னாவும் வந்து கலந்துகொள்வாள் ; ' இது மிக நேர்த்தியும்' வந்து அசையாமலும் மௌனமாகவும் அடுக்களையின் மூலையில் அமர்ந்து இருப்பார். செவிட்டு - ஊமை ஸ்டியோபா, தார்த்தாரி வாலேயுடன் சீட்டு ஆடிக்கொண்டு இருப்பான் ; அவனுடைய மூக்கில் ஒரு இடி இடித்து " நீ ஒரு கிழட்டுப் பிசாசு " என்று கூறுவான் வாலே.

மாமா பீட்டர் மிகப் பெரிய வெள்ளை ரொட்டித் துண்டம் ஒன்று கொண்டுவருவார் ; ராஷ்பெரி ஜாமும்கொண்டு வருவார். ரொட்டியைச் சிறு சிறு துண்டுகளாக அறுத்து, அதன்மீது ஜாமைக் கனமாகத் தடவுவார். பிறகு தனது உள்ளங் கைகளில் வைத்துக்கொண்டு நீட்டியவாறே " தயவு செய்து இதைச் சாப்பிடுங்கள் " என்று சொல்லி விருந்தினர்களுக்கு அளிப்பார். அளிக்கும்போதே தலையைத் தாழ்த்தி மரியாதையாக அளிப்பார்.

ரொட்டியை அவர்கள் எடுத்துக்கொண்டதும் மங்கலான தனது கையை ஆராய்ந்து பார்த்து, அதில் ஒட்டியிருக்கும் ஜாம் துளிகளை நக்குவார்.

பெட்ரோவ்னு செரி மது கொண்டுவந்தாள்; உற்சாக மான நங்கை வித்துகளும் சர்க்கரைக் கட்டியும் அளித்தாள். என் பாட்டிக்கு விருப்பமுள்ள நடைமுறையை அனுசரித்து விருந்து நடைபெறத் தொடங்கும்.

தன் அறைக்கு வராமல் இருக்கும் பொருட்டு 'இது மிக நேர்த்தி' எனக்கு லஞ்சம் தர முன்வந்த சிறிது காலத்துக்குள், இப்படி ஒரு விருந்து நடைபெற்றது. இலையுதிர் காலத்தின் பயங்கர மழை பெய்துகொண்டு இருந்தது. காற்று உக்கிரமாக வீசியது; பெரு மூச்சுவிட்டு, வீட்டின் சுவர்கள்மீது வந்து மரங்கள் உராய்ந்தன. அடுக்களை கத கதப்பாகவும் குளிர் அடக்கமாகவும் இருந்தது. ஜனங்கள் நெருங்கி உட்கார்ந்து இருந்தார்கள். நல்ல மனநிலையிலும் அமைதியாகவும் அமர்ந்து இருந்தார்கள். வழக்கத்துக்கு மாருக என் பாட்டி நிறையக் கதைகளை அவிழ்த்துவிட்டாள்.

அடுக்களை மேடையின் ஒரு ஓரத்தில் அவள் உட்கார்ந்து இருந்தாள்; படியின்மீது அவளுடைய கால்கள் இருந்தன. ஜனங்கள் இருந்த பக்கமாகக் குனிந்து அவள் அமர்ந்து இருந்தாள். சிறிய தகர விளக்கின் ஒளியினுல் அவள் முகம் பிரகாசித்தது. உற்சாகம் மேலிட்டுப் பொங்கும் காலங்களில் அடுக்களை மேடைமீது உட்காருவதையே அவள் பெரிதும் விரும்புது உண்டு.

"மேலே அமர்ந்துகொண்டுதான் நான் பேசவேண்டியது இருக்கிறது. நீங்கள் பேசும்போதும் இப்படிப் பேசினுல் எளிதாக இருக்கும்" என்று அவள் விளக்கிச் சொன்னுள்.

அவள் கால்கள் வைத்து இருந்த படியின் கீழ்ப்படியில் நான் உட்கார்ந்து இருந்தேன். 'இது மிக நேர்த்தி'யின்

தலைக்குச் சிறிது மேலாக அமர்ந்து இருந்தேன். போர்வீரன் ஐவானையும் துறவி மீரானையும்பற்றிய கவர்ச்சிகரமான கதை ஒன்றை என் பாட்டி சொன்னாள். இசைநயமும் செழுமை யும் வாய்ந்த கவிதையில் அவள் கூறியதாவது :

ஒரு காலத்தில் கார்டியன் என்ற தீயவன் ஒருவன் இருந் தான். கல்நெஞ்சமும் கடின சித்தமும் கொண்டவன் அவன்; உண்மையை வெறுத்து, இரக்கமற்றவனாய், 'மோல்'—எலிபோல இருட்டுப் பொந்துக்குள் அவன் வாழ்ந்தான். தன் வெறுப்புக்கு இலக்கானவர்களில் மீரான் என்ற துறவியையே இவன் மிகவும் வெறுத்தான். மீரான் என்ற துறவி அன்பையும் அமைதியையும் நேசித்து, உண்மையைப் பரப்புவதில் தீவிரமாக முனைந்து இருந்தார். கார்டியன் என்ற இவன் தன் படைவீரன் தைரியசாலி ஐவானுஷ்கா என்பவனை அழைத்து வரச் செய்தான். "நீ கிழட்டு மீரானிடம் செல்; கர்வியான அந்த முன்னோனை வெட்டித்தள்ளு; பயப்படாமல் அவனுடைய தலையைச் சீவி எறி. நரைத்த தாடி யுடன் கூடிய அந்தத் தலையை என்பால் அப்படியே தூக்கி வா. வேட்டை நாய்களுக்கு அதை நாம் விருந்தாக இடலாம்."

இந்த வார்த்தைகளுக்குக் கீழ்ப்படிந்து ஐவான் புறப்பட்டுச் சென்றான்; வருத்தமுற்று மனம் கசந்து இந்தக் காரியத்தைச் செய்யப் போனான். "விருப்பத்துடன் நான் இந்தக் காரியத்தைச் செய்யவில்லை; மற்றவரின் விருப்பத்தையே நான் நிறைவேற்றச் செல்கிறேன்; இதுவே ஆண்டவனுடைய கட்டளை போலும்."

தரையின் கீழே வாளை மறைத்து வைத்துவிட்டு, அடக்க ஒடுக்கத்துடன் மரியாதையாக அந்தத் துறவியை ஐவான் அணு கினான். "பெரியவரே! வாழ்த்துக்கள். நீர் சௌக்கியமா? ஆண்டவன் உம்மீது ஆசிர்வாதங்களை அள்ளி அள்ளிச் சொரிந்து வருகிறாரா?"

எல்லாம் தெரிந்த பெரியவர் மீரான் இதைக் கேட்டுப் புன்னகை பூத்தார்.

தைரியசாலி ஐவானைப் பார்த்து மீரான் அறிவுபூர்வமாகப் பேசினர்: "உண்மையில் நீ என் ஏமாற்றுகிறாய் என்பதை என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை. நமது பாதுகாப்பாளர் ஏசுநாதர் யாவற்றையும் காணப்போகிறார். நன்மையும் தீமையும் அவர் கரத்தில்தான் உள்ளன; உனது தீய எண்ணத்தை அவர் கட்டாயம் தெரிந்துகொண்டு இருப்பார்."

ஐவானுஷ்காவின் இதயம் நாணத்தால் சாம்பிவிட்டது.

கார்டியன் வஞ்சம் தீர்த்துக்கொள்வானோ என்று பயந்தான். தோல் உறையில் இருந்த வாளை உருவித் தன் கையில் பிடித்துக் கொண்டான். நாசம் விளைவிக்கும் தனது வாளை அவன் நீட்டிக் கொண்டான். "அறிய முடியாமையால் ஏற்படும் ஆனந்தம் உமக்கு நேர வேண்டும் என்று கருதி, கள்ளத்தனமாக உம்மிடம் இதை நான் காட்டாமல் வைத்திருந்தேன்; நீர் விஷயத்தை இப்பொழுது தெரிந்துகொண்டுவிட்டீர்; கிழட்டு மனிதனே! மண்டியிட்டு உட்காரும்! கடைசி முறையாக மூலகாரணனை வணங்கிக்கொள்ளும்; எல்லா மனிதர்களுக்காகவும் உமக்கும் எனக்கும் சேர்த்து வணக்கம் செய்யும்; பிறகு, நரைத்த உமது தலையை நான் துண்டித்து விடுகிறேன்."

அந்தப் பெரியவர் மண்டியிட்டு உட்கார்ந்தார். அவருடைய முழங்காலுக்குக் கீழே ஓக் மரக்கன்று ஒன்று இருந்தது. அவருக்கு மேலே பசிய கிளைகள் வளர்ந்து நின்றன. பெரியவர் மெதுவாகவும் புன்சிரிப்போடும் பேசினர். "ஐவானே! யோஜித்துப் பார்; எனக்காக நீ நீண்ட காலம் காத்திருக்க நேரும்."

"அனைவருடைய ஆத்மாக்களுக்காகவும் நான் அளவற்ற பிரார்த்தனை செய்யவேண்டியது இருக்கும். ஆகவே தாமதம் செய்யாமல் எனது உயிரை நீ வாங்கிவிடுதல் நல்லது. உனது காரியத்தை முடித்துவிட்டு நீ விரைந்து போய்விடு."

இதைக் கேட்டதும் ஐவான் கோபத்தோடு முகத்தைச் சுளித்துக்கொண்டான்; தற்பெருமையோடு அவருக்குப் பதில் சொன்னன்: "அது வேண்டாம்! நடக்க வேண்டுவது விதிப்படி

நடந்தே தீரும். ஒரு யுகம் வேண்டுமானுலும் உமக்காக நான் காத்து இருக்கிறேன். உமது பிரார்த்தனையை நீர் முடித்துக் கொள்ளும் '' என்முன்.

இருட்டும்வரையில் அந்த முனிவர் பிரார்த்தனை செய்தார்; இருட்டிலிருந்து பொழுது புலரும்வரை பிரார்த்தனை செய்தார்; பொழுது புலர்ந்ததிலிருந்து பிறகு இருட்டும்வரையில் பிரார்த்தனை செய்தார். கோடை காலத்தில் பிரார்த்தனையைத் தொடங்கிய அவர், நீடித்துத் தொடர்ந்து வசந்த காலம்வரை செய்து கொண்டிருந்தார்.

ஆண்டு ஆண்டாகக் கழிந்துகொண் டிருந்தது. முனிவரின் முழங்காலின் கீழ் இருந்த ஓக் கன்று, இப்பொழுது வானளாவிய விருட்சமாக வளர்ந்துவிட்டது. விதைகள் விழுந்து முளைத்து, அவரைச் சுற்றி ஒரு காடே உண்டாகிவிட்டது. இன்னும் அவர் வானத்தை நோக்கிப் பிரார்த்தித்தபடி இருக்கிமுர்.

இன்றும் அந்தக் காட்டில் இருந்துகொண்டு, முனிவர் மீரான் சோர்வின்றி ஆண்டவனை இறைஞ்சுகிமுர். மனிதர்கள் அனைவருக்கும் உதவும்படியாக ஆண்டவனை வேண்டுகிமுர். மனிதர்களுக்கு நன்மை செய்யும்படி கன்னி மாதாவை இரந்து வேண்டுகிமுர்.

அவருக்குப் பக்கத்தில் போர் வீரன் ஐவான் சாய்ந்து கொண்டு நிற்கிமுன்; அவனுடைய வாளும் அதன் உறையும் இற்றுப்போய் மண்ணுகிவிட்டன. அவனுடைய சங்கிலிப் பின்னல் கவசமும் ஆயுதங்களும் துருப்பிடித்துப் போயின. அவனுடைய உடைகள் அனைத்தும் மட்கிப்போயின. வெப்பம் அவனைச் சாடியது; இருந்தும் அவன் அப்படியே இருந்தான்; பூச்சி புழுக்கள் விழுங்கின; இருந்தாலும் விழுங்கப்படவில்லை. ஓநாய்கள், கரடிகள், பேய்க்காற்றுகள், மூடுபனிகள் அனைத்தும் அவனைச் சாடின. அந்த இடத்தைவிட்டு அவனுல் அசைய முடியவில்லை; கையைத் தூக்கவும் முடியவில்லை; நிற்கவும் முடியவில்லை.

இத்தகைய தண்டனை அவனுக்குக் கிடைப்பதையே நான் விரும்பினேன்; அவ்வளவு தீமைகளுக்கு அவன் செவிசாய்த்து

இருக்கிறான்; மற்றவர்களின் விருப்பத்துக்குச் செவிசாய்த்து, தன் விருப்பத்தை அவன் விட்டுக்கொடுத்துவிட்டான். பெரியவர் இன்னும் தொடர்ந்து பிரார்த்தித்துக்கொண்டு இருக்கிறார். பாவி களாகிய நமக்கு இறைவனிடம் இறைஞ்சி வேண்டுகிறார். கடலை நாடிச் செல்லும் ஆறுபோல, அவர் செய்யும் பிரார்த்தனை ஆண்டவனை நாடிச் செல்கிறது.

இந்தக் கதை தொடங்கப்பட்ட அதி ஆரம்பத்திலிருந்தே ஏதோ ஒரு காரணம் நிமித்தமாய் "இது மிக நேர்த்தி" மிகவும் கிளர்ச்சி அடைந்து காணப்பட்டார். ஜன்னி கண்டவர்போல, தம் கைகளை விகாரமாய் அசைத்துக்கொண்டார்; மூக்குக் கண்ணாடியை எடுப்பதும் போட்டுக்கொள்வதுமாக இருந்தார். பாட்டுக்குத் தகுந்த தாளம் போடுவதுபோல அதை ஆட்டினார்; தலையை அசைத்துக்கொண்டார். விரல்களால் கண்களைத் தேய்த்துக்கொண்டார்; நெற்றியிலும் கன்னங்களிலும் வழிந்த வியர்வையைத் துடைத்துக்கொண்டார். யாரும் இருமினாலோ அல்லது தம் கால்களைத் தரையில் உராய்ந்து சப்தம் செய்தாலோ, பொறுமை யிழந்துபோய் மெதுவாகச் சூள் கொட்டிக்கொண்டார்.

என் பாட்டி இந்தக் கதையை முடித்ததும் தாவிக் குதித்து எழுந்து கைகளை ஆட்டி ஆர்ப்பரித்துச் சுற்றிச் சுற்றி வந்தார். "அற்புதமான கதை இது! எப்படியாவது இதை எழுதி வைத்துக்கொண்டு ஆக வேண்டும். எவ்வளவு உண்மை நிறைந்த கதை......" என்றுமுணுமுணுத்தார்.

அவர் அழுதுகொண் டிருக்கிறார் என்பது திட்டமாகத் தெரியவந்தது. கண்களில் நீர் மல்கி, கன்னங்கள் வழியாக மளமள வென்று கொட்டியது. பார்ப்பதற்குப் புதுமையாயும் உள்ளத்தை வெகுவாகத் தொடுவதாயும் இது இருந்தது. வேடிக்கையாக அடுக்களைக்குள் அவர் தாவித் தாவிக் குதித்தார்; தனது மூக்குக் கண்ணாடியைப் போட்டுக்கொள்ள

முயன்றார்; காதுகளில் அதன் கொக்கிகளை இழுத்து மாட்டிக் கொள்ள அவரால் முடியவில்லை. தனக்கு வந்த சிரிப்பை அடக்கிக்கொள்ளமுடியாமல் மாமா பீட்டர் சிரித்துவிட்டார். எல்லாரும் குழப்பத்தால் வாயடைத்துப்போய் உட்கார்ந்து இருந்தார்கள்.

"சரி. இந்தக் கதையை நீர் எழுதிக்கொள்ளும்" என்று என் பாட்டி அவசர அவசரமாகச் சொன்னாள். "இதை எழுதிக்கொள்வதில் பாபம் எதுவும் இல்லை. இதைப்போன்ற இன்னும் எத்தனையோ கதைகள் எனக்குத் தெரியும்" என்றாள் என் பாட்டி.

"அதெல்லாம் வேண்டாம்! இது ஒன்றே போதும். இதில் ருஷ்ய மணம் கமழ்கிறது" என்று உணர்ச்சிவயப் பட்டுக் கூறினார் அந்த விடுதிவாசி. திடீரென அடுக்களையின் நடுவே வந்து நின்றுகொண்டு, அந்த மனிதர் இரைந்து பேசத் தொடங்கினார். அவர் வலது கையை ஆட்டிக்கொண்டு இருந்தார்; நடுங்கிய தனது இடது கையில் மூக்குக் கண்ணாடி யைப் பிடித்துக்கொண் டிருந்தார். அவர் ஆத்திரத்தோடு பேசினார்; கடைசியாக, காலால் பூமியை ஓங்கி உதைத்து, தன் குரலை உயர்த்தி, கூற வேண்டிய வார்த்தைகளை அழுத்த மாகக் கூறினார்.

"உங்கள் மனச்சாட்சிக்கு ஏற்ப மற்றவர்களை நடக்கும் படி சொல்வது தவறு ஆகும்" என்ற வார்த்தைகளை அவர் மீண்டும் மீண்டும் சொல்லிக்கொண்டே இருந்தார்.

திடீரென அவருடைய தொண்டை கம்மிவிட்டது. தன்னைச் சுற்றியிருந்த முகங்களை எல்லாம் ஒருமுறை பார்த்து விட்டு, குற்றம் இழைத்தவர்போல முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு அங்கிருந்து நழுவிவிட்டார். வந்த சிரிப்பை அடக்கிக்கொண்டு அங்கிருந்த ஜனங்கள் சஞ்சலத்துடன்

ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள். என் பாட்டி மேடையின் நிழலில் பதுங்கிக்கொண்டு பெருமூச்சுவிட்டாள்.

" இவர் ஏன் இப்படி நடந்துகொள்கிறார் ? ஏதோ ஒரு நினைவால் பயித்தியம் பிடித்தவர்போல் இருக்கிறாரே ?" என்று சொன்னாள் ; தடித்துச் சிவந்த தனது உதடுகள்மீது தன் கையை வைத்துப் பொத்திக்கொண்டாள்.

" அப்படி எல்லாம் ஒன்றும் இல்லை ; அவருடைய போக்கே இதுதான் " என்று பதில் சொன்னார் மாமா பீட்டர்.

அடுக்களையைவிட்டு என் பாட்டி கீழே இறங்கிவந்து சாமோவாரைத் தயார் செய்யத் தொடங்கினாள்.

" கனவான்களாய் இருப்பவர்களுக்கு அடிக்கடி மனம் இப்படி மாறிக்கொண்டுதான் இருக்கும் ; ஒரு நிலையில் இராது " என்று மாமா பீட்டர் அமைதியாகச் சொன்னார்.

" பிரமச்சாரியாய் இருப்பவர்களின் போக்கு இப்படித் தான் இருக்கும் " என்று இடையில் சொல்லி வைத்தார் வாலே.

இதைக் கேட்டு எல்லோரும் சிரித்தார்கள்.

" அவர் அழுகிறாரா என்ன ? வரால் மீனுடன் பழகிய வர்களுக்கு அயிரை மீனுடன் பழகுவது என்றால் கஷ்டமாய் இருக்கும் " என்றார் மாமா பீட்டர்.

அடுக்களையில் மந்தநிலை நிலவியது. மனோவேதனை வந்து என் நெஞ்சை உறுத்தியது. " இது மிக நேர்த்தி "யின் நடத்தை அதிக ஆச்சரியத்தை விளைவித்து அவரிடம் எனக்குப் பரிவு ஏற்படச் செய்தது. அவருடைய விரிந்த கண்களின் நினைப்பு என் மனத்தைவிட்டு அகலவில்லை.

அன்று இரவு வீட்டைவிட்டுப் புறப்பட்டுப்போன அவர், மறுதினம் மத்தியானச் சாப்பாட்டுக்குப் பின்னர்தான் திரும்பிவந்தார். தண்டிக்கப்பட்டு, மனங்கசந்து வருந்துபவர்

போலவும் மனக் கலக்கம் அடைந்திருப்பவர்போலவும் அவர் காணப்பட்டார்.

குற்றம் செய்த சிறுவன்போல அவர் என் பாட்டியை அணுகி "நான் நேற்று நடந்துகொண்ட முறை சரியல்ல; அதற்காக என்மீது தங்களுக்குக் கோபமா?" என்று கேட்டார்.

"நான் ஏன் கோபப்பட வேண்டும்?"

"நான் அந்த மாதிரி சொன்னதற்காகத்தான்."

"அதைப்பற்றி யாரும் வருத்தம்கொள்ளவில்லையே."

அவரைக் கண்டு என் பாட்டி பயப்படுகிருள் என்பதை நான் தெரிந்துகொண்டேன். அவருடன் பேசும்போது அவர் முகத்தைப் பார்க்காமல் என் பாட்டி இயல்பாகவும் மெதுவாகவும் பேசினுள்.

அவர் என் பாட்டியை அணுகி மிகவும் தாழ்மையுடன் பேசினுர்:

"தனிமை உணர்ச்சி என்னைப் பிடித்து மிகவும் வாட்டுகிறது; எனக்கு உற்றவர்கள் இந்த உலகத்தில் யாரும் இல்லை. ஒரு மனிதன் எப்பொழுதுமே மௌனமாக இருந்துவந்தால், சில சமயம் அந்த மௌனம் கலைந்து, கட்டுக்கு அடங்காமல் அவன் வார்த்தைகளைக் கொட்ட நேர்ந்துவிடுகிறது. பாறைகளுடனும் மரங்களுடனுமே பேசுவதற்கு அவன் தயாராகி விடுகிருன்......"

அவரைவிட்டு அப்பால் சிறிது நகர்ந்துகொண்டு "நீ கலியாணம் செய்துகொள்வதுதானே?" என்று என் பாட்டி கேட்டாள்.

"ஆஹா" என்று கையை ஆட்டி முகத்தைச் சுளித்துக் கொண்டு அவர் வெளியே போய்விட்டார்.

அவர் போவதைப் பார்த்த என் பாட்டி பொடி டப்பியிலிருந்து கொஞ்சம் பொடி எடுத்துக்கொண்டாள்; பிறகு

என்னைப் பார்த்து "இவன் கூடவே சுற்றிக்கொண்டு திரியாதே. அவன் எப்படிப்பட்டவன் என்பது தெரியவில்லை" என்று வருத்தத்துடன் சொன்னாள்.

மீண்டும் அவரிடம் செல்ல என் உள்ளம் விரும்பியது.

"தனிமை உணர்ச்சி என்னைப் பிடித்து மிகவும் வாட்டுகிறது" என்று அவர் சொல்லியபோது, அவருடைய முகம் மாற்றம் அடைவதை நான் கவனித்தேன். என் இதயத்தைத் தொட்ட அந்த வார்த்தைகள், ஏதோ பொருள் பொதிந்த வார்த்தைகள் என்பதாக எனக்குத் தோன்றியது. ஆகவே நான் அவரைத் தேடிச் சென்றேன்.

அவருடைய அறையிலிருந்த ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தேன்; உபயோகமற்ற நூதனமான பொருள்கள் அங்கும் இங்கும் சிதறிக் கிடந்தன. ஆண்கள் யாரும் இல்லை. பொருள்களுக்குச் சொந்தக்காரர் எப்படி நூதனமானவராயும் உபயோகமற்றவராயும் இருந்தாரோ அதே போலத்தான் அந்தப் பொருள்களும் இருந்தன. அவர் இருக்கிறாரா என்று தோட்டத்துக்குச் சென்று கவனித்தேன். மக்கிப்போய் குழியில் கிடந்த ஒரு உத்தரத்தில் அவர் உட்கார்ந்து இருந்தார். முழங்கைகளைத் தன் முழங்கால்கள்மீது ஊன்றிக்கொண்டும் உள்ளங்கைகளைக் கழுத்துப் பின்னால் கோத்துக் கட்டிக் கொண்டும் அவர் உட்கார்ந்து இருந்தார். அந்த உத்தரம் அழுக்கடைந்து இருந்தது. உத்தரத்தின் ஒரு முனை மேலே நீட்டிக் கொண்டிருந்தது. அதன் அடியில் கற்றுளைகளும் செந்தட்டிச் செடிகளும் காளான்களும் முளைத்து இருந்தன. மிகுந்த வேதனைப்பட்டுக்கொண்டுதான் அவர் அமர்ந்திருக்கிறார் என்பது தெரியவந்தது. ஆகவே அவர்மீது மேலும் அதிகப் பரிவு எனக்கு உண்டாயிற்று.

ஆந்தைக் கண்கள் போன்ற அவலட்சணமான தம் கண்களால் சிறிது நேரம் அவர் என்னைப் பார்த்தார். திடுமெனத்

தன் தொனியில் கிலேசம் தொனிக்க "என்னைத் தேடித்தான் நீ வந்தாயோ ?" என்று கேட்டார்.

"இல்லை."

"பிறகு எதற்கு வந்தாய் ?"

"விசேஷம் ஒன்றும் இல்லை."

இதன் பின்னர், தான் அணிந்திருந்த மூக்குக் கண்ணாடியைக் கழற்றி, சிவப்புக் கறையும் கறுப்புக் கறையுமுள்ள கைக்குட்டையால் அதைத் துடைத்துக்கொண்டார். பிறகு "கீழே இறங்கு" என்று என்னிடம் சொன்னார்.

நான் இறங்கிப் போய் அவருக்குப் பக்கத்தில் அமர்ந்து கொண்டேன். அவர் என்னை பலமாகக் கட்டித் தழுவிக் கொண்டார். "இங்கே இரு. சிறிது நேரம் நாம் ஒன்றும் பேசாமல் அமர்ந்து இருப்போம்; சரிதானா ? இப்படி.......நீ ஒரு பிடிவாத குணமுள்ளவனா இல்லையா?" என்று கேட்டார்.

"ஆம்."

"இது மிக நேர்த்தி."

பேசாமல் மௌனமாக இருவரும் நீண்ட நேரம் உட்கார்ந்து இருந்தோம். கோடை காலத்து இந்திய மாலை நேரங்களைப்போல, வருத்தம் தருவதாயும் அமைதியாயும் அன்றைய மாலை நேரம் எங்களுக்கு இருந்தது. நம் கண் முன்னேயே மலர்கள் வாடி வதங்குவதைப் போன்று துன்பம் அளிப்பதாய் இருந்தது. இனிய நறுமணத்தின் போதையை எல்லாம் தன்பால் இழுத்துக்கொண்டு, குளிர்மிகுந்த ஊதல் காற்றின் மணத்தை அள்ளித் தெளிப்பதாகத் தோன்றியது. நூதனமான முறையில் காற்று நிர்மலமாய் இருந்தது. ரோஜா நிற ஆகாயத்தில் காக்கைகள் பறந்து மனத்தை அழுத்தும் சிந்தனைகளை உண்டுபண்ணின. யாவும் நிசப்தமாகவும் ஊமை போலவும் இருந்தன. பறவைகளின் இறக்கை ஒலி, இலை உதிர்ந்து விழுவதுபோன்ற மெல்லிய ஒலிகள்கூட மிகப்

பெரிய எதிரொலிபோல மற்றவர்களைத் திடுக்கிட்டுப் பார்க்கச் செய்வதாயும் பிறகு, அதே மௌனச் சூழலில் அமிழ்ந்து விடுவதாகவும் தோன்றியது.

இத்தகைய சமயங்களே மனத்தில் தூய எண்ணங்களைத் துளிர்க்கச் செய்கின்றன ; இந்த எண்ணங்கள் வார்த்தைக் குள் அகப்படாதனவாயும் சிலந்திக்கூட்டைப்போல் எளிதில் சிதைந்து போகத்தக்கனவாயும் நிர்மலமாயும் இருக்கின்றன. எரிநட்சத்திரங்களைப்போலப் பளபளத்து மறைந்துவிடுகின் றன ; ஆனால் ஆத்மாவுக்குள் ஊடுருவிப் பாய்ந்து, கவலையை உண்டாக்குகின்றன; அதனுடன் செல்லம் கொஞ்சுகின்றன; அதைச் சஞ்சலப்படுத்துகின்றன ; மனத்திற்குள் குவிந்து, உருப்பெற்றுத் தன் சாயலைப் பதியச் செய்துவிடுகின்றன ; இத்தகைய நேரங்களில்தான் குணம் என்பது உருவாகிறது.

என் தோழருடைய கதகதப்பான உடலோடு உடலாக ஒட்டிக்கொண்டு நான் கவனித்தேன் ; கோலம் போட்டது போல ஆப்பிள் கிளைகளின் கரிய நிழல்கள் இருப்பதை நானும் அவரும் கவனித்தோம். ரென்னெட் பறவைகள் ஆகாயத்தில் வட்டமிட்டன ; காய்ந்துபோன டர்னீப்பின்மீது இருக்கும் வாசனை விதைகளைத் தங்கப் பறவைகள் அலகால் கொத்தித் தேடிப் பார்த்தன ; அகோரமான விளிம்புள்ள சாம்பல் நிற மேகங்கள் வயல்களின்மீது நகர்ந்து திரிந்தன ; அவற்றுக்குக் கீழே மாதாகோயில் முற்றங்களில் இருக்கும் தங்கள் கூடுகளை நாடிக் காக்கைகள் சென்றுகொண்டிருந்தன. இவை அனைத்தும் நன்றாகவும் இயன்ற அளவு புரிந்துகொள் ளத்தக்கதாகவும் இருந்தன.

சில சமயங்களில் என் சகபாடி பெருமூச்செறிந்து "சகோதரரே ! இது நேர்த்தியாக இருக்கிறதல்லவா ? உம் ஈரமாய் இருக்கிறதல்லவா? கூதல் ஆட்டவில்லையா உனக்கு?" என்று என்னைக் கேட்பார்.

வானத்தில் இருள்படர்ந்து, யாவற்றையும் இரவு வந்து மறைத்துக்கொண்டதும் "நல்லது. சிந்தித்துப் பார்த்துச் சொல், எழுந்திரு" என்ருர்.

தோட்டத்தின் வாயிலை அடைந்ததும் நின்றுகொண்டு "உன் பாட்டி மிகவும் அற்புதமான பெண்மணி; ஆஹா. இது எத்தகைய உலகம்" என்று அவர் சொன்னுர்.

பிறகு தன் கண்களை மூடிக்கொண்டு அவர் புன்னகை புரிந்தார்; மிக மெதுவாகவும் தெளிவாகவும் இதை அவர் திரும்பச் சொன்னுர்.

*இத்தகைய தண்டனை அவனுக்குக் கிடைப்பதையே நான் விரும்பினேன்; அவ்வளவு தீமைகளுக்கு அவன் செவிசாய்த்து இருக்கிருன்; மற்றவர்களின் விருப்பத்துக்குச் செவிசாய்த்து, தன் விருப்பத்தை அவன் விட்டுக்கொடுத்துவிட்டான்.*

"சகோதரா! இதை நினைவில் இருத்திக்கொள்" என்று சொல்லி என்னை முன்னே தள்ளி, "உனக்கு எழுதத் தெரியுமா?" என்று கேட்டார்.

"தெரியாது."

"எழுதக் கற்றுக்கொள்; அது உனக்குக் கைகூடி வந்ததும், உன் பாட்டி பாடுவதை எல்லாம் எழுதி வைத்துக் கொள்; இது மிக முக்கியமானதாகும்" என்று சொன்னுர்.

பிறகு நானும் அவரும் நண்பர்களாகிவிட்டோம். அன்று முதல், விரும்பியபோதெல்லாம் "இது மிக நேர்த்தி"யை நான் சந்தித்து வந்தேன். கந்தைகள் அடுக்கிய பெட்டி ஒன்றின்மீது உட்கார்ந்து, சஞ்சலம் எதுவும் இன்றி நான் பார்த்துக்கொண் டிருப்பேன்; அவர் ஈயத்தை உருக்குவார்; செம்பைக் காய்ச்சுவார்; உருகியதும் அதைக்கொண்டு, சிறிய பட்டடையில் வைத்து அழகிய சுத்தியலால் தகடுகள் தயாரிப்பார்; பெரிய அரத்தாலும் மயிரிழை போன்ற சிறிய அரத்

தாலும் வேறு பல சிறிய அரங்களாலும் உப்புத் தாள்களாலும் அதில் வேலை செய்வார். நுண்ணியமான செம்புத் தாராசில் ஒவ்வொன்றையும் அவர் நிறுத்துப் பார்ப்பார்; தடித்த, வெள்ளைநிறப் பீங்கான் கிண்ணத்தில் பல்வகையான திரவங்களை ஊற்றிக் கலப்பார்; அதை முழுதும் எரிப்பான ஒருவிதப் புகை பரவிவிடும். தடித்த புத்தகம் ஒன்றை முகத்தைச் சுளித்துக்கொண்டே உன்னிப்பாகக் கவனிப்பார்; தனது சிவந்த உதட்டைக் கடித்துக்கொண்டு மெதுவாகப் பெருமூச்சுவிட்டு முணுமுணுப்பார்;

"ஆஹா! ஷாரான் ரோஜாவே" என்று.

"நீங்கள் என்ன செய்கிறீர்கள்?"

"சகோதரா! ஒரு காரியம் செய்கிறேன்."

"என்ன காரியம்?"

"உனக்கு விளங்க வைக்க என்றால் இப்போது முடியாது; விளங்கும்படியாக எனக்குச் சொல்லவும் தெரியாது."

"நீ கள்ள நாணயங்கள் செய்கிறீர் என்று என் தாத்தா சொல்லுகிறாரே?"

"உன் தாத்தாவா? உம். புரியாமல் அவர் உளறுகிறார். சகோதரா! மனத்தை வாதனைப்படுத்திக்கொள்ளக் கூடிய அவ்வளவு பெரிய காரியம் அன்று பணம்."

"அதில்லாமல் உம்மால் இப்பொழுது ரொட்டி வாங்க முடியுமா? என்ன?"

"அது இல்லாமல் ரொட்டி வாங்க முடியாது என்பது உண்மைதான்."

"அப்படியா? சரி. இறைச்சி வாங்க முடியுமா?"

"அதுவும் முடியாது."

அமைதியான முறையில் அவர் சிரித்ததைப் பார்க்க எனக்கு மகிழ்ச்சியாக இருந்தது. என்னை ஒரு பூனைக்குட்டி

யாக நினைத்து, காதுக்குப் பின்புறமாக அவர் தடவிக் கொடுத்தார்.

" சகோதரா ! இன்னும் கொஞ்சம் நன்றாக நீ நடந்து கொள்வாயா ? ஒவ்வொரு முறையும் ஒரு மூலைக்கு நீ என்னைத் தள்ளிவிடு. மேலும் நாம் பேசாமல் இருந்து பார்ப் போம் " என்றார்.

சில சமயங்களில் வேலை செய்வதை நிறுத்திக்கொண்டு, ஜன்னலுக்கு அருகே எனக்குப் பக்கத்தில் வந்து அமர்ந்து கொள்வார். ஆப்பிள் மரங்களிலிருந்து இலைகள் உதிர்வதை நாங்கள் அங்கே இருந்தவாறு கவனிப்போம். மேலோங்கி வளர்ந்து இருக்கும் புல்பூண்டுகள்மீதும் முற்றத்திலும் முகட்டிலும் மழை கொட்டுவதைக் கவனிப்போம். " இது மிக நேர்த்தி " குறைந்த அளவில்தான் பேசுவார். அப்படிப் பேசும்போதும் ஒரு குறிப்பை அடிப்படையாகக்கொண்டு விஷயத்துடன்தான் பேசுவார். நான் அவசியம் கவனிக்க வேண்டும் என்று அவர் விரும்புவதை, கண் சாடையாலோ, பார்வையாலோ அல்லது உடலில் உராய்ந்தோ சுட்டிக்காட்டி அதைக் கவனிக்கும்படி செய்வார்.

எங்கள் முற்றத்தில் விசேஷமாகக் காணத்தக்கது எது வும் கிடையாது என்று எனக்குத் தோன்றும். இருந்தும் அவர் செய்த உராய்வுகளும் இடையிடையே கூறின வார்த்தை களும் அப்படியே என் இதயத்தில் பதிந்துபோய்விட்டன. ஒரு பூனை முற்றத்தின் குறுக்கே ஓடி, அங்கே கிடந்த குட்டைக்கு எதிரே நின்றுகொண்டு அதில் தன் உருவத்தைப் பார்த்தது ; அதை உதைக்கப்போவதுபோல் தன் காலைத் தூக்கியது.

" பூனைகள் தற்பெருமையும் சந்தேகமும் கொண்ட பிராணிகள் " என்று " இது மிக நேர்த்தி " மென்மையாகச் சொன்னார்.

செம்பொன் நிறமுள்ள மாமை என்னும் பெயருடைய சேவல் பறந்துவந்து வேலியில் உட்கார்ந்தது. தன் சிறகுகளால் அது அடித்துக்கொண்டபோது, நிலைதவறி அது விழுந்து விடுமோ தோன்றியது. இதனால் சஞ்சலமுற்ற அது, கோபமாகத் தன் கழுத்தை நீட்டிக் கொக்கரிக்க ஆரம்பித்தது.

" தன்னைப் பெரியவனாகவும் சேனாதிபதியாகவும் இது கருதிக்கொண் டிருக்கிறது. இதற்கு அறிவு அதிகம் கிடையாது."

கிழட்டுக் குதிரையைப்போல, சகதி வழியாகத் தத்தளித்துக்கொண்டு, பழக்கவழக்கம் தெரியாத வாலே வந்தார். தனது விசாலமான மார்பை உயர்த்தி, ஊதிப்போன தனது முகத்தில் வானத்தை அவர் ஒருக்கணித்துப் பார்த்தார். இலையுதிர் காலத்து வெளிறிய மஞ்சள் வெய்யல் அவருடைய மார்பின்மீது விழுந்தது. அதனால் அவருடைய ஜாக்கட்டில் இருந்த பொத்தான்கள் நெருப்புப் பற்றிக்கொண்டதுபோல் பளபளத்தன. தாத்தா நின்றுகொண்டு கோணல் விழுந்த தனது விரல்களால் அந்தப் பொத்தான்களைத் தடவிவிட்டுக் கொண்டார்.

" தனது மார்பில் மெடல்கள் தொங்குகின்றன என்ற கருத்து இவருக்கு இருக்கிறது போலும்."

விரைவில் " இது மிக நேர்த்தி " யிடம் எனக்கு ஏற்பட்ட பற்றுதல் அதிகரித்துவிட்டது. எனது இன்ப துன்பங்களில் எல்லாம் அவர் எனக்கு இன்றியமையாதவர் ஆகிவிட்டார். இயல்பிலேயே அவர் மௌனமாக இருப்பவர் எனினும், தன் மனத்திலுள்ளதை ஒருபோதும் என்னிடம் அவர் சொல்லாமல் இருந்தது கிடையாது. என் தாத்தாவோ இதற்கு எதிர்மாறாக நடப்பார். " அடே அரட்டைக்கல்லி ! பேசாமல் கிட " என்று சொல்லுவார்.

தன்னைப் பற்றிய எண்ணங்கள் நிறைய இருந்த காரணத்தால் என் பாட்டிக்கு மற்றவர்களைப்பற்றி எண்ணிப் பார்க்க அவகாசம் இல்லை.

நான் சொல்லுவதை "இது மிக நேர்த்தி" கவனமாகக் கேட்பார்; புன்சிரிப்போடு அடிக்கடி பதில் சொல்வார்: "சகோதரரே! அது உண்மையல்ல; அதைச் செய்து கொண்டது நீதான்."

பெரும்பாலும் அவர் சூசகமாகச் சொல்வது காலத்துக்குப் பொருத்தமாக இருக்கும். என் மனத்திலும் இதயத்திலும் நடப்பதை எல்லாம் அறிந்துகொண்டவர் போன்றும் வார்த்தைகள் வாயிலிருந்து வெளிப்படுவதற்கு முன்னரே அவற்றில் எது தவறு, எது மிகை என்பதை எல்லாம் தெரிந்துகொண்டுவிட்டவர் போன்றும் அவர் பேசுவார்; "சகோதரா! நீ பொய் சொல்லுகிறாய்" என்று மூன்றே வார்த்தைகளில் அவற்றை வெட்டித் தள்ளிவிடுவார்.

யாவற்றையும் அறிந்துக்கொள்ளும் மந்திர சக்தி அவருக்கு இருப்பதைப் பரிசோதிக்க எண்ணிய நான் கட்டுக் கதைகளை உண்மையில் நடந்தவைபோல அவரிடம் தெரிவிப்பது உண்டு. நான் கூறுவதை ஒரு நிமிஷம் கவனமாகக் கேட்டுவிட்டு "சகோதரா! நீ சொல்லுவது பொய்" என்று தலையை அசைத்துக்கொண்டு சொல்லிவிடுவார்.

"எப்படி இதை நீர் தெரிந்துகொண்டீர்?"

"எனக்கு எல்லாம் தெரியும்."

செந்நாயா சதுக்கத்திலிருந்த குழாயிலிருந்து தண்ணீர் கொண்டுவரச் செல்லும்போதெல்லாம் என் பாட்டி என்னையும் கூடஅழைத்துச் செல்வாள். ஒரு நாள் ஐந்து நகரவாசிகள் ஒரு குடியானவனை அடித்துக்கொண்டிருப்பதை நாங்கள் கண்டோம். தரைமீது உட்காரவைத்து நாய்க்கூட்டம் ஒன்று பாய்வதுபோல் அவன்மீது அவர்கள் பாய்ந்தார்கள். தண்ணீர்

தூக்கும் கம்பிலிருந்து, குடங்களை அவிழ்த்து வைத்துவிட்டு, அதைத் தடியாகப் பயன்படுத்தி என் பாட்டி அவர்களை நோக்கி "அப்பால் போங்கள்!" என்று பாய்ந்தாள்.

பயந்துபோய் நானும் என் பாட்டியைத் தொடர்ந்து ஓடினேன். எதிரிகள்மீது கற்களை அள்ளி வீசினேன். தண்ணீர் தூக்கும் கம்பால் என் பாட்டி அவர்களைத் தைரியமாக எதிர்த்தாள். அவர்களுடைய தலைகள்மீதும் தோள் பட்டைகளிலும் உதைகள் கொடுத்தாள். இந்தச் சண்டையில் மற்றவர்களும் கலந்துகொண்டார்கள். நகரவாசிகளை அடித்துவிரட்டிவிட்டார்கள். அதிக காயங்கள் பட்டுக்கிடந்த அந்தக் குடியானவரின் முகத்தை என் பாட்டி கழுவிவிட்டாள்; காயம் பட்டுப்போன தனது மூக்கில் அழுக்குப் படிந்திருந்த தனது விரல்களால் பொத்திக்கொண்டு, சிறுமி போல ஊளையிட்டு அந்தக் குடியானவன் கதறியதையும் ரத்தம் பீறிட்டுக்கொண்டு அவனுடைய விரல்களின் வழியாக என் பாட்டியின் முகத்திலும் மார்பிலும் பாய்ந்ததையும் நினைக்கும் போது, இப்போதும் எனக்குக் குலைநடுக்கம் உண்டாகிறது. உச்சிமுதல் உள்ளங்கால்வரை நடுங்கி அவளும் ஊளையிட்டுக் கதறினாள்.

வீட்டுக்குத் திரும்பியதும் விடுதிவாசியிடம் ஓடி நடந்தவற்றை அவரிடம் நான் தெரிவித்தேன். வேலை செய்வதை அப்படியே நிறுத்திவிட்டு,நீண்ட ரம்பம் ஒன்றை வாள்போல் தன் கையில் பிடித்துக்கொண்டு என் எதிரே அவர் நின்றார். தனது மூக்குக் கண்ணாடிகளின் வழியாகக் கவனமாகவும் கடுமையாகவும் என்னைப் பார்த்தார். பிறகு திடீரென வழக்கத்துக்கு மாறாக அழுத்தம் கொடுத்து "நல்ல காரியம் செய்தீர்கள்! இப்படித்தான் செய்ய வேண்டும்! மிகவும் நல்லது!" என்று அவர் சொன்னார்.

பார்த்தவற்ருல் அதிர்ச்சியடைந்து போயிருந்த நான், அவர் என்ன சொன்னுர் என்பதைக்கூடக் காதில் வாங்கிக் கொள்ளாமல் நான் பாடு தொடர்ந்து சொல்லிக்கொண்டு இருந்தேன். ஆனுல் அவரோ தன் கையால் என்னை அணைத் துக்கொண்டு, அங்கும் இங்கும் நடக்கத் தொடங்கினுர்.

"இந்த அளவுக்குப் போதும்! இந்த அளவுக்குப் போதும்!" என்று புத்தி சொல்லி எச்சரித்தார். "நீ சொல்ல வேண்டியதை எல்லாம் சொல்லித் தீர்த்துவிட்டாய். தெரிந் ததா? இந்த அளவுக்குப் போதும்" என்று சொன்னுர்.

பேசுவதை நான் நிறுத்திக்கொண்டேன். முதலில் இது எனக்கு வருத்தமாய் இருந்தது. எனினும் யோஜித்துப் பார்த்தபோது, சரியான தருணத்தில்தான் நான் பேசுவதை அவர் நிறுத்தியிருக்கிருர் என்பதை அறிந்து அதிசயித்துப் போனேன். உண்மையில் யாவற்றையுமே அவரிடம் நான் சொல்லித் தீர்த்துவிட்டேன்.

"இந்த மாதிரியான விஷயங்களில் உன் புத்தியைச் செலுத்தாதே; இவற்றை மறந்துவிட முயல்" என்று அவர் என்னிடம் சொன்னுர்.

சில சமயங்களில் முற்றும் எதிர்பாராத வகையில் அவர் கூறின சில விஷயங்கள் வாழ்க்கை முழுதும் என் நினைவில் இருந்தன. ஒரு முறை என் பகைவன் குலுஷினிகோவைப் பற்றி நான் அவரிடம் தெரிவித்தேன். நோவாயாத் தெரு வீரர்களில் அவனும் ஒருவன்; அவன் கொழுத்த உடலும் பருத்த தலையும் உடைய ஒரு பையன். எதையும் நல்ல முறையில் சமாளிக்கும் ஆற்றல் என்னைக் காட்டிலும் அவ னுக்கு அதிகமாக இருந்தது. "இது மிக நேர்த்தி" எனக்கு உள்ள சங்கடத்தைக் கவனத்துடன் கேட்டார். பிறகு அவர் சொன்னதாவது:

" மதியீனம்! அந்த மாதிரியான பலத்தைப் பலம் என்றே கூறக் கூடாது! துரிதமாக இயங்குவதில்தான் உண்மைப் பலம் இருக்கிறது. துரிதம் ஏற்பட ஏற்பட உனக்குப் பலமும் அதிகரிக்கும், தெரிகிறதா?" என்று சொன்னார்.

அடுத்த ஞாயிற்றுக்கிழமை யன்று எனது முஷ்டியை நான் துரிதமாக உபயோகித்தேன்; இதனால் குலுஷினி கோவை நான் எளிதில் வெற்றி கொண்டேன். இதிலிருந்து விடுதிவாசியின் வார்த்தைகளுக்கு நான் அதிக மதிப்புக் கொடுக்கத் தொடங்கினேன்.

"விஷயங்களை எப்படிக் கிரகிப்பது? - அவற்றை எப்படிப் பற்றிக்கொள்ள வேண்டும் - என்பது உனக்குத் தெரிந்து இருக்கவேண்டும் தெரிகிறதா? விஷயங்களை எப்படிக் கிரகிப்பது என்பது மிகவும் சிரமமான காரியம்."

அவர் கூறியதன் பொருள் எனக்கு விளங்கவில்லை. ஆனால் இவையும் இவைபோன்ற வார்த்தைகளும் என் நினைவில் இருந்தன. இவற்றின் எளிமைக்குக் கீழே மனத்தை உறுத்தும் அந்தரங்கம் ஏதோ ஒன்று இருப்பதாகத் தோன்றியபடியால் இவை என் நினைவில் படிந்துபோயின. சுத்தியலையோ, ஒரு துண்டு ரொட்டியையோ அல்லது ஒரு கல்லையோ அல்லது ஒரு கோப்பையையோ கையில் பிடித்துக் கொள்வதற்குச் சிரமம் இருக்கவா செய்யும்?

வீட்டிலுள்ள ஜனங்கள் " இது மிக நேர்த்தியிடம் " மேலும் மேலும் பிரியம்கொள்ளாமல் இருக்கத் தலைப்பட்டார்கள். உல்லாசமான, விடுதியில் வசிக்கிற வாலிப நங்கைக்குச் சொந்தமான பூனைகூட, மற்றவர்கள் மடியில் ஏறி இருப்பதைப்போல், இவருடைய மடியில் ஏறி இருக்கப் பிரியப்படவில்லை; அவர் அன்போடு அழைத்தாலும் அவரிடம் அது போவது இல்லை. இதற்காக அந்தப் பூனையை நான் அடித்தேன்; காதைப் பிடித்துத் திருகி அதை நான் அழுகச் செய்

தேன். இந்த மனிதனிடம் நீ பயப்படத் தேவையில்லை என்று அதன் மனத்தில் பதியச் செய்வதற்கு முயன்றேன்.

" எனது ஆடைகளில் காடி நாற்றம் அடிப்பதனால்தான் அது என்னிடம் வர மாட்டேன் என்கிறது " என்று அவர் எனக்கு விளக்கிச் சொன்னார். ஆனால் என் பாட்டி உள்பட ஒவ்வொருவரும் வெவ்வேறு விதத்தில் விளக்கம் தந்தார்கள். எல்லோரும் அவரிடம் பகைமை காட்டினார்கள் ; இது தவறு என்பதை அறிந்த எனக்கு மிக வருத்தமாய் இருந்தது.

" எப்பொழுது பார்த்தாலும் அவனைப் பிடித்துத் தொங்கிக்கொண்டே திரிகிறாயே ? கவனமாய் இரு ; இல்லாது போனால் அவன் உனக்கு ஏமாற்று வித்தைகள் கற்றுத் தந்துவிடப் போகிறான் " என்று கோபமாகச் சொன்னாள் என் பாட்டி.

சின்னப் புத்தியுள்ள செம்பட்டைத் தலையரான என் தாத்தா அந்த விடுதிவாசியின் அறைக்கு நான் போய் வருவது தெரிந்தபோதெல்லாம் என்னைக் கொடுமையாகச் சவுக்கால் அடித்தார். " இது மிக நேர்த்தி"யைப் பார்க்கத் தடைசெய்கிறார்கள் என்ற விவரத்தை இயல்பாக அவரிடம் நான் தெரிவிக்க விரும்பவில்லை ; எனினும் ஜனங்கள் அவரைப்பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதை ஒளிவு மறைவு இன்றி அவரிடம் நான் தெரிவித்துவிட்டேன் :

"உம்மை ஒரு தீய மந்திரவாதி என்று சொல்லி, உம்மைக் கண்டால் என் பாட்டி பயப்படுகிறாள் ; என் தாத்தாவும் உம்மை அப்படித்தான் கருதுகிறார். நீர் கடவுளுக்கு விரோதமானவர் என்றும் உம்முடன் தொடர்பு வைத்துக்கொள்வது தீமை பயக்கும் என்று கருதுகிறார்."

ஏதோ ஒரு ஈயை விரட்டுவதுபோலத் தன் தலையை அவர் குலுக்கிக்கொண்டார். அவருடைய வெளிறிய முகத்தில்

நகை அரும்புவதைக் கண்டு என் இதயம் சுறுங்கி, தலை சுழல் ஆரம்பித்தது.

"சகோதரா! இவை எல்லாம் எனக்குத் தெரியும். இது மிகக் கெடுதலானவை இல்லையா?" என்று அமைதியாகக் கேட்டார்.

"ஆம்."

"சகோதரா! மிகக் கெடுதலானது."

முடிவில், அவரை அவர்கள் விரட்டியோட்டிவிட்டார்கள்.

ஒரு நாள் காலை உணவுக்குப் பின்னர், தரைமீது அமர்ந்து தன் சாமான்களை எல்லாம் ஒரு பெட்டியில் அவர் எடுத்து மூட்டைக் கட்டிக்கொண்டு இருப்பதையும் "ஆஹா! ஷாரான் ரோஜாவே!" என்று அவர் சொல்லிக்கொண்டிருப்பதையும் நான் கண்டேன்.

"சகோதரா! நான் உன்னிடம் விடைபெற்றுக்கொள்கிறேன். இந்த இடத்தைவிட்டு நான் போகப் போகிறேன்" என்று சொன்னார்.

"ஏன்?"

பதில் சொல்லுவதற்கு முன்னர் என்னை ஒரு கணம் அவர் கூர்ந்து கவனித்தார்.

"உனக்கு விஷயம் தெரியாதா? இந்த அறை உன் தாயாருக்குத் தேவைப்படுகிறதாம்."

"அப்படி யார் சொன்னது?"

"உன் தாத்தா சொன்னார்."

"அவர் சொன்னது பொய்."

"இது மிக நேர்த்தி" என்னைத் தன் அருகே இழுத்து வைத்துக்கொண்டார்; அவருக்குப் பக்கத்தில் தரையில் நான் அமைதியாக அமர்ந்து இருந்தேன். அவர் என்னைப் பார்த்து அமைதியாக "நீ என்மீது கோபப்படாதே! சகோதரா! உனக்கு விவரம் தெரிந்து இருக்கும் என்று உன்னிடம் எதை

யும் நான் சொல்லாமல் இருந்துவிட்டேன். இதை நான் விரும்பவில்லை '' என்ருர்.

ஏதோ காரணத்தால் மனம் நொந்து நான் குழப்பம் அடைந்தேன்.

''நான் சொல்வதைக்கேள்'' என்று சிரித்துக்கொண்டே அவர் மிக ரகசியமாகச் சொன்னர். '' என்னை வந்து சந்திக்காதே என்று உன்னிடம் நான் சொன்னது உனக்கு நினைவு இருக்கிறதா ?'' என்று கேட்டார்.

''ஆம்'' என்பதற்கு அறிகுறியாக நான் தலையை அசைத்துக்கொண்டேன்.

'' உனது உணர்ச்சிகளுக்கு ஊறு செய்துவிட்டேனு என்ன ?''

'' ஆம்.''

'' அந்த எண்ணத்துடன் நான் சொல்லவில்லை. என்னுடன் நீ சினேகமாக இருந்துவருவதைக் கண்டால், உன்னை அவர்கள் கடிந்து உரைக்கக் கூடும் என்று கருதித்தான் நான் அவ்வாறு வர வேண்டாம் என்று சொன்னேன்.''

என்னை ஒத்த சமவயதினரைப் போன்று அவர் என்னுடன் உரையாடினர். அவருடைய வார்த்தைகள் எனக்கு மகிழ்ச்சியை உண்டுபண்ணின. அவர் சொன்ன விஷயங்கள் நீண்ட காலத்துக்கு முன்னரே எனக்குத் தெரிந்தவைபோலத் தோன்றியபடியால், ''வெகு காலத்துக்கு முன்னரே எனக்குத் தெரியும் '' என்று நான் பதில் சொன்னேன்.

'' நல்லது. இப்படித்தான் எல்லாம். சகோதரரே '' என்ருர் அவர்.

தாங்கமுடியாத அளவு என் இதயம் வேதனையை அடைந்தது. ''உம்மை ஒருவரும் விரும்ப மாட்டேன் என்கிருர்களே என் ?'' என்று கேட்டேன்.

என்னை இறுக்கமாகக் கட்டித் தழுவிக் கஷ்டத்துடன் கண்ணைச் சிமிட்டிக்கொண்டு, "அவர்களைப்போல் நான் வாழவில்லை தெரிகிறதா? அதனால்தான் அவர்களுக்கு என்னைப் பிடிக்கவில்லை."

என்ன சொல்வது என்று தெரியாமல் அவருடைய சட்டைக் கையை நான் பிடித்துக்கொண்டேன்.

"என்மீது கோபம்கொள்ளாதே" என்று சொல்லிவிட்டு ரகசியமாக என் காதில் வந்து "அழுகவும் செய்யாதே" என்று அவர் சொன்னார்.

ஆனால் அவருடைய மாசுபடிந்த மூக்குக் கண்ணாடியைக் கடந்து கன்னங்களின் வழியாகக் கண்ணீர்த் துளிகள் ஓடி வந்தன.

வழக்கமாக இருப்பதைப்போல, நீண்ட நேரம் மௌனமாக நாங்கள் உட்கார்ந்து இருந்தோம். இடையிடையே சுருக்கமாகப் பேசிக்கொண்டோம்.

மாலையில் அங்கிருந்த ஒவ்வொருவரிடமும் அன்பு ததும்ப விடைபெற்றுக்கொண்ட அவர், என்னை வாஞ்சையோடு தழுவி விடைபெற்றுக்கொண்டு போய்விட்டார். வாயிலின் வழியாக நான் கவனித்தேன். பனிக்கட்டி உறைந்த வீதியில் சக்கரங்கள் உருள வண்டி போய்க்கொண்டு இருக்கும் போதே அதன் கூட்டின்மீது தாவி அவர் உட்கார்ந்துகொண்டார். அவர் புறப்பட்டுப் போய்விட்ட உடனேயே அழுக்குப் படிந்துகிடந்த அந்த அறையை என் பாட்டி சுத்தம் செய்யத் தொடங்கினாள். அவள் செய்கிற காரியத்தில் தலையிடுவதை நோக்கமாகக்கொண்டு மூலைக்கு மூலை நான் ஓடிக்கொண்டு இருந்தேன்.

என்மீது தடுக்கி விழுந்த அவள் "அப்பால் போ!" என்று என்னை அதட்டினாள்.

"ஏன் அவரைக் காலிசெய்யச் சொன்னீர்கள்?"

" இதைப்பற்றி எல்லாம் நீ கேட்கக் கூடாது."

" நீங்கள் எல்லோரும் முட்டாள்கள் ; சரியான முட்டாள் கூட்டம் " என்று நான் சொன்னேன்.

நனைந்திருந்த ஈரக் கந்தையால் அவள் என்னை மொத்தத் தொடங்கினாள். " நீ ஒரு வடிகட்டின முட்டாள் ஆகிவிட்டாயா ? என்ன ?" என்று அவள் கூச்சல் போட்டாள்.

" உன்னைத் தவிர்த்து மற்றவர்கள் எல்லாரும் வடிகட்டின முட்டாள்கள்தாம் " என்று நான் அவளைத் திருத்தினேன். இருந்தும் அவள் மனது திருப்திப்படவில்லை.

" நல்ல வேளை. ஆண்டவன் அவனைப் போகச் செய்து விட்டார்" என்று சாப்பிடும்போது, என் தாத்தா சொன்னார். " அவனைப் பார்க்கும் ஒவ்வொரு தடவையும் கத்தி ஒன்று வந்து என் நெஞ்சில் குத்துவதுபோல் இருந்தது. ஆகையால் அவனைத் தொலைத்தாக வேண்டியதாயிற்று " என்றார்.

எனக்கு வந்த கோபத்தில் கரண்டி ஒன்றை நான் உடைத்துவிட்டேன் ; அதற்குத் தகுந்த தண்டனை எனக்குக் கிடைத்தது.

நாட்டின் சிறந்த செல்வங்களான இத்தகைய புதல்வர்கள் தங்கள் சொந்த நாட்டிலேயே அந்நியர்போல வாழ்க்கை நடத்த நேருகிறது. அத்தகையவர்களின் தோழமை எண்ணில் அடங்காதவர்களுடன் எனக்கு ஏற்பட்டது. அப்படி ஏற்பட்ட தோழமைகளில் முதலாவதாக ஏற்பட்ட தோழமையின் தொடர்பு இப்படி முடிந்தது.

## 9

குழந்தையாகிய என்னை ஒரு தேன் கூட்டுக்கு உவமை சொல்லிக்கொள்ள நான் ஆசைப்படுகிறேன். அந்தத் தேன் கூட்டில் சாதாரண ஜனங்கள், தங்கள் வாழ்க்கையில் ஏற்

பட்ட அனுபவங்களையும் கருத்துக்களையும் தேன்போல் கொண்டுவந்து அதில் சேகரம் செய்தார்கள். ஒவ்வொருவரும் தம்மால் இயன்றதை நல்கி, எனது பண்பையும் குணத்தை யும் வளப்படுத்தினார்கள். அவர்கள் சேகரித்து வந்த தேன் பெரும்பாலும் அழுக்கடைந்து கசப்பாகவும் இருந்தது; இருந்தாலும் அறிவுத் தேனாக அது இருந்தபடியால் உண்மையில் அது தேனே ஆகும்.

"இது மிக நேர்த்தி" போய்விட்ட பிறகு மாமா பீட்ட ருடன் நான் நெருங்கிப் பழகினேன். மெலிவிலும் கச்சிதத் திலும் சுத்தத்திலும் இவர் என் தாத்தாவைப்போல் இருந் தார்; ஆனால் உருவத்திலும் மற்ற வழிகளிலும் அவர் சிறிய வராகத் தென்பட்டார். வேடிக்கைக்காக வாலிபச் சிறுவன் ஒருவன், கிழவருடைய ஆடைகளை வேண்டும் என்றே அணிந்து இருப்பதுபோல, அவருடைய தோற்றம் எனக்கு இருந்தது. நேர்த்தியான தோல் வார்கொண்டு பின்னப்பட்ட கூடைபோல அவர் முகம் இருந்தது. பார்ப்பதற்கு அந்த முகம் ஒரு கூண்டுபோலவும், மகிழ்ச்சி ததும்பும் அவருடைய சிறிய கண்கள் இரண்டு சின்னஞ் சிறு பறவைகள்போலவும் தெரிந்தன. அவருடைய நரைத்த மயிர் சுருட்டையாய் இருந் தது; தாடி சுருண்டு சுருண்டு தொங்கியது. அவர் குடிக்கும் புகைக் குழாயிலிருந்து, அவருடைய மயிர் நிறத்தைப் போல வும் திருத்தமான பேச்சைப்போலவும் சுத்தமாகச் சுருண்டு சுருண்டு புகை கிளம்பியது; கணீர் என்ற குரலில் அன் பாகவும் கண்ணியமாகவும் அவர் பேசுவார். ஆனால் எனக்கோ எப்பொழுதுமே அவர் ஜனங்களைக் கிண்டல் செய்துகொண் டிருப்பதாகத் தோன்றியது.

"ஆரம்பத்தில் நான் ஒரு சீமாட்டியிடம் வேலைக்கு அமர்ந்தேன். தாத்தியான் என்பது அவள் பெயர். அலெக்ஸி யீவ்வெனா என்பது குடும்பப் பெயர். 'கொல்லனாக இருந்து

வேலை பார்' என்று முதலில் அவள் சொன்னாள். அந்த வேலையைப் பார்த்து வந்தபோது 'இனி, தோட்டக்காரனுக்கு உதவியாளனாக இரு' என்றாள். இதை நான் மறுக்கவில்லை. 'ஒன்றை மட்டும் செய்யாமல் பல காரியங்களை ஒரே நேரத்தில் செய்துவந்தால் எதையும் தவறாகவே செய்ய நேரும்' என்று ஒரு பழமொழி கூறுகிறது. அது சரியாக வராததைக் கண்டதும் 'பெட்ரூஷ்கா! நீ சென்று மீன் பிடித்துப் பழகு' என்று அவள் சொன்னாள். மீண்டும் இதையும் நான் செய்து பழகினேன். ஆசைப்பட்டு ஆசைப்பட்டு மீன்களைப் பிடித்தேன். மீன்கள் கிடைக்காவிட்டால், நகருக்கு அனுப்பி என்னை வண்டி இழுக்கச் செய்தார்கள். நான் வண்டியிழுத்தேன்; அவள் சொன்ன மற்ற காரியங்களையும் செய்தேன். விடுதலை கிடைக்கும் வரையில் இப்படியாகப் பல வேலைகளை அவள் விருப்பப்படி நான் செய்துவந்தேன். கடைசியாக, குதிரை கவனிக்கும் வேலை வந்து சேர்ந்தது; சீமாட்டியின் பின்னே செல்வதற்குப் பதிலாக, குதிரையின் பின்னே நான் சென்றுகொண் டிருக்கும்படியாக இன்றுவரை நேர்ந்திருக்கிறது."

அந்தக் குதிரை வெள்ளை நிறத்திலான கிழட்டுக் குதிரையாக இருந்தது; குடிகார ஓவியன் ஒருவன் தனது எழுதுகோலால் புள்ளியிட்டு வரைந்த குதிரைபோல் இருந்தது. கோணல் கால்களைக்கொண்ட, குருட்டு மெத்தை என்று அதைச் சொல்லலாம். கோழை சாடிய கண்கள் உள்ள அதனுடைய எலும்புமயமான தலை, உடம்போடு ஒட்டாத கழுத்தில் கவலையுடன் தொங்கிக்கொண் டிருந்தது. அதனுடைய உடம்பிலுள்ள தோலும் நரம்புகளும் தளர்ந்தும் விறைத்தும் இருந்தன. இந்தக் குதிரையை மாமா பீட்டர் மிக்க மரியாதையுடன் நடத்தினார்; "தானியா" என்று பெயர் சூட்டி அதை

அழைத்தார். அந்தக் குதிரையை அவர் ஒருபோதும் அடிப்பது கிடையாது.

"அந்த விலங்குக்கு ஏன் ஒரு கிறிஸ்தவப் பெயரை நீ வைத்திருக்கிறாய்?" என் தாத்தா ஒரு முறை அவரைக் கேட்டார்.

"இது கிறிஸ்தவப் பெயரன்று. வாசிலி வாசிலியேவிச்! தானியா என்பது நிச்சயம் கிறிஸ்தவப் பெயரன்று. தாத்தியானா என்பதுதான் கிறிஸ்தவப் பெயராகும்" என்று பதில் சொன்னார் மாமா பீட்டர்.

மாமா பீட்டருக்கு எழுதப் படிக்கத் தெரியும். வேதப் புத்தகங்களை அவர் நன்றாகக் கற்று அறிந்து இருந்தார். எந்த அடியார் மிகச் சிறந்த அடியார் என்பதுபற்றி எப்பொழுது பார்த்தாலும் என் தாத்தாவும் அவரும் விவாதித்துக்கொண்டு இருந்தார்கள். பைபிளில் கூறப்படும் பாபிகளைப்பற்றி, ஈவு இரக்கமின்றி அவர்கள் ஏசினார்கள். மற்றவர்களைக் காட்டிலும் அப்ஸாலோமைத்தான் அதிக குற்றவாளியாகக் கருதினார்கள். சில சமயங்களில் இலக்கண வரம்பைக் கடைப்பிடித்து அவர்கள் பேசத் தொடங்கிவிடுவார்கள்; "தீமை மயம்", "சட்டமின்மை மயம்", "விக்கிரக வணக்கமயம்" என்று என் தாத்தா சொல்வார். அப்படிச் சொல்லக் கூடாது. "தீமை வாதம்", "சட்டமின்மை வாதம்", "விக்கிரக வணக்கம் வாதம்" என்று சொல்ல வேண்டும் என்று மாமா பீட்டர் திருத்துவார்.

தனது முகமெல்லாம் சிவந்துபோக "உன் முறை வேறு; நான் சொல்லும் முறை வேறு" என்று என் தாத்தா உறுமுவார். "உனது வாதம் எல்லாம் தொலைந்து போக!" என்பார்.

தன் தலைக்கு மேலே புகை சுருள் சுருளாகக் கிளம்ப, சஞ்சலப்படாமல் மாமா பீட்டர் உட்கார்ந்து இருப்பார்.

" உமது 'மயத்'திறைல் என்ன நன்மை ஏற்பட்டுவிடப் போகிறது ?" என்று பிடிவாதமாக இழுத்து இழுத்துச் சொல்வார். "கடவுளுக்கு இது சிறிதுகூட நல்லதாகத் தோன்றுது; உமது பிரார்த்தனைகளில் ஆண்டவன் இவற்றைக் கேட்க நேர்ந்தால், அதைப்பற்றி " இந்தப் பிரார்த்தனை பெரிதாகத்தான் இருக்கிறது. ஆனால் ஒரு அத்திப்பழத்தின் மதிப்புக்கூட இதற்குக் கிடையாது' என்று தனக்குத் தானே ஆண்டவன் எண்ணிக்கொள்வார் " என்று சொன்னார்.

தனது பசிய கண்கள் பிரகாசிக்க "அலெக்ஸி ! இங்கேயிருந்து போய்விடு " என்று என் தாத்தா என்னைப் பார்த்து இரைந்தார்.

ஒழுங்கிலும் சுத்தத்திலும் பீட்டருக்குப் பிரியம் அதிகம். முற்றத்தில் நடக்கும்போது, கம்புகள், எலும்புகள், கற்கள், குச்சிகள் ஆகியவை கிடைப்பதை தன் காலால் எற்றி அப்பால் தள்ளுவார். "இவற்றால் எந்த நன்மையும் இல்லை ; வெறுமனே வழியில் கிடக்கின்றன " என்று வெறுப்போடு முணுமுணுப்பார்.

வார்த்தைகளை நிறையக் கொட்டிக் கொட்டி அவர் பேசுவார் ; அன்பும் மகிழ்ச்சியும் நிரம்பியவர் என்ற எண்ணம் ஏற்படும்படியாக அவை செய்துவிடும். சில சமயங்களில் அவருடைய கண்கள் பஞ்சடைந்து போய், பிணத்தின் பார்வைபோன்ற ஒருவிதப் பார்வையுடன் பார்க்கும். தன்னுடைய மருமகன் இருப்பதைப்போன்று, எங்கேயோ ஒரு இருட்டு மூலையில் அமைதியாகவும் வாட்டத்துடனும் அடிக்கடி அவர் இருந்துகொள்வார்.

" பீட்டர் மாமா ! என்ன சாமாச்சாரம் ?"

" இங்கேயிருந்து அப்பால் போய்விடு " என்று மந்தத்தின் உச்ச நிலையில் இருந்துகொண்டு அவர் சொல்வார்.

எங்கள் தெருவில் இருந்த வீடுகள் ஒன்றில் நூதனமான நடத்தையுடைய மனிதர் ஒருவர் வசித்தார்; அவருடைய நெற்றியில் கழலை ஒன்று இருந்தது; ஞாயிற்றுக்கிழமை தோறும் ஜன்னல் அருகே வந்து உட்கார்ந்துகொண்டு, நாய்கள், பூனைகள், கோழிக்குஞ்சு, காக்கைகள் ஆகியவற்றையும், தனக்குப் பிடிக்காவிட்டால் சில சமயங்களில் வீதியில் நடப்போரையும் தனது சிறிய துப்பாக்கியால் அவர் சுடுவார்; ஒரு முறை "இது மிக நேர்த்தி" மீது சிறிய ரவைகளால் மள மளவென்று அவர் சுட்டுவிட்டார். அவர் போட்டிருந்த தோல் ஜாக்கெட்டை ஊடுருவ முடியாமல், சில ரவைகள், அவருடைய சட்டைப் பைக்குள் விழுந்துவிட்டன. இந்த ரவைகளை எடுத்துத் தன் கையில் வைத்துக்கொண்டு, அந்த விடுதிவாசி ஆராய்ந்து பார்த்தது எனக்கு நினைவு இருக்கிறது. போலீஸாருக்குத் தெரிவிக்கும்படி என் தாத்தா அவரைத் தூண்டினர். அவரோ அந்த ரவைகளை அடுக்களையின் மூலையில் எறிந்துவிட்டு "அவ்வளவு சிரமம் எடுத்துக் கொள்ளத்தக்கது அல்ல இது" என்று சொல்லிவிட்டார்.

மற்றொரு முறை அந்த மடையன், என் தாத்தாவின் கால்மீதே சுட்டுவிட்டான். இதனால் சீற்றம்கொண்ட என் தாத்தா இதைப் போலீஸுக்கு அறிவித்துவிட்டார். பிறகு அதற்கான சாட்சிகளையும் திரட்ட ஆரம்பித்தார். ஆனால் அந்தக் கனவானே திடுமென மாயமாக மறைந்துவிட்டார்.

அவர் சுடுவது தெருவில் கேட்கும்போதெல்லாம் ஞாயிற்றுக்கிழமைதோறும் தான் அணிந்துகொள்கிற மங்கிப் போன பெரிய தொப்பியைத் தன் தலையிலிருந்து மாமா பீட்டர் விரைந்து எடுத்துவிடுவார். பிறகு வாயில் வழியாக வேகமாக உள்ளே நுழைவார். மீண்டும் பக்கத்து நடைபாதைக்குச் சென்று, தனது கோட்டின் ஓரத்தில் கையை விட்டு, அதைச் சேவலின் வால்போல ஆக்கிக்கொள்வார்.

வயிற்றை வெளியே தள்ளிக்கொண்டு, சூட்டுக்காரன் இருக்கும் ஜன்னலைக் கடந்து, கம்பீரமாக நடப்பார். இப்படி நடக்கும்போது முதலில் எதுவும் நேராவிட்டால், இரண்டாவது முறையாகவும் மூன்ருவது முறையாகவும் அவ்வாறே நடப்பார். வீட்டிலுள்ள ஜனங்கள் எல்லோரும் வாயில் அருகே கூடி நின்று வேடிக்கை பார்ப்பார்கள்; அந்த ராணுவக்காரரும் அவருடைய மனைவி கூந்தல் அழகியும் ஜன்னல் வழியாக எட்டிப் பார்ப்பார்கள். பெட்லெங் வீட்டிலிருந்தும் ஜனங்கள் வந்து முற்றத்தில் நின்றுகொண்டு கவனிப்பார்கள். ஓவ்ஸியானிக்காவ் குடும்பத்தாருக்குச் சொந்தமான சாம்பல் நிற வீடு மட்டும்தான் ஜீவகளை அற்றுப்போய் கிடக்கும்.

சில சமயங்களில் மாமா பீட்டரின் முயற்சிகள் பயனற்றுப்போகும். தனது கவனத்துக்கு ஏற்ற வேட்டை அல்ல என்பதாகக் கருதி, வேட்டைக்காரர் சும்மா இருந்துவிடுவார். ஆனல் சில சமயங்களில் "டுப் டுப்" என்று இரட்டைக் குழாய் துப்பாக்கி வெடிப்பது கேட்கும்.

நடையைத் துரிதப்படுத்தாமல் மாமா பீட்டர் எங்களிடம் மெதுவாக வந்து மிக்க திருப்தியுடன் "கோட்டின் ஓரங்களில்தான் சூடு விழுந்தது" என்று சொல்வார்.

ஒரு நாள் சூடு அவருடைய கழுத்திலும் தோள்பட்டையிலும் தைத்துவிட்டது.

"இந்த முரட்டு ஜந்துவிடம் நீ ஏன் இப்படி விளையாடுகிருய்?" என்று சொல்லி, ஊசியால் ரவையை என் பாட்டி எடுத்துவிட்டாள். "உன் கண்கள் சிதறி வெளியே விழும்படியாக அவன் உன்னைச் சுட்டுவிடப்போகிருன்" என்று எச்சரித்தாள்

"அவனுல் முடியாது, அக்குலினு ஐவானேவ்னு! அவன் சரியான சூட்டுக்காரன் அன்று!" என்று வெறுப்போடு பதில் சொன்னுர் பீட்டர் மாமா.

“ அவன் விருப்பம் நிறைவேற நீ ஏன் இப்படி இடம் கொடுக்கிறாய் ?”

“ இடமா கொடுக்கிறேன் ? அந்தக் கனவானை நான் கிண்டல் அல்லவா செய்கிறேன்.”

தன் கைமீது பட்ட காயங்களை ஆராய்ந்து பார்த்துக் கொண்டே “ இதைச் சூடு என்றே சொல்ல முடியாது. சீமாட்டி தாத்தியான் அலெக்ஸியீவ்னு ஒரு முறை தற்காலிக தாம்பத்திய உறவுக்கு ஏற்பாடு செய்து இருந்தாள் ; சிப்பந்திகளை மாற்றுவதைப்போன்று, கணவன்மார்களையும் அவள் மாற்றிக்கொண்டேயிருப்பாள். மாமண்டு இலிச் என்ற ராணுவக்காரர் ஒருவருடன் இத்தகைய தொடர்பை அவள் வைத்துக்கொண்டு இருந்தாள். அவர் ஒரு சரியான சூட்டுக்காரர்! பாட்டி! துப்பாக்கி வைத்திருப்பதால் இவருக்கு என்ன பிரயோஜனம்? மனத்தெம்பு இல்லாத இக்நாஷ்கா என்பவனை நாற்பது அடி தூரமோ அல்லது அதற்கு அப்பாலோ போய் நிற்கும்படி சொல்வார். அப்படி நின்றதும் அவனுடைய இடைவாரில், கால்களுக்கு மத்தியிலே ஒரு போத்தலைக் காட்டித் தொங்கவிடுவார். கால்களை அகல வைத்துக்கொண்டு மடையனான அந்த இக்நாஷ்கா சிரித்துக்கொண்டு நிற்பான். மாமண்டு இலிச் குறிபார்த்து ‘ டுப் ’ என்று அந்தப் போத்தலைச் சுடுவார். ஒரு முறை குதிரை உண்ணியோ அல்லது வேறு எதுவோ இக்நாஷ்காவைக் கடித்துவிட்டது. இதனால் ஆடி அசைந்து குதித்ததால், ரவை நேராக அவனுடைய முழங்கால் முட்டில் பாய்ந்துவிட்டது. கண் இமைப்பதற்குள் ஒரு டாக்டரை அழைத்து வந்து, அவனுடைய முழங்காலைத் துண்டித்து எடுத்துவிட்டார்கள் ; பிறகு அதைப் புதைத்துவிட்டார்கள்...”

“ இக்நாஷ்கா என்னவானான் ?”

" ஓ அவனு! சும்மா இருக்கிறுன். மடையனுய் இருப் பவனுக்குக் கைகால் இருப்பினும் சரி அவனுக்கு அவை பிரயோஜனப்படுவது இல்லே. தனது மடமையைக்கொண்டே அவன் வாழ்கிறுன்; மடையனுக்கு உதவிசெய்ய எல்லாரும் தயாராக இருக்கிறுர்கள். இவனைப்போன்ற பேதைகளுக்குத் தீங்கு செய்யத் தெரியாது. 'அறிவு இல்லாதவனிடத்தில் தவறும் இருக்காது' என்று பழமொழி ஒன்று கூறுகிறது."

இதைப்போன்ற கதைகளே டஜன் கணக்கில் என் பாட்டில் அறிவாளாதலால், இந்தக் கதை அவளுக்கு அவ் வளவாகப் பிடிக்கவில்லே. எனக்கோ உடம்பில் நமச்சல் ஏற்பட்டு, " கனவான் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் இப்படி யும் மனிதனைக் கொல்வார்களா ?" என்று கேட்டேன்

" ஏன் கொல்ல மாட்டார்கள்? அவர் நன்ருகக் கொல்லு வார்; கனவான்களாய் இருப்பவர்கள் சில சமயங்களில் தங் களுக்குள்ளே ஒருவரை ஒருவரே கொல்லச் சொல்வார்கள். ஈட்டிப் படையைச் சேர்ந்த சிப்பாய் ஒருவன் ஒரு முறை தாத்திதான் அலெக்ஸியீவ்னுவைச் சந்திக்க வந்தான்; அவனும் மாமண்டும் சண்டை போட்டுக்கொண்டார்கள். கைத்துப் பாக்கியைக் கையில் எடுத்துக்கொண்டு, சண்டை போடுவதற் காக அவர்கள் ஒரு பூங்காவுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். ஏரி ஓரத்தில் இருந்த ஒரு பாதையில், ஈரலேக் குறிவைத்து, அந்த ஈட்டிச் சிப்பாய் மாமண்டைச் சுட்டான்; மாமண்டு புகழ் உடம்பு எய்தினுர்; சிப்பாய் காகஸஸ் பிரதேசத்துக் குப் போய்விட்டான்; அந்தக் கதை இத்துடன் முடிந்து போயிற்று! பார்த்தாயா ? தங்களேத் தாங்களே அவர்கள் இப்படிக் கொலே செய்துகொண்டார்கள். குடியானவர் களேயும் அவர்களேச் சேர்ந்தவர்களேப்பற்றியும் இன்னும் நிறையச் சொல்லலாம். இப்போதெல்லாம் குடியானவர் களுக்கு அவர்கள் எஜமானர்களாக இல்லே. குடியானவர்கள்

அவர்களின் உடைமையாக இருந்த காலங்களில் அவர்கள் வளமாக இருந்தார்கள்.''

"அப்பொழுதும் அதிக அக்கறை காட்டாமல் இருந் தார்களா ?''

"உண்மைதான் ; உடைமை என்பது உண்மைதான் ; இருந்தாலும் மலிவான உடைமை" என்று மாமா பீட்டர் ஒப்புக்கொண்டார்.

அவர் எப்போதும் என்னிடம் இதமாக நடந்துகொண் டார் ; வயது வந்தவர்களுடன் பேசுவதைக் காட்டிலும் என் னுடன் மிக்க அன்புடன் கண்களை மூடிக்கொள்ளாமல் பேசி ஞர். எனக்குப் பிடிக்காதவை அவரிடம் ஏதோ இருப்பதாக எனக்குத் தோன்றியது. எங்களுக்கு அவர் விருந்துவைக்கும் போது, மற்றவர்களுக்குத் தடவுவதைக் காட்டிலும் எனக் குத் தரும் ரொட்டியில் தனக்குப் பிடித்தமான 'ஜாமை' கனமாகத் தடவித் தருவார். பட்டினத்துக்குப் போனல் எனக்கு இஞ்சி ரொட்டியும் கசகசா விதைகளும் வாங்கி வருவார். எப்பொழுது பேசினுலும் கவனத்துடனும் அமைதியாகவும் அவர் பேசுவார்.

"வயதுவந்த பிறகு நீ சிப்பாய் ஆக இருக்கப் பிரியப் படுகிருயா ? அல்லது குமாஸ்தாவாக இருக்கப் பிரியப்படு வாயா ?''

"சிப்பாயாக இருக்க.''

"அது நல்லது ; சிப்பாயாக இருப்பது இந்தக் காலத் தில் அவ்வளவு கஷ்டமான காரியம் அன்று. இதைப்போல குருமார்களாக இருப்பதும் எளிதான காரியம்தான். வீடு வீடாகச் 'சென்று ஆண்டவனுடைய புகழ் ஓங்கட்டும்' என்று கத்துவதுடன் அந்தக் காரியம் தீர்ந்துவிடுகிறது. சிப்பாயாக இருப்பதைக் காட்டிலும் குருமாராக இருப்பது இன்னும் எளிது. செம்படவனுக இருப்பதோ யாவற்றிலும் எளிது.

எதைப்பற்றியுமே தெரிந்துகொள்ள வேண்டிய தேவை அவனுக்கு இருப்பது இல்லை. தொழிலை பழக்கப்படுத்திக்கொண்டால் போதுமானது.''

சுற்றிச் சுற்றி வந்து தூண்டிலில் வந்து இரையை மீன்கள் எப்படிக் கவ்வும் என்பதையும் தூண்டிலில் விழுந்துவிட்டால் பாஸ், பீரீம், மாக்ரெல் போன்ற மீன்கள் எப்படித் தாவும் என்பதையும் அவர் நடித்துக்காட்டியது பார்ப்பதற்கு வேடிக்கையாய் இருந்தது.

"உன் தாத்தா அடிப்பதைப் பார்த்தால் பைத்தியம் பிடித்துவிடும்போல் தோன்றுகிறது இல்லையா?'' என்று அவர் ஆறுதலாகச் சொன்னார். "மனிதா! இந்த மாதிரியான சமயங்களில் பைத்தியம் பிடிப்பதற்குக் காரணம் இல்லை. உன் நன்மையின் பொருட்டே இந்த அடிகள் விழுகின்றன. இவற்றை எல்லாம் குழந்தைகள் அடிக்கும் அடி என்று சொல்லலாம். நான் வேலை பார்த்த தாத்தியான் அலெக்ஸியீவ்னாவைப்பற்றிச் சொல்லுகிறேன் கேள்: அடி என்றால் அவள் அடிக்கச் செய்வதுதான் சரியான அடி! கிறிஸ்டபர் என்னும் பெயருடைய ஒருவனை இதற்கு எனவே அவள் தேர்ந்தெடுத்து வைத்து இருந்தாள். அடி கொடுப்பதில் இவன் ஒரு சரியான நிபுணன்; அக்கம் பக்கத்தில் இருந்த எஸ்டேட்டுகளுக்குச் சொந்தக்காரர்கள் இந்தச் சீமாட்டிக்கு ஆள் அனுப்பி "தாத்தியான் அலெக்ஸியீவ்னா! இரண்டொருவருக்கு அடிகள் கொடுப்பதற்காக உங்கள் கிறிஸ்டபரை அனுப்பி வையுங்கள்; காரியம் முடிந்ததும் திருப்பி அனுப்பிவிடுகிறோம்' என்று கேட்பார்கள்; அதன்படி அவனை அவள் அனுப்பிவைப்பாள்.''

தனது எஸ்டேட்டிலிருக்கும் தூண்கள் நாட்டிய முற்றத்தில், கைதாங்கி சிவப்புக் குறிச்சியில், வெள்ளை வெளேரென்ற ஆடைதரித்து, நீலநிறச் சால்வை ஒன்றைத் தோளில்

போட்டுக்கொண்டு அவள் இருக்கிற விதத்தையும் ஆண் பெண் அடிமைகளுக்குக் கிறிஸ்டபர் என்பவன் அடி கொடுப்பதை அவள் கவனித்துக்கொண் டிருக்கிற விதத்தை யும் உணர்ச்சிபூர்வமாக அவர் விவரித்துச் சொல்வார்.

கிறிஸ்டபர் ரையாஸானிலிருந்து வந்தவன்; நாடோடி களை அல்லது கோகோல்களை* நிகர்த்து அவன் இருந்தான். ஒரு காதிலிருந்து மறு காதுவரை அவனுக்கு மீசை வளர்ந்து இருந்தது. மோவாயை அவன் சவரம் செய்துகொண்டிருப் பான். ஆதலால், முகம் முழுதும் நீலநிறமாய் இருக்கும். உண்மையில் அவன் மந்தபுத்தியுள்ளவனா அல்லது தனக்கு வாழ்க்கை எளிதாக இருக்கும்பொருட்டு இப்படி நடிக்கிறானா என்பதை யாராலும் சொல்ல முடியாமல் இருந்தது. அடுக் களைக்குச் சென்று ஒரு கிண்ணத்தை எடுத்து, தண்ணீரால் அதை நிரப்பிக்கொள்வான். ஈயையோ, வண்டையோ அல் லது கரப்பானையோ எதையாவது ஒன்றைப் பிடித்துவந்து தண்ணீருக்குள் போட்டு, ஒரு குச்சி முனையால் தண்ணீருக் குள் அமுக்கி நெடுநேரம் அதை அதிலேயே வைத்துக் கொண்டிருப்பான். அல்லது தனது சட்டைக் காலரில் இருக் கும் மூட்டைப்பூச்சி ஒன்றைப் பிடித்து, அந்தத் தண்ணீரில் சில சமயம் முக்கிக்கொண் டிருப்பான்.

இத்தகைய கதைகளை நான் ஏராளமாகக் கேட்டிருக் கிறேன்; இப்படிப்பட்ட அனேக கதைகளை என் தாத்தாவும் பாட்டியும் எனக்குச் சொல்லி இருக்கிறார்கள். ஆனால் அவற் றில் சிற்சில வித்தியாசங்கள் தான் இருந்தனவே தவிர, மனி தர்கள் பட்ட அவமரியாதைகளையும் அவஸ்தைகளையும்பற்றிக் கூறுவனவாகவே அவை இருந்தன; இத்தகைய கதைகளைக்

---

*உக்ரேனியர்களை இந்தப் பெயரால் ருஷ்யர்கள் அழைப்பது உண்டு.

கேட்டுக் கேட்டுச் சலிப்புத் தட்டிய எனக்கு இப்போது இவற்றில் ஒருவித வெறுப்பே உண்டாகிவிட்டது.

"வேறு எதையாவது பற்றிச் சொல்லுங்கள்" என்று நான் சொன்னேன்.

சம்மதம் என்று சொல்பவர்போல, அந்தப் பாரவண்டிக்காரர் தன்மீது இருந்த சுருக்கங்களை எல்லாம் வாய் அருகே ஒன்று கூட்டிக்கொண்டு, அவற்றைத் தம் கண்கள் அருகே கொண்டுபோனார்.

"ஆசைப்பட்டவனே! வேறு ஒன்று சொல்கிறேன் கேள்: ஒரு காலத்தில் எங்களிடம் ஒரு சமையல்காரன் இருந்தான்......"

"யாரிடம் இருந்தான்?"

"சீமாட்டி தாத்தியான் அலெக்ஸியீவ்னாவிடம்."

"தாத்தியானா என்று சொல்லாமல் ஆண்மகனை அழைப்பதுபோல அவளைத் தாத்தியான் என்று குறிப்பிடுகிறீரே, ஏன்? அவள் ஆண்மகன் அல்லவே? அப்படி அவள் இருந்தாளா என்ன?"

"இல்லை. அவள் ஒரு பெண்மணிதான்; இருந்தும் அவளுக்கு மீசை முளைத்து இருந்தது; சிறிய கறுப்பு மீசை இருந்தது. கறுப்பு ஜெர்மானிய இனத்தில் பிறந்தவள் அவள்; நீக்ரோவர்களைப் போன்ற ஒரு இனம் அது. நல்லது. எங்களிடமிருந்த சமையல்காரன், மனிதா! இந்தக் கதை மிகவும் வேடிக்கையாக இருக்கும்."

ஒரு பணியாரத்தை அந்தச் சமையல்காரன் எவ்வாறு கெடுத்துவிட்டான் என்பதையும் அதற்காகத் தண்டிக்கும் பொருட்டு உட்கார்ந்து ஒரே விழுங்கில் அதை விழுங்கும்படியாகக் கட்டாயப்படுத்தப்பட்டதையும், அதன் காரணமாக அந்த சமையல்காரன் நோய்வாய்ப்பட்டதையுமே மிக்க வேடிக்கையான கதை என்பதாக அவர் சொன்னார்.

" இது வேடிக்கையாக இல்லையே " என்று சலித்துக் கொண்டேன் நான்.

" அப்படி என்றால் எது வேடிக்கை ? சொல் பார்க்கலாம் " என்று சொன்னார் அவர்.

" எனக்குத் தெரியாது."

" அப்படியானால் வாயை மூடிக்கொண்டு சும்மா கிட."

சப்பையான சில கதைகளை மேலும் அவர் சொல்லத் தொடங்கினார்.

சில சமயங்களில் ஞாயிற்றுக்கிழமை யன்று என் அம்மான் சேய்கள் என்னைக் காண வருவார்கள்; துக்கத்துடனும் சோம்பியும் இருக்கும் அம்மான் மைக்கேலுடைய புதல்வன் ஷாஷாவும் கச்சிதமும் அறிவும் கொண்ட அம்மான் யாக்கோவ் புதல்வன் ஷாஷாவும் ஒரு முறை வழக்கப்படி என்னைக் காண வந்திருந்தார்கள். ஒரு நாள் நாங்கள் மூவரும் வெளி வீட்டு முகட்டின்மீது அங்கும் இங்கும் கவனித்தோம். பெட்லெங் வீட்டின் முற்றத்தில், மரக்கட்டைகள்மீது அமர்ந்து, சில நாய்க்குட்டிகளுடன் ஒருவன் விளையாடிக்கொண் டிருப்பதைக் கண்டோம். ஓரத்தில் ரோமம் வைத்துத் தைக்கப்பெற்ற நீண்ட பச்சைக் கோட்டு ஒன்றை அவன் அணிந்து இருந்தான். வழுக்கை விழுந்த அவனுடைய சிறிய மஞ்சள் தலையில் எதுவும் அணியாது இருந்தான். என் அம்மான் சேய்களில் ஒருவன் அந்த நாய்க்குட்டிகளில் ஒன்றைத் திருடிவிட வேண்டும் என்று யோசனை கூறினான். உடனே ஒரு திட்டத்தைத் தீர்மானித்து முடிவு செய்தோம்; தெருவுக்குச் சென்று பெட்லெங் வீட்டின் வாயில் முன்பு என் அம்மான் சேய்கள் காத்து நிற்பது என்றும் நான் அந்த மனிதனைப் பயமுறுத்துவது என்றும் அதனால் அவன் ஓட்டம் பிடிக்கும்பொழுது என் அம்மான் சேய்கள் முற்றத்துக்குள் புகுந்து, நாய்க்

குட்டிகளில் ஒன்றைப் பிடித்துவந்துவிடுவது என்றும் முடிவு செய்தோம்.

" நான் அவனை எவ்வாறு பயமுறுத்துவது ?"

"அவனுடைய வழுக்கை மண்டையில் எச்சிலைத் துப்பு" என்று என் அம்மான் சேய்களில் ஒருவன் யோஜனை சொல்லித் தந்தான்.

வழுக்கை மண்டைமீது துப்புவதில் குறும்புத்தனம் எதுவும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. இதைவிடக் கொடுமையான குற்றங்கள் புரிந்திருப்பதை நான் பார்த்தும் கேட்டும் இருக்கிறேன். ஆகவே என்னிடம் ஒப்படைத்த பொறுப்பை நான் தயங்காமல் நிறைவேற்றினேன்.

ஆனால் இந்தச் செய்கை பெரியதொரு அமளியையே உண்டுபண்ணிவிட்டது. பெட்லெங் இல்லத்தைச் சேர்ந்த ஆண்-பெண் அனைவரையும் அழைத்துக்கொண்டு, அழகிய வாலிப அதிகாரி ஒருவர் எங்கள் வீட்டு முற்றத்துக்கு வந்து சேர்ந்தார். இது விஷயம் தெரியாமல் என் அம்மான் சேய்கள் தெருவில் அப்போது விளையாடிக்கொண் டிருந்தார்கள். செய்த குற்றத்துக்காக நான் ஒருவன்தான் அடி வாங்கவேண் டியதாயிற்று. பெட்லெங் வீட்டாருக்கு இழைத்த அவமரி யாதையைச் சாந்தப்படுத்துவதற்காக, என் தாத்தா என்னை வெளுத்துவாங்கிவிட்டார்.

காயமுற்று வேதனையுடன் அடுக்களைத் திண்ணையில் நான் படுத்து இருந்தேன். இந்தச் சமயத்தில் என்னைப் பார்ப் பதற்காக பீட்டர் மாமா வந்து சேர்ந்தார் ; நன்றாக ஆடை அணிந்து மகிழ்ச்சியோடு தென்பட்டார்.

" வாலிபனே ! நீ யோஜித்துச் செய்த காரியம் கெட்டிக் காரத்தனமான காரியம் ; அந்தக் கிழட்டு ஆட்டுக்கு இது வேண்டியதுதான் ; அந்தக் கூட்டத்தார் எல்லார்மீதுமே நீ துப்பி இருக்க வேண்டும் ! அவனுடைய அழுகிப்போன

மண்டையில் செங்கல்லை எடுத்து வீசியிருந்தால் இன்னும் நன்றாய் இருந்து இருக்கும்'' என்று மெதுவாகச் சொன்னார்.

பச்சைக் கோட்டு அணிந்திருந்த இந்தக் கனவானையும் குழந்தைக்கு இருப்பதைப்போன்ற ரோமமும் முளையாத அவருடைய உருண்டை முகத்தையும், தனது மஞ்சள் நிறத் தலையைத் தன் சிறிய கைகளால் துடைத்தவாறே நாய்க்குட்டி போல மெதுவாகவும் தெளிவாகவும் அவர் ஊளையிட்டதும் எனக்கு நினைவு இருக்கின்றன. இது என் அம்மான் செய்கலை வெறுக்குமாறு என்னைச் செய்துவிட்டது; அந்தச் சமயத்தில் நாணப்பட்டு உள்ளம் குன்றும்படியாகவும் செய்து விட்டது. ஆனால் கூடை போன்ற முகமுடைய பார வண்டிக் காரர் முகத்தை இப்போது பார்த்ததும் அதை நான் மறந்து விட்டேன். என்னை அடிக்கும்போது என் தாத்தாவின் முகம் எப்படி வெறுப்பூட்டுவதாயும் பயங்கரமாயும் இருந்ததோ அதேபோல இவருடைய முகமும் இருந்தது.

"அப்பால் போ!'' என்று சொல்லி, பீட்டரை என் காலால் உதைத்துக் கைகளால் தள்ளினேன்.

கொக்கரித்துக்கொண்டும் கண்ணடித்துக்கொண்டும் திண்ணையைவிட்டு அவர் எழுந்து போய்விட்டார்.

அன்று முதல் அவருடன் பேச எனக்கு விருப்பம் உண்டாகவில்லை. அவரைவிட்டு விலகி இருக்க முயன்றதோடு, எதிர்பாராத விதத்தில் ஏதாவது நிகழ்ந்தாலும் நிகழக் கூடும் என்ற சந்தேகக் கண்ணுடன் அவரைக் கவனித்துக்கொண்டும் வந்தேன்.

சிறிது காலத்தில் இதைத் தொடர்ந்து இன்னொரு நிகழ்ச்சியும் நடந்தது. சில காலமாக, ஓஸியானிக்காவ் குடும்பத்தாருக்குச் சொந்தமான அமைதியான வீட்டை ரகசியத்தில் கவனித்துக்கொண்டு வந்தேன். அந்தச் சாம்பல் நிற வீட்டுக்

குள், ஏதோ ஒருவிதக் காந்தர்வ வாழ்க்கை ரகசியமாக நடை பெறுவதுபோல எனக்குத் தோன்றியது.

பெட்லெங் குடும்பத்தார் வீடோ எப்பொழுதும் சந்தடி யும் மகிழ்ச்சியும் நிறைந்ததாய் இருக்கும். வசீகரம் வாய்ந்த வாலிப நங்கையர் பலர் அங்கே இருந்தார்கள். மாணவர்களும் அதிகாரிகளும் அவர்கள்மீது காதல்கொண்டு, அங்கே வந்து ஆடியும் பாடியும் பேசியும் சிரித்தும் பொழுது போக்கினர் கள். ஜனங்கள் மட்டும் அல்ல, அந்த வீடும்கூட, பார்ப்பதற்கு மகிழ்ச்சியுடன் இருப்பதுபோலத் தோன்றியது. பளபளப் பான ஜன்னல்களுடனும் அவற்றின் வழியாக ஓடிய பசிய செடிகளுடனும், அந்த வீடு கண்களுக்குத் தெற்றெனத் தெரிந்தது. ஆனால் இந்த வீட்டை என் தாத்தாவுக்குப் பிடிக்காது.

அந்த வீட்டில் வசிப்பவர்களை "மத நம்பிக்கையற்றவர் கள்! சண்டாளர்கள்!'' என்று சொல்லி வந்தார். பெண் களைக் குறிப்பிடும்பொழுது கேவலமான வார்த்தை ஒன்றைச் சொல்லிக் குறிப்பிட்டார்; இந்த வார்த்தைக்குக் கேவலமான ஒரு அர்த்தத்தைச் சொல்லி, அதற்கு மாமா பீட்டர் விளக்கம் தந்தார்.

ஆனால் கண்டிப்பும் அமைதியும் நிலவிய ஓஸியானிக் காவ் வீட்டை என் தாத்தாவுக்குப் பிடித்துப்போய் இருந்தது.

அந்த வீடு உயரமான ஒற்றை மாடி வீடு; நீண்டு இருந்த அந்த வீடு சுத்தமாக இருந்தது. சமக்காளம் விரித்தாற்போல திறந்த முற்றத்தில் புல் முளைத்து இருந்தது. முற்றத்தின் நடுவே கிணறு ஒன்று இருந்தது; இரண்டு தூண்கள்விட்டு அதன்மீது கொட்டகை போடப்பட்டிருந்தது. வீதியில் தெரி யாமல் மறைந்திருக்க விரும்புவதுபோல, வீதியைவிட்டு விலகி அந்த வீடு அப்பால் இருந்தது. குறுகிய வளைவுள்ள மூன்று ஜன்னல்கள் இருந்தன; அவற்றின் கதவுகள் சூரிய

ஞல் வானவில் நிறங்களைப் பிரதிபலித்து, வீட்டின் முகப்பை அழகுபடுத்தின. நுழை வாயிலின் வலப்புறத்தில் களஞ்சியம் ஒன்று இருந்தது; அதற்கும் வீட்டுக்கு இருப்பதைப் போன்றே மூன்று ஜன்னல்கள் இருந்தன. ஆனல் அவை போலி ஜன்னல்களாய் இருந்தன; அவற்றின் உருவம் சுவரில் பதிக்கப்பட்டு, சட்டங்களுக்கும் கம்பிகளுக்கும் வெள்ளை அடிக்கப்பட்டு இருந்தது. இந்தப் போலி ஜன்னல்கள் பார்ப்பதற்கு அறுவருப்பாயும் மற்றவர்களுக்குத் தெரியாமல் மறைவாக வாழ இந்த வீட்டிலுள்ளவர்கள் விரும்புகிருர்கள் என்ற உண்மையை அழுத்திச் சொல்வதற்காகவே இந்தக் களஞ்சியம் நிற்கிறதோ என்று எண்ணும்படியாகவும் தோன்றியது. அந்த வீடு முழுதும், அதிலிருந்த காலி லாயங்கள், காலிக் களஞ்சியங்கள் அனைத்தும் அவற்றின் பெரிய பெரிய கதவுகளையும் சேர்த்து, அமைதியாகத் தீங்கு புரியும்பொருட்டே அல்லது தனது அகந்தையை மௌனமாக வெளியிடும் பொருட்டேதான் இருப்பதாகத் தோன்றியது.

சில சமயங்களில் தாடியில்லாத உயரமான மனிதர் ஒருவர், தனது நரைத்த மீசைகள் ஊசிகள்போல் குத்திட்டு நிற்க அந்த முற்றத்தில் நொண்டி நொண்டிச் சுற்றி வருவார். ஏகதேசங்களில், பக்கவாட்டு மீசைகளும் வளைந்த மூக்குமுடைய வேறு ஒரு கிழவர், லாயத்திலிருந்து சாம்பல் நிறக் குதிரை ஒன்றை வெளியே ஓட்டி வருவார். முற்றத்துக்கு ஒரு முறை வந்துவிட்டால் போதும்; ஒடுங்கிய மார்பும் மெலிந்த கால்களுமுடைய அந்தக் குதிரை நாணமுள்ள சந்நியாசிப் பெண்போல எதற்கு எடுத்தாலும் தலையை ஆட்டும். நொண்டிக் கிழவன் அந்தக் குதிரையைப் பலமாகத் தட்டிக் கொடுப்பார்; சீட்டி அடித்து நீண்ட பெருமூச்சுவிட்ட பின்னர், திரும்பவும் இருள்படர்ந்த லாயத்துக்கு அனுப்பிவிடுவார். அந்த வீட்டைவிட்டு அந்தக் கிழவர் தப்பியோட விரும்பு

வதைப்போலவும் அப்படிச் செய்யவொட்டாமல் ஏதோ ஒரு கொடிய சக்தி அவரைப் பிடித்துக்கொண்டிருப்பது போலவும் எனக்குத் தோன்றியது.

நாள்தோறும் தவறாமல் நண்பகலிலிருந்து மாலைவரை மூன்று சிறுவர்கள் அந்த வீட்டு முற்றத்தில் விளையாடுவார்கள். எல்லாரும் ஒன்றுபோலவே சாம்பல் நிஜாரும் சட்டைகளும் போட்டிருந்தார்கள்; ஒரே மாதிரியான தொப்பிகள் அணிந்து இருந்தார்கள்; ஒன்றுபோலவே, முகங்கள் உருண்டையாயும் கண்கள் சாம்பல் நிறத்திலும் அவர்களுக்கு இருந்தன; பருமனைக்கொண்டுதான் அவர்களை என்னால் வேறுபடுத்தித் தெரிந்துகொள்ள முடிந்தது.

வேலியில் இருந்த ஒரு ஓட்டையின் மூலமாக அவர்களை நான் கவனித்தேன். ஆனால் என்னை அவர்கள் கவனிக்காதது எனக்கு ஏமாற்றத்தை அளித்தது. எனக்குப் பழக்கமில்லாத விளையாட்டுக்களை அவர்கள் மகிழ்ச்சியோடும் நட்புரிமையோடும் விளையாடுவதைப் பார்ப்பது ஆனந்தமாய் இருந்தது. அவர்கள் உடை அணிந்திருந்த முறையும் ஒருவரை ஒருவர் கவனித்துக்கொண்ட முறையும்-குறிப்பாகப் பெரிய பையன்கள், விநோதமும் உரமும் வாய்ந்த சிறிய பையனுடன் நடந்துகொண்ட முறையும் எனக்கு விருப்பமாய் இருந்தன. அவன் கீழே விழுந்துவிட்டால், கீழே விழுந்தவனைப் பார்த்து மற்ற ஜனங்கள் சிரிப்பதைப்போலவே அவர்களும் சிரித்தார்கள். ஆனால் அந்தச் சிரிப்பில் அற்பத்தனம் எதுவும் இருக்கவில்லை. உடனே அவர்கள், அவனைத் தூக்கிவிட்டு, அவனுடைய கைகள் முழங்கால்கள் ஆகியவற்றில் படிந்திருக்கும் புழுதியை 'பர்தாக்' இலைகளைக்கொண்டே அல்லது தங்களது கைக்குட்டைகளைக்கொண்டே தட்டிவிடுவார்கள்.

"ஒன்றும் உதவாதவன் நீ" என்று இடையிலே அவர்களில் ஒருவன் சொன்னான்.

அவர்கள் ஒருபோதும் சண்டை போட்டுக்கொள்ள வில்லை; ஒருவரை ஒருவர் ஏமாற்றி விளையாடவில்லை. மூவரும் சுறுசுறுப்பு, பலம், உற்சாகம் முதலியன உடையவர் களாய் இருந்தார்கள்.

ஒரு நாள் நான் ஒரு மரத்தின்மீது ஏறி அவர்களைப் பார்த்துச் சீட்டி அடித்தேன். சீட்டியின் சப்தத்தைக் கேட்டதும் அவர்கள் ஒன்ருகச் சேர்ந்து நின்று என்னைப் பார்த்தார்கள். தங்களுக்குள் ஆலோசனை செய்தார்கள். கற்களை எறியத் தொடங்கினலும் தொடங்கக் கூடும் என்று எதிர்பார்த்த நான், கீழே இறங்கி எனது சட்டையிலும் பைகளிலும் கற்களை நிரப்பிக்கொண்டு, மீண்டும் சென்று மரத்தில் ஏறிக்கொண்டேன். ஆனல் அவர்களோ முற்றத்தில் தொலைவாகயுள்ள ஒரு மூலைக்குச் சென்று மீண்டும் விளை யாடத் தொடங்கினர்கள். என்னை அவர்கள் மறந்துபோனர் கள் என்பது கண்கூடாகத் தெரியவந்தது. இது எனக்கு வருத்தத்தை அளித்தது; எனினும், போரை முதலில் தொடங்க நான் விரும்பவில்லை. இந்தச் சமயத்தில் யாரோ ஒருவர் ஜன்னல் அருகே நின்று "குழந்தைகளே! விரைந்து வீட்டுக்கு வாருங்கள்" என்று அழைத்தார்.

உடனே திரும்பிப் பார்த்து அவசரப்படாமல் வாத்து களைப்போல அவர்கள் நடந்துபோய்விட்டார்கள்.

அவர்கள் என்னை விளையாட அழைப்பார்கள் என்ற எண்ணத்துடன், அனேகம் தடவை நான் மரத்தின்மீது ஏறி உட்கார்ந்து இருந்தேன்; ஆனல் அவர்கள் என்னை அழைக்கவே இல்லை. அடிக்கடி மானசீகமாக அவர்களுடன் சேர்ந்து நான் விளையாடினேன்; உற்சாகவயப்பட்டு, பெயர் சொல்லி அழைத்து, சிரிக்கவும் செய்துவிட்டேன். இத் தகைய சமயங்களில் அவர்கள் மூவரும் என்னை உற்றுப் பார்த்து, தங்களுக்குள் அமைதியாக ஏதேதோ கூறிக்கொள்

வார்கள். ஆனால் நானே குழப்பமடைந்து போய் மரத்தி லிருந்து கீழே இறங்கி நழுவிவிடுவேன்.

ஒரு நாள் அவர்கள் "கண்ணாமூச்சி" விளையாடினார்கள்; நடுச் சகோதரன் "அது" என இருந்து, களஞ்சியத்தின் ஒரு மூலையில் தன் கண்களைக் கைகளால் பொத்திக்கொண்டு பார்க்காமல் நின்றான்; மற்ற இரு சகோதரர்களும் ஒளிந்து கொண்டார்கள். பெரிய பையன், களஞ்சியத்தின் கூரை மீது வைக்கப்பட்டிருந்த "ஸ்லெட்ஜ்" வண்டிக்குப் பக்கத் தில் விரைவாக ஏறி ஒளிந்துகொண்டான். ஆனால், சின்னப் பையனோ ஒளிந்துகொள்ள இடம் தெரியாமல், கிணற்றைச் சுற்றிச் சுற்றி ஓடிவந்தான்.

"அது"வாக இருந்த பையன் "ஒன்று இரண்டு..." என்று சொன்னான்.

சின்னப் பையன் கிணற்று ஓரத்தில் ஏறி, கயிற்றைப் பிடித்தவாறு காலியாக இருந்த வாளிக்குள் குதித்து விட்டான்; அது உடனே மறைந்து கிணற்றின் உள் சுவரில் மோதிக்கொண்டு இறங்கிற்று.

விரைந்து, சப்தமின்றிக் கயிறு பிரிவதைக் கண்ட நான் பயத்தால் வெலவெலத்துப் போனேன். இதன் பலன் என்ன வாகும் என்பதை அறிந்த நான் முற்றத்தில் குதித்து "அவன் கிணற்றில் விழுந்துவிட்டான்!" என்று கத்தினேன்.

நான் கிணற்று அண்டைபோன அதே சமயத்தில் நடுச் சகோதரனும் அங்கே வந்துவிட்டான். கயிற்றை அவன் பிடிக்க முயன்றான். அது அவனையும் அப்பால் தள்ளி அவன் கைகளை உராய்ந்துவிட்டது. ஆனால் நானோ அந்தக் கயிற்றைப் பிடித்துக்கொண்டேன். உடனே பெரிய பையனும் ஓடி வந்து, எனக்கு உதவினான்; நாங்கள் வாளியை வெளியே யிழுத்துவிட்டோம்.

“ தயவுசெய்து விரைவாக இழுக்காதே” என்று அவன் சொன்னான்.

சின்னப் பையனை நாங்கள் காப்பாற்றிவிட்டோம்; அவன் அதிகமாக அதிர்ச்சி அடைந்துபோய் இருந்தான். அவனுடைய வலது கை விரல்களிலிருந்து ரத்தம் ஒழுகியது; கன்னம் ஒன்றில் கீறல் அதிகமாக இருந்தது. இடுப்புவரை முற்றும் நனைந்து, பயங்கரமாக அவன் வெளுத்துப்போய் இருந்தான்; எனினும் நடுக்கத்துடன் சிரித்தவாறே “ நான் எப்படி விழுந்-ந்-ந்தேன் ?” என்று கேட்டான்.

“ பைத்தியக்காரா !” என்று சொல்லி நடுச் சகோதரன் அவனை அணைத்துக்கொண்டு, முகத்தில் வழிந்த ரத்தத்தைத் துடைத்துவிட்டான்; மூத்தவனோ முகத்தைச் சுளித்துக் கொண்டு “ வாருங்கள் போகலாம்; இதை எப்படியும் மறைக்க முடியாது ” என்று சொன்னான்.

“ இதற்காக உங்களுக்கு உதைவிழுமா ?” என்று நான் கேட்டேன்.

“ ஆம் ” என்று தலையை அசைத்துவிட்டு “ நீ நன்றாக அல்லவா ஓடுகிறாய் ?” என்று சொல்லித் தன் கையை நீட்டினான்.

அதைப் பிடித்துக் குலுக்குவதற்கு முன்பு அவன் கூறின பாராட்டு மொழிகளால் நான் பூரித்துப்போனேன். அதற்கு அவன் தன் நடுச் சகோதரனைப் பார்த்து “ வா போகலாம்; இல்லாவிட்டால் இவனுக்குத் தடுமன் பிடித்து விடும். கீழே விழுந்துவிட்டான் என்று மட்டும் சொல்லி விடுவோம். கிணற்றில் விழுந்ததைப்பற்றிச் சொல்ல வேண்டாம் ” என்றான்.

“ ஆம். அப்படியே சொல்லலாம்; நான் ஒரு குட்டையில் விழுந்துவிட்டதாக நாம் எல்லோரும் சொல்வோம் ” என்றான் சின்னப் பையன்.

இதன் பின்னர் அவர்கள் எல்லாரும் போய்விட்டார்கள்.

எல்லாம் விரைவாக நடந்தன; நான் உட்கார்ந்து இருந்த மரத்தின் கிளையைப் பார்த்தேன்; அந்தக் கிளை இன்னும் ஆடி, தனது மஞ்சள் நிற இலைகளை உதிர்த்துக்கொண்டிருந்தது.

பிறகு ஒரு வாரம்வரை அந்தச் சகோதரர்கள் முற்றத்துக்கு வரவில்லை. அவர்கள் வந்தபோது அதிகமாக இரைந்து பேசினார்கள். என்னைப் பார்த்ததுமே நட்புரிமையோடு மூத்தவன் "வந்து எங்களுடன் சேர்ந்து விளையாடு" என்று என்னை அழைத்தான்.

நாங்கள் எல்லோரும் ஸ்லெட்ஜ் வண்டியில் ஏறி உட்கார்ந்துகொண்டு நீண்ட நேரம் நட்புரிமையுடன் கலந்து பழகினோம்.

"அவர்கள் உங்களை அடித்தார்களா?" என்று நான் கேட்டேன்.

"ஆம். எங்களுக்கு அடி கிடைத்தது" என்று மூத்தவன் பதில் சொன்னான்.

என்னைப்போலவே இந்தப் பையன்களுக்கும் அடிவிழுகிறது என்பதை என்னால் நம்ப முடியவில்லை. இது நியாயமல்ல என்று எனக்குத் தோன்றியது.

"நீங்கள் ஏன் பறவைகளைப் பிடிக்கிறீர்கள்?" என்று சிறியவன் கேட்டான்.

"ஏனெனில் அவை இனிமையாகப் பாடுகின்றன."

"அவற்றை இனிமேல் பிடிக்காதீர்கள்; தங்கள் இஷ்டம்போல் பறந்து செல்ல அவற்றை விட்டுவிடுங்கள்"

"சரி. இனிமேல் நான் பிடிக்கவில்லை."

"ஒன்றை மட்டும் முதலில் பிடித்து அதை எனக்குத் தந்துவிடுங்கள்."

"என்ன பறவை வேண்டும்?"

" இனிய பறவையாக, கூண்டில் அடைத்து வைத்துக் கொள்ளத்தகத்தாக வேண்டும்."

" சாப்பிங் குருவி பிடித்துத் தருகிறேன்."

" அதைப் பூனை கொன்றுபோடும்; அதை வைத்துக் கொள்ள நம்மைத் தந்தை அனுமதிக்க மாட்டார் " என்றான் நடுவிலவன்.

" ஆமாம். அது சரிதான் " என்று ஒப்புக்கொண்டான் மூத்தவன்.

" உங்களுக்குத் தாய் இருக்கிறாளா ?"

" இல்லை " என்று பெரியவன் பதில் சொன்னான். நடுவிலவன் அதைத் திருத்தினான்.

" எங்கள் தாய் இறந்துபோய்விட்டாள்; இப்போது இருப்பவள் வேறு தாய் " என்றான்.

" அத்தகையவளை மாற்றாந் தாய் என்று சொல்லுவார்கள் " என்று நான் சொன்னேன்.

" ஆம் " என்று மூத்தவன் தலையை அசைத்தான்.

மூவரும் சிந்தனையில் மூழ்கி அமைதியாக இருந்தார்கள்.

என் பாட்டி கூறின கதைகளிலிருந்து மாற்றாந் தாய் என்பவள் எப்படிப்பட்டவளாய் இருப்பாள் என்பதை நான் தெரிந்துகொண்டு இருக்கிறேன். அதனால் அவர்களின் மௌனத்தின் பொருளை நான் அறிந்துகொண்டேன். மூன்று பட்டாணிக் கடலைகள் ஒன்றுசேர்ந்து இருப்பதைப்போன்று மூவரும் நெருங்கி அமர்ந்துகொண்டார்கள். உண்மையான தாய் ஸ்தானத்தைப் பெறுவதற்காக, மாந்திரீய வசியமுள்ள மாற்றாந் தாய், எத்தகைய தீய வழிகளில் பிரவேசித்து இருக்கிறாள் என்ற கதை என் நினைவுக்கு வந்தது. ஆறுதல் சொல்லி அந்தச் சிறுவர்களை நான் தேற்ற முயன்றேன்:

" கவலைப்படாதீர்கள்! உங்களின் உண்மைத் தாய் இனி வந்துவிடுவாள் " என்றேன்.

“ இறந்துபோனவள் எப்படித் திரும்பிவர முடியும்? இது நடக்கிற காரியம் அல்லவே ” என்று தன் தோளைக் குலுக்கிக்கொண்டு மூத்தவன் சொன்னான்.

“ இது நடக்கிற காரியம் அல்லவே? ஆண்டவனே! இறந்துபோனவர்கள் மட்டுமன்றி, துண்டு துண்டாக வெட்டப்பட்டவர்களும் நீரைத் தெளித்தவுடன் உயிர்பெற்று இருக்கிறார்களே! அநேக தடவைகளில் சாவு என்பது ஆண்டவனால் ஏற்பட்ட சாவாக இருப்பது இல்லை; ஆண் மந்திரவாதிகளும் பெண் மந்திரவாதிகளும் செய்த காரியத்தின் விளைவாய் இருக்கக் கூடும்!”

உற்சாகம் மேலிட்டு, என் பாட்டி சொன்ன கதைகளை அவர்களுக்கு நான் சொல்லத் தொடங்கினேன். இதைக் கேட்ட பெரியவன் வெறுப்புடன் சிரித்துவிட்டுச் சொன்னான்:

“ நாங்களும் இவற்றைக் கேட்டு இருக்கிறோம். அத்தைப்பாட்டி கதைகள் ஆகும் இவை!”

அவனுடைய மற்ற சகோதரர்கள் அவன் கூறியதை மௌனமாகக் கேட்டுக்கொண்டு இருந்தார்கள். உதட்டைக் கடித்து முகத்தைச் சுளித்துக்கொண்டு பெரியவன் நின்றான்; நடுவிலவன் ஒரு முழங்கையைத் தன் முழங்காலிலும், மற்றொரு கையைத் தன் தம்பி கழுத்திலுமாகப் போட்டு அவனை வாஞ்சையோடு என்பால் இழுத்தான்.

மாலை நேரம் ஏற்கனவே ஆரம்பித்துவிட்டது. ரோஜா நிற மேகங்கள் மிகவும் தாழ்ந்து வீட்டின் கூரையில் படிந்து இருந்தன. இந்தச் சமயத்தில் நரைத்த மீசைகளுடன் கூடிய கிழவர் ஒருவர் எங்களை அணுகினார். உபதேசியார் போல நீண்ட நிறப் பழுப்புக் கோட்டு ஒன்றை அவர் அணிந்து இருந்தார். அடர்த்தியாக உரோமம் உள்ள தொப்பி ஒன்றைத் தன் தலையில் அவர் அணிந்து இருந்தார்.

என்னைச் சுட்டிக்காட்டி "இவன் யார்?" என்று கேட்டார்.

பெரிய பையன் எழுந்து என் தாத்தாவின் வீட்டுப் பக்கமாகத் தலையை அசைத்துக் காட்டி "அங்கே இருந்து வந்திருக்கிறான்" என்று சொன்னான்.

"இவனை யார் இங்கே வரச் சொன்னது?"

அந்த மூன்று சிறுவர்களும் உடனே ஸ்லெட்ஜ் வண்டியில் இருந்து கீழே இறங்கி, கீழ்ப்படிந்து நடக்கும் வாத்தைப் போல அமைதியாக வீட்டுக்குப் போய்விட்டார்கள்.

என் தோள்ப் பட்டையை உறுதியாகப் பிடித்துக் கொண்டு அந்த மனிதர் முற்றத்தின் வழியாக என்னை வாயிலுக்கு அழைத்துப் போனார். பயத்தால் எனக்குக் கண்ணீரே வந்துவிடும்போல் இருந்தது; நான் அழுவதற்கு முன்னர் என்னை அந்த மனிதர் வீதியில் கொணர்ந்து விட்டுவிட்டார். வாயிலண்டை நின்று தன் கையை அசைத்தவாறே "துணிச்சலுடன் மீண்டும் இங்கே வராதே. தெரிகிறதா!" என்று சொன்னார்.

"கிழட்டுப் பிசாசே! உன்னைப் பார்ப்பதற்காக நான் இங்கே வரவில்லை" என்று கோபத்துடன் எதிர்த்துச் சொன்னேன்.

தன் நீண்ட கைகளை நீட்டி மீண்டும் ஒரு முறை அவர் என்னைப் பிடித்துக்கொண்டார். வீதி ஓரமாக என்னை அழைத்துப்போய், "உன் தாத்தா வீட்டில் இருக்கிறாரா?" என்ற அதே கேள்வியை வலியுறுத்திச் சம்மட்டியால் தலையில் அடிப்பதைப் போன்று கேட்டார்.

துரதிர்ஷ்டவசமாக என் தாத்தா வீட்டில் இருந்தார். பயங்கரமான இந்தக் கிழட்டு மனிதர் முன்பு என் தாத்தா எழுந்து நின்றார். தலையை நிமிர்த்தி அவரைப் பார்த்தார்; அவருடைய தாடி வெளியே நீட்டிக்கொண்டு நின்றது;

காபெக் நாணயங்களைப்போல மந்தமாகவும் உருண்டையாக வும் இருந்த அவருடைய கண்களைப் பார்த்தார்.

"இவனுடைய தாய் வெளியே போய் இருக்கிருள். எனக்கு வேலை அதிகம். அதனுல் இவனைக் கவனித்துக் கொள்ள யாரும் இல்லை. கர்னல் அவர்களே! தங்களிடம் மன்னிப்புக் கோருகிறேன்" என்று என் தாத்தா விரைந்து சொன்னுர்.

அந்த வீடு முழுதும் கேட்கும்படியாக ஒரு உறுமல் உறுமிவிட்டு, படார் என்று திரும்பி, ராணுவ நடை நடந்து அந்தக் கர்னல் போய்விட்டார். சிறிது நேரத்துக்குப் பின் னர் என்னைப் பீட்டர் மாமாவின் வண்டிக்குள் தூக்கி எறிந்துவிட்டார்கள்.

"மனிதா! மீண்டும் உனக்கு அது கிடைத்ததா?" என்று, குதிரையை அவிழ்த்துவிட்டுக்கொண்டே அந்தப் பார வண்டிக்காரர் என்னைக் கேட்டார். "எதற்காக உன்னை இந்த முறை அடித்தார்கள்?" என்று கேட்டார்.

நான் கூறின கதையைக் கேட்டதும், உடம்பெல்லாம் சிவந்து பற்கள் வழியாக அவர் பாம்புபோல் சீறினுர்.

"இத்தகையவர்களுடன் நீ ஏன் சிநேகம் பிடிக்கிருய்? அவர்கள் எல்லாம் பெரிய மனிதர் வீட்டுப் பிள்ளைகள். அத னுல் உனக்கு என்ன கிடைத்தது பார்த்தாயா? அவர்களுக்கு இதை நீ பிறகு திருப்பிக் கொடு" என்று சொன்னுர்.

தனக்குத் தானே இப்படிச் சொல்லிக்கொண்டு, எனக்கு ஏற்பட்ட துன்பத்திற்காக அவர் பரிந்து பேசியதால், அவர் கூறியதில் முதலில் எனக்கு அனுதாபம் ஏற்பட்டது. வெறுப்பு ஏற்படும் வகையில் கூடைபோன்ற அவருடைய முகம் நடுங்கியதைப் பார்த்தபோது, எந்த விதத்திலும் என் மனத்தை நோகச் செய்யாத அந்தப் பையன்களுக்கும் சவுக் கடி விழுமோ என்ற எண்ணம் எனக்கு உண்டாயிற்று.

“அவர்களை அடிப்பதற்குரிய முகாந்திரம் எதுவும் எனக்கு இல்லை. நீர் இப்பொழுது சொன்னது எல்லாம் சரி யான ஒரு புழுகு மூட்டை” என்று நான் பதில் சொன்னேன்.

இதைக் கேட்டதும் என்னை அவர் முறைத்துப் பார்த் தார். “வண்டியைவிட்டுக் கீழே இறங்கு” என்று திடீ ரென்று அவர் கத்தினர்.

“முட்டாள்!” என்று சொல்லிவிட்டு வண்டியிலிருந்து நான் கீழே குதித்தேன்.

“நானா முட்டாள்? நானா பொய்யன்? உன்னை என்ன செய்கிறேன் பார்” என்று சொல்லி என்னை முற்றத்தில் விரட்டிப் பிடிக்க முயன்றார். ஆனால் அவரால் முடியவில்லை.

அடுக்களை முற்றத்தில் என் பாட்டி எட்டிப் பார்த்தாள். நான் அவளிடம் ஓடிப்போனேன். என்னைப்பற்றி அவ ளிடம் மாமா பீட்டர் குற்றம் கூற ஆரம்பித்தார்:

“இந்தக் கெட்ட பையன் என்னை அமைதியாக இருக்க விடவில்லை. வாயை அடக்கிப் பேச மாட்டான்போல் இருக் கிறது. கேவலமான கெட்ட வார்த்தைகளை சொல்லி என்னை இவன் திட்டுகிறான். இவனைவிட வயதில் ஐந்து மடங்கு பெரியவன் நான்...” என்றார்.

என் முன்பே ஜனங்கள் இப்படிப் புழுகுவதைக் கண் டால் என் மனம் அதிர்ச்சியால் குன்றிப்போவது உண்டு. வார்த்தைகள் எதுவும் சொல்ல வராமல் நான் என் பாட்டி அருகே நின்றேன். ஆனால் அவளோ மிக்க உறுதியாக “பீட்டர்! சின்ன விஷயங்களை எல்லாம் இப்படித் திரித்துப் பேசாதே! கெட்ட வார்த்தைகள் சொல்லி உன்னை இவன் திட்டினான் என்று நீ சொல்வது சரியன்று” என்று சொன்னாள்.

என் தாத்தாவாய் இருந்தால் பார வண்டிக்காரர் வார்த் தையை நம்பியிருப்பார்.

அன்று முதல் அந்தப் பார வண்டிக்காரருக்கும் எனக்கும் இடையில் இருந்த உறவில் நெறிசல் ஏற்பட்டது; மௌனமான பகைமையும் இருந்து வந்தது. சந்தர்ப்பங்கள் வாய்த்தால் என்னைக் குத்தவோ அல்லது கடிவாளத்தால் தற்செயலாக அடிக்கவோ அவர் தயாராக இருந்தார். நான் வைத்திருந்த பறவைகளை விரட்டி யோட்டிவிட்டார்; ஒரு நாள் பூனையைக்கூட அவற்றின்மீது ஏவிவிட்டு வருத்தினர். எப்பொழுது பார்த்தாலும் என் தாத்தாவிடம் என்னைப்பற்றிக் கோள் சொல்லி எதையும் மிகைப்படுத்திக் கூறிக்கொண்டு இருந்தார். என்னைப்போன்ற சிறுவனுகிய இவர், கிழவர் உடுப்பை அணிந்துகொண்டு பெரியவராகக் காட்சி அளிக்கிருர் என்பதாக அவரைப்பற்றி எண்ணுவதைத் தவிர்த்து வேறு எதுவுமே எனக்குத் தோன்றவில்லை. பதில் அடி கொடுக்க எண்ணி அவருடைய செருப்பிலிருந்த ஆணிகளைப் பிடுங்கிவைத்தேன்; கயிறுகளின் முறுக்கைக் கலைத்து வைத்தேன். தைக்கும்பொழுது அவை முறிந்துபோவது உண்டு. ஒரு நாள் அவருடைய தொப்பியில் மிளகுப் பொடியைத் தூவி வைத்துவிட்டேன்; அதனுல் மணிக்கணக்கில் அவர் தும்மிக்கொண் டிருக்கவேண்டியதாயிற்று. பொதுவாக, அவருக்குப் பதிலுக்குப் பதில் செய்யும் பொருட்டு என்னுல் இயன்றதை எல்லாம் நான் செய்துவந்தேன். ஞாயிற்றுக்கிழமைதோறும் என்னைத் தேடிப் பிடிப்பதிலேயே தன் நேரம் முழுவதையும் அவர் செலவு செய்தார். தெரியாமல் பெரிய மனிதர் வீட்டுக் குழந்தைகளுடன் நான் தொடர்பு கொண்டிருப்பது தெரியவந்தால் நேரே என் தாத்தாவிடம் சென்று, இதை அவரிடம் அவர் தெரிவித்துவிடுவார்.

அந்தச் சிறுவர்களுடன் எனது தொடர்பு நீடித்து வந்தது; அதனுல் வரவர எனக்கு அதிக இன்பமும் ஏற்பட்டது. என் தாத்தா வீட்டுச் சுவருக்கும் ஒவ்விஸியானிக்

காவ் வீட்டு வேலிக்கும் இடையில், சிறிய மூலே ஒன்று இருந்தது ; எல்மா நிழலும் எலுமிச்சை நிழலும் அங்கே விழுந்தன. எல்டர்பெரி புதர்கள் அதிகமாக வளர்ந்திருந்தன. இந்தப் புதர்களுக்குப் பின் புறத்தில் வேலியில் நான் ஒரு ஓட்டை செய்தேன். இந்த இடத்துக்குச் சகோதரர்கள் தனியாகவோ அல்லது சோடியாகவோ வந்து என்னிடம் மெதுவாகப் பேசுவார்கள். எங்களே வந்து, கர்னல் பிடித்து விடாதபடி ஒருவன் கவனித்துக்கொண்டே இருப்பான்.

தங்களுக்கு வாழ்க்கை மந்தமாக இருப்பதாக அவர்கள் சொன்னதைக் கேட்க எனக்கு வருத்தமாய் இருந்தது. நான் வைத்திருந்த பறவைகளேப்பற்றியும் இன்னும் குழந்தைகளுக்குப் பிரியமான அனேக விஷயங்களேப்பற்றியும் அவர்கள் என்னிடம் பேசினர்கள் ; ஆயினும் தங்கள் தந்தையைப் பற்றியோ அல்லது தங்கள் மாற்ருந் தாயைப்பற்றியோ அவர்கள் என்னிடம் பேசியதாக எனக்கு நினேவு இல்லே. கதை சொல்லும்படியாக அடிக்கடி அவர்கள் என்னேக் கேட்பார்கள். என் பாட்டியிடமிருந்து கேட்ட கதைகளே எல்லாம் அவர்களுக்கு நான் விருப்போடு சொன்னேன். ஏதாவது எனக்கு மறதியாக இருக்குமாயின் என் பாட்டியிடம் ஓடிக் கேட்டுவந்து சொல்லும்வரை காத்திருக்கும்படியாக அவர்களே நான் வேண்டுவது உண்டு. என் பாட்டி விருப்போடு அதை எனக்குச் சொன்னுள்.

அடிக்கடி என் பாட்டியைப்பற்றி அவர்களிடம் நான் சொன்னேன். ஒரு நாள் பெரிய பையன் பெருமூச்சுவிட்டு பாட்டிகள் எல்லாரும் நல்லவர்களாகத்தான் இருக்கிருர்கள் ; எங்கள் பாட்டிகூட நல்லவளாகத்தான் இருந்தாள்...” என்ருன்.

“ அப்படிக்கூட இருந்தது ” “ அப்படிக்கூட இருப்பது உண்டு ” “ ஒரு காலத்தில் ” போன்ற வார்த்தைகளே,

நூறாண்டு காலம் வாழ்ந்து, பழக்கப்பட்டவன்போல, அனுப் புடனும் சலிப்புடனும் அவன் அடிக்கடி சொல்லி வந்தான். ஆனால் அவனுக்கோ அப்பொழுது வயது பதினொன்றுதான் நடந்தது. அவனுக்குக் கைகள் குச்சிபோலவும் விரல்கள் நெட்டையாகவும் இருந்தன. ஒற்றைநாடியாகவும் நோஞ்ச லாகவும் இருந்தான். மாதாகோயிலில் விக்கிரகங்களுக்குப் பக்கத்தில் எரிகிற விளக்குப்போல அவனுடைய கண்கள் நாணமுடையதாகவும் சுத்தமாகவும் இருந்தன. அவனைப் போலவே அவனுடைய சகோதரர்களையும் நான் நேசித்தேன். அவர்களிடம் எனக்கு பரிவு உண்டாயிற்று ; அவர்களுக்கு ஏதாவது நல்லது செய்ய வேண்டும் என்ற விருப்பம் எனக்கு ஏற்படும்படி அவர்கள் செய்தார்கள். எல்லாரையும்விடப் பெரியவனைத்தான் நான் வெகுவாக நேசித்தேன்.

அவர்களுடன் உரையாடுவதில் நான் மூழ்கிப் போய் இருப்பேன். அதனால் மாமா பீட்டர் அங்கே வருவதை நான் கவனிக்கத் தவறிவிடுவது உண்டு. "என்ன ? மீண்டுமா மா...மா...மா ?" என்று யிழுத்துக்கொண்டே சொல்லி எங் களை அவர் பயமுறுத்துவார்.

வரவர மந்தகதி உள்ளவராக அவர் ஆகிக்கொண்டு வருவதை நான் கவனித்தேன். வேலையிலிருந்து திரும்பும் போது என்ன மனநிலையுடன் அவர் திரும்புகிறார் என்பதை யும் அறிந்துகொள்ள நான் தெரிந்துகொண்டேன். சாதாரண மாக எப்போதும் 'கேட்டை' அவர் அவசரப்படாமல்தான் திறப்பார் ; அதனால் அங்கிருக்கும் கீல்முளைகள் நீடித்துச் சப்தம் போடும். அப்படியின்றி அந்த பாரவண்டிக்காரரின் மன நிலை சரியில்லாது இருக்குமாயின், ஏதோ வலியால் ஏற்படும் கதறல்போல, கீல்முளைகள் வேகமாகக் கிறீச்சிட்டுக் கதறும்.

அவருடைய ஊமை மருமகன் கலியாணம் செய்து கொள்வதற்காகக் கிராமத்துக்குப் போய்விட்டான். பீட்டர்

மட்டும் தனியாக, லாயத்துக்கு மேல் இருந்த தாழ்ந்த அறையில் வசித்தார். அந்த அறையில் ஒரு சிறிய ஜன்னல்தான் இருந்தது ; கீல், பழைய தோல், புகையிலை, வியர்வை ஆகியவற்றின் வாடை அந்த அறையில் அடித்தபடி இருக்கும். இந்த வாடை எனக்குப் பிடிக்காதாகையால் அவரை நான் பார்க்கப்போவதே கிடையாது. இந்த நாட்களில் விளக்கை அணைக்காமலே அவர் தூங்கிப்போவார். இது என் தாத்தாவுக்கு வெகுவாகப் பிடிக்கவில்லை.

“ பீட்டர்! கவனமாய் இரு ; இடம் முழுவதுமே உன்னால் எரிந்து போகாமல் கவனித்துக்கொள் ” என்று சொன்னார்.

“ தாங்கள் பயப்பட வேண்டாம். இரவில் தண்ணீர் பாத்திரத்தில்தான் நான் விளக்கை நிறுத்தி வைக்கிறேன் ” என்று பதில் சொல்லிவிட்டு, ஒருபுறமாகக் கவனித்தார்.

திருட்டுப் பார்வையுடன்தான் அவர் இப்பொழுது எல்லாம் பார்க்கிறார் ; என் பாட்டி வைக்கும் விருந்துகளுக்கு அவர் வருவதும் இல்லை ; ஜாம் தடவித் தந்து எங்களை அவர் உபசரிப்பதும் இல்லை. காய்ந்து, முகத்தில் சுருக்கங்கள் ஆழமாக விழுந்துவிட்டன. நடக்கும்போது நோயாளிபோலத் தள்ளாடித் தள்ளாடி நடந்தார்.

இரவு ஏராளமாக விழுந்து உறைந்துபோயிருந்த பனியை நானும் என் தாத்தாவும் அப்புறப்படுத்திக்கொண்டிருந்தபோது, ஒரு நாள் காலையில், ‘கேட்டின்’ தாழ்ப்பாள் நூதனமாகக் கிறீச்சிட்டது. போலீஸ்காரன் ஒருவன் உள்ளே நுழைந்து, கேட்டைச் சாத்திவிட்டு, அங்கேயே நின்றுகொண்டு, சாம்பல்பூத்த, தடித்த தனது கையால் என் தாத்தாவைத் தன்பால் வரும்படி சாடை செய்தான். என் தாத்தா அவனை அணுகியதும், தனது பெரிய மூக்கை என் தாத்தாவின் முகத்து அருகே வைத்துக்கொண்டு ஏதோ

சொன்னான். இதைக் கேட்டதும் என் தாத்தா விரைவாக "இங்கா? எப்பொழுது? என் ஞாபகத்துக்கு எட்டியவரையில்—" என்று சொல்லி வந்தவர், வேடிக்கையாகவும் திடுமென்றும் "கருணையுள்ள ஆண்டவனே! இது உண்மையானதல்லவே?" என்று கதறினார்.

"ச்சு" என்று போலீஸ்காரன் எச்சரித்தான்.

சுற்றுமுற்றும் கவனித்த என் தாத்தா நான் நிற்பதைக் கவனித்துவிட்டார். என்னைப் பார்த்து "மண் வெட்டிகளை எடுத்துக்கொண்டு வீட்டுக்குப்போ" என்று சொன்னார்.

வீட்டின் மூலையில் ஒளிந்துகொண்டு நான் கவனித்தேன். லாயத்தில் பார வண்டிக்காரர் வசித்த பகுதிக்குள் அவர்கள் நுழைந்தார்கள். தன் வலது கையில் போட்டிருந்த கையுறையைக் கழற்றி, அதைத் தன் இடது கைமீது தட்டிக் கொள்ளத் தொடங்கினார் போலீஸ்காரன்.

"அவன் எல்லாம் தெரிந்தவனாய் இருக்கிறான். குதிரையை விட்டுவிட்டு அவன் போய் ஒளிந்துகொண்டுவிட்டான்."

அடுக்களைக்கு ஓடி என் பாட்டியிடம் பார்த்தவற்றையும் கேட்டவற்றையும் நான் சொன்னேன். மாவு பிசைந்துகொண்டிருந்த அவள், தூசு படிந்திருந்த தன் தலையை அசைத்தாள்.

"இன்னும் வேறு எதையாவது அவன் திருடிச்சென்று இருக்கக் கூடும்" என்று, நான் சொல்லி முடிப்பதற்குள் அவள் சொன்னாள். பிறகு அமைதியாக என்னை நோக்கி "நீ போய் விளையாடு. இதைப்பற்றி எல்லாம் உனக்கு என்ன?" என்று சொன்னாள்.

மீண்டும் நான் முற்றத்துக்கு ஓடியபோது, தொப்பியை எடுத்துவிட்டு 'கேட்' அருகே என் தாத்தா நின்றுகொண்டிருந்தார். வானத்தை நோக்கித் தன் கண்களை உயர்த்திச் சிலுவை அடையாளம் வரைந்துகொண்டார். முகத்தில்

கோபமும் கடுகடுப்பும் இருந்தன; அவருடைய ஒரு கால் ஆடிக்கொண்டிருந்தது.

"வீட்டுக்குள் போ என்று நான் சொல்லவில்லையா?" காலால் உதைத்தவாறே அவர் கூச்சல் போட்டார்.

என்னைத் தொடர்ந்து அவரும் அடுக்களைக்கு வந்தார்.

"தாயே! இங்கே வா" என்று கூப்பிட்டார்.

இருவரும் அடுத்த அறைக்குச் சென்று சிறிது நேரம் குசுகுசுவென்று ஏதோ பேசிக்கொண்டிருந்தார்கள். திரும்பி வந்த அவளுடைய முகத்தைப் பார்த்த எனக்கு, ஏதோ பயங்கர நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றுவிட்டது என்பதாகத் தோன்றியது.

"எதற்காக நீ இப்படிப் பயந்துபோய் இருக்கிறாய்?" என்று அவளை நான் கேட்டேன்.

"உன் வாயை மூடிக்கொண்டு சும்மாகிட" என்று மெதுவாகச் சொன்னாள் என் பாட்டி.

எஞ்சிய பகல் முழுதும் பயங்கரமான வேதனைதரும் சூழ்நிலை அன்று நிலவியிருந்தது. என் பாட்டியும் தாத்தாவும் அடிக்கடி சிறிது நேரம் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள். வார்த்தைகளால் அறிவிக்க முடியாத அளவு பீதி அதிகரித்து இருப்பதாகத் தோன்றியது.

"தாயே! விக்கிரகங்களை அடுத்துள்ள விளக்குகளை எல்லாம் பொருத்து" என்று, தன் தொண்டையைக் கனைத்துக்கொண்டு என் தாத்தா உத்தரவிட்டார்.

பசியில்லாமல் இருந்தும், யாரையோ எதிர்பார்ப்பவர்கள் போல, அவசர அவசரமாக இரவுச் சாப்பாட்டை அவர்கள் முடித்துக்கொண்டார்கள். சோர்ந்து போய் என் தாத்தா தன் கன்னங்களை ஊதிக்கொண்டார்; தொண்டையைக் கனைத்துக்கொண்டு "சைத்தானை எதிர்த்து வலுவோடு மனிதனால் நிற்பது இயலாத காரியம். உதாரணமாக இவனையே எடுத்துக்

கொள்வோம். பக்திமானுகவும் கடவுளுக்கு அஞ்சியவனுகவும் தோன்றிய இவன் செய்துள்ள காரியத்தைப் பார் " என்று முணுமுணுத்தார்.

என் பாட்டி பெருமூச்சுவிட்டாள்.

வெள்ளிமயமான பனிக்காலம் முடிவில்லாமல் நீடித்துக் கொண்டே இருந்தது. வீட்டிலோ மணிக்கு மணி சூழ்நிலை கஷ்டமானதாயும் மனத்தை உறுத்துவதாயும் இருந்தது.

மாலை நேரத்தில் இன்னொரு போலீஸ்காரன் வந்தான். அவன் தடித்தவனுயும் சிவந்த தலையுள்ளவனுயும் இருந்தான்; தூங்கி வழிந்து, அடுக்களையில் கிடந்த குறிச்சியில் உட்கார்ந்தான். தலையை அசைத்துக்கொண்டும் மூக்கை உறிஞ்சிக் கொண்டும் இருந்தான்.

" எப்படி அவர்கள் கண்டுபிடித்தார்கள் ?" என்று என் பாட்டி கேட்டாள்.

சிறிது நேரம் சும்மா இருந்த அவன் கரகரப்பாக " கவலைப்படாதீர்கள். யாவற்றையும் அவர்கள் கண்டுபிடித்து விடுவார்கள் " என்று பதில் சொன்னுன்.

வெற்றி வீரர் செயிண்டு ஜார்ஜைப்போல் என்னையும் எண்ணிக்கொள்ளவேண்டும் என்ற எண்ணத்துடன், என் வாயிலே பழைய நாணயம் ஒன்றைப் போட்டுக் குதப்பிக் கொண்டு, ஜன்னல் அருகே நான் அமர்ந்து இருந்தது எனக்கு நினைவு இருக்கிறது.

திடுமென நுழைவாயில் முன்பு பெரிய சந்தடி ஒன்று உண்டாயிற்று ; கதவு வேகமாகத் திறந்துகொண்டது. வாயில் படியில் நின்றவாறே பெட்ரோவ்னு என்பவள் " உங்கள் சொத்துக்கு நேர்ந்திருக்கும் கதியை நீங்களே வந்து பாருங்கள் " என்று இரைந்து கூவினுள்.

போலீஸ்காரன் இருப்பதைக் கண்டதும் திரும்பவும் அவள் நுழைவாயிலுக்கு ஓடினுள் ; ஆனுல் போலீஸ்காரனே

அவளுடைய ஆடையைப் பற்றிக்கொண்டு "சிறிது பொறு! நீ யார்? வெளியில் என்ன இருக்கிறது?" என்று பயம் தொனிக்க இரைந்து கேட்டான்.

அவளோ மண்டியிட்டுக் கதறத் தொடங்கினாள்; தனக்கு வந்த கண்ணீரை அடக்கிக்கொண்டு, வார்த்தைகளைச் சொல்ல முடியாமல் விழுங்கினாள்: "நான் பால்கறக்கப் போனேன். திடுமென இரண்டு பூட்ஸ்கள் காஷ்ரீன் வீட்டு முற்றத்தில் தெரிந்தன" என்றாள்.

"அற்பமானவளே! நீ கூறுவது பொய்" என்று என் தாத்தா சீறி விழுந்தார். "எங்கள் வீட்டு முற்றத்தில் எதையும் நீ காண முடியாது. வேலி உயரமாய் இருக்கிறது. அதில் ஓட்டை எதுவும் கிடையாது! ஆகவே நீ சொல்வது பொய்! அங்கே எதுவுமே இல்லை" என்று இரைந்தார்.

"என்னை அப்படியா சொல்லுகிறீர்கள்?" என்று ஊளையிட்டாள் பெட்ரோவ்னா. ஒரு கையைத் தாத்தா பக்கம் நீட்டியும் மற்று ஒன்றால் தன் தலையைப் பிடித்துக்கொண்டும் அவள் நின்றாள். "நான் பொய் சொல்லுகிறேன் என்று கூறுகிறாரே, அதுதான் சரியான உண்மை. நான் ஒரு பாதையில் நடந்துகொண்டே சென்றபோது, அது உங்கள் வேலி அண்டை என்னைக் கொண்டுவந்து சேர்த்தது. ஒரு இடத்தில் பனிக்கட்டிமீது மனிதர்கள் நடந்த தடங்கள் இருந்தன. ஆகவே மேலே ஏறி வேலிக்கு அப்பால் கவனித்தேன். அப்போது அவன் அங்கே கிடப்பது தெரியவந்தது."

"யார்..?"

நீடித்த அர்த்தமற்ற பயங்கரமான பெருங் கூக்குரல் ஒன்று விழுந்தது. அறிவே குழம்பிவிட்டவர்களைப் போன்று திடுமென எழுந்து ஒவ்வொருவரும் அடுக்களையைவிட்டு முற்றத்துக்கு ஓடினார்கள். அங்கே பனிகள் நிறைந்த ஒரு குழிக்குள் மாமா பீட்டார் கிடந்தார். அவருடைய முதுகு

தேய்ந்துபோயிருந்த ஒரு உத்தரத்தின்மீது இருந்தது; தலை மார்பின்மீது தொங்கியது; வலது காதுக்குக் கீழே பெரிய காயம் ஒன்று இருந்தது. பற்கள் ஒட்டியிருக்கும் சிவந்த வாயைப்போல, நீலநிற விளிம்புகள் ஓரத்தில் இருக்க, அந்தப் புண் இருந்தது. பீதியுற்று என் கண்களை நான் மூடிக்கொண்டேன். மாமா பீட்டருடைய சேணப்பைக் கத்தி, அவருடைய முழங்காலுக்குப் பக்கத்தில், கருத்துப்போயிருந்த அவருடைய வலக் கைவிரல்களில் சுற்றிக்கொண்டு கிடப்பதை, சிமிட்டி விழிக்கும்போது கண்டேன். அவருடைய வலது கை பனியில் புதைந்து கிடந்தது. அவருடைய மெலிந்த உருவத்துக் கீழே இருந்த பனி உருகி, அதனால் ஏற்பட்ட வெள்ளை நிறப் பள்ளத்துக்குள் அழுந்தி, பார்ப்பதற்குக் குழந்தையின் உருவத்தைப்போல் அவருடைய உருவம் சிறிதாய் இருந்தது. அவருக்கு வலப் புறத்தில், பனிமீது நூதனமான பறவைகள் போன்ற சிவந்த படங்கள் இருந்தன; இடப்புறத்தில் எதுவுமே கறை இல்லாமல், பனி மெதுவாகவும் பளபளப்புடனும் விளங்கியது. அவருடைய தலை பனியுடன் மார்பின் மீது படிந்து கிடந்தது. சுருண்ட தாடி மேலே குத்திட்டு நின்றது. அதற்கு கீழே, சிற்றாறுகள்போல ஓடி, காய்ந்து ரத்தக் கறைகள் படிந்த பித்தளைச் சிலுவை ஒன்று தொங்கியது. பலவித ஒலிகளின் குழப்பத்தால் எனது தலை சுழன்றது. இடைவீடின்றி,பெட்ரோவ்னா கத்திக்கொண்டுஇருந்தாள்.எங்காவது போய்விடு என்று வாலேயிடம் போலீஸ்காரன் இரைந்தான்.

"தடங்களை அழித்துவிடாதீர்கள்" என்று என் தாத்தா கூவினார்.

திடீரென்று தன் முகத்தைச் சுளித்துக்கொண்டு, தன் கண்களை அவர் தொங்கவிட்டுக்கொண்டார்.

"அதிகாரியே! இப்படி ஊளையிடுவது அறிவுடைய செயல் அன்று" என்று என் தாத்தா அதிகாரபூர்வமாக

இரைந்து சொன்னார். "இது ஆண்டவனுடைய செயல்; அவருடைய நீதி; நீரோ அற்பத்தனமாய் காரியம் பார்க்கிறீர்! நீர் நாசமாய்ப் போக!" என்றார்.

எல்லாரும் அமைதியடைந்து, பெருமூச்சுவிட்டு, சிலுவை அடையாளம் வரைந்துகொண்டார்கள்; இறந்து போனவரை உற்றுக் கவனித்தார்கள்.

மற்றவர்கள் பெட்ரோவ்னா வீட்டு வேலிமீது ஏறிக் குதித்து, முற்றத்தைக் கடந்து ஓடிவந்தார்கள்; சிலர் கீழே விழுந்தார்கள்; சிலர் முணகினார்கள். ஆனால் சப்தம் போடாமல் இருந்தார்கள்; என் தாத்தா சுற்றுமுற்றும் பார்த்து விட்டு ஏக்கமுற்றுக் கதறினார்; "அண்டை வீட்டுக்காரர்களே! எனது ராஸ்ப்பெரி புதர்களை எல்லாம் நாசப்படுத்திவிட்டீர் களே. இது உங்களுக்கு வெட்கமாக இல்லையா?" என்று கேட்டார்.

கையைப் பிடித்து என்னை என் பாட்டி வீட்டுக்குள் அழைத்துப்போனாள்.

"அவர் செய்தது என்ன?" என்று நான் கேட்டேன்.

"நீ பார்க்கவில்லையா?" என்று அவள் விம்மி யழுது கொண்டே பதில் சொன்னாள்.

அன்று மாலை முழுதும் இரவு நெடு நேரம்வரையிலும் அறிமுகமில்லாத ஜனங்கள் அடுக்களையிலும் அதை அடுத்து இருந்த அறையிலும் நடமாடித் திரிந்தார்கள். போலீஸ் உத்தரவு போட்டார்கள். உதவிக் குருபோன்று இருந்த ஒரு மனிதன் ஒரு புத்தகத்தில் குறிப்புகள் எடுத்துக்கொண்டான். "அது என்ன? அது என்ன?" என்று அடிக்கொரு தடவை வாத்தைப்போல் சப்தம் போட்டுக்கொண்டிருந்தான்.

எல்லோருக்கும் என் பாட்டி தேநீர் ஊற்றிக்கொடுத்தாள்; அடுக்களை மேஜை அருகே ஒரு மனிதர் அமர்ந்து இருந்தார். உருண்டையாகவும் அம்மை வடுபோட்ட முக

முடையவராயும் மீசைகள் முளைத்தவராயும் அவர் இருந்தார். கிறீச்சிட்ட குரலில் அவர் பேசினார் :

" அவனுடைய உண்மைப் பெயர் யாருக்கும் தெரியாது. எலாட்மாவிலிருந்து வந்தவன் என்பது மட்டும்தான் அவர்களுக்குத் தெரிந்து இருக்கிறது. ஆனால் அங்கே இருக்கிற செவிட்டு - ஊமை உங்களையும் என்னையும்போல் செவிடன் அன்று. கதை முழுவதையும் அவன் தெரிந்து இருக்கிறான். மூன்றாவது நபரும் கிறீச்சிட்டுக் கத்துகிறான் ; மூன்றாவது நபர் இருக்கிறான்போல் தோன்றுகிறது. நீண்ட காலமாகவே மாதாகோவில்களில் அவர்கள் திருடி வந்திருக்கிறார்கள். அவர்களின் முக்கிய இலக்கு மாதாகோயில்கள் தான்—" என்றார்.

வியர்த்து வெலவெலத்துச் சிவந்துபோய் " ஆண்டவனே !" என்று பெருமூச்செறிந்தாள் பெட்ரோவ்னா.

திண்ணையில் படுத்திருந்தவாறு அவர்களை நான் கவனித்துக்கொண் டிருந்தேன். அவர்கள் எல்லாரும் குட்டையாகவும் தடித்தும் விகாரமாகவும் இருந்தார்கள்...

## 10

ஒரு சனிக்கிழமையன்று அதிகாலையில் புல்பிங் பறவைகள் பிடிப்பதற்காக நான் பெட்ரோவ்னாவின் தோட்டத்துக்குச் சென்றேன். கொஞ்ச நேரம் சென்றும்கூட, தற்பெருமையுள்ள, சிவப்பு மார்புடைய அந்தப் பறவைகள் என் கன்னியில் வந்து விழவில்லை. தங்கள் அழகில் பெருமை கொண்ட அவை, வெள்ளி மயமான பனிப் படிவம் மீது பிரமாதமாக வந்து இறங்கும் ; அல்லது புதர்களுக்குப் பறந்தோடிவிடும் ; பனி படிந்த கிளைகள்மீது அமர்ந்து, பனியின்

துகளின் நீலநிறச் சிலுசிலுப்பினூடே பிரகாசமான மலர்கள் போல அசைந்தாடும்; வேட்டையில் ஏமாற்றம் ஏற்பட்ட போதிலும், இந்த எழில்மிக்க தோற்றத்தால் அது எனக்கு மறைந்துபோயிற்று. பொதுவாக வேட்டையாடுவதில் எனக்குப் பிரியம் அதிகம். விளையும் பலனைக் காட்டிலும் அதன் நடைமுறைகளில்தான் நான் அதிகக் கவனம் செலுத்துவது உண்டு. அதில்தான் எனக்குப் பிரியமும் அதிகம். பறவைகளின் வாழ்க்கையை ஆராய்வதிலும் அதைப்பற்றிச் சிந்திப்பதிலும் எனக்கு நிரம்ப ஈடுபாடு உண்டு.

பனிமயமான வயல்களின் ஓரங்களில் அமர்ந்துகொண்டு, பறவைகளின் ஒலியைச் செவிமடுப்பதைப்போல் வேறு ஆனந்தம் என்ன இருக்க முடியும்? குளிர்காலத்தின் ஒடுங்கிய அமைதியிடையே பறவைகளின் ஒலி கேட்கும். அதே சமயத்தில் வெகு தொலைவில் 'திரைக்கா' வண்டிகளின் மணியோசைகளும் கேட்கும். இதை ருஷ்யக் குளிர்காலத்தின் சோக வானம்பாடி என்று கூறலாம்.

குளிரின் கொடுமை எலும்புவரை ஊடுருவி, எனது காதுகள் குளிரால் வெடவெட வென்று நடுங்கத் தொடங்கியதும், எனது கன்னிகளையும் கூண்டுகளையும் சேகரித்து எடுத்துக்கொண்டு, என் தாத்தாவினுடைய தோட்டத்தின் வேலிமீது ஏறிக் குதித்து, வீட்டை நோக்கி நடந்தேன். 'கேட்டு'கள் திறந்து கிடந்தன. பிரமாண்டமான குடியானவன் ஒருவன் மூன்று குதிரைகளைப் பிடித்துவந்து, பெரிய, மூடிய 'ஸ்லே' வண்டியில் பூட்டி, வீதிக்கு வண்டியை ஓட்டிக்கொண்டு போனான். குதிரைகளிலிருந்து மேக மேகமாக நீராவி கிளம்பியது; குடியானவனோ உற்சாகமாகச் சீட்டி அடித்தான். எனது இதயம் ஸ்தம்பித்துப் போயிற்று.

"யாரை நீ அழைத்துவரப் போகிறாய்?" என்று நான் கேட்டேன்.

அவன் திரும்பி, தன் கை இடுக்கு மூலமாக என்னைக் கவனித்துவிட்டு, தாவிக் குதித்து ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டான். "புரோகிதரை அழைத்துவரப் போகிறேன்" என்று அவன் சொன்னான்.

இதை நான் பொருட்படுத்தவில்லை. தன் வீட்டில் குடியிருப்பவர்கள் யாரையாவது பார்ப்பதற்கு அந்தப் புரோகிதர் வந்திருக்கக் கூடும்.

"கோழிக்குஞ்சுகளே! புறப்படுங்கள்" என்று சொல்லி, தன் கையிலிருந்த சவுக்கால் அந்தக் குடியானவன் தட்டினான். தங்கள் மணிகள் காற்றில் கிணுகிணு என்று ஒலிக்க, அவை புறப்பட்டன. அவை புறப்பட்டுப் போவதைப் பார்த்துக்கொண்டு நின்றுவிட்டு, கேட்டுகளைச் சாத்திக் கொண்டு நான் வீட்டுக்குள் போனேன். அடுக்களைக்குள் நுழைந்தபோது, என் அன்னையின் அழுத்தமான குரல் அடுத்த அறையிலிருந்து கேட்டது:

"நல்லது; இப்பொழுது என்ன? என் தலையோடு போகட்டும் - அவ்வளவுதானே" என்றாள் அவள்.

கூண்டுகளைக் கீழே போட்டுவிட்டு, கோட்டைக்கூடக் கழற்றாமல், நுழைவாயில் வழியே நான் பாய்ந்தேன். ஆனால் என் தாத்தா என்னைப் பிடித்துக்கொண்டார். தடித்தனமான தனது கண்களால் கஷ்டத்துடன் என்னை விழுங்கிவிடுபவர் போலப் பார்த்தார்.

"உன் தாய் வந்துவிட்டாள்! உள்ளே சென்று அவளைப் பார்! கொஞ்சம் பொறு!" என்று சொல்லி என்னைப் பிடித்து ஒரு குலுக்குக் குலுக்கினார். காலை ஊன்றிக் கொண்டு நிற்க முடியாமல் இருந்த என்னை, கதவுப் பக்கமாகத் தள்ளிவிட்டுப் "போ; போ" என்று சொன்னார்.

குளிரால் வெலவெலத்துப் போயிருந்த என் கை விரல்களால் தாழ்ப்பாளைத் தூக்க முடியாமல், நான் கதவு

அண்டை போய் நின்றேன். கடைசியாகக் கதவைத் திறந்ததும், வாயடைத்துப் போய் வாயில்படியில் நின்றேன்.

"ஆகா! இதோ வந்துவிட்டான்!" என்ருள் என் தாய். "ஆண்டவனே! எவ்வளவு பெரியவனுக நீ வளர்ந்துவிட்டாய்! என்னை உனக்குத் தெரியவில்லையா? இப்படித்தாஞ இவனுக்கு உடைபோட்டுவிடுவது? பாருங்கள், அவனுடைய காதுகள் விரைத்துப்போய்விட்டன. அம்மா! தாராக் கோழிக் கொளுப்புக் கொஞ்சம் என்னிடம் கொடு. ஜல்தி" என்று சொன்னுள் என் அன்னை.

என்னைக் குனிந்து பார்த்துக்கொண்டு அறையின் நடுவே அவள் நின்ருள். என் உடைகளைக் களைந்துபோட்டுவிட்டு, பந்தை உருட்டிப் பார்ப்பதுபோல் என்னை உருட்டிப் பார்த்தாள். ஆண்கள் அணிந்துகொள்ளும் உடைபோல் அகலமாயும் சிவப்பாயும் இருந்த கதகதப்பும் மென்மையும் வாய்ந்த ஆடை அவளுடைய உடலில் கிடந்தது. தோளிலிருந்து இடுப்புவரை குறுக்கு வாட்டத்தில் பெரிய பெரிய கருப்புப் பொத்தான்கள் இருந்தன. பிறகு ஓரம் வரையிலும் அந்தப் பொத்தான்கள் சென்றன. இத்தகைய உடையை இதற்கு முன்னர் நான் பார்த்ததே கிடையாது.

அவளுடைய முகம் சிறுத்தும் வெளுத்தும் போய் இருந்தது. கண்கள் அகன்றும் விரிந்தும் இருந்தன. கூந்தல் அதிக தங்க நிறத்தில் மாறி இருந்தது. என் உடலிலிருந்து களைந்த உடைகளை அவள் அப்பால் எறிந்தாள்; தனது சிவந்த உதடுகளின் ஓரங்களை இகழ்ச்சியோடு நெளித்துக்கொண்டு, அதிகார தோரணையான குரலில் அவள் பேசினுள்:

"நல்லது! நீ ஏன் ஒன்றும் பேசாமல் இருக்கிருய்? உனக்கு மகிழ்ச்சியாக இல்லையா? பூ. இந்தச் சட்டை எவ்வளவு அழுக்கு!" என்று சொன்னுள்.

பிறகு தாராக்கோழிக் கொழுப்பை என் காதுகளில் அவள் தடவிவிட்டாள். அது எரிந்தது. எனினும் அவளிடமிருந்து பரவிய இனிய நறுமணத்தால், வலி குறைவது போல் தோன்றியது. கிளர்ச்சியடைந்து இருந்த நான் ஒரு வார்த்தைகூடப் பேச முடியாமல், அவள் கிட்ட நெருங்கி, அவளுடைய கண்களைக் கூர்ந்து கவனித்தேன். என் பாட்டி மெதுவாக வருத்தப்பட்டுக்கொள்வது என் காதில் விழுந்தது.

" தன் தாத்தாவுக்குக்கூடப் பயப்படாமல் தன் இஷ்டம்போல் இவன் நடந்துகொள்கிறான் ; ஆ! வாரியா. வாரியா..." என்றாள்.

" அம்மா! சிணுசிணுப்பதை நிறுத்திக்கொள் ; எல்லாம் சரியாகிவிடும் " என்றாள் என் அன்னை.

என் அன்னையை நோக்கும்போது, அங்கேயிருந்த மற்ற சூழ்நிலைகள் முழுதும் பழையனவாய், சிறியனவாய், ஒளியிழந்தனவாய் எனக்குத் தோன்றின. எனக்கும் என் தாத்தாவின் வயசு ஏற்பட்டுவிட்டது போலத் தோன்றியது.

தன் முழங்காலுக்கு இடையில் என்னை இறுக்கமாகப் பிடித்துக்கொண்டு, என் தலையைத் தன் அன்பு நிறைந்த கனத்த கைகளால் என் அன்னை தடவிக் கொடுத்தாள்.

" உனக்கு முடி வெட்டிவிட வேண்டும். பள்ளிக்கூடத்துக்குச் செல்ல வேண்டிய காலம் வந்துவிட்டது. நீ படிக்க விரும்புகிறாயா ?" என்று கேட்டாள்.

" ஏற்கெனவே படிக்கத் தொடங்கிவிட்டேனே."

" இன்னும் படிக்க வேண்டுவது நிறைய இருக்கிறது. உரமான சிறிய பயலாக அல்லவோ நீ இருக்கிறாய் !" என்று சொல்லி உரக்கச் சிரித்துக்கொண்டே அவள் என்னைக் கொஞ்சினாள்.

என் தாத்தா உள்ளே வந்தார். தன் கண்கள் சிவக்க, வெளுத்துப்போய் சிலுப்பிக்கொண்டு வந்தார். என்னை ஒரே

தள்ளில் அப்பால் போகச் செய்துவிட்டு இரைந்த தொனியில் " அப்பா ! நல்லது. நான் என்ன செய்ய வேண்டும் ? போய்விட வேண்டுமா ?" என்று கேட்டாள்.

ஒன்றும் சொல்லாமல் ஜன்னல் அருகே போய் நின்று தன் நகங்களால் பனிக் கட்டியை அவர் சுரண்டிவிட்டுக் கொண்டிருந்தார். சூழ்நிலை சரியில்லாமல் ஒரு மாதிரியாக இருந்தது. உடல் முழுவதையுமே தம்முள் அடக்கிக் கொண்டுவிட விரும்புவதுபோல, எனது கண்களும் காதுகளும் விரிவதாக எனக்குத் தோன்றியது. கூச்சலிட்டுக் கதறி வெடித்துப் போய்விட ஆசைப்படுவது போன்ற நிலை எனது நெஞ்சத்துக்கு ஏற்பட்டது.

" அலெக்ஸி ! இங்கே இருந்து போய்விடு " என்று என் தாத்தா மந்தமாகச் சொன்னார்.

மேலும் தன் அருகே என்னை இழுத்துக்கொண்டு "எதற்காக?" என்று என் அன்னை கேட்டாள். " நீ போகக் கூடாது. அதை நான் விரும்பவில்லை " என்றாள்.

சூரிய அஸ்தமன சமயத்தில் உலவும் மந்தார மேகம் போல, எழுந்து அந்த அறையில் என் அன்னை சுற்றினாள்.

என் தாத்தாவுக்குப் பின்னே நின்று " அப்பா ! நான் சொல்லுவதைக் கேளுங்கள் " என்று சொன்னாள்.

" சும்மா கிட " என்று என் தாத்தா கூச்சலிட்டார்.

" என்னை இப்படி அதட்டுவதற்கு நான் இடம்கொடுக்க முடியாது !" என்று அமைதியாக என் அன்னை சொன்னாள்.

மெத்தையிலிருந்து எழுந்துகொண்டே " வார்வாரா !" என்று சொல்லி, தன் கையை ஆட்டி, என் பாட்டி எச்சரித்தாள். அசந்துபோய் என் தாத்தா குறிச்சியில் உட்கார்ந்துவிட்டார். தனக்குத் தானே அவர் முணுமுணுத்துக்கொண்டார் :

"ஊம். என்ன இது ? என்ன இது ? நான் யார் ? இதை நீ எப்படிச் சொல்லுகிறாய் ?" என்றார்.

காயம்பட்ட விலங்குபோல அவர் திடீரென்று கர்ஜித்தார்.

"நீ என்னை அவமானப்படுத்திவிட்டாய்! வார்கா! எனக்கு நீ செய்வது இதுதானா?" என்று கேட்டார்.

என்னைப் பார்த்து "அப்பால் போய்விடு" என்று என் பாட்டி சொன்னாள். அதிக கிலேசம் அடைந்து நான் அடுக்களைக்குள் சென்றேன். அடுத்த அறையில் பேசுவது காதில் விழும்படியாக, அங்கே அடுப்பின்மீது ஏறி, நான் நின்று கொண்டேன். அப்பொழுது ஒவ்வொருவரும் ஆத்திரத்தோடு பேசுவதும், திடீரெனத் தூங்கிவிட்டவர்கள்போல அமைதியாக இருப்பதுமாக இருந்தார்கள். என் அன்னை குழந்தை ஒன்றைப் பெற்று அதை யாரிடமோ விட்டுவந்ததைப்பற்றி அவர்கள் பேசிக்கொண்டு இருந்தார்கள். தன் அனுமதியில்லாமல், என் தாய் குழந்தை பெற்றதற்காக என் தாத்தா கோபமாக இருக்கிறாரா, அல்லது குழந்தையைத் தன்னிடம் கொண்டுவராததற்காகக் கோபித்துக்கொள்கிறாரா என்பதை நிச்சயிப்பது கடினமாய் இருந்தது.

சீர்குலைந்தும் சிவந்தும் சோர்ந்தும் போய் இருந்த அவர், கடைசியாக அடுக்களைக்கு வந்து சேர்ந்தார்; கன்னங்களில் வழிந்த கண்ணீரைத் தன் சட்டையின் ஓரத்தால் துடைத்துக் கொண்டு என் பாட்டியும் அவர் பின்னே வந்தாள். ஒரு விசுப் பலகைமீது தொப்பென்று உட்கார்ந்து, தன் கைகளை அவர் முட்டுக்கொடுத்துக்கொண்டார். தன் முகத்தில் சுருக்கங்கள் விழ, தன் சாம்பல் நிற உதடுகளைக் கடித்துக்கொண்டார். என் பாட்டி அவருடைய காலடியில் வீழ்ந்து நயந்து வேண்டினாள்:

"ஏசுநாதர்மீது அன்புகொண்டு, தந்தையே! இவளை மன்னித்துவிடுங்கள்! இவளைக் காட்டிலும் சிறந்தவர்கள்கூடக் கெட்டுப்போய் இருக்கிறார்கள். வியாபாரிகளிடையிலும் கனவான்களாயிருப்பவர்களிடையிலும் இத்தகைய காரியம்

நடவாமலா இருக்கிறது? இவள் எத்தகைய பெண் என்பதை நீங்களே பாருங்கள்! நம்மில் யாருமே நிறைவு உடையவர்கள் அன்று. ஆகையால் தந்தையே! இவளை மன்னித்துவிடுங்கள்......'' என்று வேண்டினாள் என் பாட்டி.

சுவரில் சாய்ந்துகொண்டே என் தாத்தா அவளுடைய கண்களைக் கூர்ந்து நோக்கினார். "ஆம். உண்மைதான். ஏன் கூடாது? நீ யாரையும் மன்னித்துவிடுவாய்! எதையும் மன்னித்துவிடுவாய்! பூ! நீ நாசமாய்ப் போக!'' என்று சிணுசிணுத்தார்.

பிறகு அவள் பக்கமாகக் குனிந்து, தோள் பட்டையைப் பிடித்துக் குலுக்கினார்.

"ஆண்டவனைப்பற்றி என்ன?'' என்று ரகசியமாக விரைந்து சொன்னார். "யாவற்றையுமே அவர் மன்னிக்க மாட்டார். தெரிகிறதா? கல்லறையை அணுகி, அதன் ஓரத்தில் நிற்பவர்கள் நாம். நமது கடைசிக் காலத்தில் நமக்குச் சரியான தண்டனை கிடைக்கப் போகிறது. அமைதியும் மகிழ்ச்சியும் இன்றி, நம்பிக்கை இழந்து, பிச்சைக்காரர்களாகவே நாம் சாகப் போகிறோம். நான் கூறும் வார்த்தைகளை— 'பிச்சைக்காரர்களாகவே சாகப்போகிறோம்'-என்பதை நினைவில் இருத்திக்கொள்!'' என்று சொன்னார் என் தாத்தா.

அவருடைய கைகளைத் தன் கைகள்மீது தூக்கி வைத்துக்கொண்டு அவருக்குப் பக்கத்தில் அமர்ந்து என் பாட்டி மெதுவாகச் சிரித்தாள்.

"அதனால் என்ன? பிச்சைக்காரன் என்றால் ஏன் இப்படி வெறுக்கிறீர்கள்? நாம் பிச்சைக்காரர்களாகவே ஆகிவிடுவோம். நீங்கள் வீட்டிலேயே இருங்கள். பாத்திரத்தை ஏந்தி நான் வெளியே செல்கிறேன். பிச்சை போட முடியாது என்று ஒருவரும் என்னிடம் சொல்ல மாட்டார்கள். நாம் பட்டினி

கிடக்கும்படி நேராது! இவற்றை எல்லாம் நினைத்து வாதனைப் படுவதை நிறுத்திக்கொள்ளுங்கள் ” என்றாள்.

திடீரென ஆடுபோல மூக்கை யுறிஞ்சிக்கொண்டு, என் தாத்தா தலையைத் திருப்பினார். கழுத்தில் கையைப்போட்டு என் பாட்டியை இறுக்கமாகத் தழுவிக்கொண்டு நொந்த மனத்துடன் விசித்து விசித்து அழுதார் :

“ முட்டாளே ! நல்ல மனதுடைய சிறிய முட்டாள் நீ! எஞ்சியிருப்பவள் நீ ஒருத்திதான். சகலத்தையும் இழந்து விடத் தயாராக இருக்கிற நீ ஒரு சரியான பேதைதான் ! குழந்தைகளுக்காக நாம் எவ்வளவு பாடுபட்டோம், எவ் வளவு பாபங்கள் செய்தோம் என்பதை எல்லாம் நீயே சிறிது நினைத்துப்பார். கடைசிக் காலத்தில் ஒன்றுமே இல்லாமல் சிறிய துண்டம்கூடக் கிடைக்காமல் கஷ்டப்படப் போகி றோம்......” என்று சொன்னார்.

இதற்கு மேலும் கேட்டுக்கொண்டு என்னால் நிற்க முடிய வில்லை. முகத்தில் கண்ணீர் பெருக்கெடுத்து ஓட, திண்ணையி லிருந்து குதித்து, அவர்கள் இருக்கும் பக்கத்துக்கு நான் ஓடி னேன். என் தாய் வந்துவிட்டாள் என்ற விம்மிதமும், இது வரை இல்லாத கனிவோடு அவர்கள் ஒன்றாகப் பேசிக் கொண்டு இருந்ததும், தங்கள் கவலையில் பங்குகொள்ள எனக்கு அவர்கள் இடம் அளித்ததும், என்னை அவர்கள் இரு வரும் தழுவிக்கொண்டதும், தங்கள் கண்ணீரால் என்னை முழுக்காட்டி அவர்கள் கொஞ்சியதும் என்னை ஆனந்தத்தில் அழுத்திவிட்டன.

“ அட சின்னப் போக்கிரி ! நீகூட இங்கேதான் இருக் கிறாயா ?” என்று என் காது அருகே வந்து என் தாத்தா ரகசியமாகச் சொன்னார். “ உன் தாய் இப்போது வந்துவிட்ட படியால், கிழப் பிசாசான உன் தாத்தாவின் தேவை இனி உனக்கு இராது. உன்னைக் கெடுப்பதற்கு மட்டுமே தெரிந்து

கொண்டுள்ள கிழட்டுக் கழுகு உன் பாட்டி இருக்கிறளே அவளுடைய தேவையும் இனி உனக்கு இராது. பூ! நீ நாசமாய்ப் போக !'' என்றார்.

" செல்லுங்கள் " என்று சொல்லிக் கையை அசைத்துவிட்டு அவர் எழுந்து நின்றார்.

"எங்களைவிட்டு ஒவ்வொருவரும்போகிறார்கள். தன்னந்தனியாக இருக்க வேண்டும் என்று ஒவ்வொருவரும் பிரிந்து போக விரும்புகிறார்கள். நல்லது. அவளை உள்ளே கூப்பிடு ; ஜல்தி '' என்று அவர் கோபமாகச் சொன்னார்.

அடுக்களையைவிட்டுப் பாட்டி போய்விட்டாள். தாத்தா எழுந்து விக்கிரகங்கள் இருக்கிற மூலைக்குச் சென்றார்.

" கருணைநிறைந்த ஆண்டவனே ! இதைச் சிறிது நினைத்துப் பாருங்கள் '' என்று முணுமுணுத்தவாறு தலைதாழ்ந்து நின்று, வேண்டுமென்றே தன் மார்பில் அடித்துக்கொண்டார், இது எனக்குப் பிடிக்கவில்லை ; பொதுவாக, பெருமை பாராட்டி ஆண்டவனிடம் எப்பொழுதுமே இந்த முறையில் யாரும் பேசுவதை நான் அங்கீகரிப்பது இல்லை. தனது சிவப்பு ஆடையின் கனிவு அறை முழுதும் துலங்க, என் அன்னை அறைக்குள் நுழைந்தாள். மேஜைக்கு அருகே கிடந்த விசுப் பலகைமீது அவள் உட்கார்ந்தாள் ; அவளுக்கு இரு புறத்திலும் என் பாட்டியும் தாத்தாவும் உட்கார்ந்து இருந்தார்கள். அவளுடைய சட்டைக் கைகள் இரண்டும் அவர்களுடைய தோளை அலங்கரித்தன.

அவர்களுடன் இதமாகவும் அக்கறையோடும் அவள் பேசினாள்; ஒரு வார்த்தைகூடப் பேசாமல், அவள் பேசியதை அவர்கள் செவிமடுத்துக்கொண்டு இருந்தார்கள். அவளுக்குப் பக்கத்தில் இருந்த அவர்கள் மிகச் சிறியவர்களாகத் தோன்றினர் ; அவள் தாய்போலவும் அவர்கள் இருவரும் குழந்தைகள் போலவும் காட்சி அளித்தனர்.

உணர்ச்சிப் பெருக்கால் களைத்துப்போன நான் அங்கிருந்த திண்ணைமீது அயர்ந்து தூங்கிவிட்டேன்.

மாலையில் கிழடுகள் இரண்டும் சிறந்த உடைகளை எடுத்து அணிந்துகொண்டு, மாலைப் பிரார்த்தனைக்குச் சென்றுவிட்டனர். மேஸ்திரியினுடைய ஆடையையும் ராக்கூன் கோட்டையும் அணிந்துகொண்டு பிரகாசமாக இருந்த என் தாத்தாவைப் பார்த்து, மகிழ்ச்சியுடன் என் பாட்டி கண்களைச் சிமிட்டினுள்.

என் தாயை இடித்தவாறே "உன் அப்பா எவ்வளவு கச்சிதமான சிறிய ஆடுபோல் இருக்கிறுர் என்பதை நீயே பார்" என்று என் பாட்டி சொன்னுள்.

தாய் களிப்போடு சிரித்தாள்.

அறையில் நானும் அவளும் தனியாக இருந்ததும், தன் காலைப் படுக்கைமீது தூக்கி மடித்து வைத்துக்கொண்டு, அந்த இடத்தைக் கைகளால் தட்டிவிட்டு, என்னைக் கூப்பிட்டாள் :

"இங்கே வந்து உட்கார்; நல்லது. விஷயங்கள் எப்படி? அவ்வளவு நன்றுக இல்லையா?" என்று கேட்டாள்.

அவர்கள் எப்படி இருக்கிறுர்களோ? அதை நான் அறியேன்.

"உன் தாத்தா உன்னை அடித்தாரா?"

"இப்பொழுது அவ்வளவு அதிகம் இல்லை."

"உண்மையாகவா? நல்லது. உனக்கு எது வேண்டுமோ கேள்."

என் தாத்தாவைப்பற்றி அவளுடன் பேச எனக்கு விருப்பம் உண்டாகவில்லை. ஆகவே, நாங்கள் இருந்த அறையில் நேர்த்தியான மனிதர் ஒருவர் இருந்ததையும் ஆனல் அவரை ஒருவருக்குமே பிடிக்கவில்லை என்பதையும் கடைசியாகத் தாத்தா அவரை வெளியே போகச் சொல்லிவிட்டதையும்பற்றி அவளுக்கு நான் சொல்லத் தொடங்கினேன். இந்

தக் கதையை என் தாய் ரசிக்கவில்லை. ஆகவே அவள் என்னைப் பார்த்து "வேறு எதாவது சொல்" என்று சொன்னாள்.

மூன்று சிறுவர்களைப்பற்றியும் தன் வீட்டு முற்றத்திலிருந்து கர்னல் என்னைத் துரத்தி அடித்ததைப்பற்றியும் நான் அவளிடம் சொன்னேன்.

"எவ்வளவு கேவலமான மனிதன்" என்று சொல்லி அவள் என்னைத் தழுவிக்கொண்டாள்.

இதன் பிறகு அமைதியடைந்து, கண்களை இடுக்கிக்கொண்டு தரையைக் கவனித்துவிட்டு, தன் தலையை அசைத்துக்கொண்டாள்.

"தாத்தா உன்மீது ஏன் இவ்வளவு அதிக கோபத்துடன் இருக்கிறார்?" என்று அவளை நான் கேட்டேன்.

"குற்றம் என்மீதுதான்."

"குழந்தையை அவரிடம் நீ கொண்டுவந்து கொடுத்திருக்க வேண்டும்......"

அவள் எழுந்து நின்று முகத்தைச் சுளித்துக்கொண்டாள்; உதட்டைக் கடித்துக்கொண்டாள்; பிறகு உரக்கச் சிரித்து என்னை மீண்டும் கட்டி அணைத்துக்கொண்டாள்.

"சின்னப் போக்கிரிப் பயலே! இனிமேல் அதைப்பற்றி எல்லாம் ஒரு வார்த்தைகூட நீ பேசக் கூடாது. தெரிகிறதா? ஒரு வார்த்தைகூடப் பேசக் கூடாது. அதைப்பற்றி நினைக்கவும் கூடாது" என்றாள்.

புரிந்துகொள்ள முடியாத கடுமையான வார்த்தைகளைக் கொஞ்ச நேரம்வரை அவள் அமைதியாகப் பேசி வந்தாள். பிறகு எழுந்து நின்று தரையில் நடந்து கொடுத்தாள். தனது அடர்ந்த புருவங்களை நெரித்துக்கொண்டாள்; தவடையைத் தன் விரல்களால் தட்டிவிட்டுக்கொண்டாள்.

மேஜைமீது இருந்த மெழுகுவர்த்தி உருகி எரிந்து, அங்கு இருந்த கண்ணாடியில் பிரதிபலித்தது. அழுக்கடைந்த

நிழல்கள் தரைமீது ஊர்ந்தன ; விக்கிரக விளக்கு மூலையில் பிரகாசித்துக்கொண்டு இருந்தது. நிலவு ஒளியில் வெண்பனி மூடிய ஜன்னல் வெள்ளிபோல் பிரகாசித்தது. மொட்டைச் சுவர்களிலும் முகட்டிலும் எதையோ தேடுபவள்போல என் தாய் சுற்றுமுற்றும் கவனித்துக்கொண் டிருந்தாள்.

"எப்பொழுது நீ படுக்கப் போவாய் ?"

"கொஞ்ச நேரம் பொறுத்து."

"சரிதான் ; பிற்பகல் சிறிது தூங்கிவிட்டாயோ ?" என்று சொல்லிப் பெருமூச்சுவிட்டாள்.

"நீ போய்விடப் போகிருயா ?" என்று அவளை நான் கேட்டேன்.

"எங்கே போவது ?" என்று சிறிது ஆச்சரியத்துடன் பதில் சொல்லிவிட்டு, தலையை உயர்த்தி என் கண்களையே நீண்ட நேரம் கவனித்தாள். வந்த கண்ணீரை என்னல் அடக்கிக்கொள்ள முடியவில்லை.

"நீ ஏன் அழுகிருய் ?"

"கழுத்து வலிக்கிறது."

ஆனல் என் இதயம்தான் அதிக வேதனையை அனுபவித்தது. நீண்ட காலம் இந்த வீட்டில் அவள் வசிக்க முடியாது என்பதையும் நிச்சயம் அவள் போய்விடுவாள் என்பதையும் நான் தெரிந்துகொண்டேன்.

"இன்னும் கொஞ்ச நாளில் நீ உன் தந்தையைப்போல் இருப்பாய்" என்று சொல்லி, தன் காலால் சமக்காளத்தை அப்பால் தள்ளிவிட்டாள். "அவரைப்பற்றி உன் பாட்டி உன்னிடம் சொன்னளா ?"

"ஆம்."

"மாக்ஸிமை அவள் பெரிதும் நேசித்தாள். அவரும் அவளைப் பெரிதும் நேசித்தார்......"

"நான் அறிவேன்."

மெழுகுவர்த்தியைப் பார்த்த என் தாய், தன் முகத்தைச் சுளித்துக்கொண்டு அதை அணைத்துவிட்டாள்.

" இதுதான் நல்லது " என்று சொன்னாள்.

மெழுகுவர்த்தி இன்றி அந்த அறை புதிதாகவும் அழகாகவும் சுத்தமாகவும் இருப்பதாகத் தோன்றியது. அழுக்கடைந்து தரையில் தெரிந்த நிழல்களுக்குப் பதிலாக, நீலநிற நிலவு ஒளிப் பொட்டுகள் தெரிந்தன. அதே சமயத்தில் ஜன்னல் கதவு தங்க நிறத்தால் பளபளத்தது.

" இங்கே வருவதற்கு முன்னர் நீ எங்கே வசித்தாய் ?"

மறந்துபோனவற்றை மீண்டும் ஞாபகப்படுத்திக்கொள்வதைப்போல அனேக நகரங்களின் பெயரை அவள் சொன்னாள். சொல்லி வரும்போதே பருந்தைப்போன்று, அறையை வட்டமிட்டுக்கொண்டு வந்தாள்.

" இந்த உடுப்பை நீ எங்கே சம்பாதித்தாய் ?"

" இதை நானே தைத்துக்கொண்டேன். எனக்குத் தேவையானவற்றை எல்லாம் நானே தயார் செய்துகொள்வது என் வழக்கம்."

மற்றவர்களிலிருந்து வேறுபட்டவளாக அவள் இருந்தது, எனக்கு மகிழ்ச்சியை அளித்தது. ஆனாலும் அவள் குறைந்த அளவில் பேசுவது எனக்கு வருத்தத்தை உண்டு பண்ணியது. நான் கேள்விகள் கேட்காமல் சும்மா இருந்தால் அவளும் எதுவும் பேசாமல் சும்மா இருந்தாள்.

மீண்டும் ஒரு முறை எனக்குப் பக்கத்தில் அவள் படுக்கைமீது இருந்தாள் ; ஒருவரை ஒருவர் இறுக்கமாகப் பிடித்துக்கொண்டு, நாங்கள் இருவரும் பேசாமல் இருந்தோம். மெழுகு, சாம்பிராணி இவற்றின் புகையை நுகர்ந்துகொண்டு அடக்கமாகவும் அமைதியாகவும் நாங்கள் இருந்தபோது, கிழடுகள் திரும்பிவிட்டன.

இரவுச் சாப்பாடு கம்பீரமாகவும் உயர்ந்த காரியமாயும் இருந்தது. சிறிது தூக்கத்தில் இருப்பவர்களை எழுப்பிவிடக் கூடாது என்ற அச்சத்துடன், கொஞ்சமாகப் பேசி நாங்கள் கவனமாக இருந்துகொண்டோம்.

விரைவில் "மதச் சார்பற்ற" கல்வியை எனக்குப் புகட்டுவதற்காக என் தாய் பெரும் பிரயாசை எடுத்துக் கொண்டாள். எனக்காக அவள் சில புத்தகங்கள் வாங்கி வந்தாள்; அவற்றில் ஒரு புத்தகத்தின் பெயர் "ருஷிய மொழிப் பாலர் பாடம்" என்பது. இந்தப் புத்தகத்தைப் படித்துச் சில நாட்களில், அரிச்சுவடி முழுவதையும் நான் கற்றுக்கொண்டுவிட்டேன். பின்னர் கவிதைகளை மனப்பாடம் செய்துகொள்வதற்கு என் தாய் பிரயாசை எடுத்துக்கொண் டாள். இருவரையுமே சித்திரவதை செய்யும் ஒரு காரியம் இதனால் ஆரம்பமாயிற்று.

நான் மனப்பாடம் செய்துகொள்ள நேர்ந்த ஒரு பாடல் வருமாறு:

> ஒரு வளைந்த பாதை; முடிவற்ற பாதை;
> வயல்களையும் மனிதர் வாழும் இல்லங்களையும் கடந்து அது செல்கிறது.
> மண்வெட்டியோ பிக்காசோ இந்தப் பாதையைப் போட வில்லை.
> எண்ணற்ற குளம்புகள் நடந்து நடந்து இந்தப் பாதை உண் டாகி இருக்கிறது.

இந்தப் பாடலைச் சொல்லும்போது, "வைண்டிங்" என் பதற்குப் பதிலாக "பைண்டிங்" என்றும் "ஸ்பேட்" என் பதற்குப் பதிலாக "பிளேட்" என்றும் "பட்" என்பதற்குப் பதிலாக "பை" என்றும் நான் சொன்னேன்.

"நீயே யோஜித்துப் பார். பாதை எப்படிப் 'பைண் டிங்காக' இருக்க முடியும்? இது மடத்தனமாகத் தோன்ற

வில்லேயா ? 'வைண்டிங்' என்றுதான் நீ சொல்லவேண்டும்'' என்று மறுத்துச் சொல்வாள் என் அன்னே.

பொருள் விளங்கியதாயினும், எனக்கு இருந்த குழப்பத்தில் 'பைண்டிங்' என்றே நான் சொல்லி வந்தேன்.

பிடிவாதக்காரன் என்றும் முட்டாள் என்றும் சொல்லி என் அன்னே என்னேக் கோபித்துக்கொண்டாள். கசப்பான இந்தக் குற்றச்சாட்டு எனக்கு அதிக வேதனேயை அளித்தது. பாழாய்ப்போன இந்த வரிகளே நினேவில் இருத்திக்கொள்ள அரும்பாடுபட்டேன். வாய்க்குள் சொல்லிக்கொள்ளும்போது அந்த வார்த்தைகளேப் பிழையில்லாமல் சொன்னேனுயினும், வாய்விட்டுச் சொல்லநேரும்போது மற்ற வார்த்தைகளுடன் கலந்து பிழையாகவே சொல்லி வந்தேன். பொய்மையான இந்த வரிகள்மீது எனக்கு மிகுந்த வெறுப்பு ஏற்பட்டது. வேண்டும் என்றே வன்மையாக அவற்றைச் சிதைக்கத் தொடங்கினேன். பொருள் செறிவு இல்லாமல் இருக்கும் அந்த வார்த்தைகள், மோனேகளால் நிறைந்து அதிக இன்பம் பயப்பதாக எண்ணிக்கொண்டேன்.

இந்த இன்பம் எனக்கு அதிக அவதியை உண்டுபண்ணி விட்டது. ஒரு நாள் பாடத்தை எல்லாம் சரியாக முடித்த பிறகு, ஒரு பாடலே ஒப்பிக்கும்படியாக என் என்னே சொன்னுள். விருப்பம் இல்லாது இருந்தும் அந்தப் பாடலே நான் முணுமுணுக்கத் தொடங்கினேன் :

> பாதையில் அங்கும் இங்கும் காளான்கள் முளேத்திருந்தன.
>
> தேவகன்னியும் இல்லே; நீர்த் தேவதையும் இல்லே. எல்லாம் குழம்பியிருந்தன ......

அதிகத் தாமதத்தில் எல்லாம் நடைபெறுவதாக எனக்குத் தோன்றியது. என் தாய் எழுந்து மேஜைமீது தன் கைகளே ஊன்றியவாறு நின்று, தனித் தனியாக ஒவ்

வொரு வார்த்தையையும் நிதானித்துச் சொல்லும்படியாகச் சொன்னுள் :

" இந்த வார்த்தைகளை எங்கேயிருந்து நீ கற்றுக்கொண்டாய் ?"

முற்றும் திகிலடைந்துபோன நான் " எனக்குத் தெரியாது " என்று பதில் சொன்னேன்.

" உனக்குத் தெரியும், சொல்லு !"

" அதைப்போலத்தான்."

" எதைப்போலத்தான் ?"

" இது வேடிக்கை விளையாட்டு."

" அந்த மூலைக்குப் போ."

" எதற்காக ?"

"போ மூலைக்கு!" என்று திரும்பவும் சொல்லி என்னை அவள் பயமுறுத்தினுள்.

" எந்த மூலைக்கு ?"

பதிலே சொல்லாமல் அவள் பார்த்த பார்வை என்னை அவள் என்ன செய்யச் சொல்லுகிருள் என்பதையும் அல்லது நான் என்ன செய்துகொண் டிருக்கிறேன் என்பதையும் அறவே மறந்துவிடும் அளவுக்கு என்னைக் குழப்பிவிட்டது. விக்கிரகம் இருந்த மூலையில் ஒரு வட்ட மேஜை இருந்தது. நறுமணம் நிறைந்த காய்ந்த மலர்களும் புற்களும்கொண்ட ஒரு பூந்தொட்டி அதன்மீது இருந்தது. மற்ருெரு மூலையில் கம்பளியால் மூடிய உடுப்புப்பெட்டி ஒன்று இருந்தது. மூன்ருவது மூலையில் படுக்கை ஒன்று கிடந்தது; நான்காவது மூலையைக் கதவு அடைத்துக்கொண்டிருந்தது.

" நீ என்னை என்ன செய்யச் சொல்லுகிருய் என்பது எனக்குப் புரிய மாட்டேன் என்கிறது " என்று சொல்லி, அதை அறிந்துகொள்ள நான் முயன்று பார்த்தேன்.

தன் புருவத்தையும் கன்னத்தையும் தேய்த்துக்கொண்டு எதுவும் பேசாமல் நாற்காலி ஒன்றில் அவள் உட்கார்ந்து கொண்டாள்.

" இந்த மூலேயில் தாத்தா உன்னே நிற்கச் சொல்லவே இல்லேயா ?"

" எப்பொழுது ?"

பொறுமை யிழந்தவளாய் மேஜையை இரண்டு தட்டுத் தட்டி " எப்பொழுதாவது ?" என்று கேட்டாள்.

" எனக்கு அது நினேவு இல்லே."

" மூலேயில் போய் நிற்பது ஒரு தண்டனே என்பது உனக்குத் தெரியாதா ?"

" எனக்குத் தெரியாது. அதை ஏன் தண்டனே என்பதாக நீ சொல்லுகிறுய் ?"

" என் அன்பே ! இங்கே வா " என்று சொல்லி அவள் பெருமூச்சுவிட்டாள்.

" என்னிடம் நீ ஏன் இப்படி இரைச்சல் போடுகிறுய் ?" என்று சொல்லிக்கொண்டே நான் அவளிடம் போனேன்.

" கவிதையை நீ ஏன் இப்படிக் குழப்பிக் குழப்பிச் சொன்னுய் ?"

கண்களே மூடிக்கொண்டு கவிதையை நினேத்துப் பார்த்தால் எழுதி இருக்கிறபடி கவிதை நினேவுக்கு வருகிறது என்றும், ஆனுல் இரைந்து வாய்விட்டுச் சொன்னுல் மற்ற வார்த்தைகள் வந்து கலந்துவிடுகின்றன என்றும் என்னுல் இயன்றவரை திறமையைக் காட்டி அவளிடம் நான் விளக்கிச் சொன்னேன்.

" வேண்டும் என்றே நீ சேர்த்துக் குழப்பவில்லேயா ?"

வேண்டும் என்றே செய்யவில்லே என்று நான் சத்தியம் செய்தேன். நான் சொன்னது உண்மையா அல்லவா என்பதை உடனே யோசித்து அதிசயித்துக்கொண்டேன். திடீரென

போதிய அவகாசம் எடுத்துக்கொண்டு, அந்தப் பாடலைப் பிழையில்லாமல் ஒப்பித்துவிட்டேன். இதனால் அதிசயமுற்று நான் பூரிப்பு அடைந்துபோனேன்.

முகம் குப்பெனச் சிவந்து காதுகள் எரிவதாக எனக்குத் தோன்றியது. நாணத்தால் விழுங்கப்பட்டவன்போல என் அன்னையின் முன்னே நான் நின்றேன். ஏக்கத்தினால் அவள் முகம் கருப்பாவதை, என் கண்ணீருக்கு இடையே கவனித்து நான் தெரிந்துகொண்டேன். உதடுகள் இறுக்கமாகவும் புருவங்கள் தொங்கியும்போய் இருந்தன.

" நீ சொல்லுவதன் பொருள் என்ன ? உண்மையாகவே நீ அதைப் புனைந்து பாடவில்லையா ?" என்று நாதனமான குரலில் அவள் கேட்டாள்.

" எனக்குத் தெரியாது ; அப்படிச் செய்ய எனக்கு விருப்பமும் இல்லை......" என்று நான் பதில் சொன்னேன்.

"திருத்த முடியாத ஆசாமி நீ ; ஆகவே அப்பால் போய் விடு" என்று தலையைக் குனிந்துகொண்டே அவள் சொன்னாள்.

மென்மேலும் அதிகமான கவிதைகளைத் தந்து கற்றுக் கொள்ளும்படியாக என்னிடம் அவள் சொன்னாள். ஆனால் என் மனமோ அவற்றை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டது. மோனையுள்ள வரிகளைச் சிதைப்பதற்கு உள்ள ஆசையும் அவற்றில் வேறு வகையான வார்த்தைகளைச் செறுகிவிட வேண்டும் என்ற ஓர் விதமாய விருப்பமும் என்னிடம் தீவிரமாக வேலைசெய்யத் தொடங்கின. இதைச் செய்வது எனக்குக் கஷ்டமாகத் தோன்றவில்லை. தேவையற்ற வார்த்தைகள் கூட்டம் கூட்டமாக என் மனத்தில் கிளைக்கத் தொடங்கின ; தாமே சென்று தேவையான இடத்தில் விரைவாக மாறிக் கொண்டன. நினைவுக்குக் கொணர எவ்வளவோ முயன்றும், அடிக்கடி அவை என் நினைவில் நிலைத்துத் தங்க மறுத்து

விட்டன. சாதாரணமான ஒரு பாடல்—இளவரசர் வியாஸி மிஸ்கை இயற்றியது—குறிப்பாக எனக்கு அதிக தொந்திர வைக் கொடுத்துவிட்டது.

இரவில், காலம் கடந்த நேரத்திலிருந்து அதிகாலை வரை,
கிழவர்களும் அநாதைகளும் விதவைகளும்,
ஜன்னலுக்குக் கீழே நின்று ஒரு துண்டு ரொட்டி பிச்சை கேட்கிறார்கள்.

இதில் மூன்றாவது வரியை நான் எப்பொழுதுமே விட்டு விடுவது உண்டு:

தங்கள் கரங்களை நீட்டி, ஆதரவற்ற தொனியில் அவர்கள் கேட்கிறார்கள்.

தனக்கு ஏற்பட்ட எரிச்சலில், எனக்கு ஞாபகசக்தி குறைவு என்பதை என் தாத்தாவிடம் என் அன்னை சொல்லி விட்டாள்.

"கெடுத்துவிட்டார்கள்; அவன் அப்படித்தான் இருக்கிறான்!" என்று கோபமாக என் தாத்தா சொன்னார். "அவனுடைய ஞாபக சக்தியில் குறைவு எதுவும் இல்லை. என்னைக் காட்டிலும் பிரார்த்தனை அவனுக்கு நன்றாக ஞாபகத்தில் இருக்கிறது. கல்லில் செதுக்கியதுபோல ஞாபகத்தில் இருத்திக்கொள்ளும் ஆற்றல் இவனுக்கு இருக்கிறது. ஒரு முறை செதுக்கிவிட்டால் எப்பொழுதுமே நலத்துக்காக அது நிலைத்து நிற்கும். அவனுக்கு அடி கொடுத்துச் சொல்லிக் கொடு!" என்றார் என் தாத்தா.

என் தாத்தாவின் அபிப்பிராயத்தை என் பாட்டியும் உறுதிப்படுத்தினாள்.

"பாடல்களையும் வேதாளக் கதைகளையும் இவன் நன்றாக நினைவில் இருத்திக்கொள்கிறான். கவிதையும் பாடல்களைப் போன்றதுதானே?" என்றாள் அவள்.

இது முற்றும் உண்மை. குற்றம் என்மீதுதான் என் பதை நான் உணர்ந்தேன். ஆனால் கவிதைகளை கற்றுக் கொள்ள விரைவிலேயே முயற்சி எடுத்துக்கொண்டேன். ஆயினும் மற்ற வார்த்தைகள் கரப்பான் பூச்சிகளைப்போல் கூட்டம் கூட்டமாக நகர்ந்து வந்து, வரிசையாக நின்று கொள்ளும் :

இரவும் பகலும் எங்கள் வீட்டு வாயிலுக்கு,
நொண்டி முடங்களும் அநாதைகளும் வந்து காத்து நிற் கிறார்கள்.

காத்து நின்று, ரொட்டி வேண்டும் என்று கேட்டு அவர்கள் சிணுங்குகிறார்கள்.

பெட்ரோவ்னாவின் கூடத்துக்கு அதை எடுத்துச் செல்லுங் கள்.

அவளுடைய பசுக்களுக்காக இதை விற்றுவிடுங்கள் ;
பிறகு குடித்துவிட்டு, மடுவின் ஊடே கிடந்து புரளுங்கள்.

இரவில் என் பாட்டிக்குப் பக்கத்தில் படுத்துக்கிடக்கும் போது, புத்தகங்களிலிருந்து நினைவுபடுத்திக்கொண்டதை எல்லாம் நான் அவளிடம் சொல்வது உண்டு ; நானே சரிக் கட்டி புனைந்தவற்றையும் கூறுவது உண்டு. இதைக் கேட்டுச் சில சமயங்களில் அவள் சிரிப்பாளாயினும், பெரும்பாலும் என்னை அவள் கண்டிப்பாள்.

" விரும்பினால் எதை எல்லாம் நீ செய்வாய் என்பது தெரிகிறது ! ஆனால் பிச்சைக்காரர்களை நீ இப்படி ஏளனம் செய்யக் கூடாது. ஏசுநாதரும் ஒரு பிச்சைக்காரர்தான் ; மற்ற அடியார்களும் பிச்சைக்காரர்களாக இருந்தவர்கள் தான் " என்றாள்.

ஒரு பாடலால் அவளுக்கு நான் பதில் சொன்னேன் :

பிச்சைக்காரர் என்றால் எனக்கும் வெறுப்பு ;

என் தாத்தாவுக்கும் வெறுப்பு ;
ஆண்டவனே ! எனக்கு உதவி புரியும்.
நான் எது செய்யலாம்,
என் தலைவிதியிலிருந்து தப்பித்துக்கொள்ள,
என் தாத்தா தடியிலிருந்தும் தப்பித்துக்கொள்ள.

"போக்கிரிப் பயலே ! உன் நாக்கு அடியோடு அழுகிப் போகட்டும். இதை உன் தாத்தா செவிமடுத்தால் என்ன வென்று நினைப்பார் !" என்று அதிசயித்துப் போய்ச் சொன்னாள்.

"கேட்கட்டுமே !"

"எப்பொழுது பார்த்தாலும் அப்பாவியான உன் அன்னைக்கு நீ சங்கடம் விளைவிப்பவனாகவா இருக்க வேண்டும் ? உனது சங்கடங்கள் இல்லாமலே அவளுக்கு இருக்கும் சங்கடங்களைப் பொறுக்க முடியாமல் அவள் தவிக்கிறாள்" என்று இதமாக என் பாட்டி என்னைக் கடிந்துகொண்டாள்.

"பொறுக்க முடியாமல் அவள் ஏன் தவிக்கிறாள் ?"

"வாயை மூடிக்கொண்டு சும்மாகிட ! இத்தகைய விஷயங்களை எல்லாம் உன்னால் புரிந்துகொள்ள முடியாது !"

"எனக்குத் தெரிகிறது. தாத்தாதான் இப்படி அவளை......"

"நான் சொல்லுகிறேன். வாயை மூடிக்கொண்டு சும்மா கிட !"

நம்பிக்கையை ஏறக்குறைய இழந்து துயரப்படும் நிலை எனக்கு ஏற்பட்டது. ஆனால் சில காரணத்துக்காக உண்மையை மறைத்துக்கொள்ள நான் ஆசைப்பட்டேன். குறும்பும் தைரியமும் என்னிடம் ஏற்படத் தொடங்கின. என் தாய் சொல்லித் தரும் பாடங்கள் அதிகரித்து, எனக்கு அதிக சிரமத்தைத் தந்தன. ஆரம்பக் கணிதம் எனக்குச் சிரமம் தருவதாய் இல்லை. ஆனால் இலக்கணத்தை எழுதுவதும்

அதைப் புரிந்துகொள்வதும் சிரமமாய் இருந்தது. என் தாத்தாவின் இல்லத்தில் என் தாய் இழிவான நிலையில் வாழ்ந்து வருகிருள் என்பது, மற்றவற்றைக் காட்டிலும் என் மனத்தை அதிகமாக உறுத்தியது. நாளுக்கு நாள் அவள் படும் கவலை அதிகரிப்பதாகத் தோன்றியது. ஒவ்வொருவரையும் அந்நியர்களாகவே பாவித்து நோக்கினுள். மணிக்கணக்கில் ஜன்னல் அருகே அமர்ந்து, தோட்டத்தையே உற்று நோக்கி, வதங்கி வாடி வருகிருள் என்பதாகத் தோன்றியது. வந்தவுடன் ஆரம்பத்தில் சில நாட்கள்வரை அவள் சுறுசுறுப்புடனும் உற்சாகத்துடனும் இருந்தாள். ஆனுல் இப்பொழுதோ கவலையின் காரணமாக அவளுடைய கண்களைச்சுற்றிக் கருப்பு வளையங்கள் தெரிந்தன. தன்னை அலங்கரித்துக்கொள்வதற்குக்கூட அவளுக்கு விருப்பம் இல்லாததுபோல் தோன்றியது. தன் கூந்தலை வாரிக்கொள்ளாமலும், சட்டையின் பொத்தான்களை மாட்டிக்கொள்ளாமலும் அதன் சுருக்கங்களைச் சரிப்படுத்திக்கொள்ளாமலும் நாள் முழுதும் திரிந்தாள். சுத்தமாகவும் கச்சிதமாகவும் அழகாகவும், உலகிலேயே அழகு மிக்க பெண்மணியாகவும் இருக்க வேண்டிய அவள் இப்படி லக்ஷணக் குறைவாய் இருப்பதைப் பார்ப்பது எனக்கு வேதனையாக இருந்தது.

எனக்கு அவள் பாடம் சொல்லித் தரும்போது, என்னைக் கவனியாமல் சுவரையோ ஜன்னலையோ கவனித்துக் கொண்டு, சோர்ந்த குரலில் கேள்விகள் கேட்பாள் ; நான் சொல்லும் பதிலைக் காதில் வாங்கிக்கொள்ளாமல் மறதியாக இருப்பாள். அதிக எரிச்சலுடன் என்னைக் கோபித்துக் கொள்வாள் ; வேதாளக் கதைகளில் வரும் தாய்மார்கள் போல, மற்றவர்களைக் காட்டிலும் மிக்க நேர்மையுடன் நடந்து கொள்ளவேண்டிய ஒரு தாய், இப்படி நடந்துகொள்வது என் உள்ளத்தை உறுத்தியது.

"எங்களுடன் வாழ்வது உனக்குப் பிரியமாக இல்லையா ?" என்று ஒரு நாள் அவளை நான் கேட்டேன்.

"உனது காரியத்தைக் கவனி" என்று கண்டித்து அவள் பதில் சொன்னாள்.

எதற்காகவோ என் தாத்தா தயார் செய்துகொண்டிருக்கிறார் என்பதை அறிந்த என் தாயும் பாட்டியும் அதிர்ச்சியுற்று இருக்கிறார்கள் என்பதை நான் தெரிந்து கொண்டேன். அடிக்கடி என் தாய் இருக்கும் அறைக்குள் பிரவேசித்து, கதவைச் சாத்திக்கொண்டு, இடையன் நிக்கானரின் மரக்கொம்புபோல பயங்கரமாக அவர் ஊளையிடுவார். இந்த மாதிரியான சந்தர்ப்பங்களில் ஒரு முறை என் அன்னை வீடு முழுதும் கேட்கும்படியாக இரைச்சலிட்டுக் கத்தினாள் :

"இது ஒருபோதும் நடவாது ; நடவாது" என்று சொன்னாள்.

கதவை என் அன்னை தடால் என்று சாத்தினாள் ; என் தாத்தா ஊளையிட்டுக் கதறினார்.

இது மாலை நேரத்தில் நடந்தது. அடுக்களையில் அமர்ந்து என் தாத்தாவுக்காக என் பாட்டி ஒரு சட்டை தைத்துக் கொண்டிருந்தாள் ; மூச்சுவிடும்போதே முணுமுணுத்துக் கொண்டு அவள் தைத்தாள். கதவு தடால் என்று சாத்தப் பட்டதும் அவள் கவனித்துக் கேட்டாள். "ஆண்டவனே! அவள் குடியிருப்பவர்களிடம் அல்லவா போய்விட்டாள் !" என்று சொன்னாள்.

திடீரென அடுக்களைக்குள் புகுந்து, என் பாட்டியின் தலைமீது என் தாத்தா ஓங்கி அடித்தார். கொடுக்குப்போன்ற தன் கையைத் தடவிக் கொடுத்துக்கொண்டே அவர் சீறினார்:

"கிழட்டுச் சதிகாரி ! எப்பொழுதுதான் உன் நாவை அடக்கிக்கொண்டு நீ கிடக்கப் போகிறாயோ ?" என்று கேட்டார்.

தன் கூந்தலைச் சரிப்படுத்திவிட்டுக்கொண்டே அமைதியாக "நீங்கள்தான் முட்டாளாகப் போகிறீர்கள்? என் நாவை அடக்கிவிடப்போவதாக அல்லவா நீங்கள் நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள்? நீங்கள் செய்யும் சூழ்ச்சி தெரியத் தெரிய, அவளிடம் அதை நான் கூறிக்கொண்டே இருப்பேன். இதை நீங்கள் உறுதியாக நம்பலாம்..." என்றாள்.

அவளைப் பிடித்துக்கொண்டு, அவள் தலைமீது அவர் கொட்டத் தொடங்கினார். என் பாட்டி எதிர்த்து ஒன்றும் செய்யாமல், "முட்டாளே! என்னை அடியுங்கள்! பலமாக அடியுங்கள்! பலமாக அடியுங்கள்!!" என்று திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண் டிருந்தாள்.

படுக்கைமீது அமர்ந்து இருந்த நான் தலையணைகளையும் போர்வைகளையும் பூட்ஸ்களையும் எடுத்து என் தாத்தாமீது எறியத் தொடங்கினேன். தனக்கு இருந்த ஆத்திரத்தில் இதை அவர் கவனிக்கவில்லை. என் பாட்டி தரைமீது விழுந்துவிட்டாள்; அவள் தலையை மிதித்துக் கொண்டேயிருந்த அவரும் தடுமாறி விழுந்துவிட்டார். அதனால் அங்கே வாளியில் இருந்த தண்ணீர் கொட்டிவிட்டது. அலறிக் கொண்டும் துப்பிக்கொண்டும் அவர் எழுந்திருந்தார். சுற்று முற்றும் வெறிக்கப் பார்த்துவிட்டு, அடுக்களையிலிருந்து ஓடி, மாடியிலிருந்த தனது அறைக்குப் போய்விட்டார். முணகிக் கொண்டு எழுந்து ஒரு விசுப்பலகைமீது என் பாட்டி உட்கார்ந்தாள்; பின்னிப்போன தன் கூந்தலைச் சரிப்படுத்திக் கொள்ளத் தொடங்கினாள். படுக்கையிலிருந்த நான் கனப்பு-அடுப்பின் மேடைமீது குதித்தேன்.

"தலையணைகளையும் மற்ற சாமான்களையும் சேகரித்துத் திரும்பவும் கனப்பு-அடுப்பின்மீது வை" என்று கோபமாக என் பாட்டி சொன்னாள். "தலையணைகளை இப்படியும்

எறியலாமா ! உன் சொந்தக் காரியத்தில் கவனம் செலுத்து ! அந்தக் கிழட்டுப் பிசாசுக்கும் உன்னைப் போல்தான் அறிவு கெட்டுவிட்டது !'' என்றாள்.

திடீரெனச் சிறு கதறல் ஒன்று போட்டு முகத்தைச் சுளித்துக்கொண்டாள்; தன்னிடம் வருமாறு என்னைக் கூப்பிட்டாள்.

"இங்கே கவனி" என்று சொல்லி, தலையைக் குனிந்து காட்டினாள். "இங்கே இப்படி ஏன் இவ்வளவு பலமாக வலிக்கிறது ?'' என்று கேட்டாள்.

கனமாய்க் கிடந்த கூந்தலைத் தூக்கி நான் கவனித்துப் பார்த்தேன். தலைமீதுள்ள தோலில் கொண்டை ஊசி ஒன்று பதிந்து இருந்தது. அதை நான் வெளியே இழுத்துப் போட்டேன்; பிறகு மற்றும் ஒரு ஊசி இருப்பது தெரியவந்தது. தேடித் தேடிப் பார்த்து நான் களைத்துப் போனேன். "எனக்குப் பயமாய் இருக்கிறது; அம்மாவைக் கூப்பிடுகிறேன்'' என்று சொன்னேன்.

"அம்மாவைக் கூப்பிடுகிறேன் என்றா சொல்லுகிறாய்?'' என்று கையை அசைத்தவாறே அவள் கூச்சல் போட்டாள். "ஆண்டவன் கிருபையால் அவள் இதைப் பார்க்காததும் கேட்காததும், அவளை நீ கூப்பிடாததும் நல்லதாய் போயிற்று ! இங்கேயிருந்து போய்விடு !'' என்று அவள் இரைந்தாள்.

பின்னல் வேலைக்காரிக்கு உள்ள கைத் திறமையைக் கொண்டு, அடர்த்தியான கரிய கூந்தலுக்கு கீழே தன் விரல்களைக் கொடுத்து, தலைமீது பதிந்துபோயிருந்த கொண்டை ஊசிகளை அவள் தேடத் தொடங்கினாள். தைரியத்தை எல்லாம் வரவழைத்துக்கொண்டு, மேலும் இரண்டு கொண்டை ஊசிகளைப் பிடுங்குவதற்கு நான் உதவி புரிந்தேன்.

"வலிக்கிறதா ?''

" அவ்வளவு அதிகம் இல்லை. குளிக்கும் அறையை சூடுபடுத்தி, நாளை இந்தக் காயத்தை எல்லாம் நான் கழுவிக் கொள்கிறேன். ஏ புரூவே - கிரூவே! அவர் என்னை அடித்தார் என்ற விவரத்தை உன் தாயிடம் சொல்லிவிடாதே" என்று அன்போடு என்னைக் கடிந்துகொண்டாள். " ஒருவருடன் ஒருவர் நாங்கள் கோபமாக இருக்கிறோம் என்பதை யாரிடமும் சொல்லாதே? தெரிகிறதா? அல்லது சொல்லித்தான் தீர்வாயா ?" என்று கேட்டாள்.

" சொல்ல மாட்டேன்."

" மறந்து போகாதே! இப்பொழுது நாம் கொஞ்சம் இங்கேயே இருப்போம். என் முகத்தில் எதுவும் உனக்குத் தெரிகிறதா? இல்லையா? நல்லது. 'டைசி' பூப்போல எல்லாம் கச்சிதமாய் இருக்கின்றன!"

பிறகு, அவள் தரையைத் துடைக்க ஆரம்பித்தாள்; இதயத்தின் அடித்தளத்திலிருந்து நான் அவளைப் பார்த்துச் சொன்னேன்:

" அடியார்களில் ஒருத்திபோல நீயும் இருக்கிறாய். அத்தகைய உன்னை அவர்கள் அடிக்கிறார்கள்; சித்திரவதை செய்கிறார்கள். நீயோ அதைப்பற்றிய சிந்தனை எதுவும் இன்றி இருந்து வருகிறாய்."

"ஏன் இப்படி மதியீனமாய்ப் பேசுகிறாய்! அடியாராம்! அடியார் ஒருவரைத் தேடிப்பிடிப்பதற்கு ஏற்ற அருமையான இடம்தான்!"

கைகளையும் கால்களையும் ஊன்றிக்கொண்டு, அவள் நகர்ந்து நகர்ந்து போனாள். வாயில் ஏதோ முணுமுணுத்தபடி இருந்தாள். ஆனால் நானோ வாசல்படியில் அமர்ந்து, அவர் செய்த காரியத்துக்குப் பதிலாக என் தாத்தாவுக்கு எப்படித் திருப்பி அடிகொடுப்பது என்ற யோசனையில் மூழ்கி இருந்தேன்.

என் முன்பே என் பாட்டியை என் தாத்தா கொடூரமாகத் தாக்கியது இதுதான் முதல் தடவை. அந்தி வெளிச்சத்தில், தனது சிவந்த கேசம் ஆடிக்கொண்டிருக்க அவருடைய சிவந்த முகத்தைப் பார்ப்பதுபோல் எனக்குத் தோன்றியது. ஆத்திரத்தால் என் உள்ளம் கொதித்தது. பழிவாங்குவதற்குத் தகுந்த வழியைக் கண்டுபிடிக்க முடியாமல் தவித்து நான் கஷ்டப்பட்டேன்.

இரண்டு தினம் கழித்து, மாடியில் இருக்கும் அவருடைய அறைக்கு நான் சென்றபோது, தனக்கு எதிரே தரைமீது ஒரு பெட்டியைத் திறந்துவைத்துக்கொண்டு, சில காகிதங்களை என் தாத்தா கவனித்துக்கொண் டிருப்பதை நான் கவனித்தேன். அவருக்குப் பக்கத்திலிருந்த குறிச்சியில், அவருக்குப் பிடித்தமான அடியார்களின் காலண்டர் கிடந்தது. ஒவ்வொரு மாதத்திலும் உள்ள நாள்களுக்குக் கட்டம் போட்ட, கனமான, சாம்பல் நிறக் காகிதங்கள் பன்னிரண்டு கொண்ட காலண்டர் ஆகும் அது. கட்டங்களில் அடியார்களின் உருவங்கள் இருந்தன. இந்தக் காலண்டரை என் தாத்தா வெகுவாகப் பாராட்டி உரைத்தார். குறிப்பாக என்மீது அவருக்குப் பிரியம் அதிகமாக இருக்கும் சமயங்களில் தான், இந்தக் காலண்டரை எடுத்து, அபூர்வமாக என்னிடம் காட்டி என்னை அதைப் பார்க்கச் சொல்வார். அதிலிருந்த கவர்ச்சிகரமான, சிறிய, சாம்பல் நிற உருவங்களில் நூதன உணர்ச்சியுடன் நான் ஆழ்ந்துவிடுவது உண்டு. இவர்களில் சிலருடைய வாழ்க்கை எனக்குத் தெரிந்து இருந்தது. கிரிக், யுலித்தா, தியாகி வார்வாரா, பாண்டலீமான், இன்னும் பலர், இவர்களுடைய வாழ்க்கையை நான் அறிவேன். ஆண்டவன் அடியார் அலெக்ஸி என்பவரின் துயரம் நிறைந்த வாழ்க்கை என் உள்ளத்தை உருக்கியது ; இவரைப்பற்றிய சிறந்த பாடல்களைப்

பரவசப்பட்டு, உணர்ச்சிபூர்வமாக, அடிக்கடி என் பாட்டி பாடிக் காட்டியது எனக்கு நினைவு இருக்கிறது. நூற்றுக் கணக்கான அடியார்களை நீ பார்க்க நேரும்பொழுது, தியாகிகள் எப்பொழுதுமே இருந்து இருக்கிறார்கள் என்ற ஒரு ஆறுதல் உனக்கு ஏற்பட்டுவிடுகிறது.

இந்தக் காலண்டரைத் துண்டம் துண்டமாக வெட்டிவிட வேண்டும் என நான் தீர்மானித்தேன். கழுகுகள் போடப்பட்ட நீல நிறக் காகிதம் ஒன்றைப் படிப்பதற்கு எழுந்து ஜன்னல் அருகே என் தாத்தா சென்றபோது, அதில் பல காகிதங்களை எடுத்துக்கொண்டு நான் கீழே ஓடினேன். என் பாட்டியின் மேஜைமீது கிடந்த கத்தரிக்கோலை எடுத்துக் கொண்டு கனப்பு - அடுப்பின்மீது அமர்ந்து அடியார்களின் தலைகளைத் துண்டிக்கத் தொடங்கினேன். ஒரு வரிசையைத் துண்டித்து முடிந்ததும், அடியார்கள்மீது எனக்குப் பரிவு உண்டாயிற்று. ஆகவே கட்டம் கட்டமாக இருந்த கோடுகளை மட்டும் நான் கத்தரிக்கத் தொடங்கினேன். அடுத்த கோட்டை வெட்டி முடிப்பதற்கு முன்பு, வாசல்படியில் வந்து என் தாத்தா காட்சி அளித்தார்.

" இந்தக் காலண்டரை எடுத்துக்கொள்வதற்கு உன்னை யார் அனுமதித்தார்கள் ?" என்று அவர் கேட்டார்.

மேடைமீது சிறு சிறு சதுரங்கள் சிதறிக் கிடப்பதை அவர் திடீரென்று பார்த்துவிட்டார். அங்கு கிடந்தவற்றைச் சேகரித்துக் கருத்தூன்றிக் கவனித்தார். அவற்றைப் போட்டுவிட்டு வேறு சிலவற்றை எடுத்துப் பார்த்தார். விவரம் தெரியவந்ததும், அவருடைய தாடை கிடுகிடுத்தது ; தாடி சிலிர்த்தது ; அவர் விட்ட மூச்சினால் காகிதங்கள் காற்றில் பறந்தன.

" என்ன காரியம் செய்தாய் !" என்று இரைந்து, காலால் வேகமாக உதைத்து, மேடைமீது இருந்து என்னைத்

தள்ளினார். குட்டிக்கரணம் போட்டுக் கீழே விழ இருந்தவனை என் பாட்டி பிடித்துக்கொண்டாள்.

என்னையும் என் பாட்டியையும் குட்டியவாறே "உன்னைக் கொன்று போடுவேன்" என்று என் தாத்தா உறுமினார்.

இந்தச் சமயத்தில் திடீரென என் தாய் தோன்றினாள்; எனக்கு எதிரே இருந்த மூலையில் என் தாயாருடன் இருப்பது எனக்குத் தெரிய வந்தது.

என் தாத்தாவின் உதைகளைத் தடுத்து நிறுத்தியவாறே "அறிவுகெட்ட இந்தச் செயலை நிறுத்துங்கள். அறிவோடு நடந்துகொள்ளுங்கள்!" என்று சொன்னாள்.

"நான் ஒளிந்தே போனேன்" என்று ஓலமிட்டுக் கொண்டே, ஜன்னல் அருகே கிடந்த ஒரு குறிச்சியில் என் தாத்தா உட்கார்ந்தார். "நீங்கள் எல்லோருமே என்னிடம் பகைமை பாராட்டுகிறீர்களே" என்று சொன்னார்.

"இந்த மாதிரியான நாடகம் நடிப்பது உங்களுக்கு நாணமாகத் தோன்றவில்லையா?" என்று என் அன்னை மெதுவாகக் கேட்டாள்.

கண்களை இறுக்கமாக மூடிக்கொண்டும்; விகாரமாகத் தன் தாடியை முகட்டைப் பார்க்க நீட்டிக்கொண்டும் இரைச்சல் போட்டு, விசுப்பலகையை அவர் உதைத்துத் தள்ளினார். என் தாய்க்கு முன்னர் தான் நடித்த நாடகத்தைக் கண்டு என் தாத்தா உண்மையாகவே நாணப்படுகிறார் என்று எனக்குத் தோன்றியது. அதனால்தான் அவர் தன் கண்களை மூடிக்கொண்டார்.

"வெட்டின படங்களை எல்லாம் சேகரித்து ஒரு காலிகோ துணியில் நான் ஒட்டித் தருகிறேன். அதன் பின்னர் இந்தக் காலண்டர் உறுதியாக நீடித்து இருக்கும்" என்று சொல்லி, காகிதங்களின் தாள்களைச் சமப்படுத்திக்கொண்டே அவள்

சொன்னாள். "பாருங்கள் எல்லாம் சுருங்கிப்போய் கிழிந்து, துண்டு துண்டாக விழுகின்றன" என்றாள்.

பாடம் சொல்லித் தந்தபோது, எனக்குப் புரியாமல் இருந்த காலத்தில் எந்தத் தோரணையில் பேசினாளோ அதே தோரணையில்தான் இப்போதும் பேசினாள். திடீரென என் தாத்தா எழுந்து தனது கோட்டையும் சட்டையையும் தடவி ஒழுங்குபடுத்திக்கொண்டார். தொண்டையைச் சரிப்படுத்திக் கொண்டு, "யாவற்றையும் சேர்த்து இன்றே ஒட்டிவிடு; நான் சென்று மற்ற தாள்களையும் எடுத்து வந்து தருகிறேன்" என்றார்.

கதவு அருகே சென்ற அவர், திரும்பி வாயிலண்டை நின்றுகொண்டு "இவனைச் சரியாக உதைக்க வேண்டும்!" என்று சொல்லி, தனது வளைந்த விரல்களை என்னைப் பார்த்து ஆட்டினார்.

"ஆம். உதைக்கத்தான் வேண்டும்" என்று என் தாயார் ஒப்புக்கொண்டாள்; பிறகு என் பக்கமாகத் திரும்பி "இந்த மாதிரியான காரியங்களை எல்லாம் நீ செய்யலாமா?" என்று கேட்டாள்.

"காரியத்தோடுதான் இதை நான் செய்தேன். எப் பொழுதாவது என் தாத்தா என்னை மீண்டும் அடிப்பாரானால் அவருடைய தாடியை நான் கத்தரித்து எறிந்துவிடுவேன்" என்றேன் நான்.

கிழிந்துபோய்விட்ட தன் ஆடையைக் களைந்துகொண் டிருந்த என் பாட்டி, தன் தலையை அசைத்துக்கொண்டாள்.

"வாக்குறுதி செய்தபடி உன் நாவை அடக்கிக்கொண்டு தான் நீ கிடக்க வேண்டும்" என்று சொல்லி வெறுப்போடு அவள் துப்பினாள். "மேலும் நாக்கை அசைக்க முடியாதபடி அது பெரிதாக வீங்கிப் போகட்டும்" என்றாள்.

அவளை என் தாய் உற்று நோக்கிவிட்டு என் பக்கமாகத் திரும்பி "இவளை அவர் எப்பொழுது அடித்தார்?" என்று கேட்டார்.

"வார்வாரா! இந்த மாதிரியான விஷயங்களை அவனிடம் கேட்பது உனக்கு நாணமாக இல்லையா? இதை எல்லாம் பற்றி நீ ஒன்றும் கேட்க வேண்டாம்." என்றாள் என் பாட்டி.

"அம்மா! நீ ஆசிர்வாதம் பெற்ற பிறவி!" என்று என் தாய் கூறி, அவளை அன்போடு தழுவிக்கொண்டாள்.

"இம். உனக்கு வாய்த்திருப்பவள் ஒரு நேர்த்தியான தாய்தான்! இங்கே என்னைப் போகவிடுங்கள்..."

ஒருவரை ஒருவர், ஒரு நிமிடம், மௌனமாகப் பார்த்துக்கொண்டார்கள்; பிறகு பிரிந்துபோய்விட்டார்கள். வாசல் படியைச் சுற்றி என் தாத்தா நடமாடுவது காதில் விழுந்தது.

வந்த தினம் முதலாகவே, ராணுவ அதிகாரியின் உல்லாசமான மனைவியுடன் என் அன்னை சிநேகமாகிவிட்டாள். நாள்தோறும் மாலையில் தவறாது அவளைக் காணச் சென்று வந்தாள். பெட்லெங் வீட்டிலுள்ள அழகிய வாலிப நங்கையரையும் தைரியசாலிகளான அதிகாரிகளையும் என் அன்னை சந்தித்துப் பேசினாள். என் தாத்தாவுக்கு இது பிடிக்கவில்லை. அடுக்களைக்கு இரவுச் சாப்பாடு சாப்பிட வரும்போதெல்லாம், கரண்டியை எடுத்து, அவர்கள் வீடுகள் இருக்கும் பக்கமாக அசைத்துக்காட்டி "மற்றும் ஒரு கூட்டமா? நாசமாய்ப் போக! இரவு முழுதும் தூங்கவே முடியாமல் போகிறது" என்று முணுமுணுத்தார்.

குடியிருப்பவர்களை சீக்கிரம் காலி செய்துவிடுமாறு என் தாத்தா சொன்னார். அவர்கள் போய்விட்ட பிறகு, எங்கேயோ இருந்து இரண்டு வண்டி நிறைய பழைய மேஜை நாற்காலிகளை

ஏற்றிவந்து,காலியான அறைகளில் போட்டு, கதவைப் பூட்டி விட்டார்.

"இனிமேல் குடியிருப்பவர்களே தேவையில்லை. இன்று முதல் விருந்தாளிகளை நானே கவனித்துக்கொள்கிறேன்" என்றார்.

ஞாயிற்றுக்கிழமை யன்று விருந்தினர்கள் வரத்தொடங்கினார்கள். அவர்களில் என் பாட்டியின் சகோதரி மெட்ரியோனா ஐவானோவாவும் ஒருத்தி. தடித்த மூக்குள்ள, இரைச்சல்போடும் சலவைக்காரி இவள். கோடுபோட்ட பட்டு உடையும் தலையில் தங்கநிறக் குட்டையும் இவள் அணிந்து இருந்தாள். வரும்போதெல்லாம் தன் இரு புதல்வர்களையும் அவள் கூட அழைத்து வருவாள் ; ஒருவன் பெயர் வாஸிலி ; பத்திரம் எழுதுபவர் ; நீண்ட கூந்தலுள்ள இவர் சாம்பல் நிற ஆடை அணிந்து இருந்தார். நல்ல குணமும் உற்சாகமும் வாய்ந்தவராகக் காணப்பட்டார் ; மற்றொருவர் பெயர் விக்டர். குதிரைகளைக் கவனிக்கும் தொழில் ; ஒடுக்கமான முகத்தில் புள்ளி புள்ளியாக மச்சங்கள் விழுந்து இருந்தன. நுழைவாயிலில் தன் கால் உறைகளை அவர் கழற்றும்பொழுது, "அந்திரே-அப்பா ! அந்திரே-அப்பா" என்று கோமாளி கூப்பிடுவதுபோல் கூப்பிடுவார்.

இதனால் ஆச்சரியமுற்று நான் பயந்து போனேன்.

சித்தாரை எடுத்துக்கொண்டு அம்மான் யாக்கோவ் வந்தார். வழுக்கத் தலையும் ஒரு கண்ணுமுள்ள கெடிகாரக்காரர் ஒருவரையும் தன்னுடன்கூட அவர் அழைத்துவந்தார். நீண்ட கருப்புக்கோட்டு அணிந்திருந்த அமைதியான அவர், சந்நியாசிபோலக் காட்சி அளித்தார். எப்பொழுதுமே சிரித்துக்கொண்டு ஒரு மூலையில் அவர் அமர்ந்து இருந்தார் ; தலை ஒரு பக்கமாகச் சாய்ந்து இருக்கும் ; சுத்தமாகச் சவரம் செய்துகொண்ட தன் இரட்டை மோவாயைத் தன் ஒரு விர

லால் அவர் தாங்கிக்கொண்டு இருந்தார். அவர் கருப்பாய் இருந்தார். தனது ஒற்றைக் கண்ணுல் ஒவ்வொருவரையும் ஊன்றிக் கவனித்தார். கொஞ்சம் பேசினுர். அடிக்கடி அதே வார்த்தைகளைத் திருப்பத் திருப்பச் சொன்னுர் :

" எல்லாம் ஒன்றுதான் - தயவுசெய்து உங்களைச் சிரமப் படுத்திக்கொள்ளாதீர்கள் " என்ருர்.

இவரை முதலில் பார்த்தபோது, நீண்ட காலத்துக்கு முன்னர் நடந்த ஒன்றைத் திடீரென நான் நினைவுபடுத்திக் கொண்டேன். அப்போதும் நாங்கள் நோவாயாத் தெருவில் தான் வசித்தோம். அப்போது அமங்கலமான பேரிகைகள் முழங்குவது என் காதில் விழுந்தது. உயரமான கருப்பு வண்டி ஒன்றைப் போர் வீரர்களும் ஜனங்களும் சூழ்ந்து கொண்டு வந்தார்கள். சிறையிலிருந்து பொதுச் சதுக்கத் துக்கு அந்த வண்டி சென்றுகொண்டிருந்தது. வண்டிமீது இருந்த ஒரு விசுப்பலகையில் ஒரு மனிதன் இருந்தான்; தலையில் உருண்டை தொப்பி அணிந்திருந்தான்; கைகளில் மாட்டியிருந்த விலங்குகள், அவன் உடம்பு அசையும்போது சலசலத்து ஒலித்தன. வெள்ளைக் கொட்டை எழுத்துக்களால் எழுதப்பட்ட கரும் பலகை ஒன்று அவன் கழுத்தில் தொங் கியது. அதைப் படிக்க விரும்புபவன்போல அந்த மனிதன் தன் தலையைத் தொங்கவிட்டுக்கொண் டிருந்தான்......

" இவன் என் புதல்வன் " என்று கெடிகாரக்காரருக்கு என் அன்னை அறிமுகம் செய்துவைத்தாள்; ஆனுல் பயந்து போய் பின்புறமாகக் கையைக் கட்டிக்கொண்டு நான் அப்பால் போய்விட்டேன்.

" தயவுசெய்து கஷ்டப்படாமல் இரு " என்று சொல்லி விட்டு, தனது வலது காதுவரை, தன் வாயை அவர் பயங்கர மாகக் கோண வைத்துக்கொண்டார். நான் போட்டிருந்த

பெல்டை பிடித்து, என்னைத் தன்பால் இழுத்து, விரைவாகவும் திறமையாகவும் என்னை ஒரு சுழற்றுச் சுழற்றினார்.

"இவன் சரியாக இருக்கிறான்; தெம்பான பயல்" என்று தன் மெச்சுதலைத் தெரிவித்துவிட்டு, என்னைப் போக விட்டுவிட்டார்.

தூங்குவதற்குப் போதிய அளவு பெரிதாக இருந்த தோல் கை-குறிச்சி ஒன்றில் நான் சென்று இருந்துகொண்டேன். இந்தக் குறிச்சி, இளவரசர் குருஷின்ஸ்கைக்குச் சொந்தமானது என்று எப்பொழுதுமே என் தாத்தா பெருமையாகச் சொல்லிக்கொண்டிருப்பார். மூலையில் இருந்தபடியே வயதுவந்தவர்கள் எப்படி உல்லாசமாக இருப்பதற்கு முயல்கிறார்கள் என்பதையும் கெடியாரக்காரர் தன் முக பாவத்தை நூதனமாகவும் சந்தேகத்துடனும் எப்படி மாற்றிக்கொள்கிறார் என்பதையும் கவனித்தேன். அவருடைய முகம் மெலிந்தும் எண்ணெய்ப் பசை படிந்தும், யாவும் உருகி ஓடுவதாயும் இருந்தது. அவர் சிரித்தாரானால் அவருடைய தடித்த உதடுகள் வலப் பக்கமாகக் கோணிக்கொள்ளும். அவருடைய சிறிய மூக்கு, குழம்பில் மிதக்கிற ரொட்டித் துண்டம்போல அசைந்து கொடுக்கும். குத்திட்டு நிற்கிற அவருடைய பெரிய காதுகளும் சிலசமயம் ஒரு கண்மீது இருக்கும் புருவத்தோடு சேர்ந்து நெளியும்; சிலசமயம் கன்னத்தெலும்புகள் அருகே இறங்கிக்கொண்டுவிடும்; விரும்பினால் தன் கரங்களை மூக்கு அருகே கொண்டுபோவதைப்போல, காதுகளையும் தன் மூக்கு அருகே கொண்டுசெல்ல அவருக்கு ஆற்றல் இருப்பதுபோல் தோன்றியது. சில சமயங்களில் தனது கருத்த சிறிய நாக்கை வெளியே நீட்டி, உலக்கையைப்போல் உருண்டையாக்கிக்கொண்டு, எண்ணெய்ப் பசையுள்ள தடித்த தனது உதடுகளை எச்சிலால் நனைத்துக்கொள்வார். இது எனக்கு ஒரு விளையாட்டாகத் தோன்றவில்லை; வியப்பாகவே

தோன்றியது; அதனால் அவரைப் பார்த்த என் கண்களை என்னால் அப்பால் எடுக்க முடியவில்லை.

விருந்தினர்கள் ரம்மதுவையும் தேநீரையும் கலந்து பருகினார்கள் ; சுட்ட வெங்காயம்போல அது வாசம் அடித்தது. தாரைப்போல கருப்பாகவோ, பச்சையாகவோ தங்க நிறத்திலோ இருந்த, என் பாட்டி கொடுத்த மது வகைகளையும் அவர்கள் பருகினார்கள். பதம் செய்யப்பெற்ற 'வாரனைத்து' களையும் கசகசா விதைபோட்ட தேன் கேக்குகளையும் சாப்பிட்டார்கள். அவர்கள் பூரித்துப்போனார்கள் ; வியர்வை கொட்டியது; என் பாட்டியை அவர்கள் புகழ்ந்தார்கள். வயிறு புடைக்க உண்ட பின், குறிச்சிகளுக்குச் சென்று சாய்ந்து கொண்டார்கள். ஊதி, முகக்களையுடன் இருந்த அவர்கள் சோம்பல் வயப்பட்டு என் அம்மான் யாக்கோவைப் பார்த்து, இசை எழுப்பித் தங்களை மகிழ்விக்கும்படி வேண்டினார்கள்.

சித்தார்மீது குனிந்துகொண்டு, இசை மீட்டி, இனிமை குன்றிய குரலில் கீழ்வரும் பாடலை என் அம்மான் பாடினார் :

ஓகோ ! இயன்றவரை நாங்கள் நன்றாகத்தான் வாழ்ந்தோம்.
நன்மை சொற்பம் ; இரைச்சல் அதிகம்.
காசானிலிருந்து வந்-ந்-ந்த சீமாட்டி.
வேறு ஆடவனை நாடிப் போய்விட்டாள்.

இது, எனக்குச் சோகம் நிறைந்த பாடலாக இருந்தது.

"யாக்கோவ்! வேறு ஏதாவது பாடு; நல்ல ரகமான பாட்டாக இருக்கட்டும் ; மாட்ரியா ! அவர்கள் பாடின பாடல்கள் உனக்கு நினைவுஇருக்கிறதா?'' என்று என் பாட்டி சொன்னாள்.

" என் அன்பே ! இந்தக் காலத்தில் பாட்டுகளைப் புது முறைகளில் பாடுகிறார்கள்'' என்று தன் உடை தடபுடலாகச் சலசலக்கச் சலவைக்காரி சொன்னாள்.

ஏதோ தொலைவில் இருப்பதாகக் கருதிக்கொண்டு, தன் கண்களைப் பாதி மூடியவாறு, என் அம்மான் யாக்கோவ் என்

பாட்டியைக் கவனித்தார். பிறகு சோகம் கலந்த இசையில் ஆபாசமான வார்த்தைகளைக் கொட்டித் தான் பாடின பாடலைத் தொடர்ந்து பாடினார்.

தனது விரல்களால் சாடைகாட்டி, கெடியாரக்காரருடன் என் தாத்தா ஏதோ ரகசியம் பேசிக்கொண்டிருந்தார். கெடியாரக்காரர் தன் புருவத்தைச் சுளித்து, என் அன்னை இருந்த பக்கம் பார்த்துவிட்டுத் தலையை அசைத்தார். நீர் கசியும் அவருடைய முகம் முழுதும் நட்பமான ஒரு மாற்றம் ஏற்பட்டது.

வழக்கம்போல ஸெர்ஜீயீவ் குடும்பத்தாருடன் என் அன்னை உட்கார்ந்து இருந்தாள் ; இதமாகவும் பயபக்தியான குரலினும் வாஸிலியோடு பேசினாள்.

" உம். அதைப்பற்றி யோசிக்க வேண்டியதுதான் " என்று அவர் பெருமூச்சுவிட்டார்.

நன்றாகச் சாப்பிட்டவன் சிரிப்பதைப்போன்று விக்டர் சிரித்தார். கால்களைப் பின்னிக்கொண்டார். திடீரென மெல்லிய குரலில் " அந்திரே—அப்பா ! அந்திரே—அப்பா !" என்று பாடத் தொடங்கினார்.

பேசுவதை நிறுத்திக்கொண்டு எல்லோரும் அவரைக் கவனித்தார்கள்.

" நாடக மேடையில் அவன் கற்றுக்கொண்ட பாட்டு இது " என்று அவருடைய தாய் பெருமையுடன் விளக்கிச் சொன்னாள் ; " நாடக மேடைகளில் இதை அவர்கள் பாடுகிறார்கள் " என்றாள்.

நினைவைவிட்டு அகலாது வேதனை தந்த இத்தகைய மாலை நேர விருந்து இரண்டு மூன்று முறை நடந்தது. பொதுப் பிரார்த்தனைக்குச் சிறிது நேரத்துக்குப் பின்னர், ஒரு ஞாயிற்றுக்கிழமை யன்று நண்பகல் நேரத்தில், கெடியாரக்காரர் காட்சி அளித்தார். என் அன்னையினுடைய அறையிலிருந்துகொண்டு, பின்னல்களிலிருந்த பழைய மணிகளைப்

பிரித்தெடுப்பதற்கு நான் உதவிபுரிந்தேன். அப்போது திடீரெனக் கதவைத் திறந்துகொண்டு, பயந்த முகத்துடன் வந்து மிக்க ரகசியமாக "வார்வாரா! அவர் வந்துவிட்டார்!" என்று என் பாட்டி மெதுவாகச் சொன்னாள்.

என் தாய் அப்பால் இப்பால் அசைபவளாக இல்லை. ஒரு நிமிடம் கழித்து மீண்டும் கதவு திறந்தது. என் தாத்தா வந்து பயபக்தியுடன் "வார்வாரா! ஆடை அணிந்துகொண்டு புறப்படு" என்று சொன்னார்.

எழுந்து நிற்காமலும் அவரைப் பார்க்காமலும் "எங்கே போக?" என்று, அவரை என் அன்னை வினவினாள்.

"எழுந்து வா; ஆண்டவன் உன்னை ஆசீர்வதிப்பார். தர்க்கம் செய்யாமல் எழுந்து வா. நிலையான மனிதர் இவர். தொழில் தெரிந்தவர். அலெக்ஸிக்கு நல்ல தந்தையாக இருப்பார்......." என்று சொன்னார்.

வழக்கத்துக்கு மாறான முக்கியத்துவம் கொடுத்து என் தாத்தா பேசினார். தன் கைகளால் தொடைகளைத் தட்டிக் கொண்டு இருந்தார். முன் கைகளை நீட்டிக்கொள்ள விருப்பம் இருப்பதுபோல, முழங் கைகள் நடுங்கின. அவரோ அவற்றைப் பின்னுக்கு வைத்துக்கொள்ளப் பாடுபட்டார்.

"அது ஒருபோதும் நடவாது என்று நான் முன்பே சொல்லிவிட்டேனே" என்று என் அன்னை சாந்தமாகப் பதில் சொன்னாள்.

பொட்டையனைப்போல, தன் கைகளை முன்னே நீட்டிக் கொண்டு என் தாத்தா அவளிடம் வேகமாகச் சென்றார்.

"வந்துவிடு; இல்லாதுபோனால் கூந்தலைப் பற்றி, உன்னை நான் இழுத்துச் செல்ல நேரும்" என்று தன் உடம்பு முழுதும் புல்லரிக்க அவர் கடுகடுப்பாகச் சொன்னார்.

"இழுங்களேன் பார்க்கலாம்?" என்று சொல்லி என் தாய் எழுந்து நின்றாள். அவளுடைய முகம் வெளிறிவிட்டது;

அச்சுறுத்தும் அளவுக்கு அவளுடைய கண்கள் குறுகிப் போயின ; விரைவாகப் பாவாடையையும் ரவிக்கையையும் அவள் அவிழ்த்துப் போட்டாள். உள்ளாடையை மட்டும் அணிந்திருந்த அவள் என் தாத்தாவைப் பார்த்து “ இப் பொழுது இழுத்துச் செல்லுங்களேன் பார்க்கலாம்” என்று சொன்னாள்.

வாயைப் பிளந்து தன் பற்களைக் காட்டியவாறே தன் முஷ்டியை உயர்த்தி “ வார்வாரா ! உடைகளை எடுத்து அணிந்துகொள் ” என்றார் என் தாத்தா.

அவரை அப்பால் தள்ளிவிட்டுக் கதவு அருகே சென்று “ நல்லது. வருகிறதுதானே ?” என்று கூச்சல் போட்டாள் என் அன்னை.

“ நீ என்னைச் சேர்ந்தவள் அன்று ” என்று உறுமினார் என் தாத்தா.

“ அதற்கு நான் பயப்படவில்லை. நல்லது வந்து பாருங் களேன் ?”

அவள் கதவைத் திறந்தாள். ஆனால் அவரோ அவளு டைய பாவாடையின் ஓரத்தைப் பிடித்து இழுத்தார் ; அதனால் கீழே விழுந்துவிட்டார். “ ஏ வார்வாரா ! பெண் பிசாசே ! என்னை அவமதியாதே ! இதனால் உன் முடிவு அத னால் பயங்கரமாக இருக்கும். தாயே! தாயே !” என்று ஊளை யிட்டார் என் தாத்தா.

என் தாய் செல்லவிருந்த வழியை ஏற்கெனவே அடைத் துக்கொண்டு நின்ற என் பாட்டி, அறைக்குள் செல்லுமாறு கோழிக் குஞ்சை வேண்டுவதைப்போல, என் அன்னையை உள்ளே போகுமாறு வேண்டினாள்.

“ வார்கா ! நீ ஒரு முட்டாள் ; ஏ வெட்கம் கெட்ட மூதி ! உள்ளே போ ” என்று முணுமுணுத்தாள்.

அறைக்குள் என் அன்னை திரும்பச் சென்றதும் கொக்கியை எடுத்து மாட்டிவிட்டு, என் தாத்தா பக்கம் திரும்பினுள். ஒரு கையால் அவரைத் தரையிலிருந்து தூக்கிவிட்டுக் கொண்டே, பயமுறுத்தும் பாவனையில் மற்றொரு கையை அவரை நோக்கி நீட்டியவாறே “ ஓகோ கிழட்டுப் பிசாசே! அறிவற்ற மிருகமே!” என்று ஏசினுள்.

துணிப் பொம்மையைப் படுக்க வைப்பதைப்போன்று, அவரை அவள் படுக்கைமீது படுக்கவைத்தாள். தலை சரிந்தவாறு வாயை அகலப் பிளந்துகொண்டு அவர் கிடந்தார்.

“ ஆடைகளை எடுத்து அணிந்துகொள் ” என்று என் அன்னையைப் பார்த்து இரைந்தாள் என் பாட்டி.

“ நான் அவனோடு போய் இருக்க மாட்டேன் தெரிகிறதா?” என்று சொல்லிக்கொண்டே ஆடைகளை என் அன்னை எடுத்தாள்.

“ விரைந்து சென்று ஒரு போகணியில் தண்ணீர் கொண்டுவா ” என்று சொல்லி, படுக்கையிலிருந்த என்னை என் பாட்டி தள்ளினுள்.

மெதுவாகவும் அமைதியாகவும் அதிகாரதோரணையிலும் அவள் பேசினுள். நான் நுழைவாயிலுக்கு ஓடினேன். எதிரே இருந்த அறையில் யாரோ மெதுவாக நடந்துகொண்டிருப்பது என் காதில் விழுந்தது.

“ நாளை நான் போய்விடப் போகிறேன் ” என்று என் தாய் கூறியது என் காதில் விழுந்தது.

அடுக்களைக்குள் சென்று ஜன்னல் அருகே கனவு காண்பவன்போல் உட்கார்ந்துகொண்டேன்.

என் தாத்தா சிணுசிணுத்து முணகினுர். என் பாட்டி மூச்சுவிட முடியாமல் முணகினுள்; ஒரு கதவு தடால் என்று சாத்தப்பெற்றது; யாவும் பயங்கரமாயும் அமைதியாயும் இருந்தன. எனக்கு இட்ட பணியைத் திடீரென நினைத்துக்

கொண்டு, ஒரு போகணியில் கொஞ்சம் தண்ணீரை மொண்டு கொண்டு நுழைவாயிலின் வழியாக உள்ளே நுழைந்தேன். வீட்டின் முன்பு, தன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு முகவாட்டத்துடன் கெடியாரக்காரர் தோன்றினர் ; தன் கம்பளித் தொப்பியைத் தட்டிக்கொண்டும் விகாரமாக இரைந்துகொண்டும் அவர் வந்தார். அவரைப் பின்தொடர்ந்து என் பாட்டியும் வந்தாள் ; தன் வயிற்றுக்கு நேரே கைகளைக் கோத்துக்கொண்டு வந்த அவள், குனிந்து மரியாதையாக, "உங்களுக்குத் தெரியாத விஷயம் அன்று; பிரியம் கொள்ளு மாறு ஒருவரைப் பலவந்தப்படுத்துவது கூடாது அல்லவா ?" என்று சொன்னள்.

கதவு வழியாகத் தட்டுத் தடுமாறிக்கொண்டு, வெளியே முற்றத்துக்குப் போய்ச் சேர்ந்தார். உடம்பு முழுதும் நடுங்க என் பாட்டி சிலுவை அடையாளம் வரைந்துகொண்டு அங்கே நின்றாள். அவள் அழுகிறாளா அல்லது சிரிக்கிறாளா என்பதை என்னல் பாகுபடுத்தித் தெரிந்துகொள்ள முடியவில்லை.

அவள் அருகே ஓடி "என்ன சமாச்சாரம் ?" என்று அவளை நான் கேட்டேன்.

போகணியை என் கையிலிருந்து பிடுங்கி, என் கால் களில் தண்ணீரை ஊற்றிவிட்டு "இந்தத் தண்ணீரை கொணர் வதற்கு எவ்வளவு தூரம் நீ சென்றாய் ? கதவைச் சாத்து" என்று இரைந்தாள்.

என் அன்னையின் அறைக்கு நான் திரும்பினேன். பிறகு அடுக்களைக்குள் நுழைந்தேன். தள்ளமுடியாத பாரம் ஒன் றைத் தங்கள் பலம் கொண்ட மட்டும் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்துக்குத் தள்ளுவதைப் போன்று, அங்கே யிருந்து முக்குவதும் முணகுவதும் மூச்சுவிடுவதும் என் காதில் விழுந்தன.

அன்றைய தினம் நேர்த்தியாக இருந்தது. இரண்டு ஜன்னல்களின் பனி படிந்த கதவுகளைக் கடந்து, குளிர்காலத்துச் சூரியனின் நீண்ட கிரணங்கள் வந்துகொண்டு இருந்தன. மத்தியானச் சாப்பாடு மேஜைமீது வைக்கப்பட்டு இருந்தது. வெள்ளியப் பாத்திரங்களும், தங்கநிறக் குவாஸ் மதுவும் தாத்தாவின் வோட்கா மதுவும் அதன்மீது இருந்தன. பசுமையான 'வொர்ட்' கீரையும் 'கௌஸ்லிப்' கீரையும் சுவையை அதிகரிக்கச் செய்தன; பனிப்படலம் கரைந்துபோன ஜன்னல் கதவின் வட்டத்தின் ஊடே, முகடுகளிலும் பறவைக் கூண்டுகளிலும் வேலிக் கம்பங்களிலும் நுனிகளிலும் வெண்பனி, வெள்ளி மகுடம்போல் பளபளப்பதை என்னால் காண முடிந்தது. ஜன்னல் விட்டங்களில் வெயில்படத் தொங்கின கூண்டுகளில், நான் பிடித்த பறவைகள் விளையாடின. பழகிப்போன சாப்பிங்குகள் உற்சாகமாகக் கூவின; புல் பிங்குகள் உரையாடின; தங்கப் பிங்குகள் அருமையாக ஒரு பாட்டைப் பாடின. இந்த நாளின் வெள்ளிமயமான பிரகாசமும் இசையும் எனக்கு மகிழ்ச்சியை உண்டாக்கவில்லை. இந்த நாள் வராதிருந்திருந்தால் பாதகமில்லை என்று தோன்றியது; யாவுமே அப்படித் தோன்றின. பறவைகளை வெளியே விட்டு விடலாம் என்ற எண்ணத்துடன், கூண்டுகளை நான் கீழே இறக்கியபோது, அடுக்களைக்குள் ஒரு சலசலப்பு உண்டாயிற்று; தன் தொடைகளில் அடித்துக் கதறிக்கொண்டு, என் பாட்டி படுக்கை அறை அருகே ஓடினாள். "நீங்கள் எல்லாரும் நாசமாய்ப் போக! உங்களைப் பேய் பிடித்துக் கொள்ள! அக்குலீனா! எவ்வளவு கிழட்டு முட்டாளாய் இருக்கிறாய் நீ!" என்று இரைந்தாள்.

அடுப்பைவிட்டு, பிரோக் ரொட்டியை எடுத்தாள்; தீய்ந்துபோன துண்டங்களைத் தன் விரல்களால் தட்டினாள்; கோபத்தால் மனம் கொதித்துத் துப்பினாள்.

“ சாம்பலாய் எரிந்துபோச்சு ! நீங்களோ சௌகரிய மாகக் குந்தி இருக்கிறீர்கள் ! பூ ! நீங்கள் எல்லாரும் பேய்க் கூட்டம்தான் ! துண்டம் துண்டமாக்கப்பட்டு நீங்கள் நீரில் மிதந்து தொலையுங்கள் ! ஆந்தைகளே ! அங்கே உட்கார்ந்து இப்படி என்ன கொக்கரிப்பு ! உடைந்த ஜாடிகளை நொறுக்கி எறிவதைப்போன்று, உங்களைப் பொடிப்பொடியாக ஆக்கினால் தான் என் ஆத்திரம் அடங்கும்” என்றாள்.

பிரோக் ரொட்டியை ஒரு புறத்திலிருந்து மறுபுறம் திருப்பி, அதிலுள்ள காய்ந்த துகள்களைத் தட்டியவாறு அழு தாள்; கண்ணீரை மளமளவென உகுத்து, அதை நனைத்தாள்.

என் அன்னையும் தாத்தாவும் அடுக்களைக்குள் வந்தார் கள்; மேஜைமீது இருந்த உடைசல்களை அவள் சரிப்படுத்திய போது, அதன்மீது இருந்த பாத்திரங்கள் சலசலத்தன.

“ உன்னால் என்னநேர்ந்துவிட்டது என்பதை நீயே பார். பிசாசு உன்னைப் பிடித்துக்கொள்ள !” என்றாள் என் பாட்டி.

சாந்தமும் மகிழ்ச்சியும்கொண்ட மனநிலையில் இருந்த என் அன்னை அவளைத் தழுவிக்கொண்டாள் ; அதை மறந்து விடும்படியாகச் செல்லமாகத் தடவிக் கொடுத்தாள். முகம் வாடியும் சோர்ந்தும் போய் இருந்த என் தாத்தா மேஜை அருகே சென்று அமர்ந்தார். கழுத்தைச் சுற்றித் தன் கைக் குட்டையைக் கட்டிக்கொண்டார். வீங்கிப்போயிருந்த தன் கண்களால் சூரியனை ஒருக்கணித்துப் பார்த்தார்.

“ சரி சரி. அதை மறந்துவிடுங்கள் ! பிரோக்கை நாம் முன்பே ருசி பார்த்துவிட்டோம். ஆண்டவன் சிறிது கருமி யாய் இருக்கிறார் ; வருடத்தை நிமிடமாக்கிவிடுகிறார். வட்டி யில் அவருக்கு நம்பிக்கை இல்லை. வாரியா ! உட்கார். அதை மறந்துவிடு ” என்று முணுமுணுத்தார்.

அவர் மனத்தை இது எப்படியோ தொட்டு இருக்கிறது என்பது தெரியவந்தது. சாப்பாடு நடந்த நேரம் முழுதும் கடவுளைப்பற்றியும் பக்தியற்ற ஆஹாரப்பைப்பற்றியும் தந்தையாக இருப்பதில் எவ்வளவு சங்கடங்களும் தொல்லைகளும் இருக்கின்றன என்பது பற்றியும் பேசிக்கொண்டே இருந்தார்.

"பேசுவதை நிறுத்திக்கொண்டு சாப்பிடுங்கள். அதிகமான பேச்சு வேண்டாம்" என்று என் பாட்டி இடைமறித்துக் கோபமாகச் சொன்னாள்.

அப்பழுக்கற்ற தனது கண்கள் பிரகாசிக்க என் தாய் சிரித்தாள்.

என்னை ஒரு இடி இடித்துக்கொண்டே "கொஞ்ச நேரத்திற்கு முன்னர் நீ பயந்துபோய்விட்டாயா?" என்று கேட்டாள்.

அதிகமாக நான் பயந்துவிடவில்லையெனினும், என்ன நடந்தது என்பதைப் புரிந்துகொள்ள முடியாமல் என் மனம் இப்பொழுது சிறிது வேதனைப்பட்டது.

ஞாயிற்றுக்கிழமைகளில் சாப்பிடுகிற வழக்கப்படி, நீண்ட நேரம் அமர்ந்து அவர்கள் நிரம்பச் சாப்பிட்டார்கள். கோபத்தால் கொதித்து, ஒருவரை ஒருவர் ஏசிக்கொண்டு, அடிதடிகளில் இறங்கும் அளவுக்கு இரைச்சலிட்டுப் பொறுமின அதே ஜனங்கள்தானா இவர்கள் என்பதை நம்புவது சிரமமாய் இருந்தது. பிரதானமாகக் கருதியோ அல்லது ஏதாவது முயற்சி எடுத்துக்கொண்டேதான் இதை எல்லாம் இவர்கள் மேற்கொள்கிறார்கள் என்பதும் என்னால் நம்ப முடியாமல் இருந்தது. இவர்களுடைய கூச்சலும் அழுகையும் நடிப்புகளும் அடிக்கடி திடீரென நெருப்புப்போல் பற்றி எரிவதும் பிறகு அதேபோல் விரைவாகவே அவிந்து மடிந்து போவதும் எனக்குப் பழக்கப்பட்ட விஷயங்கள் ஆகிவிட்

டன. முதலில் இது என் இதயத்தை உறுத்தியதுபோல, பின்னர் அவ்வளவாக என்னை இது உறுத்தவில்லை.

உற்சாகக் குறைவின் காரணமாகவும் வறுமையின் காரணமாகவும் ஏற்படுகிற கவலையை மறக்க ருஷ்யர்கள் குழந்தைகள்போல விளையாட்டை மேற்கொண்டார்கள் என்றும் தங்களுக்கு இருக்கும் அதிர்ஷ்டக் குறைவுகளைப்பற்றி அவர்கள் அபூர்வமாகத்தான் நினைத்தார்கள், உணர்ந்தார்கள், என்றும் வெகு காலத்துக்குப் பின்னர் நான் தெரிந்து கொண்டேன்.

வாழ்க்கை ஒரே தடத்தில் சுவையற்றதாகச் சென்று கொண்டிருக்குமாயின், நெருப்பு எரிவது ஒரு விளையாட்டாகவும் கவலை என்பது வரவேற்கத்தக்க நிகழ்ச்சியாகவும் ஆகி விடுகிறது.

வெறுமனே இருக்கிற முகத்தில் பரு இருப்பதுகூட ஒரு அலங்காரம்தான்.

## 11

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு என் தாய் பலசாலியாய், நிமிர்ந்தவளாய், குடும்பத்துக்குத் தலைவியாக ஆகிவிட்டாள். என் தாத்தாவோ தன் குணத்தை முன்போல் காட்டாமல் சாந்தமானவராகவும் தலையிடாதவராகவும் ஆகிவிட்டார்.

ஏறக்குறைய ஒருபோதும் அவர் வீட்டை விட்டு வெளியே போகவில்லை ; தனியாக மாடி அறையில் அமர்ந்து, என் தந்தையார் எழுதிய குறிப்புகள் என்ற மர்மங்கள் நிறைந்ததான புத்தகம் ஒன்றைப் படித்துக்கொண்டிருப்பார். இந்தப் புத்தகத்தை உறுதியான பெட்டி ஒன்றில் வைத்துப் பூட்டிச் சாவியை வைத்துக்கொள்வார். இந்தப் புத்தகத்தை எடுப்பதற்கு முன்னர் பெரும்பாலும் தன் கைகளைச் சுத்தம்

செய்துகொண்டுதான் எடுக்கிறார் என்பதை நான் அடிக்கடி கவனித்து இருக்கிறேன். அந்தப் புத்தகம் சிறிதாயும் கன மானதாயும் பதன்செய்த தோலில் பைண்டு செய்யப்பட்ட தாயும் இருந்தது. பெயர் பொறிக்கும் நீலநிறப் பக்கத்தில், மங்கிய மையில் கீழ்வரும் வாசகம் அடிக்கப்பட்டு இருந்தது:

"கண்ணியம் வாய்ந்த வாஸிலி காஷ்ரீன் அவர்களுக்கு; அன்புகலந்த மரியாதையுடனும் நன்றியுடனும்" என்று.

நூதனமான ஒரு பெயரால் அதில் கையெழுத்து இடப் பட்டு இருந்தது; முடிவில் பறவை பறப்பதுபோன்ற படம் ஒன்று போடப்பட்டு அலங்கரிக்கப்பட்டு இருந்தது. கனத்த தோல் போட்ட அட்டையைக் கவனமாகத் திறப்பார்; வெள்ளி விளிம்புகள் உள்ள தனது மூக்குக் கண்ணாடியை மாட்டிக் கொண்டு, இந்த வாசகத்தை நீண்ட நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பார்; மூக்கைச் சுளித்துத் தனது மூக்குக் கண் ணாடிகளைச் சரிப்படுத்திக்கொள்வார். "இது என்ன புத்தகம்?" என்று அவரை நான் பல முறை கேட்டேன்; அதற்கு அவர் சுருக்கமாகச் சொன்ன பதிலாவது:

"அது என்ன புத்தகம் என்பது உனக்குத் தெரிய வேண்டியது இல்லை. கொஞ்சம் பொறு; நான் இறந்த பின்னர் இது உனக்குக் கிடைக்கும்படி செய்கிறேன்; எனது ராக்கூன் கோட்டையும் தரச் செய்கிறேன்."

என் அன்னையுடன் குறைவாகவும் ஆனால் அதிக மரியாதையுடனும் பேசத் தொடங்கினார். அவள் பேசுவதை எல்லாம் கவனத்துடன் அவர் கேட்டார். சாடைகளையும் முணகுவதையும் குறைத்துக்கொண்டார். மாமா பீட்டரைப் போலக் கண்களை மட்டும் சிமிட்டிச் சிமிட்டி விழித்தார்.

அவருடைய உடுப்புப் பெட்டிகள் நிறைய அசாதாரண மான உடைகள் அனேகம் இருந்தன: பூப்போட்ட அங்கி கள், மினுக்குப்பட்டு இடைக்கோட்டுகள், ஜரிகை உடுப்புகள்,

*சராபானி, கிகி, முத்துப் பதித்து அழகு செய்யப்பட்ட கோகோஷ்னிகி பிரகாசமான கைக்குட்டைகள், துண்டுகள், கனத்த மொர்தோவியக் கழுத்து மாலைகள், பலநிறக் கற்களைக்கொண்ட மாலைகள் ஆகியன இருந்தன. இவற்றை எல்லாம் என் தாயின் அறைக்கு எடுத்துவந்து, மேஜைமீதும் நாற்காலிகளிலும் பரப்பி வைத்தார். இந்த ஆடை ஆபரணங்களை எல்லாம் பார்த்து என் அன்னை வியந்து நின்றபோது, என் தாத்தா அவளைப் பார்த்து "என் காலத்தில் இப்பொழுது அணிந்துகொள்வதைக் காட்டிலும் ஆடம்பரமாகவும் நேர்த்தியாகவும் ஆடைகள் அணிந்துகொண்டார்கள். ஆடைகள் ஆடம்பரமாக இருப்பினும், ஜனங்கள் எளிமையாகவும் அதிக நட்புரிமையுடனும் வாழ்ந்தார்கள்! இனி அந்த நிலை திரும்பாது என்று தோன்றுகிறது. இவற்றை நீ அணிந்துகொண்டு பார்" என்று சொன்னார்.

ஒரு நாள் என் அன்னை அடுத்த அறைக்குச் சென்று, கருப்பு—நீலநிறச் சராபானியையும் முத்துப்பதித்த தலை உடுப்பையும் அணிந்துகொண்டு திரும்பினாள். வந்தவள் என் தாத்தாவைத் தாழ்ந்து மரியாதை செய்து "தங்கள் திருவுளத்துக்கு இது பிடிக்கிறதா?" என்று கேட்டாள்.

தன் உடம்பு எல்லாம் மகிழ்ச்சியால் பூரிக்க என் தாத்தா நெடியதொரு மூச்சுவிட்டார். கைகளை அசைத்து என் தாயைச் சுற்றிச் சுற்றி வந்தார். ஏதோ கனவு கண்டவர் போல, தெளிவற்ற முறையில் முணுமுணுத்தார் :

"வார்வாரா! நான் பணக்காரனாய் இருந்து, நம்மைச் சுற்றிச் சிறந்தவர்கள் இருப்பார்களாயின்" என்றார்.

வீட்டின் முன்பு இரண்டு அறைகளை என் அன்னை வாசஸ்தலமாக எடுத்துக்கொண்டு, அடிக்கடி விருந்தினர்களை

---

*சராபானி : கையில்லாத நீண்ட அங்கி; கிகி என்பதும் கோகோஷ்னிகி என்பதும் தலையில் அணிந்துகொள்ளும் உடைகள் ஆகும்.

உபசரித்தாள். மாக்ஸிமோவ் சகோதரர்கள்தான் அடிக்கடி வந்தவர்கள். பீட்டர், பெரிய, அழகான அதிகாரி. அழகிய பெரிய தாடியும்நீலக் கண்களும் இவருக்கு இருந்தன. முதிய கனவான் ஒருவர் தலையில் நான் துப்பிய காலத்தில், என்னை என் தாத்தா அடித்த சமயம் இருந்தவரைப் போலவே இவரும் இருந்தார் ; மற்றொருவர் யெவ்ஜீனி. இவரும் உயரமாய் இருந்தார் ; ஆனால் வெளிறிப் போயிருந்த இவருக்குக் கால்கள் நீளமாய் இருந்தன ; கறுப்பு நிறமுள்ள சிறிய தாடி நீட்டிக்கொண்டு இருந்தது. 'ஸ்லோ' பழங்கள் போன்ற கண்கள் அவருக்கு இருந்தன. எப்பொழுதுமே பச்சை நிறத்தாலான தங்கப் பொத்தான்களுள்ள யூனிபாரமையே இவர் அணிந்து இருந்தார். ஒடுங்கிய அவருடைய தோள்ப் பட்டைகளில் - பதவிச் சின்னம் இருந்தது. தனது உயர்ந்த நெற்றிமீது வந்துவிழும் அலைபோன்ற தனது கேசத்தை பின்புறமாகத் தள்ளிவிட்டுக்கொண்டே, இரக்கபுத்தியோடு சிரிப்பார். தனது கரகரப்பான குரலில் ஏதாவது ஒன்றை அவர் சொல்லிக்கொண்டே இருப்பார். எதைச் சொல்லவந்தாலும் "நீங்கள் பாருங்கள். நான் இதை எப்படிப் பார்க்கிறேன் என்றால்" என்ற வார்த்தைகளைச் சொல்லாமல் அவரால் எதையும் சொல்ல முடிவது இல்லை.

தன் கண்களைப் பாதி மூடிக்கொண்டு, இவர் கூறுவதை, என் தாய் உற்றுக்கேட்பாள் ; அடிக்கடி ஒரு சிரிப்புச் சிரித்துவிட்டு "நீங்கள் இன்னும் குழந்தையாகவே இருக்கிறீர்கள் ; யெவ்ஜீனி வாஸிலியேவிட்ச் ! இவ்வாறு நான் சொல்வதற்கு என்னை மன்னியுங்கள்" என்று இடைமறித்துச் சொல்வாள்.

"சரிதான்-குழந்தையேதான்!" என்று ஒப்புக்கொண்டு, அழுத்திச் சொல்வதற்கு அறிகுறியாகத் தன் முழங்காலில் அந்தப் பெரிய அதிகாரி தட்டிக்கொள்வார்.

கிறிஸ்மஸ் விடுமுறை நாட்கள் மிக்க குதூகலத்துடன் கழிந்தன. நாள்தோறும் தவறாமல் மாலையில் என் தாயாரும் அவருடைய நண்பர்களும் நூதனமான சிறந்த உடுப்புக்களை எடுத்து அணிந்துகொண்டு, மற்றவர்களைச் சந்திப்பதற்காகச் செல்வார்கள். எப்பொழுதுமே என் தாய் அணிந்து செல்லும் ஆடைதான் மிகச் சிறந்த ஆடையாக இருக்கும்.

உற்சாகமுள்ள இந்தக் கூட்டம் வீட்டைவிட்டுக் கிளம்பும்போதெல்லாம், தரைக்குள் பதிந்துவிட்டது போல, வீடு சோபை இழந்து கிடக்கும். அறை ஒவ்வொன்றிலும் பயங்கரமான அமைதியும் மந்தமும் குடிகொண்டு இருக்கும். கிழட்டு வாத்தைப் போலச் சுற்றிச் சுற்றி அறைகளை எல்லாம் என் பாட்டி சுத்தம் செய்வாள். என் தாத்தாவோ ஓட்டு அடுப்புக்கு அருகே நின்று தன் முதுகுக்குச் சூடேற்றிக்கொள்வார்.

"நல்லது. அவள் இஷ்டம் போலவே நடந்துகொண்டு போகட்டும்" என்று தனக்குத் தானே முணுமுணுத்துக் கொள்வார். "அதனால் ஏற்படும் பலாபலன்களைப் பொறுத்திருந்து பார்க்கலாம்..."

கிறிஸ்மஸ் விடுமுறைகளுக்குப் பிறகு, அம்மான் மைக்கேல் மகன் ஷாஷாவையும் என்னையும் என் அன்னை பள்ளிக் கூடத்துக்கு அழைத்துப் போனாள். ஷாஷாவின் தந்தை இரண்டாம் கலியாணம் செய்துகொண்டார். கலியாணம் செய்துகொண்ட உடனேயே அவனுடைய மாற்றாந் தாய் அவன்மீது பிரியமாக இருக்கவில்லை; பிரியக் குறைவாக நடந்துகொண்டாள். அடிக்கடி அவனை அவள் அடித்துவந்தபடியால், எங்களுடன் சேர்ந்து வாழ்வதற்கு எற்பாடுசெய்ய வேண்டும் என்று என் தாத்தாவிடம் பாட்டி வற்புறுத்தி வந்தாள். ஏறக்குறைய ஒரு மாதம் நாங்கள் பள்ளிக்கூடம் சென்று வந்தோம். அப்பொழுது எனக்குக் கற்றுத்தந்த பாடங்களில் ஒரு விஷயம் மட்டும்தான் என் நினைவில் இருக்

கிறது; பெயர் என்ன என்று கேட்கும்போது, "பெஷ்காவ்" என்று சொன்னால் மட்டும் அது போதிய பதில் ஆகாது. "என் பெயர் பெஷ்காவ்" என்று நீளமாகச் சொல்ல வேண்டும்.

வாத்தியாரைப் பார்த்து "மிஸ்டர்! என்னைப் பார்த்து இப்படி இரையாதீர்கள்; நான் உங்களுக்குப் பயப்பட மாட்டேன்" என்று சொல்லவும் கூடாது.

விரைவிலேயே அந்தப் பள்ளிக்கூடத்தை எனக்குப் பிடிக்கவில்லை. ஆனால் என் அம்மான் மகனோ, இதற்கு மாறாக அந்தப் பள்ளிக்கூடத்தின்மீது ஆரம்பத்திலேயே பிரியம் கொண்டான். அனேகரைச் சிநேகமும் பிடித்தான். ஆனால் ஒரு நாள் பாடம் படித்துக்கொண்டு இருக்கும்பொழுதே அவன் தூங்கிவிழுந்து, "நான் அப்படிச் செய்ய மாட்டேன்" என்று தூக்க மயக்கத்திலேயே கத்தினான்.

கண்விழித்ததும் வகுப்பைவிட்டு வெளியே செல்லவேண்டும் என்று அனுமதி கேட்டான். இதற்காக மற்றப் பையன்கள் எல்லாரும் இரக்கம் இன்றி அவனைக் கேலி செய்தார்கள். அடுத்த நாள் பள்ளிக்கூடத்துக்குச் செல்லும் வழியில் இருந்து சென்னயா சதுக்கத்தைக் கடந்ததும் ஒரு சந்தில் நின்றுகொண்டு, "நான் பள்ளிக்கூடத்துக்கு வரவில்லை. நீ மட்டும் போ. நான் உலவச் செல்கிறேன்" என்று சொன்னான்.

சப்பணம்போட்டு உட்கார்ந்து, புத்தகங்களைப் பனியில் புதைத்துவிட்டான். உலகமுழுதும் சூரிய ஒளிபாவி, தகதகக்கும் ஜனவரி நாள் அது. என் அம்மான் சேயைப் பார்த்து நான் பொறாமைப்பட்டேன். ஆனால் தாய்க்காகப் பயந்து பல்லைக் கடித்துக்கொண்டு நான் பள்ளிக்கூடத்துக்குச் சென்றேன். ஷாஷா பனிக்கட்டியில் புதைத்த புத்தகங்கள் உண்மையில் திருடப்பட்ட புத்தகங்கள் ஆகும். அதனால்தான் மறுதினம் பள்ளிக்கூடத்துக்கு வராமல் அவன் நின்றுகொண்

டான். இந்தக் கள்ளத்தனத்தை மூன்றும் நாள் என் தாத்தா கண்டுபிடித்துவிட்டார்.

அடுக்களேக்குப் பின்னேயிருந்த மேஜையில் அமர்ந்து கொண்டு என் தாத்தாவும் பாட்டியும் எங்கள் இருவரையும் விசாரணே போட்டார்கள். என் அன்னே குறுக்கு விசாரணே போட்டாள். என் தாத்தா போட்ட கேள்விகளுக்கு வேடிக்கையாக ஷாஷா சொல்லிய பதில் எனக்கு இன்னும் நினேவு இருக்கிறது :

" பள்ளிக்கூடத்துக்கு நீ ஒருபோதுமே செல்வதாகத் தெரியவில்லேயே! ஏன் ?"

" அது இருக்கிற இடம் எனக்கு மறந்து போயிற்று " என்று சொல்லிவிட்டு, மந்தமான தன் கண்களால் என் தாத்தாவை அவன் நேரடியாகக் கவனித்தான்.

" மறந்து போய்விட்டதா ?"

" ஆம். அது இருக்கும் இடம் தெரியவில்லே. தேடிப் பார்த்தும் தெரியவில்லே."

" அலெக்ஸிகூட நீ போவதுதானே. அவனுக்கு வழி தெரியுமே "

" அவனே என்னுல் கண்டுபிடிக்க முடியவில்லே."

" அலெக்ஸியையா ?"

" ஆம்."

" ஏன் கண்டுபிடிக்க முடியவில்லே ?"

சிறிது நேரம் யோசித்துவிட்டு, பெருமூச்சு விட்டவாறே ஷாஷா சொன்னுன் :

" ஒரே மூடுபனி ; எதையும் என்னுல் பார்க்க முடியவில்லே."

இதைக் கேட்டதும் எல்லாரும் சிரித்துவிட்டார்கள். ஏனெனில் காலேநிலே தெளிவாகவும் பிரகாசமாகவும் இருந்தது. ஷாஷாவும் லேசாகச் சிரித்துவிட்டான். தன் பற்கள்

எல்லாம் வெளியே தெரிய ஏளனமாக, என் தாத்தா அவனைப் பார்த்துச் சொன்னார் :

"நீ அவன் கையையோ அல்லது இடை வாரையே பிடித்துக்கொண்டு போயிருக்கக் கூடாதோ ?" என்று கேட்டார்.

" நான் பிடித்துக்கொண்டுதான் போனேன் ; ஆனால் காற்று என்னைப் பறித்துவிட்டது."

நம்பிக்கை யிழந்து அவன் மெதுவாகப் பேசினான். உபயோகமற்ற அறுவறுப்பான இந்தப் பொய்யை என்னால் கேட்டுக்கொண்டு இருக்க முடியவில்லை; அவன் இப்படிப் பிடிவாதம் செய்வதன் நோக்கமும் எனக்கு விளங்கவில்லை.

எங்களுக்கு அடி கிடைத்தது. எங்களைப் பள்ளிக்கூடத்துக்கு அழைத்துப் போவதற்கு என, ஓய்வுபெற்ற கிழட்டு நெருப்புத்-தள்ளி ஒருவரைக் கூலிக்கு அமர்த்தி இருந்தார்கள். அவருக்கு ஒரு கை ஊனமாய் வளைந்துபோய் இருந்தது. அறிவுதரும் பள்ளிக்கூடத்துக்குச் செல்லாமல் ஷாஷா சுற்றி யலையாதபடி பார்த்துக்கொள்வது அவருடைய வேலை. ஆனால் இது எல்லாம் வீண் வேலையாகத்தான் போயிற்று. அடுத்த நாள் நாங்கள் நீர் வடிகாலை அடைந்ததும், என் அம்மான் சேய் தன் ஒரு காலிலிருந்த தோல் பூட்ஸைக் கழற்றி வலது பக்கம் வீசினான் ; மற்றொரு காலில் இருந்ததைக் கழற்றி இடது பக்கம் வீசி எறிந்தான். பிறகு காலுறை போட்ட கால்களுடனே, சதுக்கத்தின் குறுக்கே ஓடினான். பெருமூச்சு விட்டுவிட்டு, கிழவன் பூட்ஸ்களைத் தேடிப் போனார். அவற்றை எடுத்துக்கொண்டு திரும்பிய அவர், அதிக அதிர்ச்சியுடன் வீட்டுக்கு என்னை அழைத்துப்போனார்.

ஓடிப்போன என் அம்மான் மகனைத் தேடி அன்று பகல் முழுதும் என் பாட்டியும் தாயும் நகர் முழுதும் அலைந்தார்கள். சிர்கோவின் கண்ணாடிக் கடைக்கு அருகே இருந்த மடத்துக்குப் பக்கத்தில் அன்று மாலை அவனைக் கண்டுபிடித்

தார்கள். நாட்டிய மாடி, பொது ஜனங்களுக்கு அவன் வேடிக்கை காட்டிக்கொண்டு இருந்தான். அவனை வீட்டுக்குக் கூட்டிவந்து சேர்ந்தார்கள். பிடிவாதமாக அவன் மௌனம் சாதித்த காரணத்தால், ஆத்திரமடைந்திருந்த அவர்கள், ஒரு அடிகூட வைக்காமல் அவனைச் சும்மா விட்டுவிட்டார்கள். எனக்குப் பக்கத்தில் படுக்கையில் அவன் படுத்துக்கிடந்தான்; தன் கால்களை உதறிக்கொண்டே அவன் அமைதியாக என்னைப் பார்த்து, "என் சிற்றன்னைக்கு என்னிடம் பிரியம் இல்லை; என் தகப்பனாருக்கும் என்னிடம் பிரியம் இல்லை; என் தாத்தாவுக்கும் பிரியம் இல்லை. அப்படி இருக்கும்போது அவர்களுடன் சேர்ந்து வாழ்வது எப்படி? கள்ளர்கள் வசிக்கும் இடத்தைப் பாட்டியிடம் இருந்து தெரிந்துகொண்டு நான் அவர்களிடம் போய்விடப் போகிறேன். இதற்காக, பின்னர் நீ கவலைப்படக் கூடும்! இருவருமே சேர்ந்து போய்விடுவோம் வருகிறாயா?" என்று கேட்டான்.

அவனுடன் சேர்ந்து ஓடிப் போக நான் பிரியப்படவில்லை; அந்தச் சமயம் வாழ்க்கையில் வேறு ஒரு இலட்சியத்தை—அடர்ந்த தாடியுள்ள பெரிய அதிகாரியாக ஆக வேண்டும் என்ற லட்சியத்தை—நான் கொண்டிருந்த காரணத்தால் படிப்பது அவசியம் ஆயிற்று. என்னுடைய இந்த இலட்சியத்தை என் அம்மான் சேய்க்கு நான் சொன்னதும், ஒரு நிமிடம் யோஜித்துவிட்டு, தன் சம்மதத்தை அவன் தெரிவித்தான்:

"இது நல்ல காரியம்தான். நீ அதிகாரியாக வரும் காலத்தில் நான் திருடர்களுக்குத் தலைவன் ஆகிவிடுவேன். நீ வந்து என்னைப் பிடிக்க வேண்டியது இருக்கும். நம்மில் ஒருவரை ஒருவர் கொல்ல நேரும்; இல்லையேல் கைதியாக நேரும். எதற்காகவும் உன்னை நான் கொல்லப்போவது இல்லை."

"நானும் உன்னைக் கொல்ல மாட்டேன்."

இத்துடன் இந்த விவாதத்தை நாங்கள் முடித்துக் கொள்ள நேர்ந்தது.

எங்கள் பாட்டி உள்ளே வந்து, படுக்கைமீது அமர்ந்து, எங்களுடன் பேசத் தொடங்கினுள்:

"நல்லது. சிறிய சுண்டெலிகளே! அநாதைச் சிறுவர்களே! இளம் கன்றுகளே!" என்ருள்.

எங்கள்மீது இருந்த ஆழ்ந்த அனுதாபத்தின் காரணமாக, ஷாஷாவின் சிற்றன்னையை அவள் இகழ்ந்து உரைக்கத் தொடங்கினுள்; மாமி நடேஷ்தா கொழுத்துத் தடித்து இருந்தாள்; சத்திர அதிகாரி ஒருவருடைய புதல்வி இவள். இதிலிருந்தபடியே சகல மாற்ருந் தாய்களையும் மாற்ருந் தந்தையர்களையும் என் பாட்டி இகழ்ந்து உரைக்கத் தலைப்பட்டாள். இதுபற்றி எங்களுக்கு அவள் ஒரு கதை சொல்லத் தொடங்கினுள்; தான் சிறுவனுக இருக்கும்போதே முனிவர் ஐயோன் என்பவர், தன் சிற்றன்னையை, எப்படி ஆண்டவன் சந்நிதானத்தில் நீதி வழங்கும்படியாக நிறுத்தினுர் என்பதைச் சொன்னுள். அவருடைய தந்தை பிலாய் ஏரியில் செம்படவனுக இருந்தவர்.

குறும்புக்கார மனைவி செய்த அவமானம் இது;
மதுவைக்கொடுத்து அவனுக்குப் போதையூட்டினுள்;
பானத்தைக் கொடுத்து அவனைத் தூங்கச் செய்துவிட்டாள்;
தூங்கி விழுந்த அவனைத் தூக்கி, ஓக் மரத் தோணியில் வைத்தாள்.
அந்தக் குறுகிய தோணி, சவப்பெட்டிப் படுக்கைபோல் இருந்தது.
மாப்பிள் மரத்தால் செய்த துடுப்புகளை அவள் எடுத்துக் கொண்டாள்.
அவனையும் சேர்த்து ஏரியின் ஆழமான இடத்துக்கு வலித்துக்கொண்டு போனுள்.

நாணமற்ற இவள் செய்யப்போகும் காரியத்தை எதிர்நோக்கி,
நரி நீரானது சிந்தனையுடன் துக்கித்து ஓடியது.

தோணியின் ஒரு புறம் சென்று அதன் சமநிலையைக் குலைத்தாள்;

யாரும் தெரிந்துகொள்ளாமல் தோணியை அவள் கவிழ்த்தாள்;

பாரமான கல்போல அவள் கணவன் ஆழமான தண்ணீருக்குள் மூழ்கிப் போனான்.

அவன் மனைவியோ விரைவாக நீந்தி, கரையிலிருந்த காட்டுக்கு வந்துவிட்டாள்.

பூமியில் விழுந்து புரண்டு மனம் நொந்து அழுதாள்.

தன் கணவனைக் கொடுமையாகக் கொலை செய்த அவள், அவன் பிரிவை நினைந்து கள்ளத்தனமாய் அழுதாள்.

இதைச் செவிமடுத்த ஜனங்கள் அவளிடம் பரிவுகொண்டார்கள்.

விதவையின் துயரத்தை நினைந்து அவளுடன் சேர்ந்து வெம்பி வருந்தினார்கள்.

அந்தோ ! இளமையிலேயே நீ விதவையாகிவிட்டாயே.

கசப்பும் இருளும் உன் இன்பத்தைக் குலைக்கின்றனவே.

நமது வாழ்க்கை எல்லாம், ஆண்டவனுடைய சட்ட திட்டங்களின்படி, அவர் கையில் இருக்கின்றன.

நமக்குச் சாவு நேரும்படி உத்தரவு இடுபவரும் அவரே.

அவளுடைய சக்களத்தியின் ஒரே மகன் ஐயோனுஷ்கா ;
தன் சிற்றன்னை கண்ணீர் சொட்டுவதை அவன் நம்பவில்லை.
அவளுடைய நெஞ்சத்திலே தன் கையை வைத்து,
மெதுவாக அவளை அவன் கடிந்து உரைத்தான்.

ஏ நயவஞ்சகி !

இரவில் சஞ்சரிக்கும் ஏமாற்றுக்காரி !

மழைபோல் நீ உகுக்கும் கண்ணீரை நான் நம்பவில்லை.

உன் மார்பிடை இருக்கும் நெஞ்சம் மகிழ்ச்சியால் துள்ளுகிறது.

வா, நாம் ஆண்டவனுடைய நீதியை நாடிச் செல்வோம்.

அவருக்கும் அவருடைய புனித ஆற்றலுக்கும் கீழ்ப்படிந்து நடப்போம்.

சாணைபிடித்த கத்தி ஒன்றை ஒவ்வொருவரும் எடுத்துக் கொள்வோம்.

வானத்தை நோக்கி அதைப் பலமாகச் சுழற்றி எறிவோம்.

குற்றம் என்மீது இருந்தால் அது என்னைக் கொல்லட்டும்.

உன்மீது இருக்குமாயின் அது உன்னைக் கொல்லட்டும்.

அவன் சிற்றன்னை அவனை மெதுவாகத் திரும்பிப் பார்த்தாள்.

தன் முகத்திலே வெறுப்புப் பிரகாசிக்க அவனை அவள் முறைத்துப் பார்த்தாள்.

எழுந்து உறுதியாக நின்றாள்.

வன்மம் நிறைந்த வார்த்தைகளால் அவனுக்கு மறுமொழி சொன்னாள்:

"தன் காலத்துக்கு முன்னரே பிறந்துவிட்ட மடையன் நீ.

ஓநாய் பிறவியின் வயிற்றிலிருந்து கக்கப்பட்டவன் நீ.

நல்ல குலத்தில் பிறந்துவிட்டவன்போல நீ ஏன் இப்படிப் பேசுகிறாய்?

உன் நாவால் எத்தகைய பொய்களை எல்லாம் பரப்புகிறாய்."

அங்கே கூடிநின்ற ஜனங்கள் இதைச் செவிமடுத்தார்கள்.

தீமை நிறைந்த விஷயம் என்பதையும் தெரிந்துகொண்டார்கள்.

பெருமூச்செறிய மௌனமாக நின்று கவனித்தார்கள்.

நிலைமையைப்பற்றி மெதுவாகக் கலந்து யோசித்தார்கள்.

இதன் பின்னர் வயதான செம்படவன் ஒருவன் முன்னே வந்தான்.

நாற்புறமும் தாழ்ந்து தன் இனத்தவரை வணங்கினான்.

ஒவ்வொரு வார்த்தையிலும் கண்ணியம் தொனிக்கக் கீழ்வரும் வார்த்தைகளைச் சொன்னான்:

"நல்ல ஜனங்களே! சாணைபிடித்த கத்தியைக் கொண்டு வாருங்கள்.

அதை என் கையில் எடுத்துக்கொள்வதை நீங்கள் காண்பீர்கள்.

அதைச் சுழற்றி நான் ஆகாயத்தில் எறிவேன்.

தீமை செய்தவர் யாரோ அவர்களை அது கொன்று போடும்."

கத்தியை எடுத்துவந்து முதியவரிடம் அவர்கள் கொடுத்தார்கள்.

தனது நரைத்த தலைக்குமேலே அந்தக் கத்தியை அவர் சுழற்றி வீசினார்.

ஆகாய மண்டலத்தில், பறவைபோல, பிரகாசத்துடன் அது சுழன்று கிளம்பிற்று.

அது திரும்புவதை எதிர்நோக்கி அவர்கள் நீண்ட நேரம் காத்து இருந்தார்கள்.

பளிங்கு போன்ற வானத்தை உற்றுநோக்கிக் காத்து இருந்தார்கள்.

தொப்பிகளை எடுத்துவிட்டு நெருங்கிப் பிணைந்து நின்றார்கள்.

வாய் திறந்து பேசாமல் அமைதியாக நின்றார்கள்; இரவும் அமைதியாக இருந்தது.

பிறகு ஏரியின் ஓரத்தில் உதயத்தின் ஒளித்திறள் தோன்றியது.

பார்த்து நின்ற சிற்றன்னையும் நாணப்பட்டுப் போனாள்.

ஆனால் கத்தியானது, சிட்டுக்குருவிபோல, திடீரெனப் பறந்துவந்தது.

வானத்திலிருந்து பறந்துவந்து அவள் இதயத்தில் பாய்ந்தது.

பக்திவயப்பட்ட ஜனங்கள் மண்டியிட்டு அமர்ந்து,

தாழ்மையுடன் ஆண்டவனை வணங்கினார்கள்.

"நேர்மை வழங்கும் ஆண்டவனுடைய புகழ் ஓங்குக!"

இதன் பின்னர் ஐயோனிடம் அந்தச் செம்படவர் வந்தார்.

அவனை ஒரு ஆசிரமத்துக்கு அழைத்துக்கொண்டு போனார்.

அந்த ஆசிரமம் வெகுதொலைவில் கொர்ரைஹிநேட்ஸ் நதிக்கரையில் இருந்தது.

கிட்லேஸ என்ற கற்பித நகருக்குப் பக்கத்தே இருந்தது.*

அடுத்த நாள் காலையில் நான் விழித்து எழுந்தபோது, என் உடம்பு முழுதும் சிவப்புச் சிவப்புப் புள்ளிகள் இருந்தன. எனக்கு வைசூரி ஆரம்பித்து இருந்தது. என்னைக் கொண்டுபோய் புழக்கடை மாடியில் படுக்கவைத்துவிட்டார்கள். நீண்ட காலம் கண்களை விழிக்க முடியாமலும், அகலமான துணிகளால் கைகால்கள் கட்டப்பெற்றும் நான் கிடக்க நேர்ந்தது. பயங்கரமான கெட்ட கனவுகளால் அவதிப்பட்டு இரவில் என்னால் தூங்க முடியவில்லை. இந்தத் தீய கனவுகளின் பயனாய் ஒரு முறை என் உயிரே போய்விடும்போல் தோன்றியது. என் பாட்டி ஒருத்தி மட்டும்தான் வந்து என்னைக் கவனித்துக்கொண்டாள். கைக்குழந்தைக்கு ஊட்டுவதுபோலக் கரண்டியால் எனக்கு உணவு ஊட்டினாள்; எண்ணிக்கையற்ற கதைகளும் கட்டுக்கதைகளும் சொன்னாள். எனக்குச் சௌகரியம் ஏற்படத் தொடங்கிய சமயம் ஒரு நாள், என் கை, கால் கட்டுகளை அவிழ்த்துவிட்டார்கள்; இருந்தும் முகத்தை நான் சுரண்டிக்கொள்வதைத் தடுக்கும்பொருட்டு, கைக்கு உறைகள் போட்டுவிட்டார்கள். இப்படி இருக்கும்போது வழக்கப்படி என்னைப் பார்க்க வருகிற பாட்டி பார்க்க வராமல் இருப்பதைக் கண்டு நான் ஏக்கமுற்று வாடினேன். மாடியில் தூசுபடிந்த அறையின் தரைமீது அவள் குப்புறப்படுத்துக் கிடப்பது போலவும் அவளுடைய கைகள் அலாக்காக விரிந்து கிடப்பது போலவும் எனக்குத்திடீரெனத்தோன்றிது.

---

*தாம்போவ் மாகாணத்தில், போரிஸோஸப்விக் ஜில்லாவில் இருக்கும் கால்யூயிவ் நோகா கிராமத்தில் இந்தக் கதையை வேறு வகையில் கேட்க நேர்ந்தது; தன் சிற்றன்னையை அவமதித்த சக்களத்தி பிள்ளையைக் கத்தி வெட்டிவிடுகிறது.

பீட்டர்மாமவுக்கு இருப்பதைப்போன்று அவளுடைய கழுத்து ஏறக்குறைய இரண்டாகத் துண்டித்துக் கிடப்பதாகவும், தூசுபடிந்த நிழல்களிலிருந்து, தனது பெரிய பச்சை நிறக் கண்களை உருட்டி விழித்துக்கொண்டு அவள்மீது பாய்வது போலும் எனக்குத் தோன்றியது.

படுக்கைமீது இருந்து தாவிக் குதித்து, இரண்டு ஜன்னல்களை எனது கால்களாலும் தோள்ப் பட்டையாலும் நான் நொறுக்கி எறிந்தேன். பிறகு அங்கு இருந்தபடி ஜன்னலுக்குக் கீழேயிருந்த பனிமேட்டில் போய் விழுந்தேன். அன்று மாலை என் அன்னை விருந்து நடத்திக்கொண்டிருந்தபடியால், ஜன்னலை நான் உடைத்ததை யாரும் கவனிக்கவில்லை. நான் பனிமேட்டின்மீது கிடந்தது யாருக்கும் தெரிவில்லை. எலும்புகள் எதுவும் ஒடியவில்லை. ஆனால் தோள்ப்பட்டை பிசகிவிட்டதுடன், கண்ணாடி கிழித்துக் கடுமையான காயமும் எனக்கு ஏற்பட்டது. ஆனால் உபயோகிக்க முடியாதபடி கால்கள் ஆய்விடுமோ என்ற அதிர்ச்சி என்னைப் பீடித்துக் கொண்டது. மூன்று மாதங்கள்வரை என்னால் நடக்க முடியவில்லை. ஜனங்கள் அடிக்கடி வந்து போவதையும் கதவைத் தடால் தடால் என்று சாத்துவதையும் வீட்டில் உற்சாகம் ததும்பி நிற்பதையும் செவிமடுத்துக்கொண்டு நான் அறையிலேயே படுத்துக்கிடந்தேன்.

கடுமையானமூடுபனிகூரைமுழுதும்வியாபித்துவிட்டது. காற்று கடுமையாகச் சீறிச் சீறி வீசியது; புகைபோக்கியையும் ஜன்னல்களையும் தடால் தடால் என்று மோதும்படியாகவும் சாவுக்கு அழுவது போன்றும் ஓலமிட்டுக்கொண்டு வீசியது. பகல் நேரங்களில் கக்கைகள் கரைந்தன; ஆனால் இரவு நேரங்களிலோ, தூரத்திலுள்ள வயல்களில் சஞ்சலத்துடன் ஓநாய்கள் ஊளையிடுவது என் காதில் விழுந்தது. இந்த இசையைக் கேட்டுக் கேட்டு என் ஆத்மா முதிர்ச்சித்துவிட்டது.

பிறகு நாணப்பட்டுக்கொண்டும் அமைதியாகவும் ஆனால் நாளுக்கு நாள் விடாப்பிடியாக அதிகரித்துக்கொண்டும், தன் பிரகாசமான கண்களைக் காட்டி, ஜன்னல்களின் மூலமாக வசந்த காலம் எட்டிப் பார்த்தது. வேலிகள்மீது நின்று பூனைகள் சீறிச்சீறி, பின்னர் பயங்கரமாக ஊளையிடத் தொடங்கின. வசந்தத்தின் சிறிய சலசலப்புச் சப்தம் சுவர்களை ஊடுருவிப் பாய்ந்தது. கூறைகளிலிருந்து பனிகள் சரிவதும், பனிக்கம்பிகள் வெடிப்பதும் குளிர் காலத்தில் கணீர் என்று ஒலியாத மணியோசைகள் இப்போது கணீர் என்று ஒலிப்பதும் கேட்கத் தொடங்கின.

என் பாட்டி என்னைப் பார்க்க வந்தாள். அவள் பேசும் வார்த்தைகளில் இப்போது, வோட்கா மதுவின் நாற்றம் கடுமையாக அடிக்கத் தொடங்கியது. பெரிய வெள்ளை நிற தேநீர் ஜாடி ஒன்றை எடுத்து வருவதும் அதை என் படுக்கைக்குக் கீழே மறைத்து வைத்துவிட்டு, என்னைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டி "ஏ புருவே கிருவே! உன் தாத்தாவாகிய பூதத்திடம் இதைப்பற்றி தெரிவியாதே" என்று எச்சரிப்பதுமாக இருந்தாள்.

"நீ ஏன் குடிக்கிறாய்?"

"உஸ் சும்மாகிட! பெரியவனாகிவிட்டால் உனக்கு விவரம் தெரியும்."

தேநீர் ஜாடியிலிருந்து ஒரு மிடறு எடுத்துக் குடித்துவிட்டு, வாயைத் தன் சட்டைக் கையால் துடைத்துக்கொண்டாள்; பிறகு மகிழ்ச்சி ததும்பிய வதனத்துடன் என் பக்கமாகத் திரும்பி "நல்லது! நேர்த்தியான கனவானே! நேற்று நான் உனக்கு எதைப்பற்றிச் சொன்னேன்?" என்று கேட்டாள்.

"என் தந்தையைப்பற்றி"

"எந்த இடத்தில் நிறுத்தினேன்?"

அந்த இடத்தை நான் அவளுக்குச் சொன்னதும், எதுகை மோனைகளைக் கலந்து, மணிக்கணக்கில் அவளுடைய பேச்சு ஒலித்துக்கொண்டு இருந்தது.

சோர்ந்தும் மகிழ்ச்சி குன்றியும் குடியாமலும் இருந்த சமயம் ஒரு நாள், என் தந்தையாரைப்பற்றி அவளே எனக்குச் சொல்லத் தொடங்கினாள்.

"நேற்று இரவு உன் தந்தையை நான் கனவுகண்டேன். பீச் மரத் தடி ஒன்றைத் தன் கையில் பிடித்துக்கொண்டும் சீட்டி அடித்துக்கொண்டும், வயல்களின் ஊடே அவர் நடந்து வந்து கொண்டிருந்தார். புள்ளிகள் விழுந்த நாய் என்று நாக்கைத் தொங்கவிட்டுக்கொண்டு அவருக்குப் பின்னே ஓடிவந்தது. என்ன காரணமோ தெரியவில்லை - சில காலமாக அடிக்கடி மாக்ஸிம் சாவட்டயேவிச் என் கனவில் தோன்றிக்கொண்டே இருக்கிறார். ஓய்வு கிடைக்காமல் அவருடைய ஆவியானது அங்கும் இங்கும் அலைவது போலத் தோன்றுகிறது."

தொடர்ந்தாற்போல் அனேக மாலை நேரங்களில் தான் கூறும் மற்றக் கதைகளைப் போலவே, இனிய முறையில் விநோதமாக, என் தந்தையைப்பற்றி என் பாட்டி சொன்னாள். என் தந்தை ஒரு போர்வீரனுக்கு மகனாகப் பிறந்தவராம். இந்தப் போர்வீரன் அதிகாரியாக உயர்த்தப்பட்டாராம். தனக்குக் கீழ்ப் பதவியில் இருந்தவர்களைக் கொடுமையாக இவர் நடத்தியதின் பயனாய், இவரைச் சைபீரியாவுக்கு நாடு கடத்தி விட்டார்களாம். சைபீரியாவில் எங்கேயோ ஓர் இடத்தில் என் தந்தை பிறந்தாராம். வாழ்க்கை அங்கே அவருக்கு மிகவும் கஷ்டமாக இருந்த காரணத்தால், குழந்தையாக இருக்கும் காலத்திலேயே, வீட்டை விட்டு ஓடுவதற்குப் பல முறைகள் முயன்றாராம். ஒரு வேட்டைநாயைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு, அவருடைய தந்தை என் தந்தையைக் காடு முழுதும் ஒரு முயலைத் தேடுவதுபோலத் தேடினாராம்.

ஒரு முறை அவரைக் கண்டுபிடித்தபோது ஈவு இரக்கமின்றி அவரை அவர் வெளுத்து வாங்கிவிட்டாராம். எம் அண்டை வீட்டுக்காரர்கள் வந்து அவரைக் காப்பாற்றி, மறைத்துவிட்டார்களாம்.

"குழந்தைகளை எப்பொழுதும் இப்படித்தான் அவர்கள் அடிப்பார்களோ ?" என்று நான் கேட்டேன்.

"ஆம். எப்பொழுதும் இப்படித்தான் அடிப்பார்கள்" என்று என் பாட்டி அமைதியாகப் பதில் சொன்னாள்.

மிகச் சிறு குழந்தையாய் இருந்தபொழுதே அவருடைய தாய் காலமாகிவிட்டாள் ; அவருக்கு வயது ஒன்பது நடந்து கொண்டிருந்தபோது, அவருடைய தந்தை காலமாகிவிட்டார். அவருடைய ஞானத் தந்தையான* தச்சர் ஒருவர் அவரை ஸ்வீகார புத்திரனாக ஏற்றுக்கொண்டார். பெர்ம் நகரிலுள்ள தச்சர் சங்கத்தில் அவரையும் ஒரு உறுப்பினராக ஆக்கினார். ஆனால் என் தந்தை ஓடிப்போய்விட்டார். முதலில் குருடர்களுக்கு உதவிசெய்து அவர்களைக் கடைத்தெருவுக்கு அழைத்துப் போபவராக இருந்திருக்கிறார். வயது பதினாறு ஆன சமயத்தில் நிழனிநோவாகிராடுக்கு வந்து, கோல்கினுக்குச் சொந்தமான நீராவிப் படகுகளில் தச்சர் வேலை பார்த்து வந்தார். வயது இருபது நிரம்பிய சமயத்தில் கட்டிடத் தச்சு வேலையிலும் மேஜை குறிச்சி அலமாரிகள் செய்யும் வேலையிலும் அவர் திறமைசாலி ஆகிவிட்டார். கோவாலிகாத் தெருவில் என் தாத்தா வீட்டுக்குப் பக்கத்தில் இருந்த கடையில் அவர் வேலைபார்த்து வந்தார்.

---

*ஞானத் தந்தை : கிறிஸ்தவர்களில் குழந்தைகுக்குப் பெயர் சூட்டும்போது ஒருவர் கூடஇருந்து, குழந்தையின் சமயக் கல்வி சம்பந்தமாகத் தான் பொறுப்பு ஏற்றுக்கொள்வதாக உறுதிகூறுவார் அவரை ஞானத் தந்தை என்று அழைப்பது கிறிஸ்தவ சமய மரபு.

"தாழ்ந்த வேலி, சுறுசுறுப்பான கால்கள்" என்று சொல்லி,என் பாட்டி சிரித்தாள். "நானும் வாரியாவும் தோட்டத்திலிருந்து ராஸ்ப்பெரிகள் பறித்துக்கொண்டு இருந்தோம். திடீரென நான் அண்ணாந்து பார்த்தேன். பூட் வேலிக்குப் பக்கத்தில் உன் தந்தை நின்றார்; அப்படியே நான் திகைத்துப் போய்விட்டேன். ஆப்பிள் மரங்களின் ஊடே புகுந்து அவர் எங்களிடம் நடந்து வந்தார்; வெள்ளைச் சட்டையும் கம்பளிக் கால்சட்டையும் போட்டு அவர் பிரமாண்டமான ஆளாக இருந்தார்; தொப்பி இல்லாமலும் வெறுங் காலோடும் வந்தார்; தனது நீண்ட கூந்தலை ஒரு துணியால் பின்னுக்கு இழுத்துக்கட்டி இருந்தார். அவர் எதற்காக வந்திருக்கக் கூடும் என்று நீ கருதுகிறாய்? உன் அன்னையை மணம் செய்து தரும்படி கேட்பதற்கு! ஜன்னலைக் கடந்து சில சமயங்கள் அவர் சென்று திரும்பியதை இதற்கு முன்னர் நான் பார்த்து இருக்கிறேன். இவரை நான் காண நேரும் பொழுது எல்லாம் 'அவளுக்கு ஏற்ற வாலிபர்தான் இவர்' என்பதாக நான் எண்ணியது உண்டு. 'என் இதயமே! சரியான மார்க்கத்தை நீங்கள் தெரிந்துகொள்ளாமல் இருப்பது ஏனோ?' என்று என்னை அணுகி அவர் கேட்கப் போகிறார். மண்டியிட்டு அமர்ந்து, 'அக்குலினா ஐவானோவா!' என்று சொல்லப் போகிறார். 'எனது ஆவியையே உங்கள் காலடியில் அர்ப்பணிப்பவன் இதோ வந்திருக்கிறேன். வாரியாவும் இதோ இருக்கிறாள். ஏசுநாதர்மீது அன்புபூண்டு, நாங்கள் இருவரும் மணந்துகொள்ள உதவி புரியுங்கள்' என்று சொல்லப் போகிறார். அதில் கொஞ்சம் விஷயம் இருக்கிறது. உனக்குச் சொல்லுகிறேன். நான் திகைத்துப் பேச்சு மூச்சற்று வாயடைத்துப் போனேன். அண்ணாந்து பார்த்த போது, தந்திரகாரி உன் அன்னை, ஆப்பிள் மரத்துக்குப்பின்னே ஒளிந்துகொண்டு நின்றாள். ராஸ்ப்பெரி பழம்போலச் சிவந்து,

கண்களில் நீர் மல்கி நிற்க, அவருக்குச் சாடைகள் செய்து கொண்டு நின்றாள். 'அடி பேதையே!' என்று நான் சொன்னேன். 'இப்படித் தொடங்குவதைக் காட்டிலும் வாடிப் போய் இருந்தால் நன்றாய் இருந்திருக்குமே! வார்வாரா! அறிவு முற்றுமே சுத்தமாக உன்னைவிட்டு அகன்றுபோய் விட்டதா?' 'வாலிபரே! உம்மைப் பொறுத்தவரை, நீர் என்ன செய்து வருகிறீர் என்பதை யோசித்துப் பாரும். பெர்ச் மரத்தை இப்படி வளைந்துகொடுக்கச் செய்வது உமக்கு அடுக்குமா?' என்றேன். அந்தக் காலத்தில் உன் தாத்தா பணக்காரராக இருந்தார். சொந்தத்தில் நான்கு வீடுகளும் நிறையப் பணமும் இருந்தன. பாகப் பிரிவினை செய்து தன் குழந்தைகளுக்குக் கொடுக்காமல் இருந்தார். மற்றவர்கள் அவரை மதித்தார்கள். ஒன்பது ஆண்டுகள் ஒரு தொழிற்சாலையின் தலைவராக அவர் இருந்ததற்காக ஓரங்களில் ஜரிகைவைத்துத் தைத்த நேர்த்தியான ஒரு உடுப்பும் தொப்பியும் அவருக்கு வெகுமதியாகச் சிறிது காலத்துக்கு முன்னர்தான் அளித்தார்கள். அந்தக் காலத்தில் அவர் பெருமை பெற்றவராய்த் திகழ்ந்தார். அவரிடம் சொல்ல வேண்டுவதை அஞ்சி நடுங்கி நடுக்கத்துடன் தான் நான் அவரிடம் சொல்வது உண்டு. நெஞ்சு ஒடிந்து போய் இருந்த அவர்கள் நிலைக்கு இரங்கி என் இதயம் அவர்கள்மீது பரிவுகொண்டு, விம்மிவிடுவதுபோல் ஆகிவிடும். உன் தந்தை வந்து 'மனமுவந்து வார்வாராவை வாஸிலி வாஸிலியேவிச் எனக்கு ஒருபோதும் தரப்போவது இல்லை என்பதை நான் அறிவேன். ஆகவே அவளை நான் திருடிக் கொண்டுபோவது என்று தீர்மானித்துவிட்டேன். இந்த இடத்தில்தான் உங்களின் உதவி எங்களுக்குத் தேவைப்படுகிறது' என்று சொன்னார். என் உதவியாம். யோஜித்துப்பார். அவரை நான் விரட்டி அடிக்கப் போனேன்; அந்த ஆசாமி அசைவதாக இல்லை. 'கல்லால் அடித்தாலும் என்னை அடியுங்

கள். ஆனல் எனக்கு மட்டும் உதவுங்கள்' என்று சொன்ஞர். 'என்னல் அவளைவிட்டு இருக்க முடியாது.' இந்தச் சமயத்தில் வார்வாரா வந்து அவர் தோள்மீது தன் கையைப் போட்டுக்கொண்டு 'நானும் அவரும் கணவனும் மனைவியுமாக நீண்ட காலமாகவே இருந்துவருகிருேம் - மே மாதத்திலிருந்து. கலியாணம்செய்துகொள்ளவேண்டுவதுமட்டும்தான் இப்போது தேவைப்படுவது' என்று சொன்னுள். அவர்கள் என்னை உதைத்துவிட்டதுபோல நான் மூர்ச்சித்துவிட்டேன்!"

இதைச் சொல்லிவிட்டு உடம்பு முழுதும் குலுங்க என் பாட்டி சிரித்தாள். டப்பியிலிருந்து ஒரு சிமிட்டா பொடி எடுத்துப் போட்டு, கண்களிலிருந்த கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள். பிறகு சந்தோஷத்துடன் ஒரு பெருமூச்சு விட்டுத் தொடர்ந்து சொல்லத் தொடங்கினுள் :

"சிறியவனுக இருப்பதனுல், கலியாணத்துக்கும் கணவனும் மனையுமாக இருப்பதற்குமுள்ள வேற்றுமையை உன்னுல் இப்போது புரிந்துகொள்ள முடியாது. கலியாணம் செய்துகொள்ளாமல் ஒரு பெண்ணுக்குக் குழந்தை பிறப்பது, பயங்கரமான ஒரு காரியம் ஆகும். நீ பெரியவனுக வளர்ந்த பிறகு எந்தப் பெண்ணையும் இத்தகைய சங்கடத்தில் மாட்டிவிடாமல் இருக்க இதை நினைவில் வைத்துக்கொள். இது உன் ஆத்மாவுக்கு இழைத்த பெரிய பாபமாக ஆகி, பெண்ணுக்குப் பெரிய துயரத்தையும் உண்டாக்கி, குழந்தைக்குச் சட்டபூர்வமான உரிமை இல்லாதபடி செய்துவிடும். இதை மறந்துபோகாதே! ஒரு பெண்ணிடத்தில் நீ பரிவுடன் நடந்துகொள்ள வேண்டும்; இதயபூர்வமாக அவளை நேசிக்க வேண்டும். இன்பம் தரும் கருவியாக அவளை நீ கருதக் கூடாது; உனக்கு நான் இப்போது சொல்வது நல்ல விஷயமாகும்."

இதன் பிறகு சிறிது மௌனமாக இருந்து, தன் மனத்தை ஒருநிலைப்படுத்திக்கொண்டு, அவள் மேலும் தன் கதையைத் தொடர்ந்து சொன்னாள் :

" இனி இது சம்பந்தமாக என்ன செய்வது ? மாக்ஸிம் மண்டையில் நான் ஒரு அடி போட்டேன் ; கொண்டையைப் பிடித்து வார்வாராவை இழுத்தேன் ; ஆனால் அவரோ ' அடிப் பதனால் எதுவும் நின்றுபோக மாட்டாது ' என்ற அறிவு சான்ற வார்த்தைகளைக் கூறினார். ' ஏதாவது வழிகண்டு பிடித்துச் சொல்லிவிட்டு,எங்களை அடிப்பது நல்லது ' என்று அவள் கூறினாள். ' அவரிடம் பணம் இருக்கிறதா ?' என்று நான் கேட்டேன். ' என்னிடம் கொஞ்சம் பணம் இருந்தது. அதைக்கொண்டு வார்வாராவுக்கு நான் ஒரு மோதிரம் வாங்கி விட்டேன்.' ' மொத்தம் மூன்று ரூபிள்கள்தானே ?' ' இல்லை. கிட்டதட்ட நூறு ரூபிள்கள் ' என்று அவர் சொன்னார். அந்தக் காலத்தில் எல்லாம் மலிவாகக் கிடைத்தன ; பணம் கிடைப்பது அரிதாய் இருந்தது. உன் தந்தையும் தாயும் நின்றுகொண்டு இருப்பதை நான் கவனித்தேன். எப்படிப் பட்ட குழந்தைகள் இவர்கள் ! சரியான சிறு முட்டாள்கள் ! ' நீ காண முடியாதபடி மோதிரத்தை நான் ஒரு பலகைக்குக் கீழே மறைத்து வைத்திருக்கிறேன் ' என்று உன் அன்னை சொன்னாள் ; ' நாம் அதை விற்றுவிடுவோம்.' குழந்தைக ளாக இல்லாமல் இருந்தும், அவர்கள் குழந்தைகள்போலப் பேசினார்கள். நல்லது. அந்த வாரத்துக்குள் கலியாணத்தை முடித்துவிடுவது என்று நாங்கள் தீர்மானித்தோம். குருவை முடிவுசெய்வது என் பொறுப்பில் விடப்பட்டது. ஆகா! எவ் வளவோ நான் அழுதேன் ! உன் தாத்தாவைப்பற்றிய அச்சத் தால் என் இதயம் வெலவெலத்து நடுங்கியது. வார்வாராவும் நடுங்கிப்போய் இருந்தாள். யாவற்றையும் நாங்கள் தீர் மானித்து முடிவு செய்தோம்.

“ ஒரே ஒரு எதிரி உன் தந்தைக்கு இருந்தான். அவன் மேஸ்திரி வேலை செய்பவன் ; வன்ம நெஞ்சு படைத்தவன். நீண்ட காலமாக இவர்கள்மீது ஒரு கண் வைத்தே வந்த அவன் யாவற்றையும் ஊகித்துக்கொண்டுவிட்டான். என் ஒரே புதல்வியான அவளைச் சிறந்த முறையில் அலங்கரித்து, வாயிலைத் தாண்டி அவளை நான் அழைத்துப் போனேன். மூலையில் திரும்பியதும் மூன்று சக்கர வண்டி காத்துக் கொண்டு நின்றது. அவள் அதற்குள் ஏறிக்கொண்டாள் ; மாக்ஸிம் சீட்டி அடித்தார். அவர்கள் போய்விட்டார்கள். கண்ணீர் வழிய நான் வீட்டுக்குத் திரும்பினேன். இந்த அயோக்கியனைத் தவிர்த்து வேறு யாருமா என்னைத் சந்திப் பார்கள் ! ‘ நான் நன்னெஞ்சம் படைத்தவன் ; அவர்களுடைய இன்பத்தைக் குலைக்கும் உத்தேசம் எனக்கு இல்லை. அக்குலினா ஐவானோவா ! நீங்கள் எனக்கு ஐம்பது ரூபிள்கள் தந்தால் போதுமானது ’ என்று சொன்னான். பணம்மீது பற்றுதல் இல்லாத நான் அதைச் சேமித்து வைத்துக் கொள்ளவில்லை. அதனால் என்னிடம் பணம் இருக்கவில்லை. ஆகவே முட்டாளான நான் ‘ என்னிடம் பணம் இல்லை. ஆகையால் உனக்கு நான் எதுவும் தர முடியாது !’ என்று சொல்லிவிட்டேன். ‘அப்படியானால் வாக்குறுதி சொல்லுங்கள் தருவதாக ’ என்று அவன் சொன்னான். ‘வாக்குறுதியா? வாக்குறுதி தந்துவிட்டால் பணம் எங்கே இருந்து எனக்குக் கிடைக்கும் ?’ என்று நான் சொன்னேன். ‘ பணக்காரக் கணவனிடமிருந்து திருடுவது அவ்வளவு கஷ்டமா ?’ என்று அவன் கேட்டான். முட்டாளான நான் இன்னும் பேச்சை நீடித்து அவனுடன் நான் பேசி இருந்து இருக்க வேண்டும். ஆனால் அப்படிச் செய்யாது அவன் முகத்தில் துப்பிவிட்டு, என் பாட்டுக்கு நான் போய்விட்டேன். என்னை முந்திக்

கொண்டு முற்றத்துக்கு ஓடி, அவன் பெரிய ஒரு ரகளையையே உண்டுபண்ணிவிட்டான்.

தன் கண்களை அவள் மூடிக்கொண்டாள். லேசாக அவள் முகத்தில் புன்னகை அரும்பி மறைந்தது.

"கவனக் குறைவால் விளைந்த பலாபலன்களை நினைத்துப் பார்த்தால் இன்றுகூடப் பயமாய் இருக்கிறது. விலங்குகளில் கடைப்பட்ட விலங்குபோல உன் தாத்தா உறுமினர்! அவருக்கு இது பெரிய ஒரு அதிர்ச்சியாக இருந்தது. வார்வாரைப் பார்த்து, இவளை ஒரு பிரபுவுக்கு – ஒரு'பாரினுக்கு' மணம்முடித்துக் கொடுத்துவிட வேண்டும் என்று பெருமையாகச் சொல்லிக்கொண்டு இருந்தார். இவர்தான் நீங்கள் விரும்பிய பிரபு; நீங்கள் விரும்பிய 'பாரின்!' ஜோடி சேர்த்து வைப்பதை நம்மைக் காட்டிலும் புனித மாதா நன்றாக அறிவாள்; தன்மீது நெருப்புப்பற்றிக்கொண்டது போலப் பதறிக்கொண்டு உன் தாத்தா முற்றத்துக்கு ஓடினர். யாக்கோவையும் மைக்கேலையும் கோச்சுவண்டிக்காரன் கிலிமையும் அந்தச் சொட்டைமூஞ்சி மேஸ்திரியையும் கூப்பிட்டார். தனது கணைக்கம்பை எடுத்துக்கொண்டார்; ஒரு பாரத்தை அதில் தொங்கவிட்டுக்கொண்டார். மைக்கேல், துப்பாக்கியை எடுத்துக்கொண்டான். எங்களிடம் அப்போது விரைவாகச் செல்லும் நல்ல குதிரைகள் இருந்தன; வண்டி லேசான வண்டி. 'இவர் அவர்களைப் பிடித்துவிடுவார்' என்று எனக்கு நானே எண்ணிக்கொண்டேன். ஆனால் வார்வாராவின் தேவகாவலன் எனக்கு அறிவைக் கொளுத்தினர். ஒரு கத்தியை எடுத்து, சேணத்தில் இருக்கும் வாரை, நடு ரோட்டில் இடையில் அறுந்துவிடும்படியாக, நான் வெட்டிவிட்டுவிட்டேன். அவ்வாறே அது அறுந்து தொங்கி, உன் தாத்தாவையும் மைக்கேலையும் கிலிமையும் ஏறக்குறையக் கொன்றுவிட்டது. இதனால் அவர்கள் தாமதித்துப் போக நேர்ந்தது. அவர்கள்

மாதாகோயிலை அடைந்தபோது, திருமணச் சடங்கு நிறை வேறி, மாக்ஸிமும் வார்வாராவும் பீடத்துக்கு முன்னே நின்றுகொண்டு இருந்தார்கள். இது ஆண்டவன் அருள்!''

"நல்லது. எங்கள் ஆசாமிகள் மாக்ஸிம்மீது பாய்ந்தார்கள். ஆனால் மாக்ஸிம் சுறுசுறுப்புள்ளவர்; அவரிடம் காணப்பட்ட பலம் பலரிடம் காண முடியாதது. பீடத்துக்கு அப்பால் மைக்கேலை விரட்டி அடித்தார்; அவனுடைய கையில் காயம் ஏற்பட்டுவிட்டது; கிலிமை அடித்துக் கீழே விழுத் தாட்டிவிட்டார். ஆகவே உன் தாத்தாவும் யாக்கோவும் மேஸ்திரியும் அவரை நெருங்கப் பயப்பட்டார்கள்.

"ஆத்திர காலத்திலும் மாக்ஸிம் அறிவு தவறி நடக்க மாட்டார். 'கணைக் கம்பைக் கீழே போட்டுவிடுங்கள்' என்று உன் தாத்தாவைப் பார்த்துச் சொன்னார். 'நான் அமைதியில் விருப்பமுள்ளவன்; ஆண்டவன் அருளால் கிடைத்ததை நான் பெற்றுக்கொண்டுள்ளேன். அதை என்னிடமிருந்து அபகரித்துச் செல்ல எந்த மனிதனுக்கும் உரிமை கிடையாது. இவைதான் நான் உங்களை வேண்டுவது!' என்று சொன்னார். எங்கள் ஆசாமிகள் பின்னடைந்துவிட்டார்கள். உன் தாத்தா வண்டியில் சென்று உட்கார்ந்து கொண்டு கதறினார். 'விடைபெற்றுக்கொள்! வார்வாரா! இன்று முதல் நீ என் புதல்வி இல்லை. இனி நான் உன்னை ஒரு போதும் பார்க்க மாட்டேன். நீ உயிருடன் இருப்பினும் சரி அல்லது இறந்துபோயினும் சரி எல்லாம் எனக்கு இனி ஒன்றுதான்!' என்று சொல்லிவிட்டு, வீட்டுக்குத் திரும்பி விட்டார். வந்ததும் ஏசி ஏசி என்னை அடித்தார்; உறுமியதோடு ஒன்றும் சொல்லாமல் நான் இருந்துவிட்டேன். அடிகள் எல்லாம் முடிந்த பிறகு எது எப்படி நடக்குமோ அப்படி நடந்துவிடும் என்பதை நான் அறிவேன். இதன் பிறகு அவர் என்னைப் பார்த்து 'இங்கே பார்! அக்குலினா! நல்லதன

மாய்த்தான் உன் மகள் போய் இருக்கிறாள் என்பதை நீ மறக்க முடியாது! உனக்கு வேறு புதல்வி இங்கும் இல்லை. வேறு இடங்களிலும் இல்லை. தெரிகிறதா?' என்று சொன்னார். 'செம்பட்டைத் தலையரே! இப்படியே சொல்லிக்கொண்டு இருங்கள். இந்தக் குணக்கேடு நீடித்து நிற்க மாட்டாது!' என எனக்கு நானே எண்ணிக்கொண்டேன்."

மூச்சை அடக்கிக்கொண்டு, அவள் சொல்லியதை நான் உற்றுக் கேட்டேன். அவள் சொன்னதில், சில பகுதிகள் எனக்கு வியப்பை அளித்தன; என் அன்னையின் கலியாணத்தை முற்றும் வேறு விதமாக என் தாத்தா என்னிடம் விவரித்துச் சொன்னார். இந்தக் கலியாணத்தை என் தாத்தா எதிர்த்தார் என்றும் பின்னர் என் தாயை வீட்டுக்குள் நுழைய அனுமதிக்கவில்லை என்றும் என் பாட்டி சொன்னாள். என் தாத்தாவோ வேறுவிதமாகச் சொன்னார். திருமணம் ரகசியமாக நடைபெறவில்லை என்றும், கலியாணத்தில் தான் கலந்துகொண்டு இருந்ததாகவும் தெரிவித்தார். இவற்றில் எந்த நிகழ்ச்சி உண்மையானது என்று என் பாட்டியிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள நான் தயங்கினேன். இவற்றில் என் பாட்டி சொன்னதுதான் எனக்குப் பிடித்தமாய் இருந்தது; ஏனெனில் அதில் விசித்திரப்பாங்கு நிறைய இருந்தது. முன்னும் பின்னும் அசைந்தாடிக்கொண்டே அவள் பேசுவது வழக்கம்; பயங்கரமான அல்லது துக்கமான பகுதிகளைச் சொல்லும் காலத்தில் அதற்குத் தக்கபடி அசைவு அதிகரித்துக்கொண்டு போகும். அடியைத் தடுப்பதற்குக் கையைத் தூக்குவதுபோல ஒரு கையைத் தூக்கிக்கொள்வாள். அடிக்கடி தன் கண்களை அவள் மூடிக்கொள்வாள்; அடர்த்தியான அவளுடைய புருவங்கள் நடுங்கும்; கன்னங்களின் சுருக்கங்களுக்கு இடையே அன்பான புன்முறுவல் நெளிந்து விளையாடும். யாவற்றையுமே கண்ணை மூடிக்கொண்டு அவள்

மன்னித்துவிடுவது சில சமயம் என் இதயத்தை நெகிழச் செய்தது என்றாலும், கூச்சல் போட்டுச் சில சமயங்கள் அவள் எதிர்த்துக் கதறுவதும் அவசியம் ஆகும் என்று நான் கருதினேன்.

"முதல் இரண்டு வாரங்கள்வரை, வார்வாராவும் மாக்ஸி மும் எங்கே இருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியவில்லை. ஆனால் ஒரு சிறுவனை அனுப்பிவைத்து, எனக்கு அவர்கள் விவரம் தெரிவித்தார்கள். அடுத்த சனிக்கிழமையன்று மாலைப் பிரார்த்தனைக்குச் செல்ல விரும்புபவள்போலப் புறப்பட்டுச் சென்று அவர்களை நான் சந்தித்தேன். சுயெஸிடின்ஸ்கை தெருவில், ஒரு கோடியிலிருந்த ஒரு வீட்டின் ஒரு பகுதியில் அவர்கள் வசித்தார்கள். சகல விதமான தொழிலைச் சேர்ந்த தொழிலாளிகள் அந்த முற்றத்தில் வசித்தார்கள். அந்த முற் றம் சந்தடி நிறைந்தும் அழுக்கு அடைந்தும் இருந்தது. இவற்றைப் பொருட்படுத்தாமல், மகிழ்ச்சியுள்ள ஜோடி பூனைக்குட்டிகள்போல ஒன்றாக விளையாடி உற்சாகமாக இருந் தார்கள். அவர்களுக்கு நான் கொஞ்சம் வெகுமதிகள் கொண்டுபோய் இருந்தேன். தேயிலை, சீனி, தானியங்கள், ஜாம், மாவு, காய்ந்த காளான்கள், கொஞ்சம் பணம்—எவ் வளவு என்று இப்போது நினைவு இல்லை. உன் தாத்தாவிட மிருந்து என்னால் எவ்வளவு திருட முடிந்ததோ அவ்வளவு பணம்—அவருக்கு மட்டும் அந்தப் பணம் சொந்தமாகாது; அதைத் திருடுவது குற்றமில்லை—ஆகியவற்றை நான் கொண்டு போனேன். இவற்றில் எதையும் உன் தந்தை வாங்கிக் கொள்ள மறுத்துவிட்டார். மனம் புண்பட்டு 'நாங்கள் என்ன பிச்சைக்காரர்களா?' என்று கேட்டார். வாரியாவும் அவருடன் சேர்ந்து ஒத்து ஊதினாள். 'அம்மா! இவற்றை எல்லாம் எதற்காக நீ கொண்டுவந்தாய்?' என்று கேட்டாள். 'நான் உனக்குக் கடவுள் அளித்த தாய் ஆவேன்; முட்

டாளே ! இது தெரியாதா ? சின்ன முட்டாளே! உனக்கு ரத்தக் கலப்புள்ள தாய் நான் ; சொந்த அன்னையை அவமதிப்பதற்கு எந்த நூலிலாவது அனுமதி உண்டா ? ஒரு முறை உன் தாயை நீ இந்த உலகில் அவமதித்தாயானால், ஆண்டவனுடைய அன்னையை வானுலகில் நீ அழுகச் செய்தவள் ஆவாய் !' என்று சொல்லி, கொண்டு சென்று இருந்த வெகுமதிகளை எல்லாம் அவர்களிடம் நான் கொடுத்துவிட்டேன். கரடிபோன்று பலசாலியாக இருந்த மாக்ஸிம், திடீரென என்னைத் தன் கைகளில் தூக்கிக்கொண்டு ஒரு ஆட்டமும் ஆடி, அறை முழுதும் சென்று காட்டினார் ; தன் கணவனை ஆண் மயிலைச் சுற்றிச் சுற்றி உன் அன்னை பெருமிதத்துடன் உற்சாகமாக நடந்தாள். தங்கள் ' இல்லத்தை 'ப் பற்றிக் கம்பீரமாகப் பேசத் தொடங்கினாள் ; சிறந்த நல்ல இல்லறத் தலைவியேபோல அவள் நடந்துகொண்டாள். அவளுடைய பேச்சு எல்லாம் வேடிக்கையாக இருந்தன ; அந்த இல்லக் கிழத்தி 'வட்ருஷ்கி' ரொட்டியுடன் எனக்குத்·தேநீர் தந்தாள் ? ஒரு ஓநாயின் பல்லே ஒடைந்துபோகும்! கிராமத்துப் பாலாடைக் கட்டியா அது? கல்லுப்போலவே இருந்தது!

" இப்படியாக நீண்ட நாள் தொடர்ந்து நடந்துவந்தது ! நீயும் காட்சி அளிப்பதற்குரிய தருணமும் ஏற்பட்டுவிட்டது! இருந்தும் பிடிவாதமான உன் தாத்தா—அந்தக் கிழட்டுப் பிசாசு—மௌனமாக வாயடைத்துப் போய் இருந்தார். தொடர்ந்து ஒளிவாக நான் அவர்களிடம் போய்வந்தேன். அவருக்கு அது தெரிந்திருந்தும் அதை அவர் நம்பவில்லை. வார்வாராவின் பெயரை ஒருவரும் வீட்டில் சொல்லக்கூடாது. நானும் சொல்லவில்லை. மற்றவர்களும் சொல்லவில்லை. ஒரு தந்தையின் இதயம் நீடித்த நாளைக்கு இப்படியே இருக்க முடியாது என்பதை நான் அறிவேன். தகுந்த தருணமும் வந்தது. ஒரு நாள் பனி கடுமையாகப் பெய்தது. ஓநாய்க்கூட்

டம் ஒன்று வந்து மோதிக் கிழிப்பதுபோல, ஜன்னலைக் காற்று, பிய்த்துத் தகர்த்து எறிந்தது. புகை போக்கிகள் ஓலமிட்டன ; நகரத்திலுள்ள பூதங்கள் எல்லாம் ஒருங்கே கட்டவிழ்த்து விடப்பட்டதுபோல யாவும் இருந்தன. நானும் உன் தாத்தாவும் தூக்கம் வராமல் பக்கத்தில் அடுத்தடுத்துப் படுத்துக் கிடந்தோம். நான் எழுந்து உட்கார்ந்து அவரிடம் ' ஏழைகளுக்குப் பயங்கரமான இரவு ; அதுவும் கஷ்டமான மனநிலையில் இருப்பவர்களுக்கு இன்னும் அதிக வேதனை தரும் இரவு ' என்று சொன்னேன். திடீரென உன் தாத்தா ' அவர்கள் எப்படி இருக்கிறார்கள் ?' என்று கேட்டார். ' நன்றாய் இருக்கிறார்கள் ' என்று நான் சொன்னேன். ' மோசமாக இல்லையே ? நான் யாரைப்பற்றி விசாரிக்கிறேன் என்று நீ நினைக்கிறாய்?' என்று அவர் கேட்டார். 'நம் புதல்வி வார்வாராவையும் மாப்பிள்ளை மாக்ஸிமைப் பற்றியும் கேட்கிறீர்கள் ?' ' இதை நீ எப்படித் தெரிந்துகொண்டாய் ?' ' தந்தையே! இந்த விளையாட்டுகள் எல்லாம் போதும். யாருக்காவது இதனால் மகிழ்ச்சியாகவா இருக்கிறது ? இந்த விளையாட்டை நிறுத்திக்கொள்ள வேண்டிய காலம் வந்துவிட்டது' என்று நான் சொன்னேன். அவர் ஒரு பெருமூச்சுவிட்டார். 'ஏ பிசாசே! சின்னச் சிவப்புப் பிசாசே !' என்று என்னை ஏசிவிட்டு ' அந்த மடையன்—அதாவது உன் தந்தையை—எப்படி இருக்கிறான் இப்படியும் ஒரு மடையன் இருப்பானா?' என்று கேட்டார். ' தான் உழைக்காமல் எவன் மற்றவர்கள் உழைப்பினால் வாழ்கிறானோ அவனைத்தான் மடையன் என்று சொல்ல வேண்டும். உங்கள் மைக்கேலையும் யாக்கோவையும் இப்பொழுதாவது பாருங்களேன். அவர்களை அல்லவா மடையர்கள் என்று சொல்லவேண்டும்? உழைத்து நம் வீட்டுக்குப் பணம் கொண்டுவருகிறவர்கள் யார் ? நீங்கள். அவர்களிடமிருந்து உங்களுக்குக் கிடைக்கிற உதவியோ சொல்ல வேண்

டாம்!' என்று நான் சொன்னேன். 'ஏ பன்றி, கழுகு, சதிகாரி, முட்டாள்' என்றும் இன்னும் என்ன என்ன வெல்லாமோ சொல்லியும் என்னை அவர் ஏசினார். நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை. 'இவன் யார் என்பதும் தெரியவில்லை; எங்கிருந்து வந்தான் என்பதும் தெரியவில்லை. இவனை உங்களுக்கு எப்படித்தான் பிடிக்கிறதோ?' என்று கேட்டார். அவருக்கு அலுப்புத் தட்டும்வரையில் பேசட்டும் என்று என் வாய் திறவாமல் இருந்தேன். 'நீங்கள் ஒரு முறை சென்று அவர்களைப் பாருங்களேன். அவர்கள் இருவரும் நன்றாக வாழ்கிறார்கள்' என்று நான் சொன்னேன். 'அவர்களுக்கு இந்தக் கௌரவம் வேறு நான் செய்ய வேண்டுமா? வேண்டுமானால் அவர்கள் இங்கே வரட்டும்!' என்று அவர் சொன்னார். இவர் இப்படிச் சொல்லியதைக் கேட்டதும் சந்தோஷம் தாங்காமல் நான் ஆர்ப்பரித்தேன். அவர் என் கூந்தலை அவிழ்த்துவிட்டு விளையாடத் தொடங்கினார். 'ஏ கிழட்டுப் பெண்மணி! இப்படி ஊளையிட்டுக்கொண்டு திரியாதே. எனக்கு இதயமே கிடையாது என்பது உன் கருத்தா?' என்று முணுமுணுத்தார். முன்பு உன் தாத்தா நல்ல ஆத்மாவாக இருந்தார்; மற்றவர்களைக் காட்டிலும் புத்தி சாதுரியமுடையவர் என்று தன்னைக் கருதிக்கொண்டு இருந்தார். பிறகு சின்னப்புத்தியுடைய முட்டாளாக அவர் ஆகிவிட்டார்.

" இதன் பிறகு உன் தாயும் தந்தையும் பாவமன்னிப்பு ஞாயிற்றுக்கிழமை யன்று எங்களைப் பார்க்க வந்தார்கள். அவர்கள் இருவரும் சுத்தமாயும் அழகாயும் பெரியவர்களாயும் தென்பட்டார்கள். உன் தாத்தாவுக்குப் பக்கத்தில் மாக்ஸிம் நின்றார்; உன் தாத்தா அவருடைய தோள் மட்டத்துக்குத்தான் இருந்தார். 'வாஸிலி வாஸிலியோவிச்! சீதனம் பெற்றுப் போவதற்காக நான் வந்திருக்கிறேன் என

எண்ணிவிடாதீர்கள்; அதற்காக நான் வரவில்லை; என் மனைவியின் தந்தைக்கு மரியாதை செலுத்தும் பொருட்டு வந்து இருக்கிறேன்' என்று மாக்ஸிம் சொன்னார். இதைக் கேட்டதும் உன் தாத்தாவுக்கு உச்சி குளிர்ந்துவிட்டது. அவர் சிரித்துக்கொண்டே 'ஆஹா! போக்கிரித்தனத்தில் சரியான போக்கிரித்தனம் உள்ளவன் நீ. அறிவீனமான இந்தப் பேச்சு எல்லாம் போதும். நீ வந்து இனி எங்களுடன் வசிக்கும் காலம் வந்துவிட்டது' என்று சொன்னார். இதைக் கேட்டதும் மாக்ஸிம் முகத்தைச் சுளித்துக்கொண்டார். 'இது வாரியா முடிவுகட்ட வேண்டிய விஷயம். அவள் எப்படித் தீர்மானித்தாலும் அது எனக்குச் சம்மதம்' என்று சொன்னார். மீண்டும் அவர்கள் விவாதிக்கத் தொடங்கினார்கள்; ஒரு முடிவே ஏற்படவில்லை. உன் தந்தைக்கு நான் கண்ணால் சாடை செய்தும் மேஜைக்கு அடியில் இருந்த அவர் காலில் தட்டியும் உன் தாத்தாவின் இஷ்டம்போல் செய்வதுதான் நல்லது என்று குறிப்பாகச் சொன்னேன். பரிசுத்தமாயும் பிரகாசமாயும் அவருடைய கண்கள் இருந்தன. அவற்றுக்கு மேலே கரிய புருவங்கள் இருந்தன. சில சமயம் தன் புருவங்களை அவர் தன் கண் அருகே கொண்டுவந்து வைத்துக்கொண்டு, முகத்தைக் கல்போல் கடிதாக்கிக்கொண்டுவிடுவார். என்னைத் தவிர்த்து யார் சொல்வதையும் காதில் போட்டுக்கொள்ள மாட்டார். என் சொந்தப் புதல்வர்களைக் காட்டிலும் அவரை நான் அதிகமாக நேசிக்கிறேன் என்பதை அவர் தெரிந்துகொண்டு இருந்தார். அவரும் என்னை வெகுவாக நேசித்தார். என்னைக் கட்டித் தழுவிக்கொள்வார்; இல்லாவிட்டால் தன் கைகளில் தூக்கிக்கொண்டு அறை முழுதும் சுற்றிக்கொண்டே 'எனக்கு இருக்கும் ஒரே ஒரு உண்மையான தாய், பூமாதேவிபோல, நீங்கள்தான். வார்வாராவைக் காட்டிலும் உங்களை நான் அதிகம் நேசிக்கிறேன்' என்றார்.

அந்தக் காலத்தில் உன் தாய் அழகிய நரிக்குட்டிபோல இருந்தாள். அவள் உன் தந்தைமீது பாய்ந்து ' இதைச் சொல்ல உமக்கு எவ்வளவு தைரியம்! டர்னிப் கிழங்கின் புதல்வனே! முட்டைக்கோஸ் கீரையே! என்று இரைச்சல் போட்டாள். ஒருவரை ஒருவர் விரட்டிக்கொண்டு, அறை முழுதும் சுற்றினோம். மிக்க சந்தோஷமாக இருந்த காலம்! புருவே-கிருவே! மிக மகிழ்ச்சிகரமான காலம்! யாரும் அவரைப் போல் நடனம் ஆட முடியாது! நேர்த்தியான பாடல் பல அவருக்குத் தெரியும். குருட்டுப் பிச்சைக்காரர்களிடம் கற்றுக்கொண்ட பாடல்கள் அவை. பிச்சைக்காரர்கள்போல யாராலும் பாட முடியாது.

" தோட்டத்தின் எதிரில் இருந்த ஒரு பகுதிக்கு அவர்கள் குடிபோய்விட்டார்கள்; அங்கேதான் ஒரு நாள் நண்பகலில் நீ பிறந்தாய். சாப்பாட்டுக்கு உன் தந்தை வந்தபோது அவரை வரவேற்க நீ தயாராக இருந்தாய்! சந்தோஷத்தால் அவருக்குத் தலை கால் தெரியவில்லை. உலகத்தில் ஒரு குழந்தையைக் கொணர்வது எவ்வளவு கஷ்டம் என்பதை அறிந்தவர்போல உன் அன்னையை அவர் கட்டித்தழுவிக்கொண்டார்; உன்னைத் தூக்கித் தன் தோளில் வைத்துக்கொண்டு, உன் தாத்தாவிடம் மற்றும் ஒரு பேரன் பிறந்திருக்கும் விவரத்தைத் தெரிவிக்க முற்றத்தைக் கடந்து சென்றார். இதைப் பார்த்ததும் உன் தாத்தாவுமே சிரித்துவிட்டார். ' மாக்ஸிம்! நீர் ஒரு சரியான போக்கிரி ' என்று அவர் சொன்னார்.

" ஆனால் உன் அம்மான்மார்களுக்கு அவரைப் பிடிக்கவில்லை; அவர் மது அருந்துவது இல்லை; சுடச் சுடப் பதில் சொல்லிவிடுவார்; சகலவிதமான தந்திரங்களையும் அவருக்குத் திறமையாகச் செய்யத் தெரியும். அவர் செய்யும் தந்திரங்களை அவரால் மட்டுமே சிக்கறுக்க முடியும்! நாற்பது நாள்

உபவாசகாலத்தில் ஒரு முறை பலத்த புயல் ஒன்று அடித்தது; திடீரெனப் பயங்கரமான ஊளையும் சீட்டியடிப்பதும் வீடு முழுதும் எதிரொலித்து, அங்கு இருந்தவர்கள் எல்லாரையும் கதிகலங்கச் செய்துவிட்டது. விக்கிரக விளக்குகளை எல்லாம் ஏற்றி, பிரார்த்தனையைத் தொடங்குமாறு கூப்பாடு போட்டு உன் தாத்தா சுற்றிச் சுற்றிச் சொல்லி வந்தார். பிறகு திடீரென்று யாவும் கப்சிப் என அடங்கி அமைதியாகிவிடவே, முன்னைக்காட்டிலும் பயம் அதிகரித்துவிட்டது. உண்மை என்ன என்பதை உன் அம்மான் யாக்கோவ் ஊகித்துத் தெரிந்துகொண்டுவிட்டான் 'மாக்ஸிம் செய்த காரியம்தான் இது !' என்று அவன் சொன்னான். அவன் சொன்னதுதான் உண்மை. பின்னர் இந்த விவரத்தை மாக்ஸிமே எங்களிடம் தெரிவித்தார் : பலவகையான புட்டிகளை மாடி ஜன்னல் அருகே அவர் வரிசையாக அடுக்கி வைத்தாராம். காற்று அவற்றின் ஊடே புகுந்து ஊளையிட்டதாம். 'மாக்ஸிம் ! நீர் கவனத்துடன் நடப்பது நல்லது. இல்லாது போனால் நீ செய்யும் தந்திரங்களின் பயனாய் மீண்டும் நீ சைபீரியாவுக்கு செல்லும்படி நேரலாம்' என்று உன் தாத்தா அவரை எச்சரித்தார்.

" குளிர் காலம் மிகக் கொடுமையாக இருந்த காரணத்தால், சமவெளிகளிலிருந்து ஓநாய்கள் வந்து ஊருக்குள் புகுந்தன ; ஒருநாள் நாயைக் காணவில்லை ; அடுத்த நாள் குதிரை பயந்துபோயிற்று. அல்லது குடிகாரக் காவல்காரன் மென்று கொல்லப்பட்டுக் கிடந்தான்; அந்த ஓநாய்கள் மிகத் தொல்லைப் படுத்திவிட்டன ! உன் தந்தை ஒரு துப்பாக்கியை எடுத்துக் கொண்டும் பனி உடுப்புகளைப் போட்டுக்கொண்டும் இரவில் புறப்பட்டுப் போய்விட்டார் திரும்பும்போதெல்லாம் ஒன்று இரண்டு ஓநாய்களைக் கொண்டுவந்தார். அவற்றின் தோலை உரித்து, உள்ளே எதையாவது திணித்து,கண்ணாடிப் பெட்டி

களில் வைத்துவிடுவார்; அவற்றின் கண்களைப் பார்த்தால், உயிருள்ள ஓநாயின் கண்கள்போல அவை உனக்குத் தோன்றும். ஒரு நாள் உன் அம்மான் கக்கூஸுக்குப் போயிருந்தவன், திடீரெனத் திரும்பி ஓடிவந்தான்; கண்கள் வெளியே தொறுத்தி நிற்கவும், மயிர்கள் குத்திட்டு நிற்கவும் நாக்கைத் தொங்கப் போட்டுக்கொண்டு ஓடிவந்தான். அவனால் பேசக் கூட முடியவில்லை. தனது கால் சட்டைகளை எல்லாம் சுருட்டி மடக்கிக்கொண்டு, கீழே விழுந்து 'ஓநாய்!' என்று பெருமூச்சுவிட்டான். கையில் கிடைத்ததை ஆயுதமாக எடுத்துக்கொண்டு எல்லாரும் கக்கூஸுக்கு ஓடினார்கள். உண்மையாகவே ஒரு ஓநாயின் தலை சுவரின் ஓட்டையில் நீட்டிக்கொண்டு தெரிந்தது. அவர்கள் அதை அடித்தார்கள்; சுட்டார்கள். ஆனால் ஓநாயோ இருந்த இடத்தைவிட்டு அசையவில்லை. அவர்கள் நடந்து போய் அதைப் பிடித்துப் பார்த்தார்கள். அது வெறும் தோல் கூடாகவும் தலைமட்டும் ஏதோ திணிக்கப்பெற்றதாகவும் முன் கால்கள் இரண்டும் கக்கூஸ் பலகையில் ஆணி அறையப்பட்டும் இருந்தது. இந்தச் சமயத்தில் மாக்ஸிமிடம் உன் தாத்தா அதிக ஆத்திரத்துடன், பைத்தியகாரத்தனமான ஆத்திரத்துடன், இருந்தார். விரைவில் உன் தந்தை செய்யும் தந்திரங்களில் யாக்கோவும் பங்கு எடுத்துக்கொண்டான். உன் தந்தை, அட்டையிலிருந்து ஒரு தலை அளவு வெட்டி எடுப்பார். அதன் மீது கண், மூக்கு, வாய் இவற்றை எழுதுவார்; கயிற்றுச் சிலும்புகளை எல்லாம் எடுத்து அதன் தலையில் மயிர்கள்போல ஒட்டி வைப்பார். பிறகு யாக்கோவும் அவரும் வெருட்டும் இந்த பொம்மையைத் தெருவுக்கு எடுத்துப்போய், யார் வீட்டிலாவது ஜன்னல்களில் வைத்துவிட்டுத் திரும்பிவிடுவார்கள். இயல்பாகவே அண்டை வீட்டுக்காரர்கள் இதைக்கண்டு பயந்து போய் கூச்சல் போடுவார்கள். சில சமயங்களில் தங்கள்

மீதே துணிகளைப் போட்டுக்கொண்டு வெருட்டுவார்கள். ஒரு முறை இப்படி ஒரு குருக்களை வெருட்டிவிட்டார்கள். அவர் காவல்காரனிடம் ஓடினார்; காவல்காரனும் வெருண்டுபோய், 'அபாயம் - அபாயம்' என்று கூச்சல் போட்டான். இந்த விளையாட்டை அவர்கள் தொடர்ந்து செய்துவந்தார்கள். அதைப்பற்றி வெளியிடாமலும் இருந்து வந்தார்கள். 'இந்த விளையாட்டை விட்டுவிடுங்கள்' என்று அவர்களிடம் நானும் சொன்னேன்; வாரியாவும் சொன்னாள். ஆனால் அதை அவர்கள் காதில் போட்டுக்கொள்ளவில்லை. முட்டாள்தனமான ஒரு சிறிய காரியத்தைக் கண்டு ஜனங்கள் எப்படிப் பயந்து ஓடுகிறார்கள் என்பதையும் அவர்கள் அறிவு எப்படிக் கலங்கிப் போய்விடுகிறது என்பதையும் பார்ப்பதற்கு என்ன வேடிக்கையாய் இருக்கிறது என்று சொல்லி, மாக்ஸிம் சிரித்தார். அறிவோடு நடப்பதற்கு அவரைச் செய்ய முயன்றபோது....

"இந்தக் குறும்புக்குப் பலியாகும் நிலை அவருக்குக் கிட்டத்தட்ட ஏற்பட்டது. உன் தாத்தாவைப்போல உன் அம்மான் மைக்கேலும் அற்ப புத்தியுள்ளவன்; எப்பொழுதுமே வன்மம் வைத்துக்கொண் டிருப்பவன்; உன் தந்தையைத் தொலைத்துவிடுவதற்கு அவன் முயன்றுகொண்டிருந்தான். குளிர்கால ஆரம்பத்தில் ஒரு நாள் வெளியில் உலவச் சென்ற அவர்கள் நால்வரும்-மாக்ஸிம்-உன் அம்மான்மார் இருவர், உதவிக் குரு - (கோச்சு வண்டிக்காரனை அடித்துக்கொன்ற காரணத்துக்காகப் பின்னர் வேலையிருந்து நீக்கப்பட்டவர்.) வந்துகொண்டிருந்தார்கள். யாம்ஸ்காயாத் தெருவுக்கு வந்ததும், துக்கோவ் குளத்துக்குத் தங்களுடன் வரும்படியாக உன் தந்தையை அவர்கள் அழைத்தார்கள். சருக்கி விளையாட விரும்புவதாகச் சொல்லி அழைத்துப்போய் விட்டார்கள். குளத்தை அடைந்ததும், அங்கே ஐஸ் பள்ளம் ஒன்றில் அவரை அமுக்கிவிட்டார்கள். ஏற்கனவே இதைப்

பற்றி உனக்குச் சொல்லி இருக்கிறேன் என்று நினைக்கிறேன்...''

"ஏன் என் அம்மான்மார்கள் இப்படித் தீயவர்கள் ஆனார்கள் ?''

ஒரு சிமிட்டா பொடியை எடுத்தவாறே, அமைதியாக என் பாட்டி "தீயவர்கள் என்பதனால் அவர்கள் இதைச் செய்யவில்லை. அவர்கள் மடையர்கள் ; மிஷ்கா சூதுவாதுள்ளவன்...... ; முட்டாள். ஆனால் யாக்கோவோ பேடிகளில் ஒருவன்......சரி. அவர்கள் அவரைக் குழிக்குள் திணித்துவிட்டார்கள். பனிக் கட்டியின் ஓரத்தைப் பிடித்துக் கொண்டு, உன் தந்தை எவ்விமேலே வா முயன்றபோதெல்லாம் அவருடைய விரல்களைத் தங்கள் பூட்ஸ் காலால் மிதித்தார்கள். அவர்கள் குடிபோதையில் இருந்ததாலும் அவர் குடியாமல் இருந்தாலும் நல்லதாய் போயிற்று. எப்படியோ ஆண்டவனுடைய உதவியால் குழியின் நடுவே சமாளித்துக் கொண்டு அவர் நின்றுவிட்டார். அவர் மூச்சுவிட்ட சமயத்தில், பனிக்கட்டிகளை அள்ளி அவர் தலைமீது அவர்கள் போட்டார்கள். ஆனால் அவர்களால் சரியானபடி போட முடியவில்லை. தங்கள் உதவி யில்லாமலே குழிக்குள் மூழ்கிப் போவான் என்று எண்ணிக்கொண்டு, விரைவில் அவர்கள் திரும்பிவிட்டார்கள். அவர் ஊர்ந்து மேலே வந்து நேரே போலீஸாரிடம் ஓடினார். சதுக்கத்திலேயே போலீஸ் தலைமைக் காரியாலயம் இருக்கிறது என்பது உனக்குத் தெரிந்த விஷயம் தான். நம் குடும்பத்திலுள்ள எல்லோரையும் அவரையும் அதிகாரி நன்கு தெரிந்தவர். இது எப்படி நேர்ந்தது என்று அவர் கேட்டார்.''

என் பாட்டி இதன் பின்னர் சிலுவை அடையாளம் வரைந்துகொண்டு, நன்றியறிதலுடன் சொன்னதாவது :

“மாக்ஸிம் சாவட்டயேவிச்சினுடைய ஆத்மா சாந்தி அடைய ஆண்டவன் அருள் பாலிக்கட்டும்; அவர் நேர்மையான மனிதர்; ஆண்டவனுடைய அருளுக்கு அருகதை உடையவர்; என்ன நடந்ததோ அதைப்பற்றிப் போலீஸாரிடம் ஒரு வார்த்தைகூட அவர் தெரிவிக்கவில்லை. ‘எல்லாம் என் தவறுதான். குடித்துவிட்டு நான் குளத்துக்குப் போனேன்; குழியில் விழுந்துவிட்டேன்’ என்று சொன்னார். ஆனால் அதிகாரியோ அவர் பொய் சொல்லுகிறார் என்றும் அவர் ஒரு போதும் குடிப்பது கிடையாது என்றும் சொன்னார். ஸ்டேஷனில் வோட்காவை அவர்மீது தடவி, உலர்ந்த ஆடைகளைக் கொடுத்து அணிந்துகொள்ளச் செய்து, கம்பளி கோட்டைப் போட்டுப் போர்த்தி, அவரை வீட்டுக்கு அழைத்து வந்தார்கள். அதிகாரியும் வேறு இருவரும் துணைக்கு வந்தார்கள். யாக்கோவும் மைக்கேலும் இன்னும் வீடு வந்து சேரவில்லை. தங்கள் பெற்றோருக்குப் புகழ்கிடைக்க வேண்டும் என்று குடித்துக்கொண் டிருந்தார்கள்! எனக்கும் உன் தாய்க்கும் மாக்ஸிமை அடையாளம் தெரிந்துகொள்ள முடியவில்லை. விரல்கள் சிதைந்து, அவர் நீல நிறமாக மாறி இருந்தார்; ரத்தம் வடிந்துகொண் டிருந்தது. அவருடைய பொட்டுகளில் ஏதோ பனிக்கட்டிபோன்று ஒட்டிக்கொண்டு இருந்தது; அது உருகாமல் இருந்தது மாத்திரமன்றி, அவருடைய தலைமயிர் நரைத்துவிட்டதைப் போலவும் தோன்றியது.

“வார்வாரா கூச்சலிட்டாள். ‘மாக்ஸிம்! அவர்கள் உம்மை என்ன செய்துவிட்டார்கள்?’ அதிகாரி சுற்றுமுற்றும் மோப்பம் பிடித்துக் கேள்விகள் கேட்டார். விஷயங்களில் ஏதோ பிழை இருப்பதாக என் இதயம் உணர்ந்தது; ஆகவே அதிகாரியுடன் வார்வாராவைப் பேசிக்கொண்டு இருக்கச் செய்துவிட்டு, மாக்ஸிமிடமிருந்து உண்மையைக் கிரகிக்க

நான் முயன்றேன். ‘போய், மைக்கேலையும் யாகோவையும் பாருங்கள்’ என்று அவர் மெதுவாகச் சொன்னார். ‘ஒன்றாகச் சென்ற நாங்கள் யாம்ஸ்காயாத் தெருவில் பிரிந்து விட்டோம் என்று அவர்களைச் சொல்லச் செய்யுங்கள். அவர்கள் போக்ரோவ்காவுக்கும் நான் பிரியாடிலினிப் பக்க மாகவும் பிரிந்து சென்றுவிட்டதாகச் சொல்லுங்கள்; விஷயங் களைக் குழப்பிவிட வேண்டாம் என்று அவர்களிடம் சொல் லுங்கள்; இல்லையேல் அதனால் எல்லோருக்கும் போலீஸாரால் தொல்லை ஏற்படக்கூடும்!’ என்றார். நான் உன் தாத்தாவிடம் சென்றேன். ‘அதிகாரியோடு நீங்கள் பேச்சுக்கொடுத்துக் கொண்டு இருங்கள்; நம் புதல்வர்களை எதிர்பார்த்து நான் வாயிலில் நிற்கிறேன்’ என்று சொல்லி, நடந்துள்ள கெட்ட விஷயத்தை உன் தாத்தாவிடம் தெரிவித்தேன். முணுமுணுத்து நடுக்கத்துடன் தன் உடைகளை அவர் சரிப்படுத்திக்கொண் டார். ‘இந்த மாதிரி ஏதாவது நடக்கும் என்பதை நான் எதிர்பார்த்தேன்; எனக்கும் தெரியும்’ என்றார். ஆனால் அவர் சொன்னது பொய்; அவருக்கு இதுபற்றி எதுவும் தெரியாது. அன்பு நிறைந்த என் புதல்வர்களைக் காதைத் திருகி நான் வரவேற்றேன். திகிலடைந்த மிஷ்கா போதை அகன்று தெளிந்த புத்தியுள்ளவனான்; ஆனால் யாக்கோவோ போதையிலேயே ஊறிப் போய்க்கிடந்தான். ‘எதுவும் எனக் குத் தெரியாது’ என்று அவன் சொன்னான். ‘எனக்கு மூத்தவரான மிஷ்காதான் இதை எல்லாம் செய்தவர்’ என்றான். எப்படியோ அதிகாரியின் மனத்தைச் சாந்தப் படுத்துவதில் நாங்கள் வெற்றி பெற்றோம். அவர் ஒரு நல்ல ஆத்மா. ‘கவனமாய் இருங்கள். இனிமேல் ஏதாவது நடைபெறுமாயின் யார் குற்றவாளி என்பதைக் கண்டுபிடித்து விட நேரும்!’ என்று சொல்லிவிட்டு அவர் போய்விட்டார். இதன் பின்னர் உன் தாத்தா மாக்ஸிமை அணுகி ‘குழந்தாய்!

உனக்கு நன்றி! மற்றவர்களாய் இருப்பின் வேறு விதமாய் நடந்துகொண்டு இருப்பார்கள் என்பது எனக்குத் தெரியும். மகளே! இத்தகைய நல்ல மனிதர் ஒருவரை நம் வீட்டுக்கு அழைத்து வந்த உனக்கு நன்றி' என்று சொன்னர். பிரியம் வந்துவிட்டால் உன் தாத்தாவாலும் இப்படி நேர்த்தியாகப் பேச முடியும். பிறகு அவர் மடத்தனமாக நடக்க ஆரம்பித்து விடுவார். தன் இதயத்தைக் கடினமாக்கிக்கொண்டுவிடுவார். நாங்கள் மூவரும் தனித்து இருந்த சமயம் மாக்ஸிம் அழத் தொடங்கினர்; அவர் மனது ஒரு வகையாகப் பேதலித்து இருந்தது. 'இந்த மாதிரியான காரியத்தை அவர்கள் ஏன் எனக்கு இப்படிச் செய்தார்கள்? நான் அவர்களுக்கு என்ன தீங்கு இழைத்தேன்? அம்மா! எதற்காக அவர்கள் இப்படிச் செய்தார்கள்?' தாய் என்று என்னை அழைப்பதற்குப் பதிலாக எப்பொழுதுமே அவர் என்னை அம்மா என்றுதான் அழைப்பார்—சிறு குழந்தையைப் போலவே நடந்துகொள்வார். இயல்பிலேயே அவரிடத்தில் இத்தகைய குழந்தைப்பாங்கு இருந்தது. 'எதற்காக அம்மா?' என்று கேட்பவருடன் சேர்ந்து உட்கார்ந்து ஏககாலத்தில் அழுவதைத் தவிர்த்து, வேறு எதுவும் என்னல் செய்ய முடியாமல் இருந்தது. எப்படி இருந்தபோதிலும் அவர்கள் என் புதல்வர்கள்; அவர்கள்மீது பரிவுகாட்டாமல் என்னல் இருக்க முடியாது. ஆடையிலிருந்த பொத்தான்களை எல்லாம் கழற்றிவிட்டு, சண்டைக்குப் போக விரும்புபவள் போல உன் அன்னை சிந்தனையில் மூழ்கியிருந்தாள் 'மாக்ஸிம்! நாம் போய்விடலாம். என் சகோதரர்கள் நமக்குப் பகைவர்கள் ஆகிவிட்டார்கள்; அவர்களை நினைத்தால் எனக்கு அச்சமாய் இருக்கிறது; ஆகையால் நாம் போய்விடுவோம்' என்று கதறினள். நான் அவளுக்குத் தகுந்த பதில் சொன்னேன்: 'எரிகிற நெருப்பில் எண்ணெயை ஊற்றாதே!' என்றேன். 'எண்ணெய் இல்லாமலே வீட்டில் போதிய புகைப் பூசல்

இருக்கிறது !' என்றேன். இரண்டு மடையர்களையும் மன்னிப்புக் கேட்பதற்காக உன் தாத்தா அனுப்பிவைத்தார். 'இது தான் உனக்கு மன்னிப்பு' என்று சொல்லி, மிஷ்கா கன்னத்தில் உன் அன்னை ஒரு அறை கொடுத்தாள். 'சகோதரர்களே ! இத்தகைய காரியத்தை நீங்கள் ஏன் செய்தீர்கள் ?' என்று அவர்களை உன் தந்தை கேட்டுக்கொண்டே இருந்தார். வாழ்க்கை முழுதும் என்னை நொண்டியாகவே நீங்கள் ஆக்கிவிடப் பார்த்தீர்களே ! விரல்கள் இல்லாவிட்டால் என்ன காரியத்தை என்னால் செய்ய முடியும் ?' என்று சொன்னார். அவர்கள் எப்படியோ அதைப் பூசி மெழுகினார்கள். அதைத் தொடர்ந்து உன் தந்தை ஏழு வாரங்கள் நோய்வாய்ப்பட்டுக் கிடந்தார். படுக்கையில் கிடந்தவாறே என்னைப் பார்த்து 'அம்மா ! நாங்கள் வேறு ஒரு ஊருக்குப் போய்விடுகிறோம். இந்த ஊரில் இருக்க எனக்குப் பிடிக்கவில்லை' என்று சொல்லிக் கொண்டு இருந்தார். சிறிது காலத்தில் அவர் ஆஸ்ட்ராகானுக்குப் போய்விட்டார். ஜார் சக்கரவர்த்தி விஜயம் செய்யப் போகிறார் என்று அந்த ஊர் ஜனங்கள் எதிர்பார்த்தார்கள். வெற்றி விருதுபோல, வரவேற்பு வளைவு ஒன்று கட்டித் தருமாறு உன் தந்தையை அவர்கள் கேட்டார்கள். வசந்த காலத்தில் முதன் முதலாகப் புறப்பட்ட நீராவிக் கப்பலில் உன் தந்தையை அவர்கள் அழைத்துப் போய்விட்டார்கள். எனது உயிரில் பாதியே பிரிந்து செல்வதுபோன்று எனக்கு இருந்தது. அவர்களுடன் செல்லப்போவதைப்பற்றி அவரும் என்னிடம் சொல்லிக்கொண்டு இருந்தார். எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்க முடியுமோ அவ்வளவு மகிழ்ச்சியுடன் வார்வாரா இருந்தாள். அதை அவள் வெளியே காட்டிக்கொள்ளவும் செய்தாள். வெட்கமில்லாத விலங்கு ! அவர்கள் புறப்பட்டுச் சென்றது இப்படித்தான்—இவ்வளவுதான்.''

ஒரு மிடறு வோட்கா மதுவைக் குடித்து, ஒரு சிமிட்டா பொடி போட்டுக்கொண்டாள். சிந்தனையோடு ஜன்னலுக்கு வெளியே எட்டிப்பார்த்தாள் :

"உன் தந்தையும் நானும் இரத்த உறவு உள்ளவர்கள் அன்று ; ஆனால் ஆன்மீக உறவு உள்ளவர்கள்."

இப்படி அவள் கதை சொல்லும் சமயத்தில் சில சமயங்களில் என் தாத்தா வந்துவிடுவார். தனது சிறிய 'சிப்மங்க்' மூஞ்சியால் ஏறிட்டுப் பார்ப்பார் ; காற்றை மோப்பம் பிடிப்பார் ; என் பாட்டியைச் சந்தேகக் கண்கொண்டு பார்ப்பார் ; சிறிது நேரம் கேட்டுவிட்டு முணுமுணுப்பார் :

"பொய்! பொய்! பொய்யைத் தவிர்த்து வேறு ஒன்றும் இல்லை."

பிறகு எதிர்பாராத வகையில் என்னைப் பார்த்து "அலெக்ஸி! இங்கே இவள் குடித்துக்கொண்டு இருந்தாளா?"

"இல்லை."

"நீ சொல்வது பொய்—உன் கண்ணைப் பார்த்தாலே தெரிகிறதே."

நம்பிக்கையில்லாமல் அவர் போய்விட்டார். அவர் போவதைப் பார்த்துக்கொண்டே என் பாட்டி கண்ணடித்தாள். அவள் சொன்னாள் :

"அதை அடி கிஷ் ! அதனால் மீன் வெருண்டுவிடும்."

ஒரு நாள் அறையின் நடுவே நின்றுகொண்டு அவர் தரையை ஊன்றிக் கவனித்தார். பிறகே "காயே !" என்றார்,

"ஊம்."

"என்ன நடக்கிறது தெரிகிறதா?"

"தெரிகிறது."

"அதைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய் ?"

“ தலைவிதி, தந்தையே! அந்த நல்ல மனிதரைப்பற்றி நீங்கள் என்ன சொன்னீர்கள் என்பதை நினைத்துப் பாருங்கள்.”

“ ஊம்.”

“ நல்லது. நீங்கள் சொல்லுவதுதான் சரி.”

“ தரித்திரன்.”

“ அது அவள் கவனித்துக்கொள்ள வேண்டிய காரியம்.”

தாத்தா வெளியே போய்விட்டார். ஏதோ அபாயம் இருக்கிறது என்பதை அறிந்த நான் “ எதைப்பற்றி நீங்கள் பேசிக்கொண் டிருந்தீர்கள் ?” என்று பாட்டியைக் கேட்டேன்.

“ யாவற்றையும்பற்றி நீ தெரிந்துகொண்டுதான் ஆக வேண்டுமா ?” என்று முணுமுணுத்தவாறே என் கால்களை அவள் தேய்த்துவிட்டாள். “ சிறிய பிள்ளையாய் இருக்கும் போதே யாவற்றையும் நீ தெரிந்துகொண்டுவிட்டாயானால், பெரியவன் ஆனதும் நீ தெரிந்துகொள்வதற்கு ஒன்றுமே எஞ்சி இராது” என்று சொல்லிச் சிரித்துவிட்டுத் தன் தலையை அவள் அசைத்துக்கொண்டாள்.

“ ஆ தாத்தாவே! தாத்தாவே! ஆண்டவன் கண்களுக்கு நீர் அளவிடமுடியாத ஒரு மறு போன்றவர் ; அலெக்ஸி ! இதை யாரிடமும் தெரிவியாதே ; உன் தாத்தா யாவற்றையும் இழந்துவிட்டார். அவர் கையில் ஒரு காசைக் கூட மிச்சம் இல்லை. ஒரு கனவானுக்கு அவர் நிறையக் கடன் கொடுத்து இருந்தார்—அதாவது ஆயிரக்கணக்கில் கொடுத்து இருந்தார். அந்தக் கனவான் இப்பொழுது பாங்க்ரப்டு ஆகி விட்டார்...” என்றாள் என் பாட்டி.

இதைச் சொல்லிவிட்டு, சிந்தனையில் மூழ்கிப் போய் நீண்ட நேரம் ஒன்றும் பேசாமல் அவள் உட்கார்ந்து இருந்

தாள். புன்சிரிப்புத் தவழ்கிற அவளுடைய முகத்தில், கவலை யின் சாயல் படரத் தொடங்கியது.

"எதைப்பற்றி நீ சிந்தித்துக்கொண் டிருக்கிறாய்?"

"உன்னிடம் என்ன சொல்வது என்பதைப்பற்றிச் சிந் தித்துக்கொண்டு இருக்கிறேன்" எனப் பதில் சொல்லி, தன் நிலையை அவள் சரிப்படுத்திக்கொண்டாள். "சரி. யெவ்ஸ் டிக்னே கதையைப்பற்றி என்ன நினைக்கிறாய்? அந்தக் கதை வருமாறு :"

முன்பு ஒரு காலத்தில் யெவ்ஸ்டிக்னே என்ற பெயரில் உதவிக் குரு ஒருவர் இருந்தார்.

கலங்கரை விளக்கம் போன்ற பிரகாசம் தன்னிடம் இருப் பதாகவும்,

ஸார் சக்கரவர்த்தியையோ அல்லது குருவையோ காட்டி லும் தன்னைப் பிரகாசமானவராக அவர் எண்ணிக்கொண்டார்.

வியாபாரிகள் சம்பந்தப்பட்ட மட்டில் இன்னும் அதிகப் பிரகாசமானவர்!

முட்டாள் மயில் பறவைபோல நிமிர்ந்து நடக்கிறார்.

புத்தியுள்ள கிழட்டு ஆந்தையின் கண்கள்போல அவர் தன் கண்களை வெளியே நீட்டுகிறார்.

காலையிலிருந்து இரவுவரை அண்டை வீட்டாருக்கு உபதே சம் செய்கிறார்.

எதுவுமே அவர் கண்களுக்குச் சரியாகத் தோன்றுவது இல்லை.

கோபுரத்தைப் பார்த்தாலோ—அவருக்கு அது குட்டை யாகத் தோன்றும்!

அவர் ஏறும் குதிரையோ—அதுவும் குட்டைதான்!

ஆப்பிளைக் கடிப்பார்—அது இனிப்பாய் இருக்காது!

வெய்யிலில் இருப்பார்—அதன் சூடு தாங்காது!

தான் பார்ப்பதை எல்லாம் அவர் இப்படித்தான் சொல்வார்.

பாட்டி கண்களை உருட்டி விழித்தாள் ; கன்னங்களை ஊதிப் பெரிதாக்கி உப்பினாள் ; அன்பு ஒழுகும் அவளுடைய வதனத்தில், மடமையின் சாயல் படர்ந்து இருந்தது ; இழுத்து நீட்டி அவள் சொன்னதாவது :

உங்களுக்கு விருப்பம் இருந்திருக்குமாயின் அதை இன்னும் நன்றாக நான் செய்திருப்பேன். ஆனால் எனது நேரத்தை இப்படி வீணாக்க எனக்கு விருப்பம் இல்லை.

ஒரு கணம் தயங்கி இருந்துவிட்டு, அவள் தொடர்ந்து மெல்லிய குரலில் சொன்னதாவது :

சில பேய்கள் ஓர் இரவு அவரிடம் வந்தன :

" இங்கே பொருள்கள் சரியாக இல்லை என்பதாக நீங்கள் எண்ணுகிறீர்கள் இல்லையா ?"

நாங்கள் வாழும் நரகத்தை நீங்கள் வந்து பார்ப்பதாக வைத்துக்கொள்வோம்.

அங்கே நெருப்பு கொழுந்துவிட்டு எரியும் !

தன் தொப்பியை உதவிக் குரு தரித்துக்கொண்டதுதான் தாமதம்.

இரண்டு பேய்கள் அவர்மீது ஏறிக்கொண்டன.

மற்றவை தங்கள் கைகளால் அவரைப் பிடித்துக்கொண்டன.

கால் நகங்களால் அவரைக் கிள்ளின ; பிராண்டின.

கொழுந்துவிட்டு எரியும் நெருப்புக்கு அவரைத் தள்ளிக் கொண்டு போயின.

"நல்லது யெவ்ஸ்டிக்னே! இங்கே வந்ததில் உமக்கு மகிழ்ச்சி தானே ?"

நெருப்பில் வறுக்கப்பட்ட உதவிக் குரு தன் கண்களை உருட்டி விழித்தார் ;

புத்திமான்போலத் தொடர்ந்து பார்த்துக்கொண்டு இருந்தார் ;

பேசும்போதே அவருடைய உதடுகள் அறுவறுப்புடன் நெளிந்தன.

"நரகத்தின் நெருப்பில் புகைதான் அதிகம்!"

பெருமூச்சுவிட்டு இழுத்து நீட்டியவாறே தான் சொல்லி வந்த கதையை அவள் முடித்தாள். பிறகு சிரித்த முகத்துடன் என் பக்கமாகத் திரும்பினுள்; அவள் சொல்லில் ஒருவித மாற்றம் காணப்பட்டது:

"தன் விருப்பப்படி நடக்கும் பெரிய மனிதத்தன்மையை அந்த யெவ்ஸ்டிக்னே விட்டுக்கொடுக்கவில்லை. அப்படித்தான் உன் தாத்தாவும். சரி, தூங்குவதற்கு நேரமாகிவிட்டது."

மாடிக்கு அபூர்வமாகத்தான் என் அன்னை என்னைப் பார்க்க வருவாள்; வந்து இரண்டொரு வார்த்தைகளை மட்டும் அவசர அவசரமாகச் சொல்லிவிட்டுத் திரும்பிவிடுவாள்; அவள் வரவர அழகாக இருந்தாள்; அழகாகவும் உடை உடுத்திக்கொண்டாள். என் பாட்டியிடம் இருந்த அந்தரங்கத் தன்மை இவளிடம் இருப்பதாக எனக்குத் தோன்றியது. அவளும் என் பாட்டியும் எதையோ என்னிடம் மறைக்க விரும்புவதை நான் தெரிந்துகொண்டேன். யூகித்து என்னவாக அது இருக்கக் கூடும் என்று யோஜித்துப் பார்த்தேன்.

என் பாட்டி சொல்லும் கதைகளில் எனக்கு விருப்பம் குறைய ஆரம்பித்தது. நாளுக்கு நாள் அதிகரித்துவரும் தெளிவுபடாத ஒரு வகைத் திகில் ஏற்பட்டு, என் தந்தை பற்றிய கதைகளைக்கூட அனுபவிக்க முடியாமல் செய்து விட்டது.

"என் தந்தையின் உணர்வு இப்படி அவதிப்பட்டதற்குக் காரணம் என்ன?" என்று நான் என் பாட்டியை ஒரு நாள் கேட்டேன்.

"எனக்கு எப்படித் தெரியும்?" என்று சொல்லித் தன் கையை என் கைமீது என் பாட்டி வைத்தாள். "இது

சொர்க்க சம்பந்தமான விஷயம்—ஆண்டவனுடைய காரியம்—அதை நம்மால் அறிந்துகொள்ள முடியாது......"

எனக்குத் தூக்கம் வராத இரவுகளில் படுத்துக்கிடந்தவாறே - நீலநிற வானத்தில் தாரகைகள் மெதுவாகச் சென்றுகொண்டிருப்பதை நான் கவனித்துக்கொண்டு கிடப்பேன். என் தந்தை கதாநாயகனுக விளங்கும் சோகக் கதைகளை நினைத்தவாறு படுத்துக்கிடப்பேன். ஒரு தடியைத் தன் கையில் பிடித்துக்கொண்டு எப்பொழுது பார்த்தாலும் அவர் தனியாக நிற்பார் ; சடை நாய் ஒன்று அவருக்குப் பின்னே நிற்கும்...

## 12

ஒரு நாள் மாலை சிறிது தூங்கி, நான் கண் விழித்தேன் ; எனது கால்களும் துயில் எழுவதுபோன்ற ஒருவித உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. கால்களைப் படுக்கை ஓரத்தில் தொங்க விட்டேன் ; மரமரத்து அவை, உயிரற்றனபோல ஆகி விட்டன. இருந்தபோதிலும் கால்கள் சரியாகிவிட்டன என்றும் நன்ருக நடக்க முடியும் என்ற நம்பிக்கையும் ஏற்பட்டன. சந்தோஷம் தாங்க முடியாமல் ஆர்ப்பரித்து, நான் கால்களைத் தரையில் ஊன்றினேன் ; ஆனுல் தடுமாறி விழுந்து விட்டேன். ஊர்ந்து கதவு அருகே சென்று கீழே இறங்கினேன். என்னைப் பார்த்ததும் மற்றவர்கள் என்ன திகில் அடைவார்களோ என்ற எண்ணத்துடன் இறங்கினேன்.

என் அன்னையின் அறைக்குச் சென்று என் பாட்டியின் மடியில் நான் எவ்வாறு படுத்தேன் என்பது எனக்கு நினைவு இல்லை. ஆயினும் என்னைச் சுற்றி நின்ற விநோதமான ஜனங்களில் மெலிந்த பச்சை நிறமுடைய கிழவி ஒருத்தி நின்றதும் எனக்கு நினைவு இருக்கிறது.

“ ராஸ்ப்பெரி ஜாமைச் சூடான தேநீரில் போட்டுக் கொடுங்கள் ; கம்பளியால் போர்த்துவிடுங்கள்......” என்று, மற்ற குரல்கள் எல்லாம் அடங்கிப்போகும் வகையில் கம்பீர மான குரலில் அந்தப் பச்சைப் பெண்மணி சொன்னாள்.

எல்லாம் அவளிடம் பச்சையாய் இருந்தன ; ஆடை, தொப்பி, முகம், அவளுடைய இடது கண்ணுக்குப் பக்கத்தில் இருந்த மச்சம் அனைத்துமே பச்சையாய் இருந்தன. மச்சத்திலிருந்து முளைத்து இருந்த ரோமம்கூட புல்போல இருந்தது. கீழ் உதட்டைத் தொங்கவிட்டு, மேல் உதட்டைத் தூக்கிக்கொண்டு அவள் என்னைக் கவனித்தாள் ; அவளுடைய பற்களும் பச்சையாய் இருந்தன ; கறுப்புக் கையுறை மாட்டியிருந்த தன் கையைக் கண்களுக்கு மேலே அவள் வைத்துக் கொண்டாள்.

“ யார் இவள் ?” என்று குளறியபடி நான் கேட்டேன்.

“ உனக்கு இன்னொரு பாட்டியாக வரப்போகிறவள் இவள் ” என்று இனிமைகுன்றிய குரலில் என் தாத்தா பதில் சொன்னார்.

என் தாய் இதைக் கேட்டதும் சிரித்துவிட்டு யெவ்ஜீனி மாக்ஸிமோவை என் பக்கமாகத் தள்ளி “ இவர்தான் உன் பிற்காலத் தந்தை ” என்று சொன்னாள்.

புரிந்துகொள்ள முடியாத சில வார்த்தைகளை அவள் விரைவாகச் சொன்னாள். மாக்ஸிமோவோ தன் கண்களை ஒடுக்கிக்கொண்டு என்னைக் குனிந்து பார்த்தார். “உனக்குக் கொஞ்சம் வருணங்கள் வாங்கித் தருகிறேன் ” என்று சொன்னார்.

அந்த அறை மிகவும் பிரகாசமாக இருந்தது. மேஜை மீது ஐந்து மெழுகுவர்த்திகளைக்கொண்ட வெள்ளித்தீபக்கால் ஒன்று இருந்தது. அவற்றுக்கு நடுவே என் தாத்தாவுக்கு மிகவும் பிரியமான “அன்னையே ! அழ வையாதே ” என்ற

விக்கிரகம் இருந்தது. அதன் விளிம்பில் இருந்த முத்துக்கள் பிரகாசித்து, மெழுகுவர்த்தி ஒளியில் மறைந்துபோயின; ஆயினும் தங்க மலர் வளையத்தில் பதித்திருந்த மாணிக்கங்கள் டால் அடித்தன. கறுப்பு ஜன்னல்களின் ஊடே ரொட்டி போன்ற உருண்டை முகங்கள் எட்டிப் பார்த்தன; ஜன்னல் கதவுகளில் தட்டையான மூக்குகள் ஒட்டிக்கொண்டு தெரிந்தன; என்னைச் சுற்றியுள்ள அனைத்துமே நீந்துவதாக எனக்குத் தோன்றியது; பச்சை நிறப் பெண்மணி குனிந்து என் காதுகளைத் தன் குளிர்ந்த கையால் தொட்டுப் பார்த்து, "ஆகட்டும் எப்படியாவது; ஆகட்டும் எப்படியாவது" என்று முணுமுணுத்தாள்.

"இவன் மயக்கமாய்க் கிடக்கிறான்" என்று சொல்லி, கதவு அருகே என்னைப் பாட்டி தூக்கிப்போனாள்.

எனக்கு மயக்கம் இல்லை; கண்களை மட்டும்தான் மூடிக்கொண்டு இருந்தேன். என்னைத் தூக்கிவந்தபோதே என் பாட்டியை பார்த்து "நீ ஏன் சொல்லாமல் இருந்து விட்டாய்?" என்று கேட்டேன்.

"சரி. சரி. பேசியதுபோதும் நிறுத்து" என்று என் பாட்டி சொன்னாள்.

"நீங்கள் எல்லோரும் சேர்ந்து என்னை இப்படியா ஏமாற்றுகிறீர்கள்?"

என்னைப் படுக்கைமீது கிடத்திய பின், தன் முகத்தைத் தலையணையில் புதைத்துக்கொண்டு, விம்மி விம்மி என் பாட்டி அழுதாள்; உடம்பு குலுங்கப் பெருமூச்சுவிட்டுக்கொண்டே அவள், "அழு; அழுது அழுது மனத்தை ஆற்றிக்கொள்" என்று சொன்னாள்.

ஆனால் எனக்கு அழ வேண்டும் என்று தோன்றவில்லை. மாடியில் இருட்டாயும் குளிராயும் இருந்தது. என் உடம்பு நடுங்கிய காரணத்தால், படுக்கை அசைந்து கொடுத்துக் கிறீச்

சிட்டது. பச்சைப் பெண்மணி என் கண்களைவிட்டு அகல வில்லை. நான் தூங்கிவிட்டதாக நடித்தேன் ; தனியாக விட்டு விட்டு என் பாட்டி போய்விட்டாள்.

அடுத்த சில நாட்கள் ஒரே மாதிரி மந்தமாய்க் கழிந்தன; தான் கலியாணம் செய்துகொள்ளும் முடிவை அறிவித்து விட்டு, என் அன்னை போய்விட்டாள் ; மீண்டும் நெஞ்சை அழுத்தும் அமைதி வீட்டில் நிலவியது.

ஒரு நாள் காலையில் என் தாத்தா கையில் உளியை எடுத்துக்கொண்டு வந்து, வெளி ஜன்னலைச் சுற்றி யிருக்கும் சாந்தைப் பெயர்த்து எடுத்தார். ஒரு பாத்திரத்தில் கொஞ்சம் தண்ணீரும் கந்தைகளும் எடுத்துக்கொண்டு என் பாட்டி வந்தாள்.

"நல்லது. கிழட்டுச் சீமாட்டி ?" என்று என் தாத்தா அமைதியாகக் கேட்டார்.

"நல்லதா ? என்ன நல்லது ?"

"உனக்குச் சம்மதமா ?"

படிக்கட்டில் எனக்குப் பதில் சொல்லிய அதே பதிலைத் தான் என் தாத்தாவுக்கும் அவள் சொன்னாள் :

"சரி. சரி. பேச்சு ஒன்றும் வேண்டாம், தெரிகிறதா?" என்றாள்.

இந்த வார்த்தைகளுக்கு விசேஷ பொருள் இருப்பதாகத் தோன்றியது. மனத்துக்கு ஒவ்வாத ஏதோ பெரிய சமாச்சாரம் ஒன்றை மறைத்துவைக்க விரும்புபவர்கள் போலவும், ஒவ்வொருவருக்கும் உண்மை நிலை தெரிந்து இருந்தும் அதை வெளியிடப் பிரியப்படாதவர்கள் போலவும் இருந்தனர்.

கவனமாக வெளி ஜன்னலை அகற்றி, அதை என் தாத்தா எடுத்துக்கொண்டு போய்விட்டார். என் பாட்டி உள் ஜன்னலைத் திறந்துபோட்டாள். ஒரு ஸ்டார்லிங் பறவையும் சில அடைக்கலங் குருவிகளும் அதிலிருந்து பறந்து தோட்

டத்துக்குள் சென்றன. ஈரக் கசிவுள்ள பூமியின் ஒருவித நாற்றம் அறை முழுதும் பரவி மூக்கைத் தொளைத்தது. அடுப்பின்மீது இருந்த நீலநிற ஓடுகள் ஏமாற்றத்தால் வெளிறிப்போய் இருந்தன. அவற்றைப் பார்ப்பதற்கே எனக்குக் குலைநடுக்கம் உண்டாயிற்று; படுக்கையைவிட்டு நான் மெல்ல ஊர்ந்தேன்.

" வெறும் காலோடு நடக்காதே" என்று என் பாட்டி எச்சரித்தாள்.

" நான் தோட்டத்துக்குப் போகப்போகிறேன்."

" ஈரக்கசிவு காயும் வரையில் பொறுத்திரு."

அவள் சொற்படி நடக்க எனக்கு விருப்பம் இல்லை; பெரியவர்களைப் பார்ப்பது என்றாலே எனக்கு இப்பொழுது எரிச்சலாக இருந்தது.

ஊசி போன்ற வெளிறிய இளம் பசும் புற்கள் பூமியைக் கிழித்துக்கொண்டு தங்கள் தலையைக் காட்டின; ஆப்பிள் மரங்களில் பூ மொக்குகள் நிறைந்து பூரித்து இருந்தன. அழகிய பசிய பாசி, பெட்ரோவ்னு வீட்டின் கூரை முழுதும் அழகாகப் படர்ந்திருந்தது. எங்கு பார்த்தாலும் பறவைகள் தென்பட்டன. நறுமணமும் சலசலப்புமுள்ள இந்தக் காற்றைச் சுவாசித்து என் தலை சுழன்றது. மாமா பீட்டர் தன் கழுத்தை வெட்டிக்கொண்ட குழியைச் சுற்றி, கபில நிறப் புல் பூண்டுகள் பனியின் பயனுப் முளைத்திருந்தன. அவற்றைப் பார்ப்பதற்கே விகாரமாய் இருந்தது. இந்தப் பூண்டுகளோ அல்லது கரிபிடித்து நாதியற்றுக் கிடந்த உத்தரமோ வசந்த காலத்துடன் எவ்விதத் தொடர்பும் கொண்டதாகத் தோன்றவில்லை. பொதுவாக, பொருந்தாத இடத்தில் வெறுப்பூட்டும் வகையில் அந்தக் குழி இருப்பதாகத் தோன்றியது. இந்தக் களைகளை எல்லாம் பிடுங்கி அப்பால் எறிந்து, உத்தரங்களையும் செங்கல்களையும் அகற்றி, முற்றத்தில் ஒரு

பகுதியின் இருந்த ஏனையவற்றையும் சுத்தப்படுத்த ஆத்திரம் கொண்டேன் நான் ; இவ்வாறு செய்து முடித்து, பெரியவர்கள் யாருடனும் சேராமல் தனித்து இருந்து கோடை காலத்தைக் கழிக்க நான் ஆசைப்பட்டேன். ஆகவே அந்த இடத்தைச் சுத்தம் செய்வதில் முனைந்து ஈடுபட்டதால், சமீபத்தில் வீட்டில் நடந்த நிகழ்ச்சிகளைப்பற்றிய எண்ணம் எனக்கு மறந்து போயிற்று. உள்ளத்தில் அந்த நினைப்பு உறுத்திக் கொண்டே இருந்தபோதிலும், நாளுக்கு நாள் அதன் வேகம் குறைந்துகொண்டே வந்தது.

" ஏன் இப்படி மூஞ்சியை நீட்டிக்கொண்டிருக்கிறாய் ?" என்று, என் பாட்டியும் என் அன்னையும் சேர்ந்தாற் போல் கேட்டார்கள். இது என் மனநிலையைக் கலைத்தது ; ஏனெனில் அவர்களுடன் நான் கோபமாக இருக்கவில்லை. வீடு சம்பந்தப்பட்ட விஷயங்கள்தான் எனக்குப் பிடிக்காமல் இருந்து வந்தன. இரவுச் சாப்பாடு, மத்தியானச் சாப்பாடு, தேநீர் முதலியன நடக்கும் நேரங்களில் அடிக்கடி அந்தப் பச்சைநிறப்பெண்மணியும் கலந்துகொண்டாள். பழைய வேலி மீது உளுத்துப்போன மரம் சாய்ந்திருப்பதுபோல, அவள் உட்கார்ந்து இருந்தாள். காண முடியாத நூல்களால் கண்களை அவள் முகத்தில் வைத்துத் தைக்கப்பெற்றதுபோல் இருந்தன, அவளுடைய கண்கள். எலும்புமயமான குழிகளுக்குள்ளே இருந்த தனது கண்களை அவள் உருட்டி உருட்டி விழித்தாள். எதையும் கவனித்தாள் ; யாவற்றையும் ஆராய்ந்து பார்த்தாள் ; ஆண்டவனைப்பற்றிய விஷயங்களைப் பேச நேரும்பொழுது, முகட்டைப் பார்க்கத் தன் கண்களை உயர்த்திக்கொண்டு பேசினாள் ; இவ் உலக சம்பந்தமான விஷயங்களைப்பற்றிப் பேசும் பொழுது, கண்களைத் தரைமீது பதித்துக்கொண்டு பேசினாள். தவிட்டால் செய்து, எதையோ கொண்டு ஒட்டி இருப்பது போன்று, அவளுடைய புருவங்கள் இருந்தன. வாய்க்குள்

அவள் தின்றுக்கொண்டதை எல்லாம் அவளுடைய அகல மான வெறும் பற்கள் அரைத்து மென்று தின்றன. வெளியே நீட்டிக்கொண்டு இருக்கும் தனது சிறிய விரலால், கோண லாகவும் வேடிக்கையாகவும் 'போர்க்கை' அவள் பிடித் திருப்பாள். காதுகளுக்கு முன்பு சிறிய குறுத்தெலும்புக் கட்டிகள் சுற்றிச் சுற்றி உருண்டன. காதுகளும் அசைந் தன ; அவளுடைய மச்சங்களில் இருந்த பச்சை மயிர்கள், சுத்தமாயும் சுருங்கிப்போய் மஞ்சளாயும் இருந்த தோல் மீது காற்றால் உந்தப்படுவதுபோல வெறுப்பூட்டும் வகை யில் ஆடிக்கொண்டிருந்தன. கிட்ட நெருங்க எனக்குத் தைரியம் ஏற்படாதபடி அவளும் அவளுடைய புதல்வனும் அவ்வளவு வீரியமற்றவர்களாய் இருந்தார்கள். எங்களுக்கு அறிமுகம் ஏற்பட்ட ஆரம்ப நாட்களில், உலர்ந்துபோன அவளுடைய கைகளை முத்தமிடும்படியாக என்னிடம் பல முறைச் சொல்லிப் பார்த்தார்கள். சலவைக் கம்பெனி சோப்பும் வாசமும் அடித்த காரணத்தால், நான் முத்தம் கொடுக்க விரும்பாமல் ஓடிவிடுவது உண்டு.

" இந்தப் பையனுக்குக் கவனமாகப் பயிற்சி கொடுத்துப் பழக்க வேண்டும். தெரிகிறதா யெவ்ஜீனி ?" என்று அவள் திரும்பத் திரும்பத் தன் புதல்வனிடம் சொல்லிக்கொண் டிருந்தாள்.

அவர் அடக்கமாக அவளுக்குக் கீழ்ப்படிந்து தன் தலையைத் தாழ்த்திக்கொள்வார். பிறகு முகத்தைச் சுளித்துக் கொண்டு ஒன்றும் சொல்லாமல் இருந்துவிடுவார். அந்தப் பச்சை நிறக்காரியின் பிரசன்னம் ஒருவருக்குமே பிடிக்க வில்லை.

இந்தக் கிழவியையும் அதேபோல அவளுடைய புதல் வரையும் நான் வெறுத்தேன் ; வெறுப்பு வளர வளர எனக்கு உதையும் அதிகமாகக் கிடைத்து வந்தது. ஒரு நாள் மத்தி

யானம் நாங்கள் சாப்பிட்டுக்கொண் டிருந்தபோது, கண்களை உருட்டி உருட்டி விழித்துக்கொண்டே "அன்புள்ள அலெக்ஸி ! நீ ஏன் இப்படி அவசர அவசரமாகச் சாப்பிடுகிறாய் ? பெரும் பெரும் கவளமாகத் தள்ளுகிறாயே ? தொண்டை விக்கி மூச்சுத் திணறிவிடும்" என்று அவள் சொன்னாள்.

உடனே துண்டத்தை என் வாயிலிருந்து வெளியே எடுத்து, அதை என் போர்க்கில் குத்தி அவளிடம் நீட்டி "உனக்கு அவசியம் இருப்பின் இதோ இதை எடுத்துக் கொள்" என்று நான் சொன்னேன்.

மேஜையிலிருந்து என்னை அப்பால் பிடித்து இழுத்து, எனக்கு அவமானம் நேரும்படியாக மாடிக்கு என் அன்னை என்னைத் துரத்திவிட்டாள்.

பிறகு, நான் இருக்கும் இடத்துக்கு வந்து என் பாட்டி வயிறு குலுங்கச் சிரித்தாள் ; தன் வாயில் கையை வைத்துப் பொத்திக்கொண்டு "ஆண்டவனே! ஆண்டவனே! நீ சரியான போக்கிரியடா! உன்னைப் பேய் பிடித்துக்கொள்ள!" என்றாள்.

தன் வாயில் என் பாட்டி கையை வைத்துப் பொத்திக் கொண்ட முறை எனக்குப் பிடிக்கவில்லை. ஆகவே அவளிடமிருந்து விடுவிடுத்துக்கொண்டு ஓடி, மோட்டின்மீது ஏறி, புகைப்போக்கிக்குப் பின்னே நீண்ட நேரம் உட்கார்ந்து இருந்தேன். ஏதாவது குறும்பு செய்ய வேண்டும் என்று எனக்கு அடக்க முடியாத ஆத்திரம் இருந்தது ; எல்லோரிடமும் மரியாதைக்குறைவான விஷயங்களைச் சொல்ல வேண்டும் என்றும் தோன்றியது. இந்த ஆத்திரத்தை என்னால் கட்டுப்படுத்திக்கொண்டு இருக்க முடியவில்லை ; எப்படியாவது செய்து தீர்த்துவிடவேண்டும் என்று தோன்றியது. ஒரு நாள் செர்ரீப் பழத்தின் பசையை என் பிற்கால மறு தந்தையின் நாற்காலியிலும் அந்தப் பாட்டியின் நாற்காலியிலும் நான்

தடவி வைத்துவிட்டேன். அவர்கள் அதில் நன்ருக ஒட்டிக் கொண்டிருந்தது எனக்கு மிக வேடிக்கையாக இருந்தது. ஆனல் இதற்காக என் தாத்தா என்னை வெளுத்துவாங்கி விட்டார் ; என் தாய் நான் இருக்கும் மாடிக்கு வந்து, தன் முழங்கால்களுக்கு இடையில் இறுக்கமாகப் பிடித்துக் கொண்டாள் ; பிறகு அவள் என்னைப் பார்த்து " நீ ஏன் இப்படிப் போக்கிரித்தனம் செய்கிருய் ? எனக்கு இது எவ்வளவு கஷ்டமாய் இருக்கிறது என்பதை நீ உணர்ந்திருந்தால் இப்படியும் செய்வாயா ?" என்று கேட்டாள்.

அவள் கண்களில் நீர் மல்கி நின்றது ; தன் கன்னத்தில் என் தலையைச் சாய்த்துக்கொண்டு அவள் இருந்தாள் ; இதற்குப் பதிலாக அவள் என்னை அடித்திருந்தால் எவ்வளவோ நன்ருய் இருந்திருக்கும் ! அழுவதை அவள் நிறுத்திக் கொண்டால், இனி மாக்ஸிமோவ் குடும்பத்தாருக்கு எவ்வித தீங்கும் புரிவது இல்லை என்று நான் உறுதி கூறினேன்.

" சரி " என்று அவள் மெதுவாகச் சொன்னுள். " நீ குறும்புத்தனம் செய்யக் கூடாது ; விரைவில் கலியாணம் செய்துகொண்டு நாங்கள் மாஸ்கோவுக்குப் போகப் போகிரேம். நாங்கள் திரும்பியதும் நீ வந்து எங்களுடன் வசிக்கலாம். யெவ்ஜீனி வாஸிலியேவிச் அன்பானவர் ; கெட்டிக்காரர். அவரை நீ நேசிப்பாய் என்பதை நான் அறிவேன். இதன் பின்னர் நீ ஆரம்பப் பள்ளிக்குச் சென்று படித்து, பிறகு அவரைப்போலவே நீயும் ஒரு மாணவன் ஆகிவிடலாம். படித்த பின்னர் டாக்டராகவோ அல்லது வேறு எதாகவோ நீ விரும்புவதுபோல் ஆகலாம் ; எந்தக் காரியத்தையும் தன் விருப்பம்போல் படித்தவனுல்தான் செய்ய முடியும். சரி, இப்போது நீ போய் விளையாடு " என்று சொன்னுள்.

அவள் கூறின " பிறகுகளும் " " அதன் பின்னர்களும் " படிக்கட்டு வழியாக என்னைக் கீழே இறக்கி,

அவளிடமிருந்து என்னைப் பிரித்து இருட்டிலும் தனிமையிலும் கொண்டுபோய் தள்ளுவதுபோல் எனக்குத் தோன்றியது. அவள் கூறின எதிர்காலம் இன்பமான காலமாக இருக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை. " நீ கலியாணம் செய்துகொள்ள வேண்டாம். நான் உழைத்து உனக்குச் சாப்பாடு போடுகிறேன் " என்று என் தாயிடம் சொல்ல வேண்டும்போல் எனக்குத் தோன்றியது.

இருந்தாலும் இதை நான் அவளிடம் தெரிவிக்கவில்லை ; எப்பொழுதுமே என் தாயிடம் எனக்கு அன்பும் பரிவும் உண்டு. ஆனால் அவற்றை அவளிடம் வெளிப்படுத்திக்கொள்வதற்கு எனக்குத் தைரியம் இருக்கவில்லை.

தோட்டத்தில் நான் செய்துவந்த வேலை நாளுக்கு நாள் அபிவிருத்தி அடைந்து வந்தது. களைகளைப் பிடுங்கியும் கிள்ளியும் அப்பால் எறிந்தேன் ; குழியின் ஓரத்தில் செங்கல்களைக் கொண்டு வரிசையாக அடுக்கி வைத்தேன் ; பிறகு மேலும் செங்கல்களைக் கொண்டுவந்து பரப்பி, ஒருவர் படுத்துக்கொள்ளும் அளவுக்கு ஆசனம் ஒன்றைத் தயார் செய்தேன். செங்கல்களுக்கு இடையே இருக்கும் இடத்தில் களிமண்ணை அப்பி, அதன்மீது பலநிறப் புற்களையும் உடைந்த பாத்திரங்களின் துண்டுகளையும் பதித்துவைத்தேன். அவற்றின்மீது வெய்யல் அடித்தபோது, மாதாகோயில்களில் இருக்கும் விக்கிரகங்கள் போல அவை மினுமினுத்துப் பளபளத்தன.

நான் செய்திருந்த காரியத்தைக் கவனித்த என் தாத்தா ஒரு நாள் "கெட்டிக்காரத்தனமாக இதை நீ செய்து முடித்து இருக்கிறாய். வேர்களைப் பிடுங்காமல் விட்டுவைத்திருப்பதால், களைகள்தான் மீண்டும் மீண்டும் முளைக்கக் கூடும். மண்வெட்டியை எடுத்து வா ; அவற்றை எல்லாம் உனக்காக நான் வெட்டிச் சரிசெய்து தருகிறேன் " என்றார்.

நான் எடுத்து வந்து கொடுத்ததும் தன் கையாலேயே அவர் கொத்தினார் ; முணகிக்கொண்டே மண்வெட்டியால் ஆழமாக நிலத்தில் வெட்டினார்.

" வேர்களை எல்லாம் அப்பால் எறிந்துவிடு ; நான் இங்கே சூரியகாந்தியும் ஹாலி ஹாக்ஸும் நட்டுத் தரு கிறேன். அது மிக மிக அழகாய் இருக்கும் " என்றார்.

பிறகு திடீரென்று மண்வெட்டிமீது சாய்ந்து எதுவுமே சொல்லாது அசையாமல் நின்றுவிட்டார். அவரை நான் கவனித்துப் பார்த்தேன் ; கண்களிலிருந்து கண்ணீர் மள மளவென்று கொட்டியது. நாயின் கண்களைப்போலச் சிறுத் தும் அறிவுள்ளதாகவும் அந்தக் கண்கள் தெரிந்தன.

" என்ன சமாச்சாரம் ?"

தன் உடலை ஒருஅசைப்புஅசைத்துக்கொண்டு, தன் கையால் முகத்தைத் துடைத்துக்கொண்டு, என்னை அவர் கவனித்தார்.

" எனக்கு நன்றாக வியர்த்துவிட்டது ; புழுக்கள் எல் லாம் நெளிவதைப் பார் !" என்றார்.

மீண்டும் ஒரு முறை அவர் தோண்டத் தொடங்கினார் ; திடீரென்று அவர் சொன்னார் : " இப்படிச் செய்வதில் பிரயோஜனம் எதுவும் இல்லை. கொஞ்சம்கூட இல்லை ; இந்த வீட்டை விரைவில் நான் விற்றுவிடப் போகிறேன். இலையுதிர் காலத்தில் பெரும்பாலும் விற்றுவிடக் கூடும். உன் தாயாரின் சீதனத்துக்காகப் பணம் தேவைப்படுகிறது. ஊம். அவளா வது சௌகரியமாக வாழட்டும்...!" என்றார்.

கையை அசைத்துவிட்டு, மண்வெட்டியை அவர் கீழே போட்டார் ; பிறகு குளிக்கும் அறைக்குப் பின்னே தோட் டத்தின் ஒரு மூலைக்குச் சென்றார். அங்கே கொஞ்ச இடங் களில் அவர் உரம்போட்டு வைத்து இருந்தார். மண் வெட்டியை எடுத்துத் தோண்ட ஆரம்பித்த நான் அதால் என் கால்விரலை வெட்டிக்கொண்டுவிட்டேன்.

இந்தக் காயத்தின் காரணமாக, என் தாயார் திருமணத்தில் நான் கலந்துகொள்ள முடியவில்லை. வெளியே கதவு அருகே நின்று அவளை நான் கவனித்தேன். மாக்ஸிமோவ் தன் கையைப் பிடித்துக்கொண்டு வர தெருவில் அவள் நடந்துவந்தாள் ; தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு இருந்தாள். செங்கல்கள் பாவியிருந்த வீதியில், செங்கல்களின் வெடிப்பினூடே முளைத்திருந்த புதிய தளிர்களை மிதித்துவிடாமல் அவள் கவனமாக நடந்துவந்தது, ஏதோ ஆணிகளின்மீது அவள் நடந்து வருவதுபோல எனக்குத் தோன்றியது.

திருமணம் அடக்கமாக நடந்தது. சடங்குக்குப் பின்னர் நடந்த தேநீர் பருகுதல் அவ்வளவு மகிழ்ச்சிகரமானதாக இருக்கவில்லை. என் தாய் உடனே தனது படுக்கை அறைக்குள் சென்று சாமான்களை எல்லாம் எடுத்து உடுப்புப் பெட்டியில் அடுக்கினாள். எனக்குப் பக்கத்தில் என் மறு தந்தை அமர்ந்து இருந்தார். அவர் என்னிடம் சொன்னார் :

" உனக்கு வருணங்கள் தருவதாக நான் வாக்களித்து இருந்தேன் ; இங்கே நல்ல வருணங்கள் கிடைக்கவில்லை ; என்னிடம் இருக்கும் வருணங்களை உனக்கு நான் தர முடியாது. மாஸ்கோ சென்றதும் உனக்கு நான் சில வருணங்கள் அனுப்புகிறேன்."

"அவற்றை வைத்துக்கொண்டு நான் என்ன செய்வது?"

" படம் எழுத நீ பிரியப்படவில்லையா ?"

" எனக்கு எழுதத் தெரியாது."

" அப்படியானால் வேறு ஏதாவது அனுப்புகிறேன்."

இந்தச் சமயத்தில் என் தாய் அங்கே வந்தாள். " நாங்கள் விரைவில் திரும்பிவிடுவோம். படிப்பு முடிந்து உன் தந்தை பரீட்சையில் தேறிய பிறகு நாங்கள் திரும்பிவிடுவோம் " என்று சொன்னாள்.

என்னைப் பெரிய பிள்ளையாக மதித்து என்னுடன் அவர்கள் இப்படிப் பேசியது எனக்கு மகிழ்ச்சியை அளித்தது. ஆனால், தாடி முளைத்துள்ள ஒரு மனிதர் இன்னும் படித்துக் கொண்டிருப்பது எனக்கு விந்தையாய் இருந்தது.

"நீங்கள் என்ன படிக்கிறீர்கள்?" என்று அவரை நான் கேட்டேன்.

"சர்வேயிங்."

அது என்ன என்று கேட்பதற்கே எனக்கு அதிக சோம்பலாய் இருந்தது. வீட்டில் மனத்தை அமுக்கும் ஒருவித அமைதியும் சிறிது சலசலப்பும் நிலவின. இரவு வந்துவிட்டால் தேவலை என்று எனக்குத் தோன்றியது. அடுப்புக்குப் பின்புறமாக நின்றுகொண்டு, ஜன்னல் வழியாக, பாதி மூடின கண்களுடன் என் தாத்தா எட்டிப்பார்த்தார். பெருமூச்சு விட்டுப் பொருமிய என் தாய்க்கு மூட்டை கட்டுவதற்குப் பச்சைப் பெண்மணி உதவிபுரிந்தாள். மத்தியானத்திலிருந்து குடிபோதையில் மூழ்கியிருந்த என் பாட்டி, குடும்பத்தாருக்கு அவமானம் நேர்ந்துவிடக் கூடாது என்பதற்காக, மாடிக்குச் சென்று படுத்து, கதவைத் தாளிட்டுக்கொண்டாள்.

அடுத்த நாள் அதிகாலையில் என் தாய் புறப்பட்டுப்போய் விட்டாள். தழுவி என்னிடம் விடைபெற்றுக்கொண்ட அவள், விடை பெறும்பொழுது, தரையிலிருந்து வெகு எளிதாக என்னைத் தூக்கி, என் கண்களைக் கூர்ந்து கவனித்தாள். இதற்கு முன் அவள் என்னை இப்படிப் பார்த்ததே கிடையாது.

"நல்லது; விடைபெற்றுக்கொள்கிறேன்" என்று சொல்லி என்னை அவள் முத்தமிட்டாள்.

ரோஜா மலர் நிறத்தில் இருந்த வானத்தைக் கவனித்துக் கொண்டே, "எனக்குக் கீழ்ப்படிந்து நடப்பதாகச் சொல்லு" என்று என் தாத்தா கவலையோடு சொன்னார்.

"உன் தாத்தாவுக்கு நீ கீழ்ப்படிந்து நடக்க வேண்டும்" என்று புத்தி சொல்லி, எனக்கு அவள் சிலுவை அடையாளம் வரைந்தாள். வேறு ஏதாவது அவள் எனக்குச் சொல்வாள் என்று நான் எதிர்பார்த்தேன். இடையிடையே என் தாத்தா குறுக்கிட்டது எனக்குக் கோபமாக இருந்தது.

அவர்கள் ஒரு குதிரை வண்டிக்குள் ஏறிக்கொண்டார்கள்; என் தாயினுடைய ஆடை எதிலோ சிக்கிக்கொண்டு விட்டது; அதைச் சரிப்படுத்தி எடுத்துவிட்டுக்கொள்ள, என் அன்னை ஆத்திரத்துடன் சிரமப்பட்டாள்.

"உனக்குத் தெரியவில்லையா? அவளுக்கு உதவி செய்" என்று என் தாத்தா என்னிடம் சொன்னார். அதிகமாக ஏங்கிப் போய் இருந்த என்னால் அவளுக்கு உதவிபுரிய முடியவில்லை.

நேவி புளூ கால்சட்டைக்குள் இறுக்கமாக இருந்த தன் கால்களை மாக்ஸிம் கவனமாக நீட்டிவிட்டுக்கொண்டார்; அப்போது என் பாட்டி அவரிடம் கொடுத்த சில பொட்டலங்களை வாங்கித் தன் மடிமீது போட்டு, அவற்றைத் தன் மோவாயால் பிடித்துக்கொண்டார்.

சுருக்கம் விழுந்து வெளுத்துபோன தன் புருவத்தை அவர் கூச்சப்பட்டு நெளித்துக்கொண்டே "போதும்!" என்று சொன்னார்.

பச்சைப் பெண்மணியும் அவளுடைய மூத்த புதல்வன் ஒரு அதிகாரியும் இன்னொரு வண்டியில் ஏறிக்கொண்டார்கள். மெழுகுப் பொம்மைபோல அவள் விரைப்பாக உட்கார்ந்து இருந்தாள்; அவரோ தன் வாளின் கைப்பிடியால் தாடியைத் தடவியவாறு கொட்டாவிவிட்டார்.

"நீ யுத்தத்துக்குப் போகப் போகிறாயாக்கும்?" என்று என் தாத்தா கேட்டார்.

"ஆம். உண்மைதான்."

“நல்ல காரியமாயிற்று; துருக்கியர்களுக்குச் சரியானபடி கொடுக்க வேண்டியதுதான்.”

அவர்கள் புறப்பட்டார்கள். என் தாய் பல முறை திரும்பித் திரும்பிப் பார்த்துத் தன் கைக்குட்டையை ஆட்டினாள். வீட்டின் சுவரில் சாய்ந்தவாறு அழுதுகொண்டு நின்ற என் பாட்டியும் தன் கைக்குட்டையை ஆட்டினாள்; ஆனால் என் தாத்தாவோ கஷ்டப்பட்டுக் கண்ணீர் உகுத்தார்.

“இதனால் நன்மை — எதுவும் விளையப் — போவது இல்லை” என்று முணுமுணுத்தார்.

தடத்தில் குதிரை வண்டிகள் ஓடுவதைக் கவனித்துக் கொண்டு, ஒரு முக்காலிமீது நான் நின்றேன்; வண்டிகள் சென்று ஒரு மூலையில் திரும்பிவிட்டன... என்னுள்ளே ஏதோ ஒன்று தடால் என்று இறுக்கமாக மூடிக்கொள்வதாக எனக்குத் தோன்றியது...

ஒரு நாள் அதி காலை நேரம். தெருக்களில் சந்தடி இல்லை; ஜன்னல்கள் எல்லாம் இன்னும் மூடியிருந்தன; தெரு இப்படி வெறித்து இருந்ததை இதற்கு முன்னர் நான் பார்த்தது இல்லை. வெகு தொலைவிலிருந்து ஆட்டிடையனின் ஊதுகுழல் போடும் ஓலம் நீடித்துக் கேட்டது.

என் தோளைத் தட்டி “காலையில் ஏதாவது சாப்பிடவா” என்று என் தாத்தா சொன்னார். “உன் தலை எழுத்து நீ என்னுடன் வாழ வேண்டும் என்று இருக்கிறது போலும். செங்கல்மீது நெருப்புக் குச்சியை உராய்வதுபோல நீ என்னை உராய வேண்டியதுதான்.”

காலையிலிருந்து இரவுவரை நானும் அவரும் தோட்டத்தில் அமைதியாக வேலை பார்த்தோம். மண்ணை அவர் கொத்திவிட்டார்; ராஸ்ப்பெரி புதர்களைத் தூக்கிக் கட்டிவிட்டார்; ஆப்பிள் மரங்களிலிருந்த பாசிகளை எல்லாம் அப்பால் அகற்றினார். கம்பளிப் பூச்சிகளை நசுக்கினார். ஆனால் நானோ எனது

மூலையை ஒழுங்குபடுத்தினேன். தீய்ந்து இருந்த உத்தரங் களை வெட்டிச் சுத்தப்படுத்தி, கம்பங்களாக என் தாத்தா பூமியில் நட்டுத் தந்தார் ; அவற்றில் எனது பறவைக் கூண்டு களை நான் தொங்கப் போட்டேன். எனது வீட்டை வெய்ய லும் பனியும் தாக்காதபடி, காய்ந்த புற்களைக் கொண்டு தட்டி கள் செய்து தொங்கவிட்டேன். அந்த மூலை மனத்துக்கு இனிமை பயப்பதாகக் காட்சி அளித்தது.

" காரியங்களை எப்படி எப்படிச் செய்ய வேண்டும் என் பதை நீ கற்றுக்கொள்வது நல்லதுதான்" என்று என் தாத்தா சொன்னார்.

வாழ்க்கையை அவர் ஊன்றிக் கவனித்து இருப்பதை நான் பெரிதும் மெச்சினேன். புற்கள் பரப்பி வைத்திருந்த ஆசனத்தில் சாய்ந்துகொண்டு சில சமயங்களில் அவர் சாவ தானமாகப் பேசுவார் ; மிகுந்த பிரயாசையுடன்தான் ஒவ் வொரு வார்த்தையையும் வாயிலிருந்து கஷ்டப்பட்டு அவர் வெளிக்கொணர்வதாகத் தோன்றும்.

" உன் தாயிடமிருந்து துண்டிக்கப்பட்ட தனித்த ஒரு துண்டம்போல நீ ஆகிவிட்டாய்; உன்னைவிட அதிகப் பிரியம் செலுத்தக்கூடிய குழந்தைகள் அவளுக்குப் பிறக்கும். உன் பாட்டியோ குடிப்பதில் இறங்கிவிட்டாள்."

எதையோ உற்றுக் கேட்பவர்போல அவர் நீண்ட நேரம் மௌனமாக இருந்தார் ; பிறகு பெருமூச்செறிந்தவாறு தொடர்ந்து இந்த வார்த்தைகளை உதிர்த்தார் :

" அவள் குடிக்க ஆரம்பித்து இருப்பது இது இரண் டாவது முறையாகும். மைக்கேலை யுத்த சேவைக்கு அழைத்த காலத்தில் முதலில் குடிக்கப் பழகிக்கொண்டாள் ; முட்டா ளான அவள், ஆள் சேர்ப்பதிலிருந்து விலக்கு அளிக்கும் பத் திரம் ஒன்று அவனுக்காக வாங்கும்படி என்னிடம் சொன்னாள். படையில் சேர்ந்து அவன் பணிபுரிந்து இருப்பானுயின் அவன்

நிலே வேறுவிதமாக இருந்திருக்கக் கூடும். என்ன ஆள் நான்! விரைவில் நான் இறந்துபோவேன்; நீ மட்டும் தனியாக வாழ நேரும் என்பது இதன் பொருள்; தெரிகிறதா? தனித்து நீ மட்டும் இருந்து சமாளிக்கும்படி நேரும். பிறரை நம்பி வாழாதே; பிறரை நம்பிப் பிறருக்கு உழையாதே; அமைதியாகவும் அடக்கமாகவும் நடந்துகொள்; ஆனல் முடிவில் எடுத்ததை விடாப்பிடியாகப் பற்றிக்கொள். யார் சொல்வதையும் கவனமாகக் கேட்டுக்கொள். ஆனல் எது உனக்கு நல்லது என்று தோன்றுகிறதோ அதை மட்டுமே செய்..."

மழை நாட்களைத் தவிர்த்து, கோடை காலம் முழுவதையும் நான் தோட்டத்திலேயே கழித்தேன். கதகதப்பான இரவுகளில் அங்கேயே தூங்கினேன். படுத்துக்கொள்வதற்கு என் பாட்டி எனக்கு ஒரு தோல் படுக்கை தந்தாள். அடிக்கடி அவளும் இரவுப் பொழுதை என்னுடன் கழித்தாள்; கை அளவு வைக்கோலை அள்ளிவந்து, எனது படுக்கைக்கு அருகே பரப்பி, அதன்மீது அவள் படுத்துக்கொள்வாள்; எனக்குக் கதைகள் சொல்லுவாள்; இத்தகைய வார்த்தைகளைத் திடீரென ஆச்சரியவயப்பட்டுக் கூறுவாள்:

"அதோ பார்! ஒரு எரிநட்சத்திரத்தை! பூமாதேவியான தாயிடத்து எல்லோருக்கும் எவ்வளவு ஈடுபாடு என்பதை இது காட்டுகிறது. எங்கேயோ ஒரு நல்ல மனிதர் பிறந்து இருக்கிருர்."

அல்லது:

"ஒரு புது நட்சத்திரம் தோன்றுகிறது பார்! என்ன அழகு! ஆகாயம் ஆகாயம்-ஆண்டவனின் ஆடையான அது, மாணிக்கங்கள் பதிக்கப் பெற்று எவ்வளவோ தொலைவில் இருந்து அல்லவா பிரகாசிக்கிறது!"

"மடையர்களே! சாவு வந்து பற்றிக்கொள்ளவா இப்படிக் கிடக்கிறீர்கள்! இடுப்பு வலி உண்டாகும்; இல்

லாது போனல் திருடர்கள் வந்து உங்கள் தொண்டையை அறுத்துவிடுவார்கள் ” என்று தாத்தா முணுமுணுத்தார்.

வானம் முழுதும் நெருப்புப் போன்ற தகதகப்பைப் பரப்பிவிட்டுச் சூரியன் அஸ்தமித்துவிட்டது. தோட்டத்திலுள்ள பசுமையான இடங்களில் எல்லாம் செம்பொன் நிறச் சாம்பலை அள்ளி வீசிவிட்டு அது மறைந்துவிட்டது. இதன் பின்னர் உலகத்தில் இருள் படர்கிறது. அந்தி நேரத்துக் கதகதப்பு ஒளியைக் கவ்வித் தன்னுள் இழுத்துக் கொண்டே வியாபித்துப் பரவுகிறது. வெய்யல் சாடின இலைகள் எல்லாம் கிளைகளில் வாடித் தொங்குகின்றன; புற்களும் பூமியை நோக்கித் தலை சாய்த்து நிற்கிறது. மென்மையும் வளமும் பொருந்திய மெல்லிய இசையைப்போல அனைத்துமே நறுமணத்தை பரப்புகின்றன ; தொலைவில் வயல்களில் இருக்குப் படைக் கூடாரங்களிலிருந்து, இசை தவழ்ந்து வருகிறது. தாயினுடைய அன்பில் காணப்படும் உறுதியும் சுகமும் இந்த இரவில் இருந்தன. அப்போது நிலவிய அமைதி தாயின் வாஞ்சையையும் கொஞ்சுதலையும் நிகர்த்து இருந்தன. பகல் நேரத்தில் வந்து உடம்பில் படிந்துபோன சோடாக் காரம் போன்ற உபாதைகளை எல்லாம் மறந்து போகும்படியாக, இதயத்துக்கு ஒரு இதத்தையும் அன்பையும் சுகத்தையும் தந்தது. நட்சத்திரங்கள் தோன்றுவதையும் தோன்றுகிற ஒவ்வொரு நட்சத்திரமும் வானத்தின் புதிய ஆழத்தை எல்லாம் நமக்குக் காட்டுவதுபோல் இருப்பதையும் படுத்துக்கொண்டே பார்ப்பது மனத்துக்கு இனிமையை அளிப்பதாக இருந்தது. பின்னிட்டே போய்க் கொண்டிருக்கிற இந்த ஆழமானது, பூமியிலிருந்து உன்னை லாவகமாகத் தூக்கிச் சென்றுவிடுவதுபோலத் தோன்றியது. பூமியானது உன் அளவுக்குச் சிறுத்துப் போய்விட்டதா அல்லது வியக்கத்தக்க வகையில் உன்னைச் சுற்றியுள்ள

அனைத்துடனும் ஒன்றிக் கலக்கும் அளவு நீ விஸ்வரூபம் பெற்றுவிட்டாயா என்ற எண்ணம் உனக்கு உண்டாகும். அமைதி அதிகரித்து, இருளும் அடர்ந்துவிட்டது. ஆனால் கட்புலனாகாத ஒலிகள்-சின்னச் சின்ன ஒலிகள்—தூக்கத்தில் பறவைகள் பாடுவது, ஓடுகிற முள்ளம்பன்றியின் சலசலப்பு, மனிதக் குரல் ஆகியன,—பகல் நேரத்தில் கேட்டதைக் காட்டிலும் முற்றிலும் வேறுபட்டதாய், இரவின் அமைதியை நுட்பமாக அழுத்திக் கச்சிதமாகச் சொல்லுவதாய் இருந்தன.

அக்கார்டியனின் முழக்கம், பெண்களின் சிரிப்பு, பாதையில் பரவியுள்ள செங்கல்களில் முள் உராய்வது, நாய் ஊளையிடுவது, இவைதான் கழியப்போகும் பகலை அறிவிக்கும் கடைசி ஒலிகள் எனலாம்.

திடீரெனத் தெருவிலோ அல்லது திறந்த வெளிகளிலோ குடிகாரர்களின் கூச்சலும் கூக்குரலும் கேட்கும். ஆட்கள் ஓடுவதும் கேட்கும். இந்த ஒலிகளை எல்லாம் கவனம் செலுத்தத்தக்க ஒலிகளாகச் சொல்ல முடியாது.

கையைத் தனது தலைக்குக் கீழே வைத்துக்கொண்டு என் பாட்டி மணிக்கணக்கில் விழித்துக் கிடப்பாள். நான் கேட்கிறேனா அல்லவா என்பதை முற்றுமே சட்டை செய்யாமல் அமைதியாக எதையாவது சொல்லிக்கொண்டு இருப்பாள்; இரவின் இன்பத்தை அதிகரித்து எடுத்துக்காட்டத் தக்க சில கதைகளைத் தேர்ந்தெடுத்துக் கூற அவள் ஒரு போதும் தவறுவது இல்லை.

இசை நயம் தோய்ந்த அவளுடைய பேச்சைச் செவிமடுத்துக்கொண்டே நான் தூங்கிப்போய்விடுவேன்; சூரிய ஒளி வந்து என் முகத்தில் வீசி, பறவைகளின் பாடல்கள் வந்து என் காதில் ஒலிக்கும்போதுதான் நான் விழிப்பேன். சூரியனின் கதகதப்பைக் கிரகித்துக்கொண்டே, காலைக் காற்று மெதுவாக வீசியது. ஆப்பிள் மரத்தின் இலைகள்

பனியை உதறி வீசின; புற்கள் பார்ப்பதற்கு அதிக பசுமையாய் இருந்தன; தமக்கு மேலே வியாபித்து லேசாகப் படந்திருந்த மூடுபனிக்கு நடுவே அவை பளிங்குபோல் பிரகாசித்தன. சூரிய கிரணங்கள் பரவப் பரவ வெளிர்நீல ஆகாயம் முழு நீல நிறத்தை அடைந்துகொண்டு வந்தது. கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஒரு உயரத்திலிருந்து, வானம்பாடியின் ஒரு பாடல் வந்து காதில் ஒலித்தது. புதிதாகப் பிறந்த நாளின் நானுவித நிறங்களும் ஒலிகளும், பனிபோல வந்து என் ஆத்மாவில் புகுந்தன. உள்ளம் இன்பத்தால் விம்மி, எழுந்து நடமாடியது; ஜீவராசிகள் அனைத்துடனும் இயைந்து வாழ என் ஆத்மா விரும்பியது.

சிந்தனை நிறைவும் மிகுந்த அமைதியும் பெற்று, என் வாழ்நாள்களில் நான் வாழ்ந்த காலம் அது. எனது சொந்த பலத்தை உணர்ந்து, அதை அந்தக் கோடைகாலத்தில் நான் வளர்த்துக்கொண்டேன். ஜனங்களைவிட்டு விலகி இருக்கலானேன். ஒவ்ஸியானிக்காவ் வீட்டுக் குழந்தைகளின் கூக்குரலோ சப்தமோ கேட்டால் அவர்களுடன் சேர்ந்து விளையாட வேண்டும் என்ற விருப்பம் எனக்கு இப்போது ஏற்படவில்லை. அவர்கள் என்னைப் பார்க்க வந்தால் சந்தோஷப்படுவதற்குப் பதிலாக, என் சொந்த முயற்சியால் நான் முதலில் உற்பத்தி செய்துள்ள தோட்டத்தைப் பாழ்படுத்தி விடுவார்களோ என அஞ்சினேன்.

என் தாத்தாவின் பிரசாரங்கள் எனக்குப் பிடிக்கவில்லை. பிறர்மீது கோபப்பட்டுக்கொள்வதாயும் கடுகடுப்பாயும் அவை வரவர ஆகிவிட்டன. என் பாட்டியுடன் அடிக்கடி சண்டை போட்டுக்கொண்டு, வீட்டைவிட்டு அவளை வெளியே அவர் துரத்திவிடுவார்; சில சமயம் அம்மான் யாக்கோவின் வீட்டிலும் சில சமயம் அம்மான் மைக்கேல் வீட்டிலும் சென்று அவள் இருப்பாள். சில சமயங்களில், பல நாட்கள்

ஒருபடியாக வராமல் இருந்துகொள்வாள். இதனுல் என் தாத்தா தானே சமையல் செய்துகொள்வார். ஊளேயிட்டுக் கொண்டும் சபித்துக்கொண்டும் இருப்பார். பாத்திரங்களே உடைத்துவிடுவார். நாளுக்கு நாள் சண்டை போடும் இயல்பு அவரிடம் அதிகரித்து வந்தது.

தோட்டத்திலுள்ள எனது மூலேயில் என்னே அவர் சந்திக்க வந்தால், புல் தரையில் அவர் சௌகரியமாக உட்கார்ந்துகொள்வார். எதுவுமே பேசாமல் நீண்ட நேரம் என்னேயே கவனித்துக்கொண்டு இருப்பார். பிறகு திடீரென என்னே நோக்கி " நீ எதுவுமே பேசாமல் இப்படி இருக்கிருயே ? ஏன் ?" என்று கேட்பார்.

" எனக்கு எதுவும் பேசத் தெரியாது."

" நாம் சிறந்த தரத்தைச் சேர்ந்தவர்கள் அன்று ; தெரிகிறதா ?" என்று அறிவு புகட்டும் தோரணேயில் ஆரம்பித்தார். " நமக்கு எதையும் ஒருவரும் கற்றுத்தர மாட்டார்கள்; யாவற்றையும் நமக்கு நாமே நாம் கற்றுக்கொள்ள வேண்டும். நூல்கள் எல்லாம் மற்றவர்களுக்குக்காகத்தான் எழுதப்பட்டுள்ளன ; பள்ளிக்கூடங்களும் மற்றவர்களுக்காகத்தான் கட்டப்பட்டுள்ளன. எதையும் நமக்கு நாமேதான் தேடிக் கொள்ள வேண்டும்......" என்று சொன்னுர்.

எழுந்து, கபில நிற அறைக்குள் சென்று அவர் இருந்து கொள்வார் ; பேசாமலும் அசையாமலும் அங்கே அவர் இருப்பதைப் பார்ப்பதற்குப் பயங்கரமாய் இருக்கும்.

வீட்டை அவர் இலேயுதிர் காலத்தில் விற்றுவிட்டார். வீட்டை விற்பதற்கு முதல் நாள், காலேயில் சாப்பிட்டுக் கொண்டிருந்தபொழுது, இந்தச் செய்தியை உறுதியாகவும் ஆனுல் துக்கத்துடனும் என் பாட்டியிடம் அவர் சொன்னுர். " தாயே ! நீண்ட காலமாக உணவு போட்டு உன்னே நான் ஆதரித்து வந்திருக்கிறேன். இப்பொழுது எல்லாம் தீர்ந்து

விட்டது. இனி உன்னை நீயேதான் போஷித்துக் கொள்ள வேண்டும் '' என்று சொன்னார்.

இப்படி அவர் ஒரு நாள் சொல்லுவார் என்பதை நீண்ட காலமாகவே என் பாட்டி எதிர்பார்த்து இருந்தாளாதலால், இதைக் கேட்டதும் அதிர்ச்சியுராமல் அவள் சும்மா இருந்தாள். சாவதானமாகப் பொடி டப்பியை எடுத்து, அதிலிருந்து பொடியை அள்ளித் தன் மூக்கில் நிரப்பிக்கொண்டாள். " சரி. செய்வதற்கு இனி என்ன இருக்கிறது! உள்ளதைக் கொண்டு நல்ல முறையில் காலம் தள்ள வேண்டியதுதான் '' என்றாள்.

சந்தின் கோடியில் இருந்த ஒரு பழைய வீட்டின் ஒரு கூடத்தின் இரண்டு இருட்டு அறைகளை என் தாத்தா வாடகைக்கு எடுத்துக்கொண்டார். வீட்டைவிட்டுப் புறப்பட்டுப் போகும் சமயத்தில், நீண்ட கயிறுகளுள்ள பழைய, தோல் செருப்பு ஒன்றை எடுத்து, அடுக்களைக்குள் என் பாட்டி திணித்தாள்; சப்பணம் கூட்டி உட்கார்ந்துகொண்டு அடுப்புத் தேவதையைக் கூப்பிட்டாள்.

" தேவதையே! தேவதையே! வெளியே புறப்பட்டு வந்து எங்களுடன் சேர்ந்து எங்களுடைய மற்றொரு வீட்டுக்கு வா. வரும்போது எங்களுக்கு அதிர்ஷ்டத்தையும் கொண்டுவா '' என்று வேண்டினாள்.

முற்றத்தில் நின்றுகொண்டிருந்த என் தாத்தா ஜன்னல் வழியாக இதைக் கவனித்துவிட்டார்.

" நேரமாகிறது தெரிகிறதா? விஸ்வாசம் அற்றவளே! நான் காட்டுகிறேன் பார்! இப்படி என்னை அவமானப்படுத்தாதே '' என்றார்.

" தந்தையே! பார்த்துக்கொண்டு இருங்கள். இப்படிச் சொல்வதால் துரதிர்ஷ்டம் வந்து உம்மைப் பிடிக்கும் '' என்று எச்சரித்தாள். என் தாத்தவோ அவள்மீது சீறி

விழுந்து, தேவதையை எடுத்துக்கொண்டு வரக் கூடாது என்று தடுத்துவிட்டார்.

பழைய சாமான்கள் வாங்கும் தாத்தாரி ஒருவனிடம் மூன்று தினங்கள்வரை மேஜை குமிச்சிகளை என் தாத்தா விற்ருர். சபித்தும் கோபமாகவும் அவனுடன் பேரம் பேசிக் கொண்டே இருந்தார். ஜன்னல் வழியாக என் பாட்டி இதைக் கவனித்தாள். சில சமயம் சிரித்து, சில சமயம் அழுத அவள், மெதுவாக என்னைக் கூப்பிட்டு, " விரைந்து சென்று யாவற்றையும் எடுத்துக்கொள்; யாவற்றையும் உடைத்துப் போடு " என்ருள்.

தோட்டத்திலுள்ள விளையாட்டு வீட்டைவிட்டுப் போகப் போகிருேம் என்ற நினைப்பு வந்தபோது, எனக்கும் அழுகை அழுகையாக வந்தது.

சாமான்களை எடுத்துப்போக இரண்டு வண்டிகள் வந்தன; தளவாட சாமான்கள்மீதும் இதர சாமான்கள்மீதும் நான் ஏறி அமர்ந்துகொண்டேன். அந்த வண்டியின் ஆட்டம் பலமாக இருந்தது.

தொடர்ந்து ஏற்பட்ட இந்த ஆட்டத்தின் உணர்வு, அடுத்த இரண்டு ஆண்டுகள்வரை - அதாவது என் அன்னை இறந்துபோகும்வரை - எனக்கு இருந்துவந்தது.

அடித்தள வீட்டுக்கு என் தாத்தா குடிவந்த சில நாட்களுக்குப் பிறகு என் அன்னை எங்களைக் காண வந்தாள். அவள் வெளுத்தும் மெலிந்தும் இருந்தாள். ஏதோ ஒரு சிறு அதிர்ச்சியால் ஆச்சரியமுற்று இருப்பவள்போல, அவளுடைய பெரிய கண்கள் சிவந்து இருந்தன. அவளுடைய தாய் தந்தையரையும் என்னையும் முதன் முறையாகப் பார்ப்பவள்போல, வேண்டும் என்றே யாவற்றையும் அவள் ஆராய்ந்து பார்த்தாள்; எங்களைப் பார்த்து ஒன்றும் சொல்லாமல் இருந்தாள். ஆனல் என் மறு தந்தையோ அறையில் அங்கும் இங்கும்

நடந்து கொடுத்துக்கொண் டிருந்தார். சீட்டி அடிப்பதுபோல் மூச்சைவிட்டு, தன் தொண்டையைச் சரிப்படுத்திக்கொண் டார் ; தனது பெருவிரல்களை முதுவில் வைத்துத் தேய்த்துக் கொண்டார்.

"அப்பாடா! எவ்வளவு பெரியவனாக நீ வளர்ந்து விட்டாய்!" என்று சொல்லி எனது கன்னங்களை உஷ்ண மான தனது கைகளால் என் தாய் தடவினாள். அகலமாயும் அசிங்கமாயும் இருந்த கபில நிற உடுப்பு ஒன்றை அவள் அணிந்து இருந்தாள். அவளுடைய வயிற்றுக்குமேலே அது தொறுத்திக்கொண்டிருந்தது.

"ஹல்லோ! எப்படி இருக்கிறாய்? சௌக்கியமா?" என்று என் மறு தந்தை தனது கையை நீட்டிக்கொண்டே என்னைக் கேட்டார். பிறகு காற்றை மோப்பம் பார்த்து விட்டு "இங்கே ஈரமாய் இருக்கிறதே!" என்று சொன்னார்.

ஓடிவந்தவர்கள்போல அலங்கோலமாயும் சோர்ந்தும் அவர்கள் இருவரும் இருந்தார்கள். தூங்கி, நல்ல ஓய்வு எடுத்துக்கொண்டால் போதும், வேறு ஒன்றும் வேண்டாம் என்று சொல்பவர்கள்போல அவர்களின் சாயல் இருந்தது.

சலிப்பாக நாங்கள் தேநீர் அருந்தினோம். அப்போது ஜன்னல் கதவு வழியாக மழை ஒழுகுவதைக் கவனித்துக் கொண்டே "உங்களிடம் இருந்தது எல்லாம் நெருப்பில் போய்விட்டதா?" என்று கேட்டார் தாத்தா.

"ஆம். எல்லாம் நெருப்பில் போய்விட்டன. நாங்கள் தப்பித்ததே பெரும்பாடாகப் போயிற்று" என்று உறுதி யான குரலில் என் மறு - தந்தை பதில் சொன்னார் :

"ஆம். நெருப்பு என்பது விளையாட்டான காரியம் அல்லவே!" என்று.

என் பாட்டியை அணுகி உராய்ந்துகொண்டு, அவள் காதில் என் அன்னை ஏதோ ரகசியமாகச் சொன்னாள். இதைக்

கேட்டதும் ஒளியால் தன் கண் கூசுவதுபோல, தன் கண் களை என் பாட்டி இடுக்கிக்கொண்டாள். சூழ்நிலை அதிக சலிப்புத் தட்டியது.

திடீரென்று இரைந்து, அமைதியான குரலில் "யெவ்ஜீனி வாஸிலியேவிச் ! அங்கு நெருப்பே ஏற்படவில்லை என்றும் யாவற்றையும் சீட்டாடி நீர் தோற்றுவிட்டீர் என்றும் கேள்விப்படுகிறேனே ; இது உண்மையா ?" என்று என் தாத்தா கேட்டுவிட்டார்.

பயங்கரமான சூழ்நிலை நிலவியது ; சாமோவார் அடுப்பு இரைவதும் மழைத் துளிகள் வந்து ஜன்னல் கதவுகள்மீது விழுவதும்தான் அந்தச்சூழ்நிலையின்மௌனத்தைக் கலைத்தன.

"அப்பா......!" என்று கடைசியாக என் அன்னை சொன்னாள்.

"அப்பாவா !" என்று என் தாத்தா உறுமினார். "சரி. இதற்கு அடுத்து என்ன ? முப்பது வயதுள்ள ஒருத்தி இருபது வயதுள்ள ஒருவனை மணப்பது பைத்தியகாரத்தனம் என்று நான் உனக்கு முன்பே சொல்லவில்லையா ? இதோ நீ இங்கு இருக்கிறாய் - சரியான எடுத்துக்காட்டாக ; அவனும் அப்படித்தான் இல்லையா ? உன்னை அவன் சீமாட்டி ஆக்கி விட்டான் ? மகளே ! இதை நீ விரும்புகிறாயா ?" என்று கேட்டார்.

நான்கு பேரும் சேர்ந்து கூச்சல்போட ஆரம்பித்தார்கள் ; என் மறு தந்தைதான் அதிகமாகக் கூச்சல் போட்டார். நான் வெளியே சென்று, வழியில் இருந்த விறகுக் குவியல்மீது திகில் அடைந்து உட்கார்ந்து இருந்தேன். இப்படி என் தாயார் இருக்க மாட்டாள் ; அவள் முற்றும் வேறு விதமாக இருப்பாள். அறையில் இருந்தபோது இந்த எண்ணம் எனக்கு லேசாக இருந்தது. ஆனால் இப்போது இருட்டில் உட்கார்ந்து

இருந்த எனக்கு அவள் எப்படி இருந்திருக்கிருள் என்பதை நன்ருக நினைவு கூர்ந்துகொள்ள முடிந்தது.

எப்படியோ மறதியாக, நான் சார்மோவோவில், மரச் சுவர்களில் காகிதம் ஒட்டாமல் இருந்த ஒரு புது வீட்டில், இருப்பதைக் கண்டேன். பலகைகளுக்கு நடுவே இருந்த இடை வெளியில், சணலைத் திணித்து அடைத்து இருந்தார்கள்; அங்கே ஏராளமான கரப்பான்பூச்சிகள் வாசம் செய்தன. தெருவைப் பார்க்க இருந்த இரண்டு அறைகளில் என் அன்னையும் மறு தந்தையும் வசித்தார்கள். நானும் பாட்டியும் ஒரே ஒரு ஜன்னலுள்ள அடுக்களையில் இருந்தோம். முகட்டுக்கு அப்பால் தொழிற்சாலையின் கூரிய புகைபோக்கிகள் இருந்தன. வானத்தைப் பின் அணியாகக்கொண்டு இருந்த அந்தப் புகைபோக்கிகள், கருத்துச் சுருண்ட கனமான புகையைக் கக்கி, குளிர்காலத்துக் காற்றில் கலந்து அந்தப் பேட்டை முழுதுமே வியாபிக்கச் செய்தன. கதகதப்பு இல்லாத எங்கள் அறைகளில், இந்தப் புகையின் எண்ணெய் நாற்றம் எப்பொழுதும் அடித்துக்கொண் டிருந்தது. அதிகாலையில், தொழிற்சாலையின் சங்கு ஓநாய்போல "ஊ ஊ ஊ" என்று ஊளையிட்டது.

ஒரு குறிச்சியைப் போட்டு அதன்மீது ஏறி நின்று மேலேயிருந்த ஜன்னல் வழியாக நான் எட்டிப்பார்த்தேன். பல்லுப்போன பிச்சைக்காரக் கிழவனின் வாயைப்போலப் பிளந்துகிடந்த அந்தத் தொழிற்சாலையின் கதவுகள் உள்ளே நுழைகிற சிறிய மனிதர்களை எல்லாம் கூட்டம் கூட்டமாக விழுங்கிக்கொண்டு இருப்பதுபோலத் தோன்றியது. நண்பகல் ஆனதும் மற்றும் ஒரு முறை சங்கு ஊதியது. கதவுகள் என்ற தனது கரிய உதடுகளைத் திறந்து, ஆழமான ஓர் ஓட்டையைக் காட்டி, அந்த ஓட்டை வழியாகத் தான் கசக்கிப் பிழிந்த சிறிய ஜனங்களை எல்லாம் அந்தத் தொழிற்சாலை

யானது, கக்குவதுபோல இருந்தது. கறுப்பு ஓடைகளே போல ஜனங்கள் தெருக்களில் புகுந்தார்கள். முரட்டுத்தன மான வெள்ளைக் காற்று அவர்களை வீட்டுக்குச் அடித்துத் துரத்தியது. ஆகாயம் அபூர்வமாகத்தான் தெரிந்தது. அந்தப் பேட்டையிலிருந்த கூரைகளுக்கும் கரிபடிந்த பனிக்கட்டி களுக்கும் மேலே, இன்னும் ஒரு கூரை தட்டையாகவும் சாம்பல் நிறத்திலும் இருந்தது. கண்களைப் பொட்டை யாக்கி, கற்பனையைத் தடைப்படுத்துகிற அதன் தோற்றம் இனிமை குன்றியதாகவும் சலிப்பை உண்டாக்குவதாயும் இருந்தது.

மாலை நேரங்களில் மங்கலான ஒருவித சிவப்பு ஒளி தொழிற்சாலைமீது படிந்து இருந்தது. புகைப்போக்கிகளின் வாய்களின்மீது படிந்து அது ஒளியைப் பரப்பியது; பூமியி லிருந்து கிளம்பி நிற்பதற்குப் பதிலாக, மந்தாரமான மேகங் களிலிருந்து புறப்பட்டு, கீழே இறங்கி வந்து, நெருப்பை விழுங்கித் திருப்தியுடன் ஏப்பம்விட்டு ஊளையிடுவதுபோலத் தோன்றியது. இந்தக் காட்சியை நாள்தோறும் பார்த்துக் கொண்டே இருப்பது எவ்வளவோ கஷ்டமானதாகஇருந்தது. இதைப் பார்த்ததும் வெறுப்புக் கலந்த வேதனை என் உள் ளத்தில் நிரம்பிவிடும். வீட்டு வேலைகளை எல்லாம் என் பாட்டி செய்தாள். தண்ணீர் இறைப்பது, விறகை உடைப் பது, தரையை மெழுகுவது, உணவு தயாரிப்பது போன்ற காரியங்களில் காலையிலிருந்து இரவுவரை அவள் ஈடுபட்டு இருந்தாள். மாலை நேரம் வந்ததுமே களைப்படைந்துபோய், சோர்ந்து பெருமூச்சுவிட்டு அவள் முணுமுணுப்பாள். சில சமயங்களில் மத்தியானச் சாப்பாடு தயாரித்த பின்னர், குட்டையான மெல்லிய ஜாக்கட்டைப் போட்டுக்கொண்டும், பாவாடையைக் கட்டிக்கொண்டும் நகருக்குக் கிளம்பிவிடு வாள். "கிழவர் எப்படிக் காலம் தள்ளுகிருர் என்பதைப்

பார்த்து விட்டுவருகிறேன்" என்று சொல்லிக்கொண்டே கிளம்புவாள்.

"என்னையும் கூடக் கூட்டிக்கொண்டு போ!"

"காற்று அடிப்பதைப் பார்த்தாயா? குளிரால் விரைத்து நீ இறந்து போவாய்!"

பனித் தரைகளில் மறைந்து போகும் சாலைகளின் வழியாக ஏழு வெர்சட்டுகள் அவள் நடந்து போவாள்; கருப்பத்தால் ஊதிப்போயும் மஞ்சள் நிறமாயும் இருந்த என் தாய், ஓரங்களில் நீண்ட குஞ்சங்கள் இருந்த சாம்பல் நிறத் துணிப் போர்வைப் போர்த்துக்கொண்டு உட்கார்ந்து இருப்பாள். அவளுடைய அழகிய உடம்பை அந்தப் போர்வை விகாரப் படுத்திக் காட்டியதால் அதன்மீது எனக்கு ஒருவித வெறுப்பே உண்டாயிற்று. நைந்து பிய்ந்து போயிருந்த குஞ்சத்தின்மீது எனக்கு வெறுப்பு உண்டாயிற்று; அதைப் போர்வையிலிருந்து பிய்த்து எறிந்துவிட நான் ஆசைப்பட்டேன். அந்த வீடு, அங்கே இருந்த தொழிற்சாலை, அந்தப் பேட்டை ஆகிய அனைத்தையுமே நான் வெறுத்தேன். தேய்ந்துபோன தோல் பூட்ஸ்களைப் போட்டுக்கொண்டு என் தாய் அங்கும் இங்கும் சுற்றினாள். அவள் இருமியபோது அவளுடைய பெரிய வயிறு குலுங்கியது. அவளுடைய சாம்பல்-நீலநிறக் கண்கள் காரணமில்லாத கோபத்துடனும் அன்பு குன்றிப் பளபளத்தன; இல்லாதுபோனால் பசைவைத்து ஒட்டியதேபோல, வெறும் சுவரை எல்லாம் பார்த்துக்கொண்டே இருந்தன. சில சமயங்களில் தெருவை மட்டுமே மணிக்கணக்கில் அவள் பார்த்துக்கொண்டிருப்பாள்; தெருவைப் பார்த்தால் ஒரு தாடை போலவும் அதில் சில பற்கள் கறுப்பாயும், சில காலத்தால் சிதைந்துபோனதாயும், வேறு சில முற்றுமே விழுந்தும், சில இடத்தில் விழுந்த பற்களுக்குப் பதிலாக அவ

லட்சணமான வேறு சில பற்கள் முளைத்தும், தாடைக்கு அடங்காமல் பெரியதாயும் இருப்பதைப்போல தோன்றியது.

" நீ ஏன் இங்கே வாசம் செய்கிறாய் ?" என்று நான் கேட்டேன்.

"ஒன்றும் கேளாதே" என்று அவள் பதில் சொன்னாள்.

இந்தக் காலத்தில் அவள் என்னோடு சிறிதுதான் பேசினாள் ; தேவைப்படுவதைக் கேட்கும் அளவிலும் அல்லது சொல்லி உத்தரவிடும் அளவிலும் தன் பேச்சை அவள் நிறுத்திக்கொண்டாள் :

" இதை எடுத்துவா ; அதை எடுத்துப்போ ; கடைக்கு ஓடு " என்ற அளவில் தன் பேச்சை அவள் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

எப்பொழுதுமே பையன்களிடம் உதைபட்டுக்கொண்டு நான் திரும்பிய காரணத்தால் விளையாடச் செல்ல அபூர்வமாகத் தான் என்னை அவள் அனுமதித்தாள். சண்டை போடுவதில் மட்டும்தான் நான் இன்பத்தைக் கண்டேன். அதிக அக்கறையுடனும் ஈடுபாட்டுடனும் நான் சண்டையில் கலப்பதற்குத் தயாராகிவிடுவேன். இதற்காக என் அன்னை என்னை அடித்தாள். ஆனால் இந்தத் தண்டனை எல்லாம் என் ஆத்திரத்தைக் கிளறி விட்டு, மேலும் சண்டையிடும்படியாக என்னைத் தூண்டின. என் தாயும் அதிக கடுமையாகத் தண்டித்தாள். இப்படி என்னை அவள் அடித்துக்கொண்டே இருந்தால் அவள் கையை நான் கடித்துவிடுவேன் என்றும், பனியில் விரைத்துப் போவதற்காக வெளியே ஓடிவிடுவேன் என்றும் அவளை ஒரு முறை நான் எச்சரித்தேன். இதைக் கேட்டுக் குழம்பிப்போன அவள் என்னை அப்பால் தள்ளிவிட்டு, தரைமீது நடந்து கொடுக்கத் தொடங்கினாள்.

" சின்ன விலங்கே !" என்று சொல்லி, களைத்துப் போய் பெருமூச்சுவிட்டாள்.

அன்பு என்ற பெயரால் அழைக்கப்படுகிற வானவில்லைப் போன்ற உயிர் ஓட்டமும் அழகும் நிரம்பிய உணர்வுகள் என் நெஞ்சில் படிப்படியாக மறைய ஆரம்பித்து, வெறுப்பு என்ற நீலநிற நெருப்பு அதில் இடம் பெறலாயிற்று ; எதையும் யாரையும் வெறுத்தேன். அறிவீனமும் மந்தமும் உடைய இந்த உலகில் நெஞ்சத்தில் கனலுகிற அதிருப்தியும் தனிமை என்ற உணர்வும் இப்படிச் செய்துவிடுகின்றன.

என் தாயிடம் இதமாகவும் என்னிடம் கடுமையாகவும் என் மறு தந்தை நடந்துகொண்டார். அவர் எப்பொழுது பார்த்தாலும் சீட்டி அடித்துக்கொண்டும் உறுமிக்கொண்டும் இருந்தார். கண்ணாடிக்கு எதிரே நின்றுகொண்டு தனது கோரைப் பற்களை நேர்படுத்திக்கொண்டு நின்றார். என் தாயுடன் அடிக்கடி சச்சரவு செய்துகொண்டு, அவளை ஏசி, அன்னியமானவள்போலப் பேசினார். இது எனக்கு மிகுந்த வருத்தத்தை அளித்தது; தாங்கள் சண்டையிட்டுக்கொள்வதை நான் பார்த்துவிடக் கூடாது என்பதற்காக, அத்தகைய சமயங்களில் அடுக்களைக் கதவை அவர் சாத்திக்கொண்டு விடுவார். ஆனால் நானோ, கரகரப்பான தொண்டையில் அவர் பேசுவதைக் கேட்பதில் கவனம் செலுத்தினேன்.

ஒரு முறை அவர் காலால் ஓங்கித் தரையை உதைத்துச் சப்தம் போட்டார் : "ஏ கிழட்டுப் பசுவே ! உன் நாசமாய்ப் போன வயிற்றை உத்தேசித்து யாரையும் என்னால் வீட்டுக்கு அழைக்க முடியவில்லை" என்று உறுமினார்.

ஆச்சரியமும் கோபமும் மேலிட்டுப் பொங்க, நான் ஆத்திரத்துடன் மேடைமீது ஏறினேன் ; ஏறிய வேகத்தில் மோட்டில் தலையை முட்டிக்கொண்டேன். என் நாக்கையும் நான் கடித்துக்கொண்டேன்.

சனிக்கிழமைகளில் டஜன் கணக்கில் தொழிலாளர்கள் என் மறு தந்தையிடம் உணவுக் கூப்பன்களை விற்க வருவார்கள்; இப்படி விற்பதனால் கம்பெனிக்குச் சொந்தமான கடையில் சாமான்கள் வாங்குவது அவர்களுக்குச் சௌகரியமாக இருந்தது. சம்பளம் கொடுப்பதற்குப் பதிலாக, தொழிற்சாலையில் இந்த உணவுக் கூப்பன்களை வழங்கினார்கள். அவற்றை எல்லாம் என் மறு - தந்தை அரை விலைக்குத்தான் வாங்கினார். தொழிலாளர்களை அடுக்களைக்கு வரச் செய்து அவர் பேரம் பேசுவார். மிகவும் தடபுடலாக மேஜை அருகே அமர்ந்து கொண்டு, ஒவ்வொரு கூப்பனையும் பார்த்து முகத்தைச் சுளித்துக்கொள்வார்.

"ஒன்றரை ரூபிள்."

யெவ்ஜீனி வாஸிலியேவிச்! ஏசுநாதர்மீது அன்பு பூண்டு......"

"ஒன்றரை ரூபிள்."

மோசமான இந்த இருண்ட வாழ்க்கை நீண்ட காலம் நீடிக்கவில்லை. என் அன்னைக்குக் குழந்தை பிறப்பதற்குச் சிறிது முன்னர், என் தாத்தாவுடன் வசிப்பதற்கு நான் போய்விட்டேன். குநாவிநோவில் பெச்சாநாயாத் தெருவில், இரட்டை மாடி வீட்டில் அவர் வசித்தார். நப்போல்நாயா மாதாகோயில் கல்லறைகளுக்கு மேலே அது இருந்தது. அவர் இருந்த சிறிய அறையில் பெரிய ருஷ்ய அடுப்பும் முற்றத்தை நோக்கி இரண்டு ஜன்னல்களும் இருந்தன.

என்னைப் பார்த்ததும் சிறிது கிரீச்சிட்ட குரலில் சிரித்துவிட்டு "பழமொழிப்படி, உன் தாய்தான் உனக்குச் சிறந்தவளாக இருக்க வேண்டும். ஆனால் உன் விஷயத்தில் நிலைமை மாறியே போய்விட்டது. கிழட்டுப் பிசாசான உன் தாத்தாதான் இப்போது உனக்குச் சிறந்த உறவினனாக இருக்கிறார். பூ! என்ன ஜனங்கள்!" என்று சொன்னார்.

புதிய வீட்டின் பரிச்சயம் எனக்குச் சரியாக ஏற்படுவதற்கு முன்னரே, என் அன்னையும் பாட்டியும் குழந்தையுடன் வந்து சேர்ந்தார்கள். தொழிலாளர்களை ஏமாற்றிவிட்டார் என்று சொல்லி, என் மறு தந்தைக்குத் தொழிற்சாலையிலிருந்த வேலை போய்விட்டது. தன் நண்பர்களை நயந்து வேண்டிய காரணத்தால் அவருக்கு ரயில்வே நிலையத்தில் "காஷ்யர்" உத்தியோகம் கிடைத்தது.

காலம் வீணே கழிந்துகொண் டிருந்தது. என் அன்னை வசித்த கல் வீட்டு அறைக்கு நான் வசிக்கச் செல்லும்வரை காலம் இப்படித்தான் வீணே கழிந்துகொண் டிருந்தது. அங்கே போய்ச் சேர்ந்ததும் என் அன்னை என்னைப் பள்ளிக் கூடத்துக்கு அனுப்பிவைத்தாள். ஆரம்பத்திலேயே பள்ளிக் கூடம் எனக்குப் பிடிக்கவில்லை.

என் அன்னையின் ஒரு ஜதை பூட்ஸ், என் பாட்டியின் பாவாடையிலிருந்து தைத்த ஒரு கோட், மஞ்சள் சட்டை, நீண்ட கால்சராய்கள் ஆகியவற்றை அணிந்துகொண்டு நான் காட்சி அளித்தேன். உடனே என்னைப் பார்த்தவர்கள் கேலி செய்யத் தொடங்கினார்கள். "டைமன் ஏஸ்" என்ற பட்டப் பெயரும் எனது மஞ்சள் நிறச் சட்டைக்கு ஏற்பட்டுவிட்டது. சிறுவர்கள் எளிதில் எனக்குச் சரிப்பட்டு வந்துவிட்டார்கள். ஆனால் வாத்தியாரும் குருவும் என்மீது பிரியம் இல்லாமல் இருந்தார்கள்.

வாத்தியாருக்குத் தலை வழுக்கை ; முகம் மஞ்சள் நிறத்தில் இருந்தது ; மூக்கில் அடிக்கடி ரத்தம் கசிந்தது. தனது நாசித் துவாரங்களில் பஞ்சை வைத்து அடைத்துக்கொண்டு அவர் வகுப்புக்கு வருவார். மேஜை அருகே தன் ஆசனத்தில் அமர்ந்துகொண்டு, மூக்கால் பேசிக் கேள்விகள் கேட்பார்; ஒரு சொல்லை அரைகுறையாக இடையிலேயே நிறுத்திக் கொண்டு, தனது நாசித் துவாரத்திலிருக்கும் பஞ்சை எடுத்து

ஆராய்ந்து பார்த்து, தன் தலையை ஆட்டிக்கொள்வார். அவர் முகம் தட்டையாகவும் பித்தளைபோன்று களிம்பு ஏறியும் சுருக்கங்கள் விழுந்து நாசிகளின் இடையே பாண்டல்கள் அடைந்தும் இருந்தது. அவருடைய முகத்தில் இருந்த பொடிக் கண்கள் அதனுடைய விகாரத்தை மேலும் அதிகப்படுத்திக் காட்டின. பொதுவாக அவருடைய தோற்றத்திலே அவற்றுக்கு ஒரு இடமே இருப்பதாகத் தெரியவில்லை. அவை வந்து என் முகத்தில் ஒட்டிக்கொண்டுவிட்டதைப் போன்றும், அவற்றை என் கன்னங்களிலிருந்து துடைத்து எறிந்துவிட வேண்டும் என்பதைப் போன்றும் எனக்கு ஓர்வித உணர்ச்சி உண்டாயிற்று.

ஆசிரியருடைய முகத்துக்கு நேரே, முதல் வரிசையில் முதல் சில நாட்களில் நான் உட்கார்ந்து இருந்தேன். இதை என்னால் சகிக்க முடியவில்லை. வேறு ஒருவரையுமே கவனியாமல் என்னை மட்டுமே கவனித்துக்கொண்டு, என்னிடம் மட்டுமே தன் மூக்கால் அவர் பேசுவதுபோல எனக்குத் தோன்றியது.

"பெஷ்கா...வ்! உன் சட்டையை மாற்றிக்கொள்; பெஷ்கா...வ்! கலகம் செய்வதை நிறுத்து! பெஷ்கா....வ்! மீண்டும் உன் பூட்ஸ்களின் தடம் தரைமீது படிந்து இருக்கிறது!"

இதற்கு எல்லாம் பதிலடி கொடுக்கும் பொருட்டு நான் அனேக குறும்புகளைச் செய்தேன். ஒரு நாள், பாதி அளவு அழுகிப்போன நீர்முலாம் பழம் ஒன்றை எடுத்துக்கொண்டு சென்றேன். அதைக் குடைந்து, இருட்டாய் இருந்த நுழைவாயிலின் கதவு அருகே தொங்கவிட்டேன். கதவை ஆசிரியர் திறந்தபோது அது மேலே எழும்பி, சாத்தியபோது, அவருடைய வழுக்கைத் தலையில் ஒரு தொப்பிபோல வந்து உட்கார்ந்துகொண்டது. ஒரு குறிப்பை எழுதி இரவுக் காவல்

காரனிடம் கொடுத்து, ஆசிரியர், என்னை வீட்டுக்கு அவனுடன் அனுப்பிவைத்தார். செய்த குறும்புக்காக நான் ஒளிந்து கொண்டு திரிந்தேன்.

மற்றொரு முறை அவருடைய மேஜைப் பலகைமீது நான் மூக்குப் பொடியைத் தூவி வைத்துவிட்டேன். இதனால் ஓரேபடியாகத் தொடர்ந்து தும்ம வேண்டிய நிலை ஏற்பட்டு, வகுப்பைவிட்டு அவர் வெளியே போக வேண்டியதாயிற்று. அவருக்குப் பதிலாக அவருடைய மாப்பிள்ளை ஒரு அதிகாரி வந்து பாடம் நடத்தினார். "ஸாரை ஆண்டவன் காப்பாற்றுக!" என்ற பாடலை அவர் எங்களைப் பாடும்படி சொன்னார். "ஆஹா என் சுதந்திரமே! அருள்பெற்ற சுதந்திரமே!" என்ற பாடலையும் மீண்டும் மீண்டும் பாடச் சொன்னார். இசை தவறி யாராவது பாடினால் ஓசையும் வேடிக்கையும் ஏற்படும் வகையில், காயப்படாமல் ரூல் கழியால் அவர் தலையில் தட்டுவார்.

சமயக் கல்வி கற்றுத் தந்தவர், வாலிபர் ; அழகான குரு. அவருடைய தலையில் மென்மையான கூந்தல் அடர்த்தியாக இருந்தது. புதிய ஏற்பாட்டிலும் பழைய ஏற்பாட்டிலுமுள்ள புனிதமான கதைகள் என்ற புத்தகம் என்னிடம் இல்லாத காரணத்தாலும், அவர் பேசுவதைப்போல் பேசி நான் நடித்தாலும் என்னை அவருக்குப் பிடிக்கவில்லை.

வகுப்பு அறைக்குள் நுழைந்தவுடனேயே அவர் என்னை பார்த்து "பெஷ்காவ்! அந்தப் புத்தகம் கொணர்ந்திருக்கிறாயா ? இல்லையா ? ஆம். அந்தப் புத்தகம்" என்று கேட்பார்.

"இல்லை. நான் கொண்டுவரவில்லை. ஆம்."

"ஆம். என்று நீ சொல்லுவதன் பொருள் என்ன ?"

"இல்லை."

"வீட்டுக்குப் போய்விடு! ஆம். வீட்டுக்குப் போய்விடு. உனக்குப் பாடம் சொல்லித் தர எனக்கு விருப்பம் இல்லை. ஆம். கொஞ்சம்கூட விருப்பம் இல்லை."

வீட்டுக்குப் போகச் சொன்னதற்கு நான் எதுவும் மறுப்புச் சொல்ல விரும்பவில்லை. பேட்டையிலுள்ள அழுக்கு அடைந்த தெருக்களில் சுற்றித் திரிந்து, என்னைச் சுற்றிலும் காணப்படும் சந்தடி நிறைந்த வாழ்க்கையை பார்த்துப் பொழுது போக்கிவிட்டு, பள்ளிக்கூடம் விட்டதும் நான் வீட்டுக்குச் சென்றுவிடுவேன்.

இந்தக் குருவுக்கு அன்புகனிந்த ஏசுநாதரைப் போன்ற நேர்த்தியான முகம் இருந்தது; அதில் பெண்மை நிரம்பிய கண்கள் இருந்தன. அவருடைய கைகள் சிறியனவாய் இருந்தன. எதைத் தொட்டாலும் தொடும்பொழுது எல்லாம் வாஞ்சையோடு அந்தக் கரங்கள் தொட்டன. புத்தகமாக இருந்தாலும் சரி, ரூல் கழியாக இருந்தாலும் சரி, பேனாவாக இருந்தாலும் சரி, எதையும் அவர் வாஞ்சையோடு தொடுவார். எந்தப் பொருளையும் அவர் நேசித்தார். ஒவ்வொரு பொருளிலும் உயிர் இருப்பதுபோலவும் கவனக் குறைவாகத் தொட்டால் அதன் உயிருக்கு ஊனம் ஏற்பட்டுவிடும் என்று தான் பயப்படுவது போலவும் எண்ணிக்கொண்டு அவர் எதையும் தொடுவார். குழந்தைகளிடம் மட்டும் அவருக்கு அதிக பிரியம் இருந்ததாகத் தெரியவில்லை. ஆனால் குழந்தைகளோ அதைப் பொருட்படுத்தாமல் அவர்மீது பிரியமாய் இருந்தார்கள்.

படிப்பில் போதிய மார்க்குகள் கிடைத்திருந்தும் நடத்தையின் காரணமாக பள்ளிக்கூடத்திலிருந்து என்னை அகற்றிவிடப் போவதாக எனக்குச் செய்தி வந்தது. இதைக் கேட்டதும் நான் திகைத்துப் போனேன். நிச்சயம் இதனால் விளையும் பலன்கள் கடுமையா இருக்கும் என்று எண்ணி

னேன். நாளுக்கு நாள் என் தாய்க்கு முன்கோபம் அதிகமாகி வந்தது. அடிக்கடி அவள் என்னை அடிக்கவும் தலைப்பட்டாள்.

ஆனால் இந்த ஆபத்தினின்றும் நான் காப்பாற்றப்பட்டேன். முற்றும் எதிர்பாராத வகையில் பிஷப் கிரிஸ்சாந்த்* என்பவர் எங்கள் பள்ளிக்கூடத்துக்கு விஜயம் செய்தார்.

கறுப்பு உடைகள் தரித்திருந்த இந்த சிறு மனிதர் வகுப்புக்குள் நுழைந்தது, ஆசனத்தில் அமர்ந்ததும் அன்பும் மகிழ்ச்சியும் கொண்ட, நூதனமான ஒருவித சூழ்நிலை வகுப்பில் நிலவியது.

" குழந்தைகளே ! நாம் சிறிது உரையாடிப் பொழுது போக்கலாம் " என்று சொல்லிக்கொண்டே, தொங்கிக் கொண்டிருந்த சட்டைக் கைக்குள்ளிருந்த தம் கைகளை அவர் வெளியே எடுத்தார்.

மேஜை அருகே கூப்பிடும் முறை கடைசியாகத்தான் எனக்கு வந்தது.

"உனக்கு என்ன வயது ? என்று கேட்டார். "உண்மையாகவா ? வயதுக்கு மேலே அதிக உயரமாக அல்லவா நீ இருக்கிறாய் ! மழையிலே நீண்ட நேரம் நீ நின்று இருப்பாய் போல் தோன்றுகிறதே " என்றார்.

கூர்மையான நீண்ட நகங்கள் இருந்த தன் மெல்லிய கரத்தை அவர் மேஜைமீது வைத்துக்கொண்டார். மற்றொரு

---

*பூர்வீக உலகத்திய மதங்கள் என்ற பெயரில் மூன்று வால்யூம்கள் கொண்ட ஒரு நூலும் "எகிப்தியர்கள் விலங்கு உருவமாற்றம்" " பெண்களும் திருமணமும் " என்ற கட்டுரைகளும் இவர் எழுதி இருக்கிறார். கடைசியில் குறிப்பிட்டுள்ள கட்டுரையை வாலிபப் பருவத்தில் நான் படித்திருக்கிறேன். அதனால் அழுத்தமான அபிப்பிராயம் என்னிடம் உருவாயிற்று. அதனுடைய தலைப்பை நான் தவறாகக் குறிப்பிட்டுவிட்டேனோ என்னவோ ; 1870-ல் சமய சம்பந்தமான ஏதோ ஒரு சஞ்சிகையில் அது வெளிவந்தது.

4B
12-96

கரத்தால் கொஞ்ச ரோமம் மட்டும் இருந்த தன் தாடியைப் பிடித்துக்கொண்டார். என்னை அன்போடு பார்த்தார்.

"புனிதமான சரித்திரத்திலிருந்து உனக்குப் பிடித்த கதைகளில் எதையாவது சொல்" என்று சொன்னார்.

என்னிடம் புத்தகம் கிடையாது ; அதனால் புனித சரித்திரத்தை நான் படித்தது இல்லை என்று நான் சொன்ன பதிலைக் கேட்ட அவர், தனது சந்நியாச உடையைச் சரிப்படுத்திக்கொண்டார் :

"என்ன இப்படிச் சொல்லுகிறாய் ? இந்த விஷயங்களை அவசியம் நீ படித்துக்கொள்ள வேண்டும். புத்தகம் இல்லாமலே ஏதாவது நீ தெரிந்திருக்க வேண்டுமே - இந்தக் கதைகளை எங்காவது நீ கேட்டிருக்கக் கூடுமே? உனக்குச் சால்டர் தெரியுமா ? நல்லது ! பிரார்த்தனை தெரியுமா ? அதன் பிறகு பார்த்தாயா ? அடியார்களின் வாழ்க்கைகள் இருப்பதை நீ காணலாமே ? கவிதைகள்கூட இருக்குமே ? இவை தெரிந்திருந்தால் உன்னைப் படித்தவன் என்று சொல்லலாம்" என்றார்.

ஊதித் தடித்து முழுதும் சிவப்பாக இருந்த எங்கள் குரு வகுப்புக்குள் நுழைந்தார். பிஷப் அவரை ஆசீர்வதித்ததும் என்னைப்பற்றி அவரிடம் அவர் சொல்லத் தொடங்கினார் :

"கொஞ்சம் பொறு" என்று பிஷப் அவருக்குச் சாடை செய்தார். பிறகு மீண்டும் என்னைப் பார்த்து, "சரி. ஆண்டவன் அடியார் அலெக்ஸியைப்பற்றி நீ சொல்வதாக வைத்துக்கொள்வோம்......"

"குழந்தாய் ! அது அற்புதமான பாடல் அல்லவா ?" என்று அவர் சொன்னபோது, ஒரு வரி மறதியாக இருந்த காரணத்தால் சொல்வதை நான் நிறுத்திக்கொண்டேன். "வேறு ஏதாவது உனக்குத் தெரியுமா ? அரசர் டேவிட்டைப்பற்றி. நல்லது. அதைக் கேட்பதற்கு நான் பிரியப்படுகிறேன்."

உண்மையாகவே பாடலைக் கேட்பதிலும் அதை ரசிப்பதிலும் அவருக்குப் பிரியம் இருக்கிறது என்பதை நான் தெரிந்துகொண்டேன். நீண்ட நேரம் சொல்லிக்கொண்டு இருக்கச் செய்துவிட்டு, என்னை அவர் நிறுத்தச் சொன்னார்.

" சால்டரிலுள்ள எழுத்துக்களை எல்லாம் நீ கற்றுக் கொண்டிருக்கிறாயா ? உனக்கு யார் சொல்லித் தந்தது ? உன் நல்ல தாத்தாவா? அல்லது உன் கெட்ட தாத்தாவா? சரி. நீ அப்படி எண்ணி இருக்க முடியாது. ஆனால் எப்பொழுது பார்த்தாலும் நீ குறும்பு செய்கிறாய் என்று கேள்விப்படுகிறேனே ? இது உண்மையா ?" என்று கேட்டார்.

நாணத்தால் நான் குன்றிப் போனேன் ; எனினும் எனது குற்றத்தை நான் ஒப்புக்கொண்டேன். முடிவில் என் ஆசிரியரும் குருவும் இதை உறுதிப்படுத்தினார்கள். தரையைப் பார்த்துக்கொண்டே அவர்கள் சொல்வதைப் பிஷப் கேட்டுக்கொண்டிருந்தார்.

" உன்னைப்பற்றி அவர்கள் கூறுவதை எல்லாம் நீ கேட்டாயா ?" என்று சொல்லிவிட்டு, பெருமூச்சுவிட்டு " இங்கே வா " என்று சொன்னார்.

புங்கமர வாடை வீசும் தனது கையை என் தலைமீது வைத்து " நீ இப்படிக் குறும்பு செய்வதற்குக் காரணம் என்ன ?" என்று கேட்டார்.

" பள்ளிக்கூடம் ஒரு தொல்லையாய் இருக்கிறது."

" தொல்லையா ? குழந்தாய் ! இதில் ஏதோ ஒரு பிழை இருக்கிறது. பள்ளிக்கூடம் உனக்குத் தொல்லை தருவதாய் இருக்குமாயின், உன்னை ஒரு கெட்ட மாணுக்கன் என்று தான் சொல்ல வேண்டும். ஆனால் நீ வாங்கி இருக்கும் மார்க்குகளைப் பார்த்தால் அப்படித் தோன்றவில்லையே ? வேறு சங்கடம் எதாவது இருக்கக் கூடும் " என்றார்.

பிறகு தன் ஆடைக்குள் இருந்த சிறிய புத்தகம் ஒன்றை எடுத்து " அலெக்ஸி பெஷ்காவ் " என்று எழுதி விட்டு, என்னைப் பார்த்து " குழந்தாய் ! குறும்பு செய்வதை நீ நிறுத்திக்கொள்வது நல்லது. கொஞ்சம் நிறுத்திக்கொண் டால் போதும். ஜனங்களால் நீடித்த காலம் பொறுக்க முடி யாது ; பையன்களே ! நான் சொல்வது சரிதானல்லவா ?" என்று கேட்டார்.

" நீங்கள் சொல்வது சரிதான் " என்று ஒரே உற்சாக மாக ஏக குரலில் பதில் கிடைத்தது.

" உங்களைப்பற்றி என்ன ? நீங்கள் குறும்பு குறை வாய்த்தான் செய்கிறீர்களா ?" என்று கேட்டார்.

" இல்லை ; இல்லை. நிரம்ப " என்று சொல்லிப் பையன்கள் சிரித்தார்கள்.

பிஷப் என்னைத் தன் அருகே இழுத்துக்கொண்டு, நாற்காலியில் சாய்ந்துகொண்டார். அவர் சொன்ன வார்த்தை களைக் கேட்ட ஆசிரியரும் குருவும் ஆச்சரியவயப்பட்டு சிரித்துவிட்டார்கள்.

" உன்னையொத்த பையனுக இருந்த காலத்தில் நான் எவ்வளவு குறும்புகள் செய்திருப்பேன் என்பதை நீயே நினைத்துப்பார். நம்மை எல்லாம் அப்படிச் செய்யத் தூண்டு வது எதாய் இருக்கும் ?" என்று கேட்டார்.

பையன்கள் சிரித்தார்கள். அவர்களை அவர் கேள்விகள் கேட்டார். தன்னுடைய வார்த்தைகளில் அவர்களை அவர் தந்திரமாகச் சிக்கவைத்தபடியால், சூழ்நிலை மிகவும் மகிழ்ச்சி கரமாக இருந்தது. பிறகு அவர் எழுந்து நின்று, " போக் கிரிகளே ! உங்களைவிட்டுப் பிரிவதற்கு இரங்குகிறேன் ; நேரமாகிவிட்டது ; நான் புறப்பட வேண்டும் " என்று சொன்னர்.

கைகளை உயர்த்தி, அகன்ற தன் சட்டைக் கைகளைச் சுருட்டிவிட்டுக்கொண்டு வகுப்பின்மீது சிலுவை அடையாளம் வரைந்து அவர் ஆசிர்வாதம் செய்தார் :

"தந்தையின் பெயராலும் புதல்வரின் பெயராலும் புனித ஆவியின் பெயராலும் நல்லதைச் செய்து நீங்கள் வாழுங்கள். விடைபெற்றுக்கொள்கிறேன்" என்று வாழ்த்தினார்.

"புனிதம் நிறைந்த தந்தையே! விடைபெற்றுக்கொள்ளுங்கள்! விரைவில் திரும்பி வாருங்கள்" என்று பையன்கள் கூச்சல் போட்டார்கள்.

தனது சந்நியாசி உடுப்பு அசைய "ஆகட்டும்; ஆகட்டும்; வருகிறேன்" என்று அவர் பதில் சொன்னார். "வரும்போது உங்களுக்குச் சில புத்தகங்கள் கொண்டுவருகிறேன்" என்று சொல்லிவிட்டு ஆசிரியர் பக்கம் திரும்பி "இவர்களை எல்லாம் வீட்டுக்கு அனுப்புங்கள்" என்று சொன்னார்.

நுழை வாயிலுக்கு வெளியே என்னை நிற்கச் செய்து மிகவும் மெதுவாக "பிற்காலத்தில் குறும்பு செய்ய மாட்டேன் என்று என்னிடம் உறுதி கூறு. சரிதானா? எதனால் நீ குறும்பு செய்கிறாய் என்பதை நான் அறிவேன். நல்லது விடைபெற்றுக்கொள்கிறேன்" என்றார்.

இது என் மனத்தை மிகவும் உருக்கிவிட்டது. எனது இதயத்தில் நூதனமான உணர்ச்சிப் பிரவாகம் உண்டாயிற்று. வகுப்பு முடிந்த பிறகும் என்னை இருக்கச் செய்து, இனிமேல் ஆட்டுக்குட்டிபோல் அடங்கி நடந்துகொள்ள வேண்டும் என்று ஆசிரியர் எனக்கு உபதேசித்ததை நான் விரும்பிக் கவனத்துடன் கேட்டேன்.

தன் கோட்டை எடுத்து மாட்டிக்கொண்டு குரு அன்புடன் சொன்னார் :

"இதிலிருந்து நீ வந்து நான் பாடங்கள் கற்பிப்பதைக் கேட்க வேண்டும். ஆம். அவசியம் நீ வர வேண்டும். அமைதி

யாக இருந்து கேட்க வேண்டும். ஆம். அமைதியாக" என்றார்.

பள்ளிக்கூடத்தில் காரியங்கள் நன்றாக நடந்தன. ஆனால் வீட்டில் ஒரு கேவலமான காரியம் நிகழ்ந்துவிட்டது. என் தாயிடமிருந்து நான் ஒரு ரூபிளைத் திருடிவிட்டேன். முன் யோசனைசெய்து செய்த குற்றம் அன்று இது. குழந்தையுடன் கூட என்னை வைத்துவிட்டு, ஒரு நாள் மாலை என் அன்னை எங்கேயோ போய் இருந்தாள். செய்வதற்கு வேறு நல்ல காரியம் இல்லாத காரணத்தால் என் மறு தந்தை வைத்திருந்த வைத்தியரின் குறிப்புகள் என்ற ஒரு புத்தகத்தை எடுத்தேன். பெரிய டிமாஸ் எழுதின புத்தகம் அது. அந்தப் புத்தகத்தின் பக்கங்களுக்கு மத்தியில் ஒரு ரூபிள் பில் ஒன்றும் பத்து ரூபிள் பில் ஒன்றும் இருப்பதைக் கண்டேன். படிப்பதற்கு அந்தப் புத்தகம் கஷ்டமாய் இருந்தது. ஆனால் அந்தப் புத்தகத்தை மூடும் தருணத்தில் புனித சரித்திரம் என்ற புத்தகம் மட்டு மல்ல, ராபின்சன் குருஸோ என்ற ஒரு புத்தகமும் சேர்த்து ஒரு ரூபிளுக்கு வாங்கலாம் என்ற எண்ணம் என் மனத்தில் உதித்தது. இப்படி ஒரு புத்தகம் இருக்கிறது என்பது சிறிது நேரத்துக்கு முன்னர்தான் எனக்குத் தெரியவந்தது. குளிர்காலத்தின்போது ஓய்வு நேரத்தில் ஒரு நாள், சிறுவர் களுக்கு நான் வேதாளக் கதை ஒன்று சொல்லிக்கொண் டிருந்தேன். திடீரென ஒரு பையன் ஏளனம் செய்யும் முறையில் "வேதாளக் கதைகளை நல்ல கதைகள் என்று சொல்ல முடியாது! ராபின்ஸன் குருஸோதான் நல்ல கதை யாகும்" என்று சொன்னான்.

ராபின்சன் குருஸோவைப் படித்திருந்த மற்ற சில பையன்களும் அந்தப் புத்தகத்தைப் பாராட்டிச் சொன்னார் கள். என் பாட்டி சொல்லும் கதைகளை இவர்கள் ஏளனம் செய்கிறார்கள் என்ற எண்ணம் என் மனத்தை உறுத்தியது.

ஆகவே ராபின்சன் குருஸோவில் ஒரு பிரதி வாங்கிப் படித்து விட்டு, அது நன்றாக இல்லை என்று சொல்ல வேண்டும் என நான் தீர்மானித்தேன்.

மறு தினம் நான் பள்ளிக்கூடம் சென்றபோது, புனித சரித்திரம், மூலைகள் கிழிந்த ஆண்டிரஸன் வேதாளக் கதைப் புத்தகங்கள் இரண்டு, வெள்ளை ரொட்டி மூன்று பவுண்டுகள், ஒரு பவுண்டு குழம்பு ஆகியவற்றைக் கொண்டுசென்றேன். விளாதிமிர் மாதா கோயில் மூலையில் சிறிய இருட்டுப் புத்தகக் கடை ஒன்றில், மஞ்சள் நிறத்தில் பைண்டு செய்த, தோல் போட்ட சிறிய ராபின்சன் குருஸோ புத்தகம் ஒரு பிரதி இருப்பதைக் கண்டேன். பெயர் - பக்கத்தில், தாடியுள்ள மனிதன் தன் தலையில் ரோமக் குல்லாவையும், தோளில் புலித் தோலையும் போட்டுக்கொண்டு இருக்கிற படம் ஒன்றும் இருந்தது. இந்தப் படம் என்னைக் கவரவில்லை. ஆனால் புத்தகத்தின் பைண்டு கெட்டுப் போயிருப்பினும் வேதாளக் கதைகளுள்ள புத்தகம்தான் என்னைக் கவர்ந்தது.

நீண்ட நேர ஓய்வு கிடைத்த சமயம் நான் கொண்டு சென்ற ரொட்டியையும் குழம்பையும் மற்றப்பையன்களுடன் சேர்ந்து சாப்பிட்டேன். பிறகு "நைட்டிங்கேல்" என்ற அற்புதமான கதையை நாங்கள் படிக்க ஆரம்பித்தோம்; முதல் பக்கமே இதயத்தைக் கவருவதாய் இருந்தது.

"சீன நாட்டிலே எல்லாரும் சீனர்கள்தான்; சக்கரவர்த்திகூட ஒரு சீனாக்காரர்தான்." இந்த வாக்கியத்தில் இருக்கிற எளிய நகைச் சுவை, இசை நயம், இன்னும் அற்புதங்கள் நிறைந்த நல்ல அம்சங்கள் முதலியன எவ்வளவு இன்பம் பயந்தன என்பது எனக்கு இன்னும் நினைவு இருக்கிறது.

“ நைட்டிங்கேல் ” என்ற கதையைப் படித்து முடிப்ப தற்குப் பள்ளிக்கூடத்தில் அவகாசம் போதவில்லை. நான் வீட்டுக்குத் திரும்பியதும், நின்றவாறு முட்டையைப் பொரித் துக்கொண்டிருந்த என் தாய் கரகரத்த குரலில் “ ஒரு ரூபிளை நீ எடுத்தாயா ?” என்று கேட்டாள்.

“ ஆம். அதற்குப் புத்தகங்கள் வாங்கி வந்து இருக் கிறேன் ” என்று நான் பதில் சொன்னேன்.

தன் கையில் வைத்திருந்த சட்டுவத்தால் அவள் பலத்த ஒரு உதை கொடுத்து, வேதாளக் கதைகளை என்னிடமிருந்து பிடுங்கி, ஒளித்துவைத்துவிட்டாள். அடியைக் காட்டிலும் இந்தத் தண்டனை அதிக வேதனை அளிப்பதாய் இருந்தது.

அனேக நாட்கள் நான் பள்ளிக்கூடத்துக்குச் செல்ல வில்லை. வேலை செய்துகொண்டிருந்த ஜனங்களிடம் நான் செய்ததைப்பற்றி மறு தந்தை சொன்னார் ; அவர்கள் இதைத் தங்கள் குழந்தைகளிடம் அவிழ்த்துவிட்டார்கள் ; குழந்தை கள் இந்தச் செய்தியைப் பள்ளிக்கூடத்தில் பரப்பினார்கள் ; ஆகவே நான் பள்ளிக்கூடத்துக்குச் சென்றதும், திருடன் என்ற புதிய பெயரை எனக்குச் சூட்டி என்னை அவர்கள் வர வேற்றார்கள். இது சுருக்கமாயும் தெளிவாயும் இருந்த தெனி னும், நியாயமானது என்று கூற முடியாது. ரூபிள் எடுத் தேன் என்பதை மறைக்காமல் ஒப்புக்கொண்டு, அதற்கு நான் செய்த காரியத்தை விளக்கிச் சொன்னபோதிலும் அதை ஒருவரும் நம்பவில்லை. ஆகவே, நான் வீட்டுக்குத் திரும்பி என் அன்னையிடம் இனி ஒருபோதும் நான் பள்ளிக்கூடத் துக்குப் போக மாட்டேன் என்று சொன்னேன்.

மீண்டும் கருப்பவதியாக இருந்த என் அன்னை ஜன்னல் அருகே அமர்ந்து என் சகோதரன் ஷாஷாவுக்கு உணவு ஊட்டிக்கொண்டிருந்தாள். தனது சாம்பல் நிற முகத்தைத் திருப்பி என்னை அவள் பார்த்தாள். மீனைப்போல வாயைப்

பிளந்துகொண்டு என்னை என் அன்னை பார்த்தபோது, அவளுடைய கண்களில் கவலையும் ஏக்கமும் பிரதிபலித்தன.

" நீ பொய் சொல்லுகிறாய்! நீ ரூபிள் எடுத்தது ஒருவருக்கும் தெரியாதே " என்று மெதுவாகக் கேட்டாள்.

" போய் அவர்களைக் கேட்டுப் பார்."

" நீயேதான் அவர்களிடம் கூறி யிருக்கக் கூடும். உண்மையை என்னிடம் சொல்லு ; அவர்களிடம் இதுபற்றி நீ கூறவில்லையா? பொய் சொல்லாதே-இதை யார் சொன்னார்கள் என்பதைத் தெரிந்துகொள்ள நானே பள்ளிக்கூடம் சென்று நாளை விசாரிக்கப் போகிறேன்."

நான் மாணவனுடைய பெயரைச் சொன்னேன். முகத்தைத் தொங்கவிட்டுக்கொண்டு அவள் அழுதுவிட்டாள்.

அடுக்களைக்குச் சென்று, பழைய மரப்பெட்டிகளால் எனக்காகச் செய்யப்பட்டிருந்த கனப்புத் திண்ணைக்குப் பக்கத்தில் நான் படுத்துக்கொண்டேன்.

" ஆண்டவனே! ஆண்டவனே!" என்று அடுத்த அறையில் இருந்துகொண்டு என் அன்னை பொறுமிப் பொறுமி அழுவது என் காதில் விழுந்தது.

கதகதப்பான, எண்ணெய்ப் பசை பிடித்த துணிகளின் நாற்றம் சகிக்க முடியாததாக இருந்தபடியால், நான் எழுந்து முற்றத்துக்குப் போய்விட்டேன்.

" நீ எங்கே போகிறாய்? இங்கே வா " என்று சொல்லி என் அன்னை என்னைக் கூப்பிட்டாள்.

நானும் என் அன்னையும் தரைமீது உட்கார்ந்தோம். என் தாயின் மடிமீது என் சகோதரன் இருந்தான். என் அன்னையின் ஆடையிலுள்ள பொத்தான்களைத் திருகிக்கொண்டே " பத்தான்கள் " என்று அவற்றை அவன் சொன்னான்.

நான் என் அன்னையை ஒட்டிக்கொண்டேன். அவள் தன் கையை என் கழுத்தில் போட்டவாறே "நாம் மிக்க ஏழைகள். ஒவ்வொரு காப்பெக்கும் - நம்மிடமுள்ள ஒவ்வொரு காப்பெக்கும்..." என்று சொன்னாள்.

தனது வெதுவெதுப்பான கரங்களால் என்னை அவள் இறுகத் தழுவிக்கொண்டாள்; தான் சொல்ல விரும்பியதை அவளால் சொல்ல முடியவில்லை.

"ஆஹா என்ன மிருகம் இது! என்ன மிருகம் இது!" என்று, முன்பு நான் ஒரு முறை கேட்ட வார்த்தைகளை அவள் திடீரென்று சொன்னாள்.

"அடி" என்று ஷாஷா செல்லம் கொஞ்சினான்.

அவன் நூதனமான குழந்தையாக இருந்தான்: விகாரமான பெரிய தலை; எதையோ எதிர்பார்த்துப் பார்ப்பவன் போல, பார்க்கிற அற்புதமான நீலநிறக் கண்கள். வழக்கத்துக்கு மாறாக வெகு சீக்கிரத்திலேயே அவன் பேசத் தொடங்கிவிட்டான். ஒருபோதும் அழுகாமல், அமைதியாகவும் மகிழ்ச்சியுடனும் இருந்தான். மிகவும் மெலிந்து இருந்த காரணத்தால் அவனால் தவழ முடியவில்லை. ஆனால் என்னைக் கண்டதும் சந்தோஷத்தால் ஆர்ப்பரித்து, தனது சிறிய கரங்களை நீட்டினான்; ஏதோ காரணத்தால் நிலப்பூக்கள் வாசமடித்த தனது சிறிய கரங்களால் என் காதைப் பிடித்துக்கொண்டு விளையாடினான். நோய்வயப்படாமல் இருந்த அவன் எதிர்பாராத வகையில் ஒரு நாள் அமைதியாக இறந்துபோனான். காலையில் வழக்கம்போல் அவன் மகிழ்ச்சியுடன் இருந்தான்; மாலையில் மாதாகோயில் மணி மாலைப் பிரார்த்தனைக்கு ஒலித்தபொழுது அவன் இறந்து போனான்; இரண்டாவது குழந்தை நிக்கொலாய் பிறந்த சமயம் அவன் இறந்துபோனான்.

பள்ளிக்கூடத்தில் நடந்த நிகழ்ச்சிகளை வாக்களித்தபடி என் அன்னை சரிப்படுத்திவிட்டாள். மீண்டும் இயல்பாக நான் பாடங்கள் படித்துவந்தேன். ஆனால் கீழ்வரும் காரணத்தின் பயனாய் மீண்டும் என் தாத்தாவுடன் சென்று நான் வசிக்க வேண்டியதாயிற்று.

ஒரு நாள் தேநீர் அருந்தும் சமயத்தில் முற்றத்திலிருந்த நான் அடுக்களைக்குள் நுழைந்தபோது என் அன்னை ஏக்கத்துடன் கதறுவது என் காதில் விழுந்தது.

" யெவ்ஜீனி! யெவ்ஜீனி! நீர் போக வேண்டாம். உம்மை வேண்டுகிறேன்."

"மதியீனம்!" என்று என் மறு தந்தை பதில் சொன்னார்.

" நீர் அவளிடம்தான் போகிறீர் !"

" அதனால் என்ன ?"

இருவரும் சில நிமிஷங்கள் மௌனமாக இருந்தார்கள் ; பிறகு என் அன்னை தொடர்ந்து இருமிக்கொண்டே சொன்னதாவது :

" தகுதியற்ற கேவலமான ஒரு விலங்கு நீர் !"

அவளை அவர் அடித்தது என் காதில் விழுந்தது. நான் அறைக்குள் ஓடிப் பார்த்தேன். மண்டியிட்டு அமர்ந்து, முதுகையும் முழங் கைகளையும் ஒரு குறிச்சியில் சாய்த்துக் கொண்டு, கண்கள் இயற்கைக்கு மாறுபட்டுப் பிரகாசிக்க, தலையைப் பின்புறமாகச் சாய்த்துக்கொண்டு இருந்தாள். அவரோ மாசு மறுவில்லாமல் பளபளக்கப் புதிய 'சூட்டை'ப் போட்டுக்கொண்டு, அவளுக்கு எதிரே நின்று, தன் நீண்ட காலால் அவள் மார்பின்மீது உதைத்தார். இதைப் பார்த்ததும் வெள்ளிப்பிடியுள்ள ரொட்டி நறுக்கும் கத்தியை எடுத்து,— இந்த ஒரு சாமானைத்தான் என் தந்தை என் அன்னைக்கு விட்டுச் சென்று இருந்தார் — என் மறு தந்தைமீது குறி வைத்து வேகமாக எறிந்தேன்.

அதிர்ஷ்டவசமாக என் அன்னை அவரை அப்பால் தள்ளிவிட்டாள்; ஆகையால் கத்தி அவருடைய கோட்டுக்குள் பாய்ந்து, சதையை லேசாகக் கிழித்துவிட்டது. பெரிய கதறல் ஒன்று போட்டு, விலாப் பக்கத்தைப் பிடித்துக் கொண்டு, அறையைவிட்டு அவர் வெளியே ஓடிவிட்டார். கூச்சலிட்டு வந்து என்னைப் பிடித்துத் தரைமீது என் அன்னை தள்ளினாள்; முற்றத்திலிருந்து திரும்பிவந்த என் மறு தந்தை என்னை அவளிடமிருந்து பிடித்து இழுத்தார்.

இப்படி எல்லாம் நடந்திருப்பதைப் பொருட்படுத்தாமல் மாலையில் அவர் வெளியே சென்றுவிட்ட பிறகு, கனப்பு அடுப்புக்குப் பக்கத்தில் படுத்துக்கிடந்த என்னிடம் என் அன்னை வந்தாள். வந்தவள் அன்புடன் என்னைக் கட்டித் தழுவிக்கொண்டு முத்தமிட்டாள். "அன்புள்ள குழந்தாய்! என்னை மன்னித்துவிடு. நான் உனக்குத் தவறு இழைத்து விட்டேன். இருப்பினும் நீ இந்தக் காரியத்தைச் செய்யலாமா? கத்தியை எடுக்கலாமா?" என்றாள்.

அவள் சொன்ன இந்த வார்த்தைகளின் பொருளை நன்றாக அறிந்து கிரகித்துக்கொண்ட நான், என் மறு தந்தையைக் கொன்றுவிட்டு, என்னையும் கொன்றுகொள்ளப் போகிறேன் என்று வஞ்சினம் கூறினேன். அதை நான் செய்திருக்க வேண்டியவன்—அல்லது முயற்சியாவது எடுத்துக்கொண்டிருக்கவேண்டியவன். பளபளப்பான சட்டையைப்போட்டுக் கொண்டு, காலைத் தூக்கி,—ஒரு பெண்ணை உதைப்பதற்கு நீட்டின அந்தக் காலை – இப்பொழுது நினைத்தால்கூட எனக்கு எரிச்சலும் வெறுப்பும் ஏற்படுகிறது.

ருஷ்யர்களின் காட்டுமிராண்டித்தனமான வாழ்க்கையில் நிலவின அறுவருக்கத்தகுந்த போக்குகளைச் சில சமயங்களில் இப்பொழுது நினைத்துப் பார்த்தால்கூட, வாழ்வதற்

குத் தகுதியுள்ள வாழ்க்கைதானா அது என்ற எண்ணம் எனக்கு இப்பொழுதும் ஏற்படுவது உண்டு. வாழ்க்கையிலிருந்து இன்றுவரை அகற்றப்படாமல், அடியோடு அழிக்கப்படாமல் இருந்துவரும் விடாப்பிடியான இந்தத் தீய போக்குக்களைப் பலரும் அறியுமாறு எடுத்துக்காட்டுவது அவசியம் என்று நான் உணர்ந்தேன். மானக்கேடாகவும் பயங்கரமாகவும் வாழ்க்கையில் காணப்படும் இந்தத் தீய ஒழுக்கங்களை வேரோடும் தூரோடும் பிடுங்கி, எடுத்துக்காட்டி, மனிதனுடைய வாழ்க்கையினின்றும் நினைப்பினின்றும் அவற்றை ஒழித்துக்கட்டுவது அவசியமாகும்.

இத்தகைய அபத்தங்களை எல்லாம் வேண்டும் என்றே நான் வருணிக்க முன்வந்திருப்பதற்கு இன்னும் ஒரு நல்ல காரணமும் இருக்கிறது. இந்தப் போக்குகள் அருவருக்கத் தக்கதாயும் சிறந்த நல்லியல்புகளை எல்லாம் சிதைத்துக் கெடுப்பதாயும் இருக்கிறது. எனினும், ருஷ்யர்கள், வாலிப உணர்வும் நல்ல உள்ளமும் படைத்தவர்களாய் இருப்பதால், இவற்றை எல்லாம் அழித்துவிடுவதற்கு முயல்வார்கள் என்பதும் கட்டாயம் அவற்றை அவர்கள் அழித்தே தீர்வார்கள் என்பதும் நிச்சயம்.

வாழ்க்கை என்பது ஆச்சரியகரமானது; அதில் கேவலமான மிருகத்தன்மை தீவிரமாக மண்டிக்கிடப்பதுடன் மட்டும் அல்லாமல், அதற்கு அடித்தளத்தில் பளபளப்பான நன்மை பயக்கும் சிருஷ்டி சக்திகள் பொதிந்து கிடக்கின்றன. நல்ல தன்மையின் போக்கு வளர்ந்து வருகிறது. ஜனங்கள் கடைசியாக விழிப்புற்று, சிறப்பாகவும் அழகாகவும் செம்மையாகவும் வாழ்வார்கள் என்பது திண்ணம் என்ற நம்பிக்கைக்கு இடம் அளிக்கிறது.

# 13

மீண்டும் ஒரு முறை நான் என் தாத்தாவுடன் வசிக்கலானேன்.

"போக்கிரிப் பயலே! வந்துவிட்டாயா?" என்று நடுக்கத்துடனே மேஜையைத் தட்டிக்கொண்டு என்னை அவர் வரவேற்றார். "இனி உன்னை நான் ஆதரிக்கப்போவது இல்லை; இனி உன்னை ஆதரிக்க வேண்டியது உன் பாட்டியின் பொறுப்பு" என்றார்.

"இதை ஒரு தொழிலாகவே பாவித்து நான் காப்பாற்றுகிறேன்" என்றாள் என் பாட்டி.

"சரி. அப்படியே செய்" என்று இரைந்தார் என் தாத்தா. பிறகு சிறிது சாந்தம் அடைந்து என்னைப் பார்த்து, "இப்போது நாங்கள் பிரிவினை செய்துகொண்டு தனித் தனியாக வாழ்கிறோம்" என்றார்.

ஜன்னல் அருகே அமர்ந்து என் பாட்டி ஏதோ பின்னிக்கொண்டு இருந்தாள். தங்க முள்ளம் பன்றியின் முட்கள் போல, தலையணைமீது நீட்டிக்கொண்டிருந்த பளபளப்பான ஊசிகளுக்கு இடையில் அவளுடைய பின்னல்வேலை ஊசிகள் சுறுசுறுப்பாக வேலை செய்தன. பித்தளையால் வார்க்கப்பட்ட உருவம்போல என் பாட்டியும் இருந்தாள்; கொஞ்சம்கூட அவளிடம் மாற்றம் எதுவும் தென்படவில்லை. என் தாத்தாவோ சுருக்கங்கள் அதிகமாகி மெலிந்து காணப்பட்டார். அவருடைய தலைமயிர் குறைந்துவிட்டது; அமைதியாகவும் கம்பீரமாகவும் இயங்குவதற்குப் பதிலாக அவருடைய நடையில் படபடப்பும் சிடுசிடுப்பும் காணப்பட்டன. எதையும் சந்தேகம்கொண்டு அவருடைய பசிய கண்கள் கவனித்தன. என் தாத்தாவுக்கும் பாட்டிக்கும் ஏற்பட்ட பாகப் பிரிவினைபற்றி, சிரித்துக்கொண்டே என் பாட்டி சொன்னாள்.

சட்டி பானைகளையும் பாத்திரங்களையும் அவளிடம் கொடுத்து விட்டு, "இவை எல்லாம் உன்னைச் சேர்ந்தவை ; மேலும் எதுவும் என்னிடம் கேட்கக் கூடாது" என்று சொன்னாராம்.

அவளுடைய பழைய உடைகள், சாமான்கள், ஒரு நரித் தோல் சட்டை உள்பட அனைத்தையும் எடுத்து எழு நூறு ரூபிள்களுக்கு விற்றுவிட்டாராம். அந்தப் பணத்தை, கிறிஸ்தவ மதத்துக்கு மாறியிருந்த பழ வியாபாரி யூதர் ஒருவருக்கு வட்டிக்குக் கொடுத்தாராம். பேராசை என்ற நோய் என் தாத்தாவைப் பிடித்துக்கொண்டது ; மானத்தை இழக்கும் அளவுக்கு அவர் பேராசைக்காரர் ஆகிவிட்டார். தான் முன்பு வேலை செய்த பணக்கார வியாபாரிகளிடமும் தொழில் தெரிந்தவர்களிடமும் சென்று, தன் புதல்வர்கள் தன்னைக் கெடுத்து விட்டதாகவும், ஆகவே தனக்குப் பண உதவிபுரியுமாறும் அவர்களைக் கேட்கத் தொடங்கினார். அவர் முன்பு இருந்த நிலையை நினைந்து, அவர்கள் இவருக்குத் தாராளமாக வழங்கினார்கள். பள்ளிக்கூடத்துச் சிறுவன்போல, பேராசையுடன் அதைக் கவனித்துக்கொண்டே வீட்டுக்குத் திரும்பிவந்து என் பாட்டியின் முகத்து அருகே பிடித்துக்காட்டி "முட்டாளே! இதைப் பார்த்தாயா? இதில் பத்தில் ஒரு பகுதிகூட உன்னால் யாரிடமிருந்தும் வாங்கிவர முடியாது" என்றார்.

புதிதாகத் தனக்கு அறிமுகமான ஒருவருக்கு இந்தப் பணத்தை என் தாத்தா வட்டிக்குக் கொடுத்தார். அந்தப் புதிய ஆசாமி வழுக்கத் தலையுள்ள தோல் வியாபாரி. "சாட்டை" என்ற பட்டப் பெயரும் அவருக்குக் கிடைத்து இருந்தது. அவருக்கு ஒரு சகோதரி இருந்தாள். சிவந்த கன்னங்களும் கருத்த விழிகளும் தடித்த உடலும் உடைய அவள் கடை ஒன்று வைத்திருந்தாள். அவளோ மிட்டாயியைப் போன்று இனிப்பாகவும் கைகளில் பிடித்துக்கொள்ளத் தக்கவளாகவும் இருந்தாள்.

வீட்டில் இருந்த ஒவ்வொரு சாமானையும் பாகம்செய்து கொண்டார்கள். தன் பணத்தால் வாங்கின சாமான்களைக் கொண்டு இன்று என் பாட்டி சாப்பாடு தயாரிப்பாள். மறுதினம் என் தாத்தா ரொட்டியும் உணவும் வாங்கி வருவார். அவர் பதார்த்தங்கள் வாங்கி வருகிற அன்று சாப்பாடு மிக மோசமாக இருக்கும். என் பாட்டி இறைச்சி வாங்கிவருவாள். என் தாத்தாவோ ஈரலும் பெருங் குடலும் சிறுகுடலும் தான் வாங்கி வருவார். தேயிலைத் தூளையும் சீனியையும் இருவரும் தனித் தனியாக வைத்திருந்தார்கள். ஆனால் தேநீர் தயாரிக்கும்போது ஒரே பாத்திரத்தில் சேர்ந்து தயாரிப்பார்கள். "கொஞ்சம் பொறு; நீ எவ்வளவு தூள் போடுகிறாய் என்பதை நான் பார்க்கட்டும்" என்று அலறிப்புடைத்துக் கொண்டு என் தாத்தா சொல்வார். தான் வைத்திருக்கும் தேயிலையை எண்ணி எண்ணித்தான் என் பாட்டியிடம் என் தாத்தா கொடுப்பார்.

"உங்களுடைய தேயிலையைக் காட்டிலும் நான் வைத்திருக்கும் தேயிலை நயமானது; கனமானது. நன்றாக இறங்கக் கூடியது. ஆகையால் நீங்கள் இன்னும் கொஞ்சம் தேயிலை போடவேண்டும்" என்பாள் என் பாட்டி.

அவளுக்கு வடித்துக்கொள்ளும் தேநீர் கெட்டியாக இருப்பதைப்போலவே, தனக்கு வடித்திருக்கும் தேநீரும் கெட்டியாக இருக்கிறதா என்பதை, என் பாட்டி அவருக்குத் தேநீர் ஊற்றும்போது என் தாத்தா கவனித்துக்கொண்டிருப்பார். பிறகு இருவரும் சமஅளவு கோப்பையில் சம எண்ணிக்கையுடன் பருகுவார்கள்.

"கடைசியாக உள்ள இதை நீங்கள் பருகுங்கள்" என்று சொல்லி, அவருடைய கோப்பையில் என் பாட்டி தேநீரை ஊற்றுவாள்.

"இருவரும் சேர்ந்து சாப்பிடலாம்" என்று சொல்லி விட்டு, என் தாத்தா தேநீர் பாத்திரத்தைக் கவனிப்பார்.

விக்கிரக விளக்குக்கு எண்ணெய் வாங்குவதும் ஒருவர் பின் ஒருவர் முறைப்படி வாங்கி ஊற்றினர்கள்—ஐம்பது ஆண்டுகள் அரும்பாடுபட்டு உழைத்த இவர்களின் வாழ்க்கை இப்படி.

என் தாத்தா செய்த சூழ்ச்சிகளை எல்லாம் கவனித்த நான், வேடிக்கையை அனுபவித்ததோடு, ஒருங்கே வெறுப்பும் கொண்டேன்; ஆனல் என் பாட்டிக்கோ அவை எல்லாம் வேடிக்கையாகவே இருந்தன.

"அதனல் என்ன? அதை மறந்துவிடு!" என்று என் பாட்டி என்னிடம் சொல்வாள். "அவருக்கு வயதாகிவிட்டது; அவர் கிழவராகிப் போனர். வயது எண்பது ஆகிவிட்டது. எத்தனை வருடங்கள் என்பதை நினைத்துப்பார்; அதனுல் அவர் இப்படி வேடிக்கையாக நடக்கிருர்! வேடிக்கையாக இருந்துவிட்டு அவர் போகட்டும்—அது யாருக்கும் தீங்கு செய்யாது. உன்னையும் என்னையும் பொறுத்தவரை கவலை எதுவும் உனக்கு வேண்டாம்—கட்டாயம் நம் இருவருக்கும் தேவைப்படும் ரொட்டித் துண்டுகளை நான் சம்பாதித்துவிடுவேன்."

நானும் பணம் சம்பாதிக்கத் தொடங்கினேன். ஞாயிற்றுக் கிழமைகளில் அதிகாலையில் எழுந்து ஒரு கோணிப் பையை எடுத்துக்கொண்டு தெருக்கள்தோறும் அலைவேன். தெருக்களிலும் முற்றங்களிலும் கிடக்கும் பழைய எலும்புகள், கந்தைகள், ஆணிகள், காகிதங்கள் ஆகியவற்றைச் சேகரித்துக் கோணிப் பையில் போட்டுக்கொள்வேன். காகிதம், கந்தை, உலோகம் இவை ஒரு பூட்* இருந்தால் அதற்கு இரு

---

*பூட்: நிறுத்தல் அளவை.

பது காப்பெக்குகளும் எலும்பு ஒரு பூட் இருந்தால் எட்டு அல்லது பத்துக் காப்பெக்குகளும் தருவார்கள். பள்ளிக் கூடத்துக்குப் போய்வந்த பின்னர் நாள்தோறும் இப்படி இந்தக் குப்பைகளைப் பொறுக்கி விற்றேன். அதிர்ஷ்டம் இருந் தால் சனிக்கிழமைகளில் முப்பது முதல் ஐம்பது காப்பெக்கு கள்வரை சம்பாதித்துவிடுவேன். நான் கொண்டுபோய்க் கொடுக்கும் பணத்தை வாங்கி, விரைவாக என் பாட்டி தன் சட்டைப்பைக்குள் போட்டுக்கொள்வாள். கண்களைக் கீழ் நோக்கி வைத்துக்கொண்டு, என்னைப் பாராட்டித் தன் மகிழ்ச்சி யைத் தெரிவித்துக்கொள்வாள். "புருவே - கிருவே ! நீயும் நானும் பட்டினி கிடக்க மாட்டோம்; இல்லையா? நீயே யோஜித்துப்பார்" என்று சொல்வாள்.

ஒரு நாள் நான் கொடுத்த ஐந்து காப்பெக் நாணயத்தை வைத்துக்கொண்டு பார்த்தவாறே அவள் மெதுவாக அழு தாள், ஒரு துளி கண்ணீர் அவளுடைய தடித்த மூக்கு அருகே சிதறியது.

குப்பை கூளங்களைச் சேகரித்து விற்பதைக் காட்டிலும் பலகை திருடி விற்பது அதிக லாபகரமாக இருந்தது. ஓகா நதிக் கரையிலிருந்த மரக்கிடங்கிலோ அல்லது 'சாண்ட்ஸ்' என்ற தீவிலிருந்தோ திருடிவந்து விற்கலாம். வருஷாந்திரச் சந்தை யின்போது உலோக வியாபாரம் செய்பவர்கள் தற்காலிக மாகக் கடைபோடுவார்கள். சந்தை முடிந்ததும் கடைகளைப் பிரித்து, மரத்தை 'சாண்ட்ஸ்' தீவில் போட்டுவிடுவார்கள். வசந்த காலத்தில் ஆறு பெருக்கெடுக்கும்வரை இந்த மரங்கள் அங்கேயே கிடக்கும். நல்ல பலகையாய் இருந்தால் வீட்டுக் குச் சொந்தக்காரர்கள் பத்துக் காப்பெக்குகள் தருவார்கள்; ஒரு நாளில் நாங்கள் மூன்று நான்கு பலகைகளைத் திருடி வந்துவிடுவோம். ஆயினும் மூடுபனியுள்ள நாளிலோ அல்

லது மழைபெய்யும் நாள்களிலேதான், காவல்காரர்கள் உள்ளே யிருக்கும் சமயம் பார்த்துத் திருடி வர முடியும்.

என்னுடன் சேர்ந்து வேலைசெய்த வாலிபக் கூட்டத்தோடு நான் சினேக பாவத்துடன் பழகினேன். மொர்தோவியப் பிச்சைக்காரியின் புதல்வன் - பத்து வயது நிரம்பியவன் - ஒருவன். அவன் பெயர் சங்கா வியாக்கீர் - அல்லது மாடப்புறு ; இவன் அன்பான பையன் ; எப்பொழுதும் அமைதியாகவும் நல்ல சுபாவத்துடனும் இருப்பான் ; காஸ்டோராமா என்கிற அநாதைச் சிறுவன் ஒருவன் ; இவன் எலும்பும் தோலுமாகவும் துடுக்காகவும் இருந்தான் ; கண்கள் அவனுக்குப் பிரமாண்டமாயும் கறுப்பாயும் இருந்தன. ஒரு சோடி புறுவைத் திருடியதற்காகச் சிறுர் சிறைக்கு அனுப்பப்பட்ட அவன், தனக்கு வயது பதின்மூன்று ஆனபோது தூக்குப் போட்டுக்கொண்டு இறந்துபோனுன் ; தாத்தாரி இனத்தவனுன காபி என்ற பெயருடையவன் ஒருவன் ; பன்னிரெண்டு வயதுடைய இவன் சாம்சனைப்போல் பலசாலியாக இருந்தான் ; அசாதாரண பலமுள்ள இவன், எளிமையாயும் தாராளபுத்தியுடனும் நடந்துகொள்வான். எட்டு வயதுள்ள யாஸ் என்பவன் ஒருவன் ; இவனுக்கு மூக்குத் தட்டையாய் இருக்கும். சவக்குழி தோண்டுபவனும் கல்லறைக் காவல்காரனுமானவருடைய புதல்வன் இவன் ; மீனைப்போல் அமைதியாக இருப்பான். அடிக்கடி “ கறுப்பு நோய் ” இவனைப் பீடித்தது. எங்களின் இந்தக் கூட்டத்திலே அதிக வயதான ஒருவன் இருந்தான். அவன் பெயர் கிரிஷ்கா சுர்கா. இவனுடைய தாய் விதவை; தையல்வேலை செய்பவள் ; இவன் நல்லவன் ; நேர்மையானவன் ; முஷ்டி யுத்தம் போடுவதில் நிபுணன். எல்லோரும் ஒரே தெருவில் வசித்தோம்.

திருடுவது குற்றம் என்ற எண்ணம் எங்கள் பேட்டையில் யாருக்கும் கிடையாது. அரைப்பட்டினி கிடந்த மக்கள் தங்கள்

வாழ்க்கையை ஓட்டுவதற்கு இயல்பானதாகவும் ஏறக்குறை யத் தனித்தன்மைவாய்ந்தாகவும் திருடுவதைக் கருதினார்கள். வருஷச் சந்தை ஒன்றரை மாதம் மட்டுமே நடந்த காரணத் தால், வருஷம் முழுதும் வாழ்க்கையை ஓட்டுவதற்குக் கஷ்ட மாய் இருந்தது. ஆற்றின் மூலம் கிடைக்கும் பணத்தைக் கொண்டுதான், அதை நம்பித்தான், நாணயமுள்ள வீட்டுக்காரர் களின் வாழ்க்கை நடக்கவேண்டியது இருந்தது. ஆற்றில் ஒதுங்கிவரும் கட்டைகளையும் பலகைகளையும் எடுத்துவந்து கொடுப்பது, தற்காலிகப் படகுகளுக்கு லேசான சாமான்களை எடுத்துப்போவது, இவற்றால்தான் அவர்கள் காலம் தள்ளி னார்கள். ஆனால் பெரும் பகுதி வருவாய், திருட்டு மூலம் தான் கிடைத்தது. அதாவது வோல்கா நதிக்கரையிலும் ஓகா நதிக்கரையிலும் பாலங்கள் படகுகள் ஆகியவற்றி லிருந்து "குரங்கு வேலை செய்வது" அதாவது திருடுவது செய்துவந்தோம்; ஆற்றங்கரைகளில் எது கிடைத்தாலும் அதிலும் கையை வைத்தோம். வயது வந்தவர்கள், ஞாயிற் றுக்கிழமைகளில் தாங்கள் இப்படிச் செய்த காரியத்தைப் பற்றிப் பெருமையடித்துக்கொள்வார்கள். அதைக் கற்றுக் கொள்ள விரும்பிக் குழந்தைகள் விருப்பத்துடன் கேட் பார்கள்.

வசந்த காலம் தொடங்கியதும், வாரம் தவறாமல் சந்தைக் கான ஏற்பாடுகள் மும்முரமாக நடைபெறும். குடிகார மேஸ் திரிகளும் தொழிலாளர்களும் வேலைகளை முடித்துவிட்டு, களைப்புற்று வீதிகளில் திரிவார்கள். அந்தப் பேட்டையி லுள்ள குழந்தைகள் சேப்படித் தொழிலை அவர்களிடம் நடத்துவார்கள். சாதாரணமான தொழில் இது என்ற கருத்து நிலவிய காரணத்தால், பெரியவர்கள் பார்த்திருக் கவே, சிறுவர்கள் அச்சமின்றித் தங்கள் திருட்டுத் தொழிலை நடத்துவார்கள்.

தச்சர்களிடமிருந்து சுத்தியல்களையும், பிட்டர்களிடமிருந்து திருப்புளியையும் வண்டிக்காரர்களிடமிருந்து கடைச்சாவியையும் அவர்கள் திருடினார்கள்.

" அம்மா என்னை விடமாட்டேன் என்கிறாள்; ஆகையால் நான் திருட வர முடியாது " என்று சுர்கா ஒரு நாள் சொன்னான்.

" ஆமாம் ; எனக்கும் பயமாய் இருக்கிறது " என்றான் காபி.

காஸ்டோராமா திருடுவதற்கு எப்பொழுதுமே நாணப்பட்டான். "திருடன்" என்ற சொல்லை நூதனமான வகையில் அழுத்தம் கொடுத்து அவன் உச்சரிப்பான். குடிகாரனிடம் சிறுவர்கள் திருடுவதை கண்டுவிட்டால், துரத்திக்கொண்டே போய் ஈவு இரக்கமின்றி அவர்களை காஸ்டோராமா அடித்துவிடுவான். பெரிய கண்ணும் கவலைபடிந்த முகமுள்ள இந்தச் சிறுவன் எப்பொழுதுமே தன்னைப் பெரியவனாகக் கருதிக்கொண்டான். கப்பலில் சாமான் இறக்குபவர்கள் போல அசைந்தாடி அசைந்தாடி நடப்பான் ; தனது குரலை அழுத்தமாகவும் கரகரப்பாகவும் வைத்துக்கொள்ள முயல்வான். முற்றுமே அவனிடத்தில் முதுமையும் அழுத்தமும் இயற்கைக்கு ஒவ்வாத தன்மையும் இருந்தன. திருடுவது பாபம் என்பதைப் புரு தெரிந்துகொண்டான்.

சாண்ட்ஸ் தீவிலிருந்து மரங்களையும் பலகைகளையும் பிடுங்கிவருவது வேறு வகையைச் சேர்ந்தது. இதைச் செய்ய யாரும் பயப்படவில்லை. நாங்கள் எல்லோரும் ஒரு தந்திரத்தைக் கையாண்டதன் விளைவாக, இந்தக் காரியத்தைச் செய்வது மிகவும் எளிதாகிவிட்டது. இருட்டாகவோ அல்லது பனிமூட்டம் இருக்கும் நாட்களிலோ மாலையானதும் புருவும் யாஸ‍ும் உறைந்து கிடக்கும் பனிக்கட்டிமீது நடந்து சாண்ட்ஸ் தீவுக்குப் போவார்கள். காவல்காரனுடைய கவ

னத்தை ஈர்க்கும் பொருட்டு அவன் கண்களில் படும்படியாக அவர்கள் நடந்து செல்வார்கள். இந்தச் சமயத்தில் அவர்களுக்குத் தெரியாதபடி நாங்கள் வேறு பக்கங்களில் செல்வோம். யாஸையும் மாடப் புறுவையும் காவல்காரர்கள் கவனித்துக் கொண்டிருக்கும் சமயம் பார்த்து, குறிப்பிட்ட ஒரு இடத்துக்குப் போய்ச் சேர்ந்து பலகைகளைப் பொறுக்குவோம். முன்னே சென்ற தோழர்கள் காவல்காரர்களைக் கிண்டல் செய்துவிட்டு அவர்களிடமிருந்து ஓட்டம் பிடிக்கும்போது, எங்களுடைய திரும்பும் படலம் தொடங்கும். ஒவ்வொருவரிடம் வளைந்த ஆணியுடன் கூடிய கயிறு ஒன்று இருக்கும். அந்த ஆணியைப் பலகையில் மாட்டி, அதைப் பனிக்கட்டிமீது இழுத்துக்கொண்டு செல்வோம். காவல்காரர்கள் கண்ணுக்கு நாங்கள் அபூர்வமாகத்தான் தென்படுவோம். அப்படித் தென்பட்டாலும் அவர்களால் எங்களைப் பிடிக்க முடியாது. பலகைகளை விற்று அதில் கிடைக்கும் பணத்தை நாங்கள் ஆறு பேரும் சமமாகப் பங்கிட்டுக்கொள்வோம். ஐந்திலிருந்து ஏழு காப்பெக்குள்வரை பெரும்பாலும் வழக்கமாகக் கிடைக்கும்.

ஒரு நாளைக்குப் போதிய அளவு திருப்தியுடன் சாப்பிடுவதற்கு இந்தப் பணம் போதும். தனக்கு வோட்கா மது வாங்கிப் போகாவிட்டால் மாடப் புறுவின் தாய் அவனை அடித்து நொறுக்கிவிடுவாள். பணத்தை மீதம் பிடித்து, தான் கனவு கண்ட பறவை வேட்டைக்கு காஸ்டோராமா புறப்பட்டுப் போய்விடுவான்; சுர்காவின் தாய் நோயாக இருந்த காரணத்தால், தனக்குக் கிடைத்ததை எல்லாம் அவளுக்கு அவன் கொண்டுபோனான். தன் ஊருக்குத் திரும்புவதற்காக, காபியும் பணத்தை மீதப்படுத்தினான். அவனுடைய சிற்றப்பா அவனை நிழனிநோவாகிராட்டுக்கு அழைத்து வந்திருந்தார். வந்த சிறிது காலத்துக்குள் நீரில் மூழ்கி அவர் இறந்துபோய்

விட்டபடியால் அவன் தன் ஊருக்குப் போக ஆசைப் பட்டான். தான் செல்ல வேண்டிய ஊரின் பெயரை அவன் மறந்துவிட்டான். வேல்கா நதியின் பக்கத்தில் காமா நதிக் கரையில் இருந்ததாக மட்டும் அவனுக்கு நினைவு இருந்தது.

சில காரணங்களால் இந்த நகரத்தைப்பற்றிய நினைப்பு எங்களுக்கு எல்லாம் வேடிக்கையாக இருந்தது. இதைப் பற்றி, கோணல் கண்ணன் தாத்தாரியை நாங்கள் கேலி செய்துகொண்டே இருந்தோம்.

ஒரு அழகான நகரம்;
ஆனால் அது இருக்கும் இடம் தெரியாது.
இங்கா ? அங்கா ?
அல்லது ஆகாயத்திலா ?

முதலில் காபி எங்கள்மீது கோபப்பட்டான். ஆனால் மாடப்புரு என்பவன் தன் குமுறல் தொண்டையில், தன் புனைபெயருக்கு ஏற்ப அவனைப் பார்த்து "வாருங்கள். போகலாம். தோழர்கள் கோபப்பட்டுக்கொள்வதை யாராவது கேள்விப்பட்டது உண்டா ?" என்று கேட்டான்.

தாத்தாரி நாணம் அடைந்தான். கிண்டலைப் பொறுத்துக் கொண்டான்; பின்னர் காமா ஆற்றின்மீது இருந்த நகரத்தைப்பற்றி அவனும் பாட்டுப் பாடத் தொடங்கினான்.

பலகைகள் திருடுவதைக் காட்டிலும் குப்பை கூளங்களைச் சேகரிப்பதையே நாங்கள் அதிகம் விரும்பினோம். குறிப்பாக வஸந்த காலத்தில் இந்த வேலை அதிக உற்சாகத்தை அளித்தது. ஏனெனில் பனிக்கட்டி எல்லாம் உருகி, மழை பெய்து, அழகிய வெறும் தரைமீது கிடக்கும் கூழாங்கற்களை கழுவிவிட்டுக்கொண் டிருக்கும் தரையின் இடுக்குகளில் ஆணிகளையும் உலோகத் துண்டுகளையும் எளிதில் கண்டு பிடித்துவிடலாம். அடிக்கடி வெள்ளிக் காசுகளும் செப்புக்

காசுகளும் அகப்படும். காவல்காரர்கள் எங்களைத் துரத்தாமல் இருப்பதற்கும் எங்கள் கோணிப்பைகளைப் பறித்துக்கொள்ளாமல் இருப்பதற்கும் நாங்கள் இரண்டு காப்பெக்குகள் அவர்களுக்குக் கொடுப்போம். இல்லாதுபோனால் அவர்களைக் கெஞ்சிக் கேட்போம். பொதுவாக எங்களால் எப்பொழுதுமே பணம் சம்பாதிக்க முடியாதாகையால், நயந்து நயந்து நண்பர்கள் ஆக நாங்கள் முயன்றோம். இடையிலே எப்போதாவது எங்களிடையே சச்சரவுகள் ஏற்படுவது உண்டு. ஆனால் ஒருபோதும் நாங்கள் சண்டையிட்டுக்கொண்டது கிடையாது.

மாடப்புறாதான் சமாதானம் செய்பவனாக இருப்பான். உணர்ச்சிகளையும் ஆத்திரங்களையும் அடக்கத்தகுந்த வார்த்தைகளைச் சொல்லி, சாந்தப்படுத்தி வைப்பான். அவன் கூறும் சொற்கள் எளியனவாகத்தான் இருக்கும்; ஆனால் அவற்றைக் கேட்டதும் ஆச்சரியமும் நாணமும் ஒருங்கே பெற்றுத் தலை கவிழ்ந்துகொள்ள நேரும். சில சமயங்களில் தான் சொல்லும் வார்த்தைகளில் தானே அவன் ஆச்சரியப்பட்டுப்போவதும் உண்டு. யாஸ் செய்கிற கேவலமான தந்திரங்களை அவன் ஒருபோதும் குற்றமாக எடுத்துக்கொள்வது இல்லை; மடத்தனமும் முட்டாள்தனமும் வாய்ந்தன என்று அமைதியாகச் சொல்லிவிட்டு, அவன் சும்மா இருந்துவிடுவான்.

"இந்த மாதிரியான காரியங்களை எல்லாம் இப்பொழுது நீ ஏன் செய்கிறாய்?" என்று கேட்பான். அதன்பின் அந்தக் காரியம் செய்வதில் அர்த்தமில்லை என்பது ஒவ்வொருவருக்கும் தோன்றிவிடும்.

"எனக்குச் சொந்தமான மொர்தோவியப் பெண்மணி" என்று தன் தாயை அவன் குறிப்பிடுவான்; அதில் வேடிக்கை இருப்பதாக நாங்கள் யாரும் கருதவில்லை.

“ எனக்குச் சொந்தமான அந்த மொர்தோவியப் பெண் மணி நேற்று வயிறுமுட்டக் குடித்துவிட்டு வந்தாள். வந்த வள் கதவில் மோதிக்கொண்டு கீழே விழுந்துவிட்டாள். அந் தக் கிழட்டுப் பெட்டைக்கோழி அங்கேயே தலைதெறிக்கப் பாடிக்கொண்டு கிடக்கிறாள்” என்று, தனது சிறிய உருண் டைக் கண்கள் தங்க நிறத்தில் பளபளக்கச் சிரித்துக் கொண்டு சொல்வான்.

“ அவள் என்ன பாடினாள் ?” என்று சுர்கா அக்கறை யோடு கேட்டான்.

தன் தாய் பாடின பாடலை அவன் உயர்ந்த குரலில் பாடினபோது, மாடப்புறா அதற்கு ஏற்ப, தன் தொடைமீது தாளம் போட்டான்.

டாப் டாப் டாப் !
இப்படி வாலிப இடையன் தட்டுகிறான் ;
எங்கள் வீட்டு ஜன்னல் கதவில்.
நான் எனது பன்றியுடன் போய்விட்டேன்.
சூரிய அஸ்தமனம் பளபளக்கிறது.
இடையன் குழல் ஊதுகிறான்.
இனிமையாகவும் சுத்தமாகவும் குழலை இசைக்கிறான்.
அதைச் செவிமடுக்கக் கிராமமே திரண்டுவிடுகிறது.

இதைப்போன்ற உற்சாகமான பல பாடல்களை அவன் அறிவான். அவற்றை அவன் உற்சாகத்துடனும் பாடுவான்.

“ ஆம். அவள் அங்கேயே வாயிலில் கிடந்துவிட்டாள்” என்று அவன் தொடர்ந்து சொன்னான். “ அதனால் குளிர் காற்று வீட்டுக்குள் புகுந்து, கால்சட்டைகளை கழன்று விழும் அளவு என்னை நடுங்க வைத்துவிட்டது. அவளை அப் பால் நகர்த்திப் போடவும் என்னால் முடியவில்லை. ‘ நீ ஏன் இப்படிக் குடிக்கிறாய் ?’ என்று இன்று காலை அவளை நான்

கேட்டேன். 'சரியாய் போய்விடும். கொஞ்ச காலத்துக்குப் பொறுத்துக்கொள். விரைவில் நான் இறந்து போவேன்' என்கிறாள் அவள்" என்று அவன் சொன்னான்.

"ஆம். அவள் திரிகிறதைப் பார்த்தால் நீடித்த நாளைக்கு ஓடாது என்பது நிச்சயம்" என்று சுர்கா அழுத்தமாகவும் மனத்தில் பதியும்படியாகவும் சொன்னான்.

"உனக்குக் கவலையாக இருக்குமா?" என்று நான் கேட்டேன்.

"ஆம். கவலையாகத்தான் இருக்கும். அவள் என்னிடம் நல்ல முறையில் நடந்து வந்திருக்கிறாள்" என்று ஆச்சரியத் துடன் சொன்னான் மாடப்புறா.

மாடப்புறாவை மொர்தோவியப் பெண் அடிப்பாள் என் பதை நாங்கள் அறிவோம். எனினும் அவள் நல்ல ஆத்மா என்பதை நாங்கள் எல்லோரும் மனப்பூர்வமாக உணர்ந் தோம். எங்களுக்கு லாபம் குறைவாகக் கிடைத்து இருக்கும் தினத்தன்று சுர்கா அவனைப் பார்த்து "மாடப்புறாவின் தாய்க்குக் கொஞ்சம் வோட்கா மது வாங்க நாம் ஒவ்வொரு வரும் ஒரு காப்பெக்குக் கொடுப்போம். இல்லாதுபோனால் அவனை அவள் உதைப்பாள்" என்று சொல்வான்.

எனக்கும் சுர்காவுக்கும்தான் எழுதப்படிக்கத் தெரியும். இதற்காக மாடப்புறா எங்கள்மீது பொறாமைகொண்டான்.

"எனக்குச் சொந்தமான மொர்தோவியப் பெண் இறந்த பிறகு, நானும் பள்ளிக்கூடத்துக்குப் போவேன்; என்னைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்துக்கொள்ளுமாறு வேண்டி, அந்த ஆசிரியரின் கால்களை நான் முத்தமிடுவேன். எனது படிப்பு முடிந்த பிறகு ஆர்ச் பிஷப்புக்கோ அல்லது ஸார் சக்கரவர்த் திக்கோ நான் தோட்டக்காரனாக இருப்பேன்" என்று, எலியின் காதைப் போன்ற கூர்மையான தனது நீண்ட காதை இழுத்து விட்டுக்கொண்டே புறாபோல் குமுறுவான்.

அந்த மொர்தோவியப் பெண், வஸந்த காலத்தில் கையில் வோட்கா மதுப் போத்தலை வைத்துக்கொண்டு புது மாதா கோயில் கட்டுவதற்காக நன்கொடை வசூல் செய்ய ஒரு கிழவனை அழைத்துக்கொண்டு திரிந்தாள். அப்போது மரக் கட்டைக் கட்டு ஒன்று அவள்மீது விழுந்த காரணத்தால் அவள் இறந்துபோனாள். அவளை ஆஸ்பத்திரிக்குத் தூக்கிப் போய்விட்டார்கள். அப்போது மாடப்புறுவை பார்த்து சுர்கா "நீ வந்து என்னுடன் தங்கி இரு. என் அம்மா உனக்கு எழுதப் படிக்கக் கற்றுத் தருவாள்" என்று சொன்னான்.

இதன் பிறகு ஒரு நாள் மாடப்புறு ஒரு கடைக்கு எதிரில் நின்று படிக்கத் தொடங்கினான் :

தனது தலையை நிமிர்த்திக் கம்பீரமாக "மரிகைக் கடை" என்று படித்தான்.

"அட போலிப் பயலே! மரிகைக் கடை அன்று; மளிகைக் கடை" என்று திருத்தினான் சுர்கா.

"ஆம். தெரிகிறது; எதுத்துக்களை மாறிப் படித்து விட்டேன்."

"எதுத்துக்கள் அல்ல; எழுத்துக்கள்" என்று சொல்ல வேண்டும்.

"தம்மை முதலில் படிக்க வேண்டும் என்பதற்காக எழுத்துக்கள் இப்படி முந்திக்கொள்கின்றன. அவற்றுக்கு அதில் ஒரு பிரியம்."

மரங்கள்மீதும் புற்கள்மீதும் அவனுக்கு இருந்தபிரியத்தைக் கண்டு நாங்கள் ஆச்சரியமும் அதிசயமும் அடைந்தோம்.

மணல்பாங்காய் இருந்த காரணத்தால் எங்கள் பேட்டையில் மரம் செடி கொடிகள் அதிகம் இல்லை. இங்கு ஒன்றும் அங்கு ஒன்றுமாக நோய்ந்த வில்லோ மரங்களை முற்றங்களில் காணலாம்; பின்னிக்கிடக்கும் எல்டர்பெரி புதர்களைக் காணலாம்; வேலிகளுக்குள் காய்ந்து மறைந்து கிடக்கும் புற்களைப்

பார்க்கலாம். இந்தப் புற்கள்மீது யாராவது உட்காருவதைப் பார்த்துவிட்டால் அவனை மாடப்புரு கடிந்து கோபித்துக் கொள்வான்.

"புல்லின்மீது உட்கார்ந்து எதற்காக அதை இப்படிப் பாழ்படுத்துகிருய்? மணல்மீது உட்காரக் கூடாதா? அதுவும் புல்லைப்போலச் சுகமாக இருக்குமே!" என்பான்.

அவனுக்கு எதிரில் பூத்திருக்கும் எல்டர்பெரி கிளைகளை ஒடிப்பதற்கோ அல்லது ஓகா நதிமீது இருக்கும் வில்லோ கம்புகளை ஒடிப்பதற்கோ நாங்கள் பயப்படுவது உண்டு.

"பிசாசுகளே! பொருள்களை ஏன் இப்படி நாசப் படுத்துகிறீர்கள்?" என்று ஆச்சரியத்தால் தன் தோளை குலுக்கிக்கொண்டே அவன் சொல்வான்.

அவன் ஆச்சரியப்படுவது எங்களை நாணமுறும்படி செய்துவிடும்.

சனிக்கிழமைகளில் விளையாடுவதற்காக மற்ற நாட்கள் முழுதும் பழைய பட்டைச் செருப்புகளை பொறுக்கிச் சேகரிப்போம். சனிக்கிழமை மாலை நேரங்களில் தாத்தாரியக் கப்பல் கூலிகள் சைபீரியன் பாலத்துக்குச் செல்லும்போது, சில தெருக்களின் மூலைகளில் ஒளிந்துகொண்டு இந்தச் செருப்புகளை அவர்கள்மீது வீசுவோம். முதலில் அவர்கள் எங்கள்மீது கோபமடைந்து திட்டினர்கள்; எங்களை விரட் டினர்கள். ஆனால் பிறகு அவர்களுமே இந்த விளையாட்டில் பங்குகொள்ளத் தலைப்பட்டார்கள். வரப்போகும் சண்டையை எதிர்பார்த்து, பட்டைச் செருப்புகளைத் தங்களுக்கு ஆயுத மாகச் சேகரித்துக்கொண்டார்கள். ஒரு முறை நாங்கள் மறைத்து வைத்திருந்த இடம் பார்த்து, எங்கள் ஆயுதமான செருப்புகளையும் அவர்கள் கைப்பற்றிக்கொண்டார்கள்.

"இது விளையாட்டு ஆகாது" என்று நாங்கள் மறுத்துச் சொன்னேம்.

தாங்கள் திருடிச் சென்ற செருப்புகளை எங்களுக்குப் பகிர்ந்து தந்துவிட்டு, அவர்கள் சண்டையைத் தொடங்கினார்கள். வழக்கப்படி அவர்கள் திறந்த வெளியில் நின்றுகொண்டார்கள்; நாங்களோ குதித்துக் கும்மாளம் அடித்துக்கொண்டு, எங்கள் கையிலுள்ள ஆயுதங்களை அவர்கள்மீது எறிந்தோம். அவர்களும் கூப்பாடு போட்டார்கள் ; குறி சரியாக வந்து தங்கள் மூக்கில் தைக்கப்போவதைக் கண்டு யாராவது தங்கள் மூக்கை மணலில் புதைத்துக்கொள்வதைக் கண்டுவிட்டால் அவர்கள் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

சில சமயங்களில் இந்த விளையாட்டு இருட்டும்வரைகூடத் தொடர்ந்து நடைபெறும். மூலையில் பாதுகாவலாக நின்றுகொண்டு சில்லறை வியாபாரிகள் எங்கள் விளையாட்டைக் கவனிப்பார்கள். எச்சரிக்காமல் இருந்தால் அது நாகரிகக் குறைவு என்பதற்காக எச்சரிப்பார்கள். தூசுபடிந்த சாம்பல் நிறப் பறவைகள்போல, செருப்புகள் ஆகாயத்தில் பறந்த வண்ணம் இருக்கும். சில சமயங்களில் எங்களில் யாருக்காவது பலமான அடி விழுந்துவிடுவதும் உண்டு. ஆனால் இந்தக் காயமும் வலியும் விளையாட்டில் ஏற்படுகிறது மகிழ்ச்சியில் கரைந்து மறைந்துபோகும்.

எங்களைப்போலவே தார்த்தாரிகளும் கிளர்ச்சி வயப்பட்டு இருப்பார்கள். இந்தச் சண்டை எல்லாம் முடிந்த பிறகு, ஏகதேசங்களில் எங்களை அவர்கள் தங்கள் வீட்டுக்கு அழைத்துப்போவார்கள் ; குதிரை இறைச்சியும் நூதமான காய்கறியும் தந்து எங்களைச் சாப்பிடச் சொல்வார்கள் ; பிறகு கெட்டியாகப் பிழிந்த தேநீரும் கொட்டைக் கேக்கும் தந்து உபசரிப்பார்கள். பிரமாண்டமான ஆகிருதி வாய்ந்த இவர்களை எங்களுக்குப் பிடித்து இருந்தது ; பலத்தில் ஒவ்வொருவனும் மற்றவனை விஞ்சின ஆசாமியாகவே எங்களுக்குத் தென்பட்டான். அவர்களுடைய நடையுடை பாவனைகளில்

எளிமையும் குழந்தைப்பாங்கும் இருந்தன. எதையும் குற்றமாக எடுத்துக்கொள்ளாமல், ஒருவருக்கு ஒருவர் இதமாகவும் அன்பாகவும் அவர்கள் நடந்துகொண்டது, குறிப்பாக என் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்துவிட்டது.

எல்லா தாத்தாரிகளுமே சிரிப்பை அடக்கிக்கொள்ள முடியாமல் விழுந்து விழுந்து சிரிப்பார்கள் ; கன்னங்களில் கண்ணீர் உருண்டு ஓடும் அளவுக்கு விழுந்து விழுந்து சிரிப்பார்கள். அவர்களில் ஒருவன் காசிமாவ் என்ற ஊரைச் சேர்ந்த குடியானவன். அசுர பலமுள்ள அவனுக்கு மூக்குச் சிதைந்து சப்பட்டையாய் இருந்தது. ஒரு நாள் இவன் இருபத்தேழு பூட்கள் நிறையுள்ள மாதாகோயில் மணி ஒன்றை, கப்பலிலிருந்து சுமந்துகொண்டு, ஆற்றங் கரைக்கே சென்றுவிட்டான். இவன் சிரிப்பது ஊளையிடுவதுபோல இருக்கும் :

"ஊஊஊஊ ! ஊஊஊஊ ! பறவை என்பது இந்த வார்த்தை. வார்த்தையைக் கேட்டேன் ; பறவையைப் பிடித்தேன்... தங்க நிறப் பறவை !"

ஒரு நாள் மாடப்புரு என்பவனைத் தன் உள்ளங்கையில் வைத்துக்கொண்டு, அப்படியே ஆகாயத்துக்குத் தூக்கி "நீ மேலே போய் ஆகாயத்தில் வசி" என்று சொன்னான்.

மழைக் காலங்களில் கல்லறையை அடுத்து இருந்த ஒரு சின்ன வீட்டில் ஒன்றுகூடி நாங்கள் சந்தித்தோம் ; அங்கே யாஸ் தன் தந்தையுடன் வசித்தான். அவனுடைய தந்தை கூனிக் குறுகிப்போய் இருந்தார். ஆடைகள் தரையில் புரண்டன ; கைகள் நீண்டு இருந்தன ; முகத்திலும் தலையிலும் அங்கு ஒன்றும் இங்கு ஒன்றுமாக ரோமங்கள் முளைத்து அழுக்கடைந்து இருந்தன. தோல் - தடிபோல நீண்டிருந்த அவருடைய கழுத்தில், வாடிப்போன டர்னீப்பைப்போல அவருடைய தலை இருந்தது. தனது மஞ்சள்

நிறக் கண்களை மகிழ்ச்சி துலங்க ஒடுக்கிக்கொண்டு, "ஆண்டவனே! இரவு நேரத்தில் தூக்கம் கலையாமல் எங்களைக் காப்பாற்றும் !" என்று சொல்வார் அவர்.

தேயிலை கொஞ்சம், சீனி கொஞ்சம், ரொட்டித் துண்டு, வோட்கா மது ஆகியவற்றை நாங்கள் யாஸின் தந்தைக்காக வாங்கிச் செல்வோம்.

"அழுகிப்போன குடியானவரே! சாமோவார் அடுப்பைப் பற்றவையும்" என்று சுர்கா உத்தரவிடுவான்.

சிரித்துவிட்டு, அந்தக் குடியானவர் அந்த உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து நடப்பார்; தண்ணீர் கொதிப்பதற்காகக் காத்து இருக்க நேரும் சமயங்களில், எங்களுடைய சமாசாரங்களைப் பற்றி விசாரித்து எங்களுக்கு ஆலோசனைகள் சொல்வார்.

"கவனமாய் இருங்கள்—நாளைக்கு மறுதினம் தருசோவ் குடும்பத்தில் சவ அடக்க விருந்து நடைபெற விருக்கிறது. அங்கே ஏராளமான எலும்புகள் கிடைக்கும்."

"தருசோவ் வீட்டுச் சமையல்காரியும் எலும்பு சேகரிப்பவள் ஆயிற்றே" என்று எங்கும் திரிகிற சுர்கா சொன்னான்.

"காட்டுக்குள் போவதற்கு ஏற்றவாறு காலநிலை விரைவில் சரிப்பட்டுவிடும்" என்று சொல்லிக்கொண்டே ஜன்னல் வழியாகக் கல்லறையை எட்டிப்பார்த்தான் மாடப் புறா.

யாஸ் அபூர்வமாகத்தான் பேசுவான்; குப்பைத் தொட்டிகளில் அகப்பட்ட டப்பாக்களை எடுத்து அவற்றில் இருக்கும் பொம்மைகளைக் காட்டிக்கொண்டே, வருத்தம் கலந்த கண்களுடன் எங்களை அமைதியாகப் பார்ப்பான்; மரச் சிப்பாய், கால் இல்லாத குதிரை, பொத்தான்கள், பித்தளைத் துண்டுகள் முதலியவற்றை எங்களுக்குக் காட்டுவான்.

அவனுடைய தந்தை பல்வகையான கோப்பைகளை மேஜைமீது எடுத்துவைத்து, சாமோவாரையும் எடுத்துவைப்பார். காஸ்டோராமா தேநீரை ஊற்றுவான்; ஆனால் பெரியவர்

வோட்காவைக் குடித்துவிட்டு, மேடைமீது ஏறி நின்று தனது ஆந்தைக் கண்களால் எங்களைக் கவனித்துக்கொண்டு முணுமுணுப்பார்

"உங்கள் கூட்டமே நாசமாய்ப்போக! நீங்கள் மனிதப் பிறவியா அல்லது வேறு பிறவிகளா? பூ! திருடர்கள் கூட்டம்! தூக்கமற்ற இரவுகள் ஏற்படாதபடி ஆண்டவன் காப்பாராக!" என்பார்

"நாங்கள் திருடர்கள் அன்று!" என்று சொன்னான் மாடப்புரு.

"அப்படியானால் சின்னத் திருடர்கள்!"

இப்படி யாஸின் தந்தை எங்களை வம்புக்கு இழுக்கும் சமயங்களில் "அழுகிப்போன குடியானவரே! வாயை மூடிக் கொண்டு சும்மா இரும்" என்று சுர்கா அவரை அதட்டு வான்.

அந்தப் பேட்டையில் யார் யார் நோயாளிகளாய் இருக் கிறார்கள் என்றும் யார் முதலில் இறக்கக் கூடும் என்றும் அவர் அடுக்கிக்கொண்டே வருவதை எங்களால்—மாடப்புரு, சுர்கா, நான்—பொறுத்துக்கொண்டு இருக்க முடிவது இல்லை. இதை எதிர்பார்ப்பவர்போல தன் உதடுகளை அவர் சப்பிக் கொள்வார்; கொஞ்சம்கூட இரக்கம் காட்ட மாட்டார். இதைக் கேட்பதற்கு நாங்கள் பிரியப்படுவது இல்லை என்பது அவருக்குத் தெரியவந்தால் வேண்டும் என்றே எங்களை அவர் கிண்டல் செய்வார்.

"சின்னப்பசங்களா! உங்களுக்குப் பயமாக இருக்கிறதா? கொழுத்துத் தடித்த பயல் ஒருவன் விரைவில் உதைப்பட்டு விழப்போகிறான். அவன் அழுகி மட்கிப் போவதற்கு அதிக நாள் பிடிக்காது!"

நாங்கள் அவரை நிறுத்தினோம்; ஆயினும் தன் சள சளப்பை அவர் நிறுத்துவதாகக் காணோம்.

“ உங்களுடைய முறையும் விரைவில் வந்துவிடும்; குப்பை கூழங்களிலே கிடந்து நீண்ட நாளைக்குக் காலம்தள்ள முடியாது !”

“ நல்லது ! நாங்கள் இறந்துபோகிறோம். எங்களுக்குத் தேவர்களின் பதவி கிடைக்கும்” என்று சொன்னான் மாடப்புறு.

“ நீங்களா ? தேவர்களாகவா ?” என்று ஆச்சரியத்துடன் யாஸின் தந்தை சிரித்தார். பிணங்களைப்பற்றின வெறுப்பூட்டும் கதைகளைச் சொல்லிச் சொல்லி எங்களை அவர் சித்திரவதை செய்துகொண்டிருந்தார்.

ஆனால் சில சமயங்களில் னொய் என்ற தனது குரலில் மெதுவாக நூதனமான விஷயங்களையும் அவர் சொன்னார் :

“ சிறுவர்களே ! நான் கூறுவதைக் கேளுங்கள். விநோத சரித்திரமுள்ள பெண்மணி ஒருத்தியை நேற்று முன்தினம் புதைத்தார்கள். அதுபற்றிய விவரங்கள் எல்லாம் எனக்குத் தெரிந்துவிட்டது. நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் ?” என்று கேட்பார்.

அடிக்கடி அவர் பெண்களைப்பற்றியே பேசினார். கேவலமாகவும் பேசினார். சிந்தித்துப் பார்க்குமாறு எங்களை வேண்டுபவர்போல அவர் சொல்லும் கதைகளில் குற்றச்சாட்டுகளும் கிளறிவிடும்தன்மைகளும் இருக்கும். அவர் சொல்வதை நாங்கள் கவனமாகக் கேட்போம். தயங்கித் தயங்கி இடையிடையே கேள்விகள் கேட்டுக்கொண்டு அவர் பேசுவார். ஆனால் அவர் சொல்லுவதில் நெஞ்சை உறுத்தி வாதனைப்படுத்தும் தூசுதுப்பட்டைகள் நினைவில் எப்பொழுதும் பதிந்துகிடக்கும்.

“ ‘யார் நெருப்பைப் பற்றவைத்தது ?’ அவளை அவர்கள் கேட்டார்கள். ‘நான் பற்றவைத்தேன்’ என்று அவள் பதில் சொன்னாள். ‘முட்டாளே ! ஏன் இப்படிச் செய்

தாய். நேற்று இரவு நீ ஆஸ்பத்திரியில் இருந்தாயே' என்று அவர்கள் கேட்டார்கள். 'நான்தான்' என்று அவள் திரும்பவும் சொன்னாள். எதற்காக அவள் இப்படி எல்லாம் சொல்லுகிறார்களோ ? தூக்கமற்ற இரவுகள் ஏற்படாதபடி ஆண்டவன் நம்மைக் காப்பாராக !''

பயங்கரமான இந்த மொட்டைக் கல்லறையின் பூமிக்குக் கீழே புதைக்கப்பட்டவர்களின் சரித்திரங்களை எல்லாம் பெரும்பாலாக அவர் தெரிந்துவைத்து இருந்தார். எங்களை அழைத்துச் சென்று ஒவ்வொரு வீட்டின் கதவையும் திறந்து எங்களுக்குக் காட்டுவதுபோலவும் நாங்கள் உள்ளே நுழைந்து அந்த வீட்டுவாசிகளின் வாழ்க்கையைக் கவனிப்பதுபோலவும் ஆழ்ந்த முக்கியமான காரியங்களை நாங்கள் கவனிப்பது போலவும் அந்த மனநிலை எங்களுக்கு ஏற்படும் வகையிலும் அவர் பேசுவார். இரவு முழுதும் அவர் பேச விரும்புபவர் போல எங்களுக்குத் தோன்றும். ஆனால் இருட்டு ஜன்னலைச் சுற்றிவரும்பொழுது மேஜையைவிட்டு எழுந்து "நான் வீட்டுக்குப் போகிறேன். என்னைக் காணாமல் அம்மா சங்கடப்படுவாள். என்னோடு யார் வருபவர்கள் ?'' என்று கேட்பான் சுர்கா.

நாங்கள் எல்லாரும் அவருடன் சேர்ந்து புறப்படுவோம்; வேலிவரையில் யாஸ் எங்களுடன் சேர்ந்து வருவான். வந்து கதவைச் சாத்திப் பூட்டிவிட்டுத் தனது எலும்பு அடர்ந்த கறுப்பு முகத்தைக் கம்பிகளில் புதைத்துக்கொண்டு விடை அளிப்பான். கல்லறையில் விட்டுச்செல்ல நேருவது குறித்து எங்கள் மனம் சஞ்சலப்படுவதை நாங்கள் அவனிடம் தெரிவித்துச் செல்வோம். ஒரு நாள் மாலை காஸ்டோராமா திரும்பிப்பார்த்துவிட்டு "ஒரு நாள் காலை நாங்கள் விழித்து வந்து பார்ப்போம். இவன் இறந்துபோய்க் கிடப்பான்'' என்றான்.

மற்றவர்களின் வாழ்க்கையைக் காட்டிலும் யாஸின் வாழ்க்கை படுமோசமாய் இருக்கிறது என்று சுர்கா அடிக்கடி சொல்லிவந்தான். ஆனால் மாடப் புரூவோ இதை மறுத்து உரைத்தான்.

"நாம் வாழ்வது மோசமான வாழ்க்கை அன்று" என்று சொன்னான்.

இவன் கூறுவது சரிதான் என்று நானும் நினைத்தேன். தெருக்களில் நாங்கள் சுதந்திரமாகத் திரிந்து வாழ்க்கையை அனுபவித்தோம். என் தோழர்களை நான் பெரிதும் நேசித்தேன். இந்தத் தோழமையால் என் உள்ளத்தில் புதிய உணர்வு பிறந்தது. உதவி செய்து நலத்துடன் வாழ்வதற்கு நான் ஆவலோடு அவர்களுடன் முனைந்து நின்றேன்.

மீண்டும் பள்ளிக்கூடத்தில் ஏற்பட்ட கஷ்டங்களை நான் சமாளிக்க வேண்டியதாயிற்று. குப்பை பொறுக்குபவனென்றும் ஊர்சுற்றி என்றும் பையன்கள் என்னைக் கூப்பிடத் தொடங்கினார்கள். அடிக்கடி இந்தக் குற்றச்சாட்டுகள் எங்கள் ஆசிரியரிடம் போய்ச் சேரும். குப்பை கூளங்களின் நாற்றம் சகிக்க முடியாததாக இருப்பதாகவும் அதனால் எனக்குப் பக்கத்தில் இருக்க முடியவில்லை என்றும் ஆசிரியரிடம் குறை கூறினார்கள். இதன் பிறகு பள்ளிக்கூடத்துக்குப் போவது எனக்கு எவ்வளவு சங்கடமாய் இருந்தது என்பதும் என் மனம் அதனால் எவ்வளவு புண்பட்டது என்பதும் எனக்கு இன்னும் நினைவு இருக்கிறது. வேண்டும் என்றே கேவலமாகச் சொல்லப்பட்ட குற்றச்சாட்டு ஆகும் இது. நான் நாள்தோறும் காலையில் கவனமாகவும் சுத்தமாகவும் குளித்துவிடுவது உண்டு. குப்பை கூளங்கள் பொறுக்கும் காலத்தில் அணிந்துகொண்டிருந்த அதே உடையை அணிந்து கொண்டு நான் ஒருபோதும் பள்ளிக்கூடத்துக்குப் போனது கிடையாது.

கடைசியாக மூன்றும் வகுப்புப் பரீட்சையில் நான் தேறினேன். நான் செய்த நல்ல காரியத்துக்காக எனக்கு கௌரவ நற்சாட்சிப் பத்திரம், பைபிள், கிரிலோவின் நீதிக் கதைகள், மாட்டா மார்க்காஞ என்று பொருள் விளங்காத தலைப்புள்ள பைண்டுசெய்யாத வேறு ஒருபுத்தகம் ஆகியவற்றைப் பரிசுகளாகத் தந்தார்கள். இந்தப் பரிசுகளை வீட்டுக்குக் கொண்டுபோய் என் தாத்தாவிடம் நான் கொடுத்ததும், என் தாத்தா பரவசப்பட்டு அளவற்ற மகிழ்ச்சி அடைந்தார். அந்தப் புத்தகங்களைப் பத்திரமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்று சொன்னார். ஆகவே அந்தப் புத்தகங்களை எல்லாம் எடுத்து ஒரு உறுதியான பெட்டியில் வைத்தார். பல நாட்கள் என் பாட்டி நோய்வாய்ப்பட்டுக் கிடந்தாள் ; கையில் பணம் இல்லை. தாத்தா ஊளையிட்டு முணகினார் :

"நீங்கள் என்னைப் பாழ்படுத்திவிடுவீர்கள்போல் இருக்கிறது - வீடுவாசல்களை எல்லாம் நீங்கள் விழுங்கித் தீர்த்துவிட்டீர்கள்" என்றார்.

ஆகவே அந்தப் புத்தகங்களை ஒரு புத்தகக் கடைக்கு எடுத்துச்சென்று ஐம்பத்து ஐந்து காப்பெக்குகளுக்கு விற்று அதை என் பாட்டியிடம் கொடுத்தேன். கௌரவ நற்சாட்சிப் பத்திரத்தில் கோடிட்டுப் பாழாக்கி அதை என் தாத்தாவிடம் கொடுத்தேன். கோடுகள் கிழித்துக் கிறுக்கி இருப்பதைக் கவனியாமலே அதை வாங்கி அவர் பதனப்படுத்தி வைத்துக்கொண்டார்.

பள்ளிக்கூடம் விட்டதும் நான் தெரு வாழ்க்கையை மேற்கொள்ளத் தொடங்குவேன் ; வசந்த காலம் ஆரம்பம் ஆகிவிட்டால் அது மிக்க கவர்ச்சிகரமானதாக ஆகிவிடும். இப்பொழுது நாங்கள் பணம் அதிகமாகச் சம்பாதித்தோம். ஞாயிற்றுக்கிழமைகளில் நாங்கள் எல்லோரும் ஒரு கூட்டமாகச் சேர்ந்து வயல்களுக்கும் காடுகளுக்கும் செல்வோம்.

களைப்புற்றும் மிகுந்த மகிழ்ச்சியுடனும் மாலையில் வீடு திரும்புவோம். ஒருவருடன் ஒருவர் நெருக்கமாகப் பிணைப்புற்று நாங்கள் இருந்தோம்.

ஆனால் இந்த வாழ்க்கை நீண்ட காலம் நீடிக்கவில்லை. வேலை போய்விட்ட காரணத்தால் என் மறு தந்தை மீண்டும் எங்கேயோ சென்றுவிட்டார். ஆகையால் என் தாயும் தம்பி நிக்கொலாயும் வந்து என் தாத்தாவுடன் வசித்தார்கள். ஏசு பெருமான் உடம்பில் போர்த்துவதற்காகவுள்ள ஒரு சால்வையில் பின்னல் வேலை செய்வதற்கு ஒரு பணக்கார வியாபாரி வீட்டில் என் பாட்டி தங்கிவிட்டபடியால் தாதி வேலைகளை நான் பார்க்க வேண்டியதாயிற்று.

வீணான மௌனத்துடன் என் தாயின் வாழ்க்கை கழிந்தது. என் தாயால் காலை ஊன்றிக்கொண்டுகூட நிற்க முடியவில்லை. என் தம்பிக்கு மணிக்கட்டுகளில் சரும வியாதிப் புண் பிடித்து இருந்தது. அழுவதற்குக்கூடச் சக்தியற்றவனாய் அவன் மெலிந்து இருந்தான். பசி எடுத்தால் சகிக்க முடியாத குரலில் அவன் முணகுவான். பசியில்லாவிட்டால் பெருமூச்சுவிட்டுக்கொண்டு சோர்ந்துவிழுவான்; பூனைக்குட்டிபோல சப்தமிடுவான்.

" இவனுக்கு இப்போது தேவைப்படுவது நல்ல உணவுதான். ஆனால் உங்கள் எல்லாருக்கும் தேவையான உணவுக்கு நான் எங்கே போவேன் ?" என்று, குழந்தையைக் கவனமாகப் பரிசீலித்துவிட்டு என் தாத்தா ஒரு நாள் சொன்னார்.

" அவனுக்கு அதிகமாக எதுவும் தேவைப்படாது " என்று கரகரப்பாகப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு என் அன்னை பதில் சொன்னாள்.

" கொஞ்சம்தான்—அதுவும் கொஞ்சம்தான்—எல்லாம் சேர்ந்தால் அதிகமாகிவிடுகிறது " என்று சொல்லிவிட்டு, வெறுப்புடன் தன் கையை என் தாத்தா அசைத்தார். பிறகு

என்னைப் பார்த்து "சூரிய வெளிச்சத்தில் நிக்கோலாவை மணலில் வைக்க வேண்டும்" என்றார்.

காய்ந்த சுத்தமான மணலை நான் ஒரு சாக்கில் கொண்டு வந்தேன். அதை ஜன்னலுக்குக் கீழே சூரிய வெளிச்சம்படுகிற இடத்தில் கொட்டினேன். பிறகு, என் தாத்தாவின் உத்தரவுப்படி, என் தம்பியைக் கழுத்துவரை மணலில் புதைத்தேன். குழந்தை அதை விரும்புவதாகத் தோன்றியது. கண்களை ஒருக்கணித்து சந்தோஷமாகப் பார்த்துக்கொண்டும் வியக்கத்தக்க தனது கண்களால் என்னைப் பார்த்துக்கொண்டும் இருந்தான். அவனுடைய கண்களின் நடுவே நீலநிறப் பாவையும் அதைச் சுற்றி வெளிர் நீலமும் இருந்தன.

என் தம்பியை நான் பெரிதும் நேசித்தேன். எனது எண்ணங்களை அறிந்துகொண்டவன் போன்று, எனக்குப் பக்கத்திலேயே மணிக்கணக்கில் அவனும் படுத்துக்கிடப்பான். என் தாத்தா போடும் கீறிச்சிட்ட அலறல் ஜன்னல் வழியாகக் கேட்கும்.

"இறப்பதற்கு நிரம்ப யோசனை செய்ய வேண்டிய அவசியம் இல்லை. எப்படி வாழ்வது என்பதைத் தெரிந்துகொள்ள உனக்கு அறிவு இருந்தால் போதும். இப்போது..." என்று சொல்வார்.

இதைத் தொடர்ந்து, என் தாய், நீடித்து வழக்கமாக இருமுவது கேட்கும்.

சிறிய தனது கைகளை அப்பால் எடுத்துக்கொண்டு, அவற்றை எனக்கு முன்னே தூக்கிப் பிடித்து, வெளிறியிருக்கும் தன் தலையை நிக்கோலாய் அசைப்பான். அவனுடைய கேசம் சன்னமாயும் வெள்ளிபோன்றும் இருந்தது ; முகத்திலோ முதுமையும் புத்திசாலித்தனமும் பிரதிபலித்தன.

தன் அருகே பூனையோ அல்லது கோழியோ வந்தால், அதை விருப்போடு நிக்கோலாய் கூர்ந்து கவனிப்பான். பிறகு

என்னைப் பார்த்து மெல்லச் சிரிப்பான். இந்தச் சிரிப்பு எனக்குச் சங்கடமாய் இருந்தது; அவனுக்குப் பக்கத்தில் அமர்ந்து அவனை நான் வாதனைப்படுத்துவதாக அவன் எண்ணுகிறானோ அதனால்தான் இப்படிச் சிரிக்கிறானோ என்ற எண்ணம் எனக்கு இருந்தது. அவனைவிட்டுப் பிரிந்துபோய் தெருவில் என் நண்பர்களுடன் சேர நான் ஆசைப்படுவதாக அவன் கருதிவிட்டானோ என்னவோ ?

முற்றம் சிறிதாய் இருந்தது; அதில் சகல விதமான குப்பைகளும் கிடந்தன. முற்றத்தின் பின்புற வாயிலிருந்து குளிக்கும் அறைவரை கட்டிடங்களும் கூடங்களும் நீண்டு கிடந்தன. பலகைகள், கட்டைகள், ஈர மரத்துண்டுகள் படகின் சிதைந்த பாகங்கள் முதலிய கூரையின்மீது உயரமாக அடுக்கப்பட்டிருந்தன. பனிக்கட்டிகள் உடைந்து, வசந்தத்தால் ஆறு பெருக்கு எடுக்கும்போது, ஒகா நதியிலிருந்து இழுத்துவரப்பட்ட வெற்றிப் பொருள்கள் இவை. ஆற்றில் ஊறின மரங்கள் முற்றம் முழுதும் தாறுமாறாகக் கிடந்தன. வெய்யலில் காயும்போது அழுகல் நாற்றம் அவற்றிலிருந்து கிளம்பியது.

எங்கள் வீட்டை அடுத்து ஆடுமாடுகள் அடிக்கும் கொட்டில் ஒன்று இருந்தது. நாள்தோறும் காலையில் கன்றுக்குட்டிகளின் கதறலும் ஆடுகளின் அழுகைக் குரலும் எங்கள் காதில் வந்து விழும். ரத்தத்தின் வாடை கோரமாக அடித்தது. ரத்தமானது செந்தூசியாக ஆகி, ஆகாயத்தில் கிளம்பி வியாபித்து விட்டதோ என்று எண்ணும்படியாக, அதனுடைய நெடியின் கொடூரம் இருந்தது.

கொம்புகளுக்கு நடுவே அரிவாளின் வெட்டு விழுந்ததும், விலங்குகளின் கதறல் நின்றுவிடும். அப்போது முகத்தைச் சுளித்துத் தன் உதடுகளைப் பிதுக்கிக்கொண்டு, விலங்குகள் கதறுவதுபோல நிக்கொலாய் சப்தம் செய்து

பார்ப்பான். "பூ! பூ!" என்று சிறு உறுமலைத் தவிர்த்து வேறு எவ்வித சப்தத்தையும் அவனால் போடமுடிவது இல்லை.

மத்தியானம் ஆனதும், தன் தலையை ஜன்னல் வழியாக நீட்டி "சாப்பிடு!" என்று என் தாத்தா சொல்வார்.

குழந்தையைத் தன் மடிமீது போட்டுக்கொண்டு, உருளைக்கிழங்கு, ரொட்டி ஆகியவற்றை மென்று, குழந்தையின் சிறிய உதடுகளுக்கு இடையே என் தாத்தா ஊட்டுவார். அதனுடைய வாயிலும் தவடையிலும் ஆகாரங்கள் ஒட்டிக் கொள்ளும். இப்படிக் கொஞ்சம் உணவு கொடுத்த பின்னர், குழந்தையின் சட்டையைத் தூக்கி, ஊதிப்போய் இருக்கும் அதன் வயிற்றைத் தட்டிப் பார்ப்பார்.

"இது போதுமானால் ஆச்சரியம்தான்—இன்னும் கொஞ்சம் தேவைப்படுமோ என்னவோ?" என்பார்.

இருண்ட மூலையில் படுத்துக்கிடக்கும் என் தாய், "ரொட்டி வேண்டும் என்று அவன் கையை நீட்டுவதை நீங்கள் பார்க்கவில்லையா?" என்று கேட்பாள்.

"தனக்குப் போதும் என்று எந்தக் குழந்தைகளுக்கும் சொல்லத் தெரியாது."

இதன் பிறகு ஒரு உருண்டை உணவை அதன் வாய்க்குள் என் தாத்தா தள்ளுவார். இந்த மாதிரி உணவைத் திணிப்பது எனக்கு நாணத்தை உண்டுபண்ணி வருத்தியது. ஏதோ என் தொண்டையில் சிக்கிக்கொண்டு என்னைத் திணற அடிப்பதுபோலவும் அதைத் துப்பிவிட விரும்புவதுபோலவும் எனக்குத் தோன்றியது.

"இவ்வளவு போதும். இவனைக் கொண்டுபோய் இவன் தாயிடம் கொடு" என்று கடைசியாக, என் தாத்தா சொல்லுவார்.

நிக்கொலாயை என் கைகளில் நான் தூக்கிக்கொள்வேன்; அவனோ மேஜை அருகே போக வேண்டும் என்று

முணகுவான்; பலம்குன்றி பட்டைஉரிந்த பைன் மரம் போல இருந்த என் தாய், என்னைச் சந்திப்பதற்காக எழு வாள்; சதைப்பிடிப்பே இல்லாத தனது நீண்ட கரங்களை நீட்டுவாள்.

வரவர அவள் அபூர்வமாகத்தான் பேசினாள். அவள் பேசும் சொற்ப வார்த்தைகளும் பெருமூச்சுவிடுகிற மார்பி லிருந்து சிரமப்பட்டு வெளிப்படுவதுபோலத் தோன்றும். நாள் முழுதும் ஒரு மூலையில் படுத்து அமைதியாக அவள் செத்துக்கொண்டு வந்தாள். அவள் செத்துக்கொண்டு வரு கிறாள் என்ற உணர்வு எனக்கு இருந்தது. என் தாத்தாவும் அடிக்கடி சாவைப்பற்றி அழுத்தமாகவும் தெளிவாகவும் பேசிக்கொண்டு வந்தார். அழிவின் வாடை வானத்தில் எங் கும் வியாபித்துப் பரவியிருக்கிற மாலை நேரங்களில்தான் விசேஷமாக இதைப்பற்றிப் பேசுவார்.

விக்கிரகங்கள் இருந்த மூலைக்குக் கீழே சரியாக என் தாத்தாவின் படுக்கை இருந்தது. ஜன்னல் பக்கமாகத் தலையை வைத்துக்கொண்டு அவர் தூங்குவார். தூங்குவதற்கு முன்னர் தனக்குத் தானே கீழ்க்கண்ட வார்த்தைகளை அவர் முணு முணுத்துக்கொள்வார்.

"நல்லது; இறப்பதற்குரிய காலம் வந்துவிட்டது. நம் மைப் படைத்தவருக்கு நாம் எல்லாரும் சிறந்த காட்சியாக விளங்குவோம்! நாம் அவரிடம் சொல்வதற்கு என்ன இருக் கிறது? வாழ்க்கை முழுதும் நான் வேலையே செய்யாமல் இருந்தவன்போலத்தான் என் நிலை இருக்கிறது—எப்பொழு தும் எதையாவது செய்துதான் வந்திருக்கிறேன். அதன் பலனைப் பாருங்கள்" என்பார்.

கனப்பு—அடுப்புக்கும் ஜன்னலுக்கும் இடையே இருந்த இடத்தில் நான் தூங்கினேன். இடம் போதாமல் இருந்த காரணத்தால் கனப்பு-அடுப்புக்குக் கீழே காலை வைத்துக்

கொண்டு நான் தூங்க வேண்டியதாயிற்று. அங்கே கரப்பான் பூச்சிகள் வந்து காலில் உராய்ந்தன. இந்த இடத்திலிருந்து கவனித்த எனக்குவெறுப்போடு கூடிய திருப்தி ஏற்பட்டது. சமையல் செய்யும்போதெல்லாம் என் தாத்தா, ஜன்னலி லுள்ள கண்ணுடியைக் கரண்டியின் மறு முனையாலோ அல்லது அடுப்பிலிருந்து பானையைத் தூக்கும்போது, அந்தக் கம்பின் முனையாலோ உடைத்துவிடுவார். அவரைப் போன்ற சாமர்த்தியசாலியான ஒருவருக்குக் கம்பின் மறு முனையை வெட்ட எண்ணம் இல்லாமல் இருந்தது.

ஒரு நாள் அடுப்பின்மீது ஏதோ கொதித்துக்கொண்டிருந்தது. என் தாத்தா விறகை வேகமாகத் தள்ளிய காரணத்தால், அடுப்பின்மீது இருந்த மண் பானை உடைந்து ஜன்னல் கதவுகள் இரண்டிலும் இருந்த கண்ணுடிகளையும் குறுக்குச் சட்டத்தையும் நொறுக்கிவிட்டது. இந்தப் பெரிய துரதிஷ்டத்தைக் கண்ட கிழவர் தரையில் உட்கார்ந்து அழத் தொடங்கினுர். "ஆண்டவனே! ஆண்டவனே!" என்று அவர் கதறினுர்.

பிறகு அவர் வீட்டை விட்டுப்போன சமயம் பார்த்து ரொட்டி வெட்டும் கத்தியை எடுத்து, விறகுக் கட்டையின் மறு புறத்தை நான் வெட்டிவிட்டேன்.

திரும்பி வந்தபோது, நான் செய்திருப்பதைக் கவனித்த என் தாத்தா "நாசமாய்ப் போக! நிந்தனை ஏற்படுக! இப்படி வெட்டித் தள்ளலாமா? கேட்கிறதாடா? இப்படியும் வெட்டியா தள்ளுவது? இந்தக் கட்டைகளைக்கொண்டு உருளைக் கட்டைகள் செய்து விற்று இருக்கலாமே? குடும்பத்தில் இப்படி ஒரு பிசாசு அல்லவா வாய்த்திருக்கிறது" என்று இரைந்தார்.

அப்பால் அவர் வெளியே போய்விட்ட பிறகு "எதையும் நீ தொடாதே" என்று என்னிடம் என் அன்னை சொன்னுள்.

ஆகஸ்டு மாதம் ஞாயிற்றுக்கிழமை நண்பகலில் என் அன்னை இறந்துபோனுள். பிரயாணம் சென்றிருந்த என் மறு தந்தை திரும்பி வந்தபோது அவருக்கு மீண்டும் வேலை கிடைத்து இருந்தது. ஸ்டேஷனுக்கு அடுத்தாற்போல் இருந்த ஒரு அழகிய சின்ன அறைக்கு அவருடன்கூட என் தம்பி நிக்கொலாயும் என் பாட்டியும் போய் வசித்தார்கள். அடுத்த சில நாட்களில் என் அன்னையும் அங்கே போவதாக இருந்தது.

இறக்கவிருக்கும் அன்று காலையில் என் அன்னை என்னைப் பார்த்து லேசான குரலில் ஆனுல் தெளிவாக என்னிடம் சொன்னுள் :

" யெவ்ஜீனிவாஸிலியேவிச்சிடம் சென்று அவரை நான் பார்க்க விரும்புவதாகச் சொல் " என்று.

சுவரை ஆதாரமாகக்கொண்டு அவள் எழுந்து சாய்ந்து உட்கார்ந்தாள்.

" விரைவில் செல் " என்று சொல்லித் தலையணையில் சாய்ந்துகொண்டாள்.

அவள் புன்முறுவல் பூப்பதுபோலவும் அவள் கண்களில் புதிய ஒளி பிரகாசிப்பதுபோலவும் எனக்குத் தோன்றியது. என் மறு தந்தை பிரார்த்தனைக்குப் போய் இருந்தார் ; யூதப் பெண்ணிடம் பொடி வாங்கி வரும்படியாக என் பாட்டி என்னை அனுப்பிவிட்டாள். அவளிடம் பொடி தயாராக இல்லாத காரணத்தால், புகையிலையை அவள் பொடிசெய்து தரும் வரை நான் காத்திருக்க வேண்டியதாயிற்று.

கடைசியாக நான் என் தாத்தா வீட்டுக்குத் திரும்பிய சமயம், சுத்தமான வெளிர்நீல ஆடையை அணிந்து, மேஜை அருகே என் அன்னை உட்கார்ந்து இருந்தாள். கூந்தலை நன்ருக வாரிவிட்டுக்கொண்டு இருந்தாள் ; முன்பு இருந்ததைப்போல பெருமையோடும் ஆணவத்தோடும் இருந்தாள்.

நான் மிகவும் நாணப்பட்டுப் போய் "சௌகரியமாகத் தெரிகிறதா ?" என்று கேட்டேன்.

முகத்தைப் பயங்கரமாக வைத்துக்கொண்டு "இங்கே வா. யாருடன் சேர்ந்து சுற்றித் திரிந்தாய் ?" என்று கேட்டாள்.

பதில் சொல்வதற்கு முன்பாக என் கூந்தலைப் பற்றி என்னை அவள் பிடித்துக்கொண்டாள். மேஜைமீது கிடந்த நீண்ட, வளைந்து கொடுக்கக் கூடிய கத்தியை எடுத்து, தன் கையிலிருந்து அதன் கட்டையால் என்னை அவள் அடித்தபடி இருந்தாள்.

"அதை எடுத்து என்னிடம் கொடு" என்றாள்.

கத்தியை எடுத்து நான் மேஜைமீது வைத்தேன்.

என் தாய் என்னை ஒரு தள்ளுத் தள்ளினாள். நான் சென்று அடுப்பின் ஓரத்தில் உட்கார்ந்துகொண்டு கவனித்தேன். அவளுடைய கண்கள் பயங்கரமாக இருந்தன.

நாற்காலியிலிருந்து எழுந்து அவள் மெதுவாக மூலையை நோக்கி நடந்தாள். போய்ப் படுக்கையில் படுத்துக்கொண்டு, வியர்வை கொட்டும் தன் முகத்தைத் துடைத்துக்கொண்டாள். உறுதி குறைந்து, அவளுடைய கை இரண்டு முறை தலையணைமீது விழுந்துவிட்டது. விரல்களின் ஊடே கைக்குட்டை பின்னிக்கொண்டது.

"கொஞ்சம் தண்ணீர்......"

குடத்திலிருந்து ஒரு கோப்பையில் தண்ணீர் மொண்டு வந்து அவளிடம் கொடுத்தேன். சிரமத்துடன் தலையைத் தூக்கி ஒரு மிடறு குடித்துவிட்டு, குளிர்ந்துபோன தன் கரத்தால் என்னை அப்பால் தள்ளிப் பெருமூச்சுவிட்டாள். மூலையிலிருந்த விக்கிரகங்களையும் என்னையுமாக அவள் மாறி மாறிப் பார்த்தாள். சிரிக்க விரும்புபவள்போல அவளுடைய உதடுகள் நெளிந்தன. தன் நீண்ட இமைகளால் தன் கண்

களை அவள் மூடிக்கொண்டாள். அவளுடைய முழங்கைகள் விலாப்புறங்களில் இறுக்கமாக ஒட்டிக்கொண்டு இருந்தன. கைகளோ மார்புக்கும் தொண்டைக்கும் சென்றன. ஒருவித சாயை அவள் முகத்தில் படர்ந்து விலகியது. அவளுடைய மஞ்சள்நிறத் தோல் இறுகலாகவும் மூக்குக் கூர்மையாகவும் ஆகிக்கொண்டு வந்தன. அவளுடைய வாய் வியக்கத்தக்க வகையில் விரிந்தது; ஆனால் மூச்சு வரவில்லை.

என் தாயின் முகம் விரைத்துச் சாம்பல் நிறமாக மாறி வருவதைக் கவனித்துக்கொண்டே, கோப்பையை எண்ணிக்கையற்ற சகாப்தங்களுக்குப் பிடித்து நிற்பதுபோலப் பிடித்துக்கொண்டு நின்றேன்.

என் தாத்தா உள்ளே வந்தார்.

"தாய் இறந்து போய்விட்டாள்" என்று நான் சொன்னேன்.

"ஏன் இப்படிப் பொய் சொல்லுகிறாய்?" என்று கூறி விட்டு அவர் படுக்கையைக் கவனித்தார்.

பிறகு என் தாத்தா அடுப்பு அண்டை போனார். விறகையும் வாணலியையும் தடபுடலாகச் சப்தம் செய்து, பிரோக்கை அப்பால் எடுத்து வைத்தார். என் தாய் இறந்துவிட்டாள் என்பதை அறிந்திருந்த நான் அதை என் தாத்தா உணருவதைப் பார்த்துக்கொண்டு நின்றேன்.

வெள்ளை லினன் கோட்டையும் தொப்பியையும் அணிந்துகொண்டு என் மறு தந்தை உள்ளே வந்தார். நாற்காலியை மெதுவாகத் தூக்கிக்கொண்டு, என் அன்னை படுத்திருக்கும் இடத்துக்குப் போனார். திடீரென நாற்காலியைக் கீழே போட்டுவிட்டு "பாருங்கள்! அவள் இறந்துபோய் விட்டாள்!" என்று பித்தளைக் கொம்பு சப்திப்பதுபோல் சொன்னார்.

விறகைக் கையில் பிடித்துக்கொண்டும் தன் கண்கள் தலையிலிருந்து தெறித்துவிழுவது போலவும் என் தாத்தா தள்ளாடித் தள்ளாடிப் படுக்கைமீது விழுந்தார்.

என் தாயின் சவப்பெட்டிமீது காய்ந்த மணலை அவர்கள் அள்ளிப் போட்டுக்கொண்டிருந்தபோது, மற்ற கல்லறைகளை சுற்றிப் பார்த்துக்கொண்டு வந்த என் பாட்டி அங்கே இருந்த சிலுவைகள் ஒன்றில் தடுமாறி விழுந்து, தன் முகத்தில் காயப்படுத்திக்கொண்டாள். யாஸின் தந்தை அவளைத் தன் வீட்டுக்கு அழைத்துப்போனார். காயம் பட்ட இடத்தை அவள் கழுவிக்கொண்டிருந்தபோது, அவர் என் காதில் மெதுவாக ஆறுதல் மொழிகளைக் கூறினார்.

"தூக்கமற்ற இரவுகள் ஏற்படாமல் ஆண்டவன் நம்மைக் காப்பாராக! ஏன் நீ இப்படி இருக்கிறாய்? இந்தமாதிரி காரியங்களில் மனத்தை அதிகம் செலுத்தக் கூடாது. நான் சொல்வது சரிதானே பாட்டி? ஏழையாயினும் சரி பணக்காரராயினும் சரி, ஒருநாள் குழிக்குள் போகாமல் முடியாது. நான் சொல்வது சரிதானே? பாட்டி" என்றார்.

ஜன்னல் வழியாக அவர் எட்டிப் பார்த்தார். உடனே வீட்டைவிட்டு வேகமாக வெளியில் ஓடி மலர்ந்த முகத்துடன் வந்து சேர்ந்தார். மாடப் புறுவையும் இழுத்துக்கொண்டு வந்திருந்தார்.

ஒடிந்து போயிருந்த ஒரு லாடத்தைத் தன் கையில் பிடித்துக் காட்டிக்கொண்டே "இதைப் பார்! இது என்ன என்பதை நீயே பார்! நானும் மாடப் புறுவும் இதை உனக்கு வெகுமதியாகத் தரப் போகிறோம். அதில் இருக்கும் சிறு உருளையைப் பார்? கொஸாக்கியரின் பூட்ஸிலிருந்து இது விழுந்து இருக்கக் கூடும் என்று தோன்றுகிறது! மாடப்புறுவினிடமிருந்து இதை நான் வாங்கப் போகிறேன்—இரண்டு

காப்பெக்குகள் தருவதாகச் சொல்லி இருக்கிறேன் '' என்று சொன்னர்.

" ஏன் இப்படிப் பொய் சொல்லுகிறீர் ?'' என்று கோபமாக முணுமுணுத்தான் மாடப்புரு. ஆனல் யாஸின் தந்தையோ என் முன்னே நின்று என்னைப் பார்த்துத் தன் கண்ணைச் சிமிட்டினர்.

" மாடப்புருவுக்கு இது எப்படி இருக்கும்? எதுவும் வாங்கிக்கொள்ளாமல் அவன் போக மாட்டான். இதை நான் உனக்கு வெகுமதி அளிக்கவில்லை. மாடப்புருதான் இதை உனக்கு வெகுமதியாகத் தரப்போகிறன். அவன் ......''

முகத்தைக் கழுவி முடித்த பின்னர், வீங்கி நீல நிறத்தில் இருந்த தன் முகத்தில் கைக்குட்டையை என் பாட்டி சுற்றிக்கொண்டாள். பிறகு என்னைப் பார்த்து வா வீட்டுக்குப் போகலாம் என்று கூப்பிட்டாள். நான் வர முடியாது என்று சொல்லிவிட்டேன். சவ அடக்கத்துக்குப் பின்னர் நடக்கும் விருந்தில் குடிப்பதும் சண்டை சச்சரவுகளும் நிகழும் என்பதை நான் அறிவேன். நாங்கள் மாதாகோயிலில் இருக்கும்போதே அம்மான் மைக்கேல், அம்மான் யாக்கோவைப் பார்த்து "இன்று குடிப்பதற்கு நிறையக் கிடைக்கும்'' என்று சொன்னது என் காதில் விழுந்தது.

லாடத்தைத் தன் கழுத்தில் தொங்கவிட்டுக்கொண்டு, மாடப்புரு என்னை உற்சாகப்படுத்த முயன்றன். தன் கழுத்தில் தொங்கிய லாடத்தை நாக்கால் அவன் தொட முயன்றன். இதைப் பார்த்ததும் யாஸின் தந்தை அளவு கடந்து சிரித்துவிட்டார். "அவன் என்ன செய்கிறன் என்பதைப் பார்! அதைப் பார்'' என்று இரைந்தார். இது எனக்கு மகிழ்ச்சியை உண்டாக்கவில்லை என்பதைத் தெரிந்து கொண்டதும் அவர் அக்கறையுடன் பேசத் தொடங்கினர்.

"போதும்! போதும்! மனத்தைத் திடமாக வைத்துக் கொள். யாவரும் இறக்க வேண்டியவர்கள்; பறவைகளும் இறந்துபோகாமல் தீராது. நான் சொல்வதைக் கேள். உனக்குப் பிரியமாய் இருந்தால் உன் அன்னையின் கல்லறையைச் சுற்றி நான் புல் வளர்க்கிறேன். பிரியமிருந்தால் நீ சென்று, வயல்களிலிருந்து கொஞ்சம் புல் கொண்டுவா. நீ, நான், மாடப்புறா, யாஸ் நால்வரும் சென்று புல் கொண்டுவருவோம். புற்களை அழகாக வெட்டி அழகாக அதைச் சுற்றி முற்றிலும் பயிர் செய்வோம். இதற்கு இணையான கல்லறை வேறு கிடையாது என்னும்படி அதை அழகுப்படுத்திவிடுவோம்" என்றார்.

இது எனக்கு பிடித்தமாக இருந்தபடியால் நாங்கள் எல்லோரும் வயலுக்குப் புறப்பட்டுச் சென்றோம்.

என் தாயின் சவ அடக்கம் முடிந்து சில நாட்களுக்குப் பின்னர் என் தாத்தா என்னைப் பார்த்து "நல்லது அலெக்ஸி! உன் கழுத்தில் மெடல் ஒன்று தொங்கிக்கொண்டிருப்பதாக நீ நினைக்க முடியாது! இனிமேல் இந்த வீட்டில் உனக்கு இடம் இல்லை. உலகத்துடன் கட்டிப் புரள வேண்டிய காலம் உனக்கு வந்துவிட்டது" என்றார்.

உலகத்துடன் கட்டிப் புரள்வதற்கு நானும் புறப்பட்டேன்.

